44-1 L8-1

ஸ்ரீ:

# ஸ்ரீராமாயணம்

## கிஷ்கிந்தாகாண்டம்.

## தமிழ் வசனம்.

இஃது

ஸ்ரீவால்மீகி ராமாயணத்திற்கிணங்க

ஸ்ரீ. அ. வீ. நரஸிம்ஹாசாரியரால்

இயற்றப்பெற்று

ACCNO: 12797
R65-9




சென்னை

ஆர். வெங்கடேஸ்வர் அண்டு கம்பெனியாரவர்களால்

ஆனந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு,

வெளியிடப்பட்டது.

1921

ALL RIGHTS RESERVED.

ALL RIGHTS RESERVED.

காபிரைட். 1913ஹு:— ஆர். வெங்கடேஸ்வர் அண்டு கம்பெனியாரவர்கள் காபிரைட்டுக்குரியவர்கள். இப்புத்தகம் இந்தியன் காபிரைட் பிரகாரமாகவும், அந்யதேசியரது காபிரைட் பிரகாரமாகவும், காக்கப்பட்டிருக்கின்றது. எவராயினும் இப்புத்தகத்தை முழுவதுமாவது, அல்லது இதில் ஒரு பாகத்தையாவது தாம் வேறாக அச்சிடவும், மற்றொரு பாஷையில் மொழி பெயர்த்து அச்சிடவும் அதிகாரமில்லை. இதிலுள்ள பதங்களையாவது, பாவங்களையாவது, படங்களையாவது காபி செய்வார்களாயின், அது காபிரைட்டை உல்லங்கனஞ் செய்ததே ஆகும்.

18-1

# விஷயங்கள்.


| ஸர்க்கம். | | பேஜ். |
|---|---|---|
| 1 | கிஷ்கிந்தாகாண்டம் | 1601 |
| 2 | ஸுக்ரீவன் ஹனுமானை ராமலக்ஷ்மணர்களிடம் அனுப்புதல் ... | 1625 |
| 3 | ஹனுமான் ராமலக்ஷ்மணர்களோடு ஸம்பாஷித்தல் ... | 1629 |
| 4 | லக்ஷ்மணன் ஹனுமானுக்குத் தமது வ்ருத்தாந்தத்தைத் தெரிவித்தலும் அவர்கள் ஸுக்ரீவனிடம் போதலும் ... | 1638 |
| 5 | ராமனும் ஸுக்ரீவனும் அக்னிஸாக்ஷிகமாக ஸ்நேஹஞ் செய்துகொள்ளல். | 1644 |
| 6 | ஸுக்ரீவன் ராமகார்யத்தைச் செய்வதாக ப்ரதிஜ்ஞை செய்தல் ... | 1648 |
| 7 | ராம ஸுக்ரீவர்கள் ஒருவர்க்கொருவர் ப்ரதிஜ்ஞை செய்துகொள்ளல் ... | 1651 |
| 8 | ஸுக்ரீவன் தன் சோகத்தின் காரணத்தை ராமனுக்குத் தெரிவித்தல் ... | 1658 |
| 9 | வாலி தனக்குச்செய்த அபராதங்களை ஸுக்ரீவன் ராமனுக்குச்சொல்லுதல். | 1663 |
| 10 | ஸுக்ரீவன் வாலியை வேண்டிக்கொள்ளலும், வாலி தயைபாராமல் ஸுக்ரீவனை நிக்ரஹஞ்செய்தலும் ... | 1667 |
| 11 | ஸுக்ரீவன் வாலியின் பராக்ரமத்தையும் துந்துபி யுத்தத்தையும் மதங்கசாபத்தையும் வாலி ஸப்தஸாலரந்த்ரஞ் | |

ஸர்க்கம். பேஜ்.

செய்ததையும் கூறுதலும், ராமன் துந்துபி சரீரத்தைத் தூக்கியெறிதலும், ஸுக்ரீவன் ஸப்த ஸாலங்களைப் பேதிக்க வேண்டுதலும் ... 1671

12 ராமன் ஸப்தஸாலங்களைப் பேதித்தலும் வாலி ஸுக்ரீவர்களின் ப்ரதம யுத்தமும் ... 1683

13 ராம ஸுக்ரீவாதிகள் மீளவும் கிஷ்கிந்தைக்குப்போதல் ... 1687

14 ஸுக்ரீவன் வாலியை யுத்தத்திற்கழைக்க பயப்படுகையில், ராமன் அவன் பயத்தைப் போக்குதல் ... 1691

15 வாலி ஸுக்ரீவனது நாதத்தைக்கேட்டு இரண்டாந் தடவை யுத்தத்திற்குப் புறப்படுதலும், தாரை வேண்டாமென்று தடுத்தலும் ... 1695

16 வாலி தாரைக்குஸமாதானங் கூறுதலும், வாலி ஸுக்ரீவர்கள் மீளவும் யுத்தஞ் செய்தலும் ராமன் வாலியின்மேல் பாணப்ரயோகஞ் செய்தலும் ... 1702

17 வாலி ராமனை நிந்தித்தல் ... 1708

18 ராமன் வாலிக்கு மறுமொழிகூறுதல் ... 1716

19 தாரை மரணம் அடைந்த வாலியிடம் வருதல் ... 1728

20 தாரை புலம்புதல் ... 1732

21 ஹனுமான் தாரைக்கு நல்வார்த்தை சொல்லுதல் ... 1737

22 மரணம் அடைந்தாற்போல் மூர்ச்சித்துக் கிடக்கும் வாலி மூர்ச்சை தெளிந்து மேற்செய்யவேண்டுங் கார்யத்தைக் கூறுதல் ... 1740

18-1



ஸர்க்கம். பேஜ்.

23 வாலி மரணம் அடைந்தபின்பு தாரை புலம்புதல் ... 1745
24 தாரையின் புலம்பலைக்கேட்டு ஸுக்ரீவன் துக்கித்தலும், ராமன் அவனை ஸமாதானப் படுத்துதலும், தாரை ராமனிடம் ப்ரபத்தி செய்தலும்... 1749
25 ராமன் எல்லோர்க்கும் ஸமாதானஞ் சொல்லுதலும், வாலிக்கு ஸம்ஸ்காரஞ் செய்தலும் ... 1764
26 ஸுக்ரீவ பட்டாபிஷேகம் ... 1771
27 ராமன் ஸீதா விரஹத்தால் சோகித்தலும் லக்ஷ்மணன் சமாதானப்படுத்தலும் ... 1777
28 ராமன் வர்ஷருதுவை வர்ணித்தல் ... 1784
29 ஹனுமான் ராமகார்யத்தை மறந்த ஸுக்ரீவனுக்குத் தெரிவித்தலும், ஸுக்ரீவன் நலனைக்கொண்டு ஸகல ஸைந்யங்களையும் வரவழைக்கும்படி ஆஜ்ஞாபித்தலும் ... 1797
30 சரத்ருது வருவதும், ஸுக்ரீவன் ப்ரயத்னஞ் செய்யாமைக்கு ராமன் கோபித்தலும் ... 1802
31 அங்கதன் ஸுக்ரீவனோடு லக்ஷ்மணன் கோபித்து வருவதைக் கூறுதல் ... 1817
32 ஹனுமான் ஸுக்ரீவனுக்கு ஹிதோபதேசஞ் செய்தல் ... 1825
33 அந்தப்புரத்திற்கு வந்த லக்ஷ்மணனைத் தாரை அருள்புரியச் செய்தல் ... 1828
34 ஸுக்ரீவனோடு லக்ஷ்மணன் ராமன் சொன்ன ஸங்கதியைச் சொல்லுதல்... 1839

ஸர்க்கம். பேஜ்.

35 தாரை மீளவும் லக்ஷ்மணனை நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்துதல்.... 1842

36 லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் ஸ்நேஹத்துடன் ஸம்பாஷித்தல் ... 1845

37 ஸுக்ரீவன் ஸமஸ்த வானரர்களையும் வரவழைத்தல் ... 1848

38 ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ராமனிடம் போதல் ... 1852

39 ஸமஸ்த வானரஸைன்யங்களும் வந்து கூடுதல் ... 1857

40 ஸீதையைத் தேடும்பொருட்டு விநதனைக் கிழ்த்திசைக்கனுப்புதல் 1862

41 ஸுக்ரீவன் தென்திசைக்கு ஹனுமான் முதலானவர்களை அனுப்புதல் ... 1871

42 ஸுக்ரீவன் மேற்றிசைக்கு ஸுஷேணன் முதலிய வானரர்களை அனுப்புதல் ... 1878

43 ஸுக்ரீவன் வடதிசைக்கு சதவலிமுதலிய வானரர்களை அனுப்புதல் ... 1885

44 ராமன் ஹனுமானுக்கு அடையாள்மாக அங்குலீயகம் கொடுத்தல் ... 1894

45 அனுப்பப்பட்டவானரர்களின் ஸங்நாஹம். 1896

46 ஸுக்ரீவன் ராமனுக்கு ஸமஸ்த பூமண்டலமும் தனக்குத்தெரிந்த விதத்தைக் கூறுதல் ... 1899

47 தென்திசைக்குப்போனவர் தவிர மற்றத் திசைகளுக்கு போனவரெல்லோரும் திரும்பிவருதல் ... 1902

48 ஹனுமான் முதலானவர்கள் தென்திசைக்குப்போய் ஸீதையைத் தேடுதலும் அங்கு ஓர் அஸுரனைக் கொல்லுதலும். 1904

ஸர்க்கம். பேஜ்.

49 ஹநுமான் மீளவும் வேறு இடங்களில் தேடிப்பார்த்தல் ... 1907

50 ஹநுமான் முதலியவர் ருக்ஷபிலத்தில் ஸ்வயம் ப்ரபையைக் காணுதல் ... 1909

51 ஸ்வயம்ப்ரபை வானரர்களுக்கு ருக்ஷபில வ்ருத்தாந்தத்தைக் கூறுதல் ... 1914

52 ஹநுமான் ஸ்வயம்ப்ரபைக்குத் தாம் வந்தகார்யத்தை தெரிவித்தல் ... 1916

53 ஸ்வயம்ப்ரபை வானரர்களைப் பிலத்தினின்று தன் மஹிமையால் வெளிப்படுத்துதலும், வானரர்கள் கெடுகடந்ததற்கும் ஸீதையைக் காணுமைக்கும் வெறுப்புறுதலும் ... 1919

54 ஹநுமான் அங்கதனுடைய மதத்தைக் கண்டித்து ஸுக்ரீவனிடம் போகலாமென்றுரைத்தல் ... 1924

55 அங்கதாதி வானரர்கள் ப்ராயோபவேசஞ் செய்தல் ... 1928

56 ஸம்பாதி வருதலும், ஸம்பாதியைப்பார்த்து வானரர்கள் துக்கஸம்பாஷணஞ் செய்தலும் ... 1932

57 ஸம்பாதிக்கும் வானரர்களுக்கும் ஸம்பாஷணம் ... 1934

58 ஸம்பாதி ஸீதையிருக்குமிடத்தை வானரர்களுக்குக் கூறுதல் ... 1937

59 ஜாம்பவான் வினவுகையில் ஸம்பாதி தன் புத்ரனாகிய ஸுபார்ஸ்வன் மூலமாய்ராவணன் ஸீதையை எடுத்துக்கொண்டு போன வ்ருத்தாந்தம் தனக்குத்தெரியுமென்று கூறுதல் ... 1942

ஸர்க்கம். பேஜ்.

60 ஸம்பாதி தன் இறகுகள் தீய்ந்துபோனது முதலிய வ்ருத்தாந்தங்களைக் கூறுதல். 1946

61 ஸம்பாதி தன் இறகுகள் வெந்துபோன வ்ருத்தாந்தத்தை நிசாகர மஹர்ஷிக்குச் சொல்லுதல் ... 1949

62 நிசாகரமுனி ஸம்பாதிக்கு இறகுகள் முளைக்கும் ப்ரகாரத்தைக் கூறுதல் ... 1951

63 ஸம்பாதிக்கு இறகுகள் முளைத்தலும், வானரர்களுக்கு ஸம்பாதி செய்யவேண்டிய கார்யத்தைக் கூறுதலும் ... 1953

64 வானரர்கள்ஸமுத்ரத்தினருகில் சேருதல். 1956

65 வானரர்கள் ஸமுத்ரந்தாண்டுவதில் தமக்குள்ளசக்தியின் அளவைக்கூறுதல் ... 1959

66 ஜாம்பவான் ஹனுமானை ஸமுத்ரந்தாண்டஉத்ஸாஹப் படுத்துதல் ... 1963

67 ஹனுமான் வானரர்களை உத்ஸாஹப்படுத்தி ஸமுத்ரத்தைத் தாண்டும்பொருட்டுமஹேந்த்ர பர்வதத்தின்மேல் ஏறுதல். 1968

---

# படங்களின் விவரம்.

---


1601. ராமன் பம்பாதீரத்தில் பக்ஷி முதலியவற்றைக் கண்டு தன்விரஹவேதனையை லக்ஷ்மணனுக்குக் கூறுதல்.

1629. ஹனுமான் ஸந்யாஸி வேஷம் பூண்டு ராமலக்ஷ்மணரிடம் வருதல்.

1643. ஹனுமான் ராமலக்ஷ்மணர்களைத் தோள்மேல் ஏற்றிக்கொண்டு ஸுக்ரீவனிடம் போதல்.

1649. ஸுக்ரீவன் ஸீதையின் ஆபரணங்களைக் காண்பித்தலும், ராமன் அதைக்கண்டு வருத்தமுறுதலும்.

1681. ராமன் துந்துபி சரீரத்தை மேற்கிளம்பும்படி எடுத்தெறிதல்.

1683. ராமன் ஸப்த ஸாலங்களைப் பேதித்தல்.

1707. வாலி ஸுக்ரீவர்களின் யுத்தமும், வாலியின்மேல் ராமன் பாணப்ரயோகஞ் செய்தலும்.

1733. தாரை வாலியைக்கண்டு புலம்புதல்.

1775. ஸுக்ரீவ பட்டாபிஷேகம்.

1834. அந்தப்புரத்திற்கு வந்த லக்ஷ்மணனைத் தாரை ஸமாதானப் படுத்துதல்.

1911. வானரர்கள் ஸ்வயம்ப்ரபையின் பிலத்தில் புகுதல்.

1916. ஸ்வயம்ப்ரபை வானரர்களுக்குப் பல மூலாதிகளைக் கொடுத்தல்.

1933. ஸம்பாதியைக்கண்டு வானரர்கள் பயப்படுதல்.

1955. ஸம்பாதி மீளவும் இறகுகள் முளைக்கப்பெற்று மேற்கிளம்புதல்.

1959. அங்கதாதிகள் ஸமுத்ரந் தாண்டுவதில் தமக்குள்ள சக்தியை ஜாம்பவானுக்கு அறிவித்தல்.


---



1601. ராமன் பம்பாதீரத்தில் பக்ஷி முதலியவற்றைக் கண்டு தன் விரஹவேதனையை லக்ஷ்மணனுக்குக் கூறுதல்.



ஸ்ரீ:

ஸ்ரீஸீதாஸமேத ராமசந்த்ர பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீராமாயணம்

## கிஷ்கிந்தாகாண்டம்.




[1] ராமன், கீழ்ச்சொன்ன பம்பையென்னும் புஷ்கரிணியையடைந்து, அதில் ஸீதையின் முகத்தைப்போல் விளங்கும் தாமரைமலர்களையும், அவள்கண்ணைப்போல் தோன்றும் நீலோற்பலங்களையும் மற்றும் அவள்கடைக்கண் புரட்சியைப்போல் ஸஞ்சரிக்கும் மத்ஸ்யங்களையும் பார்த்து அவளுடைய முகம் முதலிய அவயவங்களை நினைந்து மனம் முதலிய இந்த்ரியங்கள் கலங்கப்பெற்று, தனக்கு அந்தரங்க

---

1 ஆரண்யகாண்டத்தில் தீனஜனரக்ஷணமென்னும் தர்மம் அனுஷ்டித்துக் காட்டப்பட்டது. இக்காண்டத்தில் மித்ரஸம்ரக்ஷணமென்னும் தர்மம் அனுஷ்டித்துக் காட்டப்படுகிறது. மேலும் பூர்வகாண்டத்தில் மோக்ஷங்கொடுத்தலாகிற பரத்வசிஹ்நம் காட்டப்பட்டது. இதில் கணக்கில்லாத கல்யாணகுணங்கள் நிரூபிக்கப்படுகின்றன. வாஸ்தவத்தில் பூர்வகாண்டத்தில் மாரீசதர்ஸந வ்ருத்தாந்தம் முதலாகச் சேதநன் உஜ்ஜீவிக்கும் விதம் சொல்லப்படுகிறது. அதில் மாரீசதர்சந வ்ருத்தாந்தத்தால் பகவத்ஸித்யாநுபவத்

னை லக்ஷ்மணன் அருகேயிருந்து ஸமாதானப்படுத்தும் பொழுதும் வருந்திப் புலம்பலுற்றனன். அந்தப் புஷ்கரிணியைப் பார்த்தவுடனே ராமனுடைய இந்த்ரியங்கள் ஸந்தோஷத்தினின்று நழுவின. அப்பால் அவன் ஸீதையை நினைத்துக்கொண்டு காமபரவசனாகி லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! இந்தப் பம்பாஸரஸ்ஸானது வைடூர்யம்போல் நிர்மலமான ஜலத்தையும் தாமரை நெய்தல் முதலிய மலர்களையுமுடையதாகிக் கரைகளில் முளைத்திருக்கும் பற்பல வ்ருக்ஷங்களால்

---

திற்கு யோக்கியனாகிய சேதநனுக்கு உரியதல்லாத விஷயாந்தரத்தில் ஆஸக்தியும். அதனால் ராவணனென்னும் மஹாமோஹம் மூடிக்கொள்ளுதலும், ஜடாயுவின் வ்யாபாரத்தினால் ராவணனிடத்தினின்று ஸீதை விடுபடாமையைக் கூறுதலால் கேவல கர்மத்தினால் ஸம்ஸாரத்தைக்கடக்க முடியாமையும், லங்கையில் புகுவதனால் ஸாம்ஸாரிக சரீரத்தில் புகுவதும், ஏகாக்ஷி ஏககர்ணி முதலானவர்களின் வ்யாபாரத்தினால் தாபத்ரயத்தினால் பரிதாபமுறுவதும், ராமன் தேடினதால் பகவான் சேதனர் உஜ்ஜீவிக்கும் உபாயத்தை ஆராய்தலும், ஆரண்யகாண்டத்தில் சொல்லப்பட்டன. இனி, இதில் ஹனுமானைக்கொண்டு ஸீதையைத் தேடுவிக்கையால் ஆசார்யமுகமாகச் சேதனனுக்குத் தன்பக்கல் பக்தியைப் பிறப்பிக்கும் பொருட்டுப் பகவான் தேடுதல் சொல்லப்படுகிறது. இதில் முதல்ஸர்க்கத்தில் ராமன் பம்பாநதியின் ஸம்ருத்தியைப் பார்த்து ஸீதையை நினைத்துக்கொண்டு வருத்தமுறுதலால் 'ஸ ஏகாகீ ந ரமேத' (அவன் தனியனாக மனக்களிப்புறான்) என்கிறபடியே 'இவர் தன்னை அனுபவிக்கிறாப்போல் ஸம்ஸாரி சேதனர்களும் அங்ஙனம் அனுபவிக்க உரியராயிருக்கச் செய்தேயும் அவர்கள் ஏன் என்னைப் பெறாதிருக்கிறார்கள்' என்று பகவானுடைய துக்காதிசயம் தெரிவிக்கப்படுகிறது. இந்த ஸர்க்கத்தில் பம்பாதீரத்தைப் பரமபதமாகவும் அங்குள்ள பக்ஷிவ்ருக்ஷாதிகளை நித்யஸூரிமுதலியவராகவும், வாயுவைப் பகவத் க்ருபையாகவும், புஷ்பங்களை ஜ்ஞானிகளின் ஜ்ஞானாதிகளாகவும், நிர்மலமான ஜலத்தைத் தெளிந்த ஹ்ருதயமாகவும், இப்படியே அந்தந்த ஸங்கேதங்களை ஊஹித்துக்கொள்க.

சூழப்பட்டு விளங்குகின்றது பார். ஓ! ஸௌமித்ரீ! இந்தப் பம்பாதீரத்திலுள்ள இனிய காட்சியையுடைய கானகத்தைக் காண்பாயாக. இங்கு வ்ருக்ஷங்கள் உயர்ந்த கிளைகளுடையனவாகிச் சிகரங்களோடுகூடிய பர்வதங்கள்போலத் தோன்றுகின்றன. அங்கே பரதன் பட்டணத்திற்கு வெளியில் வ்ரதோபவாஸாதிகளால் மெலிந்து வருந்துகிறானே யென்றும், ஸீதை காணாது போயினளே யென்றும் இவ்வித துக்கத்தினால் நான் பரிதபித்துக் கொண்டிருக்கின்றேன். இங்ஙன மிருக்கின்ற என்னை வஸந்தருது மேன்மேலும் பீடிப்பதுபோ லிருக்கின்றது. துக்கமுற்றவன்மனத்திற்கு எதுவும் இனிதாயிராது. நான் துக்கத்தினால் பரிதபித்துக் கொண்டிருப்பினும் எனக்குங்கூட இந்தப் பம்பை விசித்ரமான வனங்களும் பலவகைப் புஷ்பங்களும் நிறைந்து குளிர்ந்த ஜலத்துடன் கூடி எவ்வளவோ ரம ணீயமாய்த் தோன்றுகின்றது. மேலும், இங்கு மலைப் பாம்புகளும் மஹாஸர்ப்பங்களும் மிகுதியாயிருப்பினும் ம்ருகங்களும் பக்ஷிகளும் உலாவப்பெற்றுத் தாமரை நெய்தல் முதலிய புஷ்பங்கள் நிரம்பப் பெற்றிருக்கை யால் இவ்விடம் பார்க்க மிகவும் இனிதாயிருக்கிறது. கறுத்துப் பொன்வர்ணமுடைதாகி மென்மையும் பள பளப்புமான மயில்கழுத்து நிறமுடைய இந்தப் பசும்புல் லின்தரை, வ்ருக்ஷங்களினின்று உதிர்ந்த புஷ்பங்களால் நிரம்பியதாகி மேலே ரத்னகம்பளம் விரிக்கப் பெற்ற துபோல்மிகவும் அழகாய் விளங்குகின்றது. வ்ருக்ஷங் களின் நுனிகள் நாற்புறமும் நன்கு புஷ்பித்து அந்தப் புஷ்பபாரத்தைச் சுமந்து கொடிகளால் சுற்றப்பட்டு விளங்குகின்றன. லக்ஷ்மணா! வஸந்த மாதம் வந்திருக் கின்றது. இந்தக் காலத்தில் காற்று ஸுகமாக வீசு கின்றது. மன்மத விகாரம் மிகுந்திருக்கின்றது. அன்றி

வாஸனைகளும் கமழ்கின்றன. இக்காலத்தில் வ்ருக்ஷங்களும் புஷ்பங்களும் பழங்களும் நிறையப்பெற்றிருக்கின்றன. லக்ஷ்மணா! புஷ்பங்கள் நிறைந்து அவற்றை வர்ஷிக்கின்ற இவ்வரண்யங்கள் ஜலத்தைப் பெய்யும் மேகங்கள்போல் விளங்குகின்றன பார். பலவித வ்ருக்ஷங்கள் காற்றின் வேகத்தினால் அசைந்து ரமணீயமான கற்களின்மேல் புஷ்பங்களை இறைக்கின்றன. காற்றின் வேகத்தினால் சில புஷ்பங்கள் கீழே உதிர்ந்தும் சில உதிர்ந்துகொண்டும் மற்றும் சில வ்ருக்ஷங்களிலேயே தங்கியும் இருக்கின்றன. ஆகையால் காற்று நாற்புறத்திலும் புஷ்பங்களால் க்ரீடிப்பதுபோல் புலப்படுகின்றது பார். புஷ்பங்களை யணிந்த கூந்தல் அவிழ்ந்து அலைவதுபோல, காற்றினால் மலர்நிறைந்த கிளைகள் அசைந்துகொண்டிருக்கையில், வண்டுகள் தாம் தங்கியிருந்த மலர்களினின்று கிளம்பி அந்தக்காற்றைக் குறித்துக் கானஞ்செய்வதுபோல ரீங்காரஞ் செய்கின்றன. மற்றும் அக்காற்றானது வ்ருக்ஷங்களை நர்த்தனஞ் செய்விக்கத் தொடங்கினாற்போல் மதமேறின குயில்களின் த்வனியினால் மேலான கானத்தைச் செய்துகொண்டு பர்வத குஹைகளினின்று வெளிப்பட்டு வருகின்றது. அந்தக் காற்று நாற்புறமும் வீசிக் கிளைகளை அசைத்துக் கொண்டிருக்கையில் அந்த வ்ருக்ஷங்களின் நுனிக்கிளைகள் அதன் வேகத்தினால் ஒன்றோடொன்று பின்னிக் கொண்டு தொடுக்கப்பட்ட பூமாலைபோல் புலப்படுகின்றன. இதோ இக்காற்று மலயசந்தனம்போல் குளிர்ந்து திவ்ய வாஸனையை அளைந்து ஶ்ரமங்களெல்லாம் தீரும்படி நம்மேல் வீசுகின்றது. தேன்மணம் வீசப்பெற்ற வனப்ரதேசங்களில் இந்த வ்ருக்ஷங்கள் காற்றினால் அசைக்கப்பட்டு வண்டுகளின் த்வனியினால் கூச்சலிடுவனபோ லிருக்கின்றன. பர்வதங்கள் அழகான

தமது தாழ்வரைகளிலுள்ள கற்களில் முளைத்து முழுவதும் புஷ்பித்து மனோஹரங்களாகி உதிர்ந்திருக்கிற மஹாவ்ருக்ஷங்களால் தமதுசிகரங்கள் ஒன்றோடொன்று கூடப்பெற்று மிகவும் ப்ரகாசிக்கின்றன. இந்த வ்ருக்ஷங்கள் புஷ்பங்களால் நுனிதெரியாமல் மறைக்கப்பட்டவையாகிக் காற்று வேகத்தினால் இப்படியும் அப்படியும் அசைந்துகொண்டு நுனிகளில் வண்டுகள் வந்து நிரம்பிச் சூழ்ந்திருக்கையால், புஷ்பங்களைச் சூடிக் கறுத்த தலைப்பாகையுந் தரித்துத் தலையை அசைத்துக்கொண்டு கானஞ் செய்பவர்போல் புலப்படுகின்றன. நுனியெல்லாம் நன்றாகப் புஷ்பித்திருக்கின்ற இந்தக் கர்ணிகார வ்ருக்ஷங்கள் (கோங்குமரங்கள்) ஸ்வர்ணாபரணங்களை அணிந்து பீதாம்பரத்தைத் தரித்த மனிதர்கள் போல் நாற்புறத்திலும் புலப்படுகின்றன, பார். லக்ஷ்மணா! இந்த வஸந்தருதுவில் நானாவகைப் பக்ஷிகள் கலகலவென்று கூவிக்கொண்டிருக்கையால் ஸீதையைப் பிரிந்திருக்கிற எனக்குச் சோகத்தை மிகவும் வளர்க்கின்றன. துக்கத்தினால் பரவசனாயிருக்கின்ற என்னை மன்மதன் மிகவும் பரிதபிக்கச்செய்கின்றனன். குயில், நான் துக்கித்திருப்பதைக் கண்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்து ஜயகோஷம் இட்டுக்கொண்டு என்னோடு பொறாமைப்படுவதுபோ லிருக்கின்றது. லக்ஷ்மணா! அரண்யத்தினிடையில் தோற்றும் அழகியதான மலையருவியில் இந்த நீர்க்கோழி இனிதாகக் கூவிக்கொண்டு மன்மத விகாரம் அதிகரிக்கப் பெற்றிருக்கின்றன. என்னை மேன்மேலும் வருத்தமுறச் செய்கின்றது. முன்பு ஆஶ்ரமங்களில் இருக்கும்பொழுது என் ப்ராணநாயகி, இந்த நீர்க்கோழியின் த்வனியைக் கேட்டுக் காதல்மிகுதியினால் ஸந்தோஷமுற்று என்னை அழைத்துப் பலவகைப்பட்ட லீலாரஸங்களை மிகுதியும் அனுபவித்தனள். இங்ஙனம்

சித்ர விசித்ரங்களான பக்ஷிகள் நானவிதத்வனிகளைச் செய்துகொண்டு ஆங்காங்குச் செடிகளையும் புதர்களையும் கொடிகளையும் சுற்றித்திரிகின்றன, பார். ஆண் பறவைகளால் ஆலிங்கனஞ் செய்யப்பட்ட பெண்பறவைகள் தமது ஜாதியில் பிறந்த மற்றைப் பறவைகளால் 'தகுந்த புருஷனைப் பெற்றாய்' என்று புகழப்பட்டவைகளாகிச் சிறந்த வண்டுகளின் ஜங்காரத்வனிகளைக் கேட்டு மனக்களிப்புற்று அதனால் மன்மதவிகாரம் மேலெழப்பெற்று இனிய ரதிகூஜிதங்களைச் செய்கின்றன, காண்பாய். நீர்க்கோழிகளின் த்வனிகளாலும் ஆண் குயில்களின் குலாவல்களாலும் இந்த வ்ருக்ஷங்கள் சப்தம் செய்பவைபோன்று எனக்கு மன்மத விகாரத்தை மேன்மேலும் வளர்க்கின்றன. இந்த வஸந்தருதுவே அக்னியாகி என்னைக் கொளுத்தப்போகின்றது. இதற்குச் சிவந்த அசோக வ்ருக்ஷத்தின் பூங்கொத்துக்களே கொள்ளிக்கட்டைகள்; வண்டுகளின் த்வனியே இது எரியும்போதுண்டாகும் படபட சப்தம். தளிர்களே இதற்குச் சிவந்த ஜ்வாலைகள். லக்ஷ்மணா! நுண்ணிய இமைமயிர்களையுடைய கண்கள் விளங்கப்பெற்றவளும் அழகிய கூந்தலையுடையவளும் ம்ருதுவான இனிய சொற்களை உரைப்பவளுமாகிய ஸீதையைக் காணாதிருப்பின் பிழைத்திருப்பதனால் எனக்கு ப்ரயோஜனம் யாதும் உண்டாகாது. குற்றமற்றவனே! ரமணீயமான அரண்யங்களையுடையதும் நாற்புறத்து எல்லைகளிலும் விசேஷமாகக் குயில்கள் கூவப்பெற்றதும் என்னோடு கூடியிருக்கும்போது என் ப்ராணநாயகியான வைதேஹிக்கு மிகவும் ப்ரியமாயிருப்பதுமான இந்த வஸந்தருதுவானது இங்ஙனம் அவளைப் பிரிந்திருக்கின்ற எனக்கு மிகவும் வருத்தத்தைச் செய்கின்றது. இந்தத் துக்காக்னியானது மன்மதபீடையால் உண்டானது.

மேலும் இந்த ருதுவினது அழகின்] மிகுதியால் அது மேன்மேலும் பெருகி வந்திருக்கின்றது. இனி என்னைச் சீக்ரத்திலேயே இந்தச் சோகாக்னி தஹித்து விடும். அந்த ப்ராணநாயகியைப் பாராமல், மனோஹரங்களாகி மன்மத விகாரங்களை விளைக்கின்ற இந்த வ்ருக்ஷங்களைப் பார்க்கின்ற எனக்கு இம்மன்மதபீடை மேன்மேலும் பருப்பருத்து வளரப்போகின்றது. ஸீதை என்கண்களுக்குப் புலப்படாமையாலும், மலயமாருதத்தினால் புழுக்கத்தைப் போக்கி ஸம்போகலீலையாலுண்டாகும் ஶ்ரமத்தை அழிக்கவல்ல இந்த வஸந்தருது புஷ்பம் முதலியவற்றால் விளக்கமுற்றுப் புலப்படுவதனாலும் என்வருத்தம் மேன்மேலும் வளரப்போகின்றது. லக்ஷ்மணா! மான்குட்டியின் கண்கள்போன்ற கண்களையுடைய வைதேஹி தன் விஷயமான சிந்தையும் சோகமும் மேலெழப்பெற்று வருந்துகின்ற என்னை என்கண்ணுக்கும் புலப்படாமல் பரிதபிக்கச் செய்கின்றனள்; அரண்யத்தினின்று வீசுகின்ற இந்தக் கொடிதான வஸந்தவாயுவும் சிறிதும் தயையின்றி என்னைப் பரிதபிக்கச் செய்கின்றது. காற்றானது வீசித் தமது இறகுகளைக் கலைக்கும்போது அவற்றின் வெளுத்த அடிப்புறங்கள் ஸ்படிகரத்னமயமான சாளரங்கள்போல் விளங்காநிற்க இந்த மயில்கள் ஆங்காங்கு நர்த்தனஞ் செய்துகொண்டு மிகவும் ப்ரகாசிக்கின்றன. இம்மயில்கள் ஆண்மயில்களால் சூழப்பெற்றிருக்கையால் மதம் அதிகரிக்கப்பெற்று முன்னமே மன்மதபாதையால் பரிதபிக்கின்ற எனக்கு மேன்மேலும் அம்மன்மதபாதையை வளர்க்கின்றன. லக்ஷ்மணா! இந்தப் பர்வதங்களின் தாழ்வரைகளில் தனக்குத்தானே லீலாரஸத்தினால் நர்த்தனஞ் செய்கின்ற தன் கணவனாகிய ஆண்மயிலைப் பார்த்து இந்தப் பெண்மயில் மனமயக்கந்

கொண்டு ரதிகேளியின்பொருட்டு அதை அழைத்துக் கொள்ளவிரும்பி அதனருகிற்சென்று நர்த்தனஞ்செய்கின்றது பார். ஆண்மயிலும் ஸம்போகத்தின்பொருட்டு அழகிய தன் இறகுகளை விரித்துக்கொண்டு சிரித்த முகத்துடன், ப்ராணநாயகியைப் பிரிந்திருக்கிற என்னைப் பரிஹஸிப்பதுபோன்று, தன்ப்ரியையான பெண் மயிலின் அருகிற்போக மனத்தில் விரும்புகின்றது. இந்த மயிலின் ப்ராணநாயகியை வனத்தில் ராக்ஷஸன் எடுத்துக்கொண்டு போகவில்லை. இது நிஜம். ஆனது பற்றியே இம்மயில் தன் ப்ராணநாயகியோடுகூட, ரமணீயங்களும் போகத்திற்குத் தகுந்தவைகளுமாகிய வனப்ரதேசங்களில் நர்த்தனஞ் செய்கின்றது. வஸந்த காலத்தில் ஸீதையைப்பிரிந்து வனத்தில் வாஸஞ் செய்வது எனக்கு எவ்வளவும் பொறுக்கக்கூடியதன்று. லக்ஷ்மணா! உலகத்தில் புருஷன் ஸ்த்ரீயைப் பின்செல்வானென்பது ப்ரஸித்தமாயிருக்கவும், இதோ பார், இந்தப் பெண்மயில் காமவேகத்தினால் தானே கணவனைக் கிட்டி விளையாடுகின்றது. திர்யக்ஜாதிகளிலுங்கூடப் பெண்களுக்கு எவ்வளவு அனுராகம் இருக்கின்றது பார். பெண்களுக்குங்கூட இப்படிப்பட்ட காம விகாரத்தை விளைக்கின்ற இந்த வஸந்தருதுவின் வைபவம் எப்படிப்பட்டதோ! என் ப்ராணநாயகியான ஸீதையுங்கூட, ராக்ஷஸன் அபஹரித்துக்கொண்டு போகாதிருப்பானாயின், என்னைப் பார்த்துக் கண்கள் மலரப் பெற்றுக் காதலை மேற்கொண்டு இங்ஙனம் என்னை எதிர் நோக்கிவருவாள். இது நிச்சயம். லக்ஷ்மணா! இந்த வஸந்த ருதுவில் வனப்ரதேசங்கள் நிரம்பப் புஷ்பித்திருப்பினும், அவை அந்தப் புஷ்பங்களால் எனக்கு எள்ளளவும் ப்ரயோஜனப்படாமலிருக்கின்றன, பார். செடிகளிலுள்ள புஷ்பங்கள் மிகுந்த சோபையுடன்

கூடி எவ்வளவு அழகாயிருப்பினும் எனக்குச் சிறிதும் ப்ரயோஜனப் படாதிருக்கின்றன. ஆகையால் இந்தப் புஷ்பங்கள் தம்மீது தேனுக்காக மொய்த்துக்கொண்டிருக்கும் வண்டினங்களோடுகூட வீணாகவே தரையில் வீழ்கின்றன. பக்ஷிகள் எனக்குக் காமவெறியை விளைப்பனவாகி, அதற்காகக் கூட்டங்கூடும்பொருட்டு ஒன்றையொன்று அழைப்பனபோன்று ஸந்தோஷத்தினால் இனிதாகக் கூவுகின்றன. என் ப்ராணநாயகியிருக்கும் இடத்திலுங்கூட இந்த வஸந்தருது இருக்குமாயின் அந்தஸீதையும் பரவசையாகி என்னைப்போலவே வருத்தமுறுவாள்; இது நிச்சயம். அந்த ஸீதையைக் கொண்டுபோய் எங்கேயோ மறைவான இடத்தில் சத்ருக்கள் வைத்திருப்பார்களாகையால் அவளிருக்கு மிடத்தில் வஸந்தருது இருக்கமாட்டாது. இது நிச்சயம். இப்படி வஸந்த ருதுவின் ப்ரஸக்தியில்லாமையால் துக்கம் உண்டாகாதென்னலாகுமோ? வஸந்தருது இல்லாமற்போயினும் நானில்லாமையால், என்னைவிட்டுப் பிரிந்து கருநெய்தல் போன்ற கண்களையுடைய அப்பேரழகி எப்படி ப்ராணனை வைத்துக்கொண்டிருப்பாள்? நடுப்பருவமும் தாமரை யிதழ்போன்ற கண்களும் எப்பொழுதும் மிருதுவான சொற்களும்பொருந்திய ஸீதை இந்த வஸந்தருதுவைப் பொறுக்கமுடியாமல் ப்ராணனைவிட்டுவிடுவாள், இது நிச்சயம். ஸீதை பதிவ்ரதை; மேலும்,என்னைவிட்டுப் பிரிந்திருக்கின்றனள். ஆகையால் அவள் என்னைவிட்டுப் பிழைத்திருக்கமாட்டாளென்று என் மனத்தில் இப்பொழுது கெட்டியாகத் தோற்றுகின்றது. ஸீதை என்னிடத்தில் வாஸ்தவமாகவே மிகுந்த அனுராகமுடையவள். நானும் ஸீதையிடத்தில் எல்லாவிதத்திலும் மிகுந்த ப்ரீதிவைத்திருப்பவன். இந்தக் காற்று புஷ்பங்களைப் பறித்துக் கொண்டுவந்து ஸுகஸ்பர்ச

முடையதாகிக் குளிர்ந்து மெதுவாக வீசிக்கொண்டிருப்பினும் அந்த என் காதலியைப் பிரிந்து சிந்தித்துக் கொண்டிருக்கிற எனக்கு அக்னிபோ லிருக்கின்றது. முன்பு ஸீதையோடு கூடியிருக்கும்பொழுது, எதை எனக்கு எப்பொழுதும் ஸுகமாயிருக்குமென்று நினைப்பேனே அப்படிப்பட்ட இந்த மந்தமாருதம், இப்பொழுது ஸீதையைப் பிரிந்திருக்கையால் எனக்கு மேன் மேலும் துயரத்தை வ்ருத்தி செய்கின்றது. முன்னம் ஸீதையைப் பிரியாதிருந்தபொழுது எந்தக்காகம் ஆகாயத்திற்சென்று பருஷமாக இரைச்சலிட்டுக்கொண்டு ஸீதாவியோகத்தை ஸூசனை செய்ததோ, அந்தக் காகமே இப்பொழுது ஸீதையைப் பிரிந்திருக்கையில் செடியின் மேலேறி மிக்க ஸந்தோஷத்துடன் கூச்சலிட்டுக்கொண்டு [1] ஸீதா ஸமாகமத்தை ஸூசனைசெய்கின்றது. இந்தக் காகமே அப்பொழுது ஸீதையைப் பிரித்துவிட்டது. [2] இப்பொழுது இது என்னை அகன்றழகிய கண்களையுடைய அந்த ஸீதையின் அருகில் கொண்டு சேர்க்கக்கூடும். லக்ஷ்மணா! வனத்தில் நுனியெல்லாம் புஷ்பித்திருக்கிற வ்ருக்ஷங்களின்மேல் பக்ஷிகள் மதுரமாகக் கூவிக்கொண்டிருக்கின்றன பார். அந்த த்வனி மிகவும் காமவிகாரத்தை விளைக்கின்றது. காமவிகாரத்தினால் ஒருவன் தன் காதலியை அணைவதுபோல் இந்த வண்டு காற்றினால் இப்படியும் அப்படியும் அசைகின்ற திலகவ்ருக்ஷத்தின் பூங்கொத்தைத் திடீலென்று மேல்விழுந்து அணைகின்றது. இயற்கையாகவே

---

1 ஸீதையுடன் சேருதலை.

2 காக்கையின் கரைதலைக்கொண்டு நன்மை தீமைகளை அறிவதுண்டு. 'கரையாய் காக்கைப் பிள்ளாய்' முதலிய ப்ரயோகங்களைக் காண்க.

விரஹிஜனங்களுக்குத் துயரத்தை வ்ருத்திசெய்யும்படியான இந்த அசோகவ்ருக்ஷம் காற்ருல் இலைகளினின்று வெளிப்பட்டு அசைகின்ற சிவந்த பூங்கொத்துகளால், 'உன்னை ஸம்ஹரிக்கும்பொருட்டுக் காய்ச்சப்பட்ட இந்தப் பாணங்களை மன்மதன் என்னிடம் வைத்திருக்கிருன்' என்று என்னைப் பயப்படுத்துவதுபோலிருக்கின்றது. லக்ஷ்மணு! புஷ்பங்கள் நிறைந்திருக்கிற இந்த மாமரங்கள் மேனியெல்லாம் சந்தனம் பூசிக்கொண்டு விலாஸத்தினுல் மனத்தில் செருக்கு மிகுந்திருக்கிற காமுகர்போல் புலப்படுகின்றன. ஓ! புருஷஸ்ரேஷ்டனே! லக்ஷ்மணு! பம்பாதீரத்தில் வரிசையாயிருக்கின்ற விசித்ரமான வனங்களில் அந்தந்த இடங்களில் கின்னரர்கள் விளையாடுகின்றனர். காண்பாயாக. நல்ல வாஸனை வீசுகின்ற இந்தத்தாமரைமலர்கள் ஜலத்தினிடையில் ஒவ்வொரு அலையின்மேலும் ப்ரதிபலிக்கின்ற பாலஸூர்யன்போல் ப்ரகாசிக்கின்றன. இந்தப் பம்பாஸரஸ்ஸு நிர்மலமான ஜலமும் அழகிய தாமரைகளும் கருநெய்தல்களும் செங்கழுநீர்களும் அமையப்பெற்று ஹம்ஸங்களும் நீர்க்காகங்களும் நிறைந்து மிகவும் ப்ரகாசிக்கின்றது. மற்றும் இப்பொய்கை தன் ஜலப்ரவாஹங்களில் ப்ரதிபலிக்கின்ற பாலஸூர்யன்போல் விளங்குகின்றவைகளும் வண்டுகள் மொய்க்கப் பெற்றவைகளுமான தாமரைமலர்களை நாற்புறத்திலும் கொண்டு மிகவும் அழகாயிருக்கின்றது. மேலும் இது சக்ரவாகங்கள் நிறைந்து, சித்ரபடம்போல் கரையில் விளங்குகின்ற அழகிய வனுந்தரங்களடர்ந்து, ஜலம் பருகுவதற்காக வந்த யானைக்கூட்டங்களாலும் ம்ருக ஸமூஹங்களாலும் எப்பொழுதும் ப்ரகாசிக்கின்றது. லக்ஷ்மணு! நிர்மலமான ஜலத்தில் தாமரைகள், காற்றினுல் வேகத்துடன் கிளம்பும் அலைகள் வந்து மோதுகையில் சாட்டை

களால் அடிக்கப்பட்டவைபோல் அலைகின்றன. இப்படிப்பட்ட இடத்தில் தாமரையிதழ்போன்ற நீண்ட கண்களுடையவளும் எப்பொழுதும் தாமரைமலர்களில் மிக்க விருப்பமுடையவளுமாகிய ஸீதையைப் பாராமல் பிழைத்திருப்பது எனக்கு எள்ளளவும் இஷ்டமாயில்லை. ஐயோ! மன்மதனுடைய கொடுமையே! ஆ! காமனுடைய கோணலே! அந்த மங்கலஸ்வபாவை 'மானைப் பிடித்துக் கொடு' என்று மேலான சொற்களை உரைத்த ஸீதை என்னைப்பிரிந்து வெகுதூரஞ்சென்று எனக்குப் பெறமுடியாதவளா யிருப்பினும், மன்மதன் அவளை அடிக்கடி என்னினைவிற் கொணர்கின்றானே! புஷ்பித்த வ்ருக்ஷங்கள் நிறைந்த இந்த வஸந்தருது மீளவும் என்னை வருத்தி என் ப்ராணனைக் கொள்ளாதிருக்குமாயின், நான் எப்படியாவது இப்பொழுதுண்டாயிருக்கும் மன்மதபாதையைப் பொறுத்திருக்கக்கூடும். அந்த ஸீதை என்னோடுகூட இருக்கும்பொழுது எந்தெந்த வஸ்துக்கள் எனக்கு ரம்ணீயங்களாயிருந்தனவோ, அவையெல்லாம ஸீதையைப் பிரிந்திருக்கிற எனக்கு இப்பொழுது மிகவும் துயரத்தை விளைப்பனவாயிருக்கின்றன. லக்ஷ்மணா! தாமரைமொக்குகளின் மேலிதழ்களைக் கண்டவுடனே எனது கண் 'இது ஸீதையின் கண்களுடைய இமைகளை நிகர்த்தவை' என்று பார்க்கின்றது. [1] தாமரைத் தாதுகளோடுகூட வ்ருக்ஷங்

1 இங்கு 'பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டோ வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத:। நிஸ்ஸ்வாஸ இவ ஸீதாயா வாதி வாயுர் மநோஹர:' என்பது மூலம். விசேஷார்த்தம்—ஸமஸ்த ப்ராணிகளுடைய ஜீவனத்திற்கும் ஹேதுவான காற்றே என்ஸர்வஸ்வத்தையுங் கொள்ளைகொள்கிறதென்கிறான்—(பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:) இந்தக் காற்றுக்குத் தூசியைக் கிளப்புவது கார்யம். இது இங்குத்தாமரைத்தாதுகளிற்படிந்த தூள்களுடன் கிளம்புகின்றது. ஸமஸ்தப்ராணிகளுக்கும் ஜீவனஹேதுவானவனே ஸர்வத்தையும் தூளாக்கமுயன்றான். அதாவது ஸம்ஹாரஞ்செய்யத் தொடங்கினானென்றவாறு. அன்றியே (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:) பத்மத்தில் வஸிக்கும் பிராட்டியாகிய ஸீதை என்னை விட்டுப்பிரியவே பத்மகேஸரங்கள் எனக்கு ப்ரதிகூலமாகி வாயுவுக்

களின் இடைவெளிகளினின்று வரும் காற்றானது ஸீதையின் மூச்சுக்காற்றுபோல் நல்ல வாஸனையுடன்

---

குத் துணையாகின்றன. 'பாஜாருந்துஜமேவ பங்கஜராஜஃ' (தாமரைத் தாதுகளில் படியுந்தூள் பாதங்களில் படில் பாரதையைச் செய்வதே யன்றி ஸுகத்தைக் கொடுப்பதன்று) என்கிறபடியே ஸ்வஜனத்திற்கும் பாதகமானது நமக்கு ஏன் பாதகமாகாது? பத்மம் - தாமரைப்பூ. கேஸரம்-தாது. இங்குத் தாதுகளைக்கொண்டுவருவது காற்றுக்குப் பொருந்தாதாகையால் தாதுகளில் படிந்த தூள்களையே கேஸரசப்தத்தால் கொள்ளவேண்டும். ஆகையால் இப்படிப்பட்ட ரஜஸ்ஸுடன்கூடி ராஜஸப்ரக்ருதியாயிருக்கையால் இந்தக் காற்று நம்மையுங்கூடப் பாதிக்கத்தொடங்கிற்று. இதற்குக் காரணம் கண்டகிகளோடு உள்ள ஸம்பந்தமே. (ரஜஸ்ஸாவது-தூளும் ரஜோ குணமும். கண்டகிகள் முள்ளுடையவைகளும் துஷ்டர்களும். தாமரைத்தண்டுகளில் முள்ளிருக்கிறதாகையால் முள்ளுடையதென்று தாமரையைக் கண்டகியென்கிறது.) (பத்மகேஸரைஃ ஸம்ஸ்ருஷ்டஃ) கேஸரமென்றால் ஸிம்ஹத்தின் ஸடை. ஆகையால் இது காற்றன்று கேஸரி. அதாவது ஸிம்ஹம். என்றும் தோற்றுகிறது. அன்றியே (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டஃ) தானே ஸம்ஹாரஞ் செய்யவல்லது. அதற்குமேல் ஸஹாயமுங்கூட்டிக்கொண்டு வாராநின்றது. அன்றியே ரூபமுடையவனன்றோ அஸஹாயசூரனாயிருப்பான். இது ரூபமற்றதாகையால் ஸஹாயம் விரும்பாமல் எப்படியிருக்கும்? இங்ஙனம் இது பாதகமாயின் நீ முன்பாகவே இதைப் பரிஹரித்துக் கொண்டிருக்கலாகாதோ? என்னின், சொல்லுகிறான்-(வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருதஃ) தூரத்தில் வரும்பொழுது புலப்படுமாயின் இதைப் பரிஹரித்திருக்கக்கூடும்; வ்ருக்ஷங்களின் இடையில் மறைந்திருந்து திடீலென்று வெளிப்பட்டது. எப்படி பரிஹரிக்கமுடியும்? அன்றியே (வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருதஃ) கர்ப்பஸ்ரீவர்யமுடையவன் ஸௌகுமார்யத்தினால் வெயில்படாதபடி நிழலிலேயே வருவதுபோல் இதுவும் செடிகளின் நிழலிலேயே வருகின்றது. அன்றியே மன்மததாபத்தினால் இளைப்பாறுவதற்குச் செடிகளின் நிழலில் ஒதுங்கவொட்டேனென்கிறது. இங்ஙனம் பாதகமாயிருந்தால் தூரமாகத்தொலைந்து போகலாகாதோ? என்னின், சொல்லுகிறான்-(நிஸ்ஸ்வாஸ இவ ஸீ

மனோஹரமாக வீசுகின்றது. லக்ஷ்மணா! பம்பாஸரஸ்ஸுக்குத் தக்ஷிணபார்ஶ்வதத்தில் (தென்பாகத்தில்)

---

தாயா:) ஸீதையின் மூச்சுக்காற்றை ஸ்கர்த்து முன்பு பரிசயப்பட்டது போல் தோற்றுகையால் பரிஹரிக்கவுங்கூட ஸாத்யப்படாதிருக்கின்றேன். அன்றியே ஸீதையின் மூச்சுக்காற்றோடொத்திருக்கையால் இதை ஸீதையின் மூச்சுக்காற்றாகவே நினைத்து ஸீதை இங்குச் செடியடியில் மறைந்திருந்து என்னிடம் வருகிறாளோவென்று மிக ஆவலுடனிருந்தமையால் இங்கிருந்து போகவுங்கூடமாட்டாதிருக்கின்றேன். 'ஸுரபிநிஶ்வஸிதே ஜயதஸ்த்ரயஷாம்' என்று மூச்சுக்காற்றுக்குப் பரிமளத்தைக் கவிகள் சொல்லியிருக்கின்றனர். அன்றியே வாயு பத்மகேஸரம் முதலிய தன் பரிகரங்களோடு மேல் ஸ்பர்சித்து ஸங்கடப்படுத்துகை மாத்ரமேயன்று; நினைவுமூட்டியும் வருத்துகின்றது. இப்படிப்பட்ட காற்று ஒருபொழுது வருவதன்று—(வாதி) எப்பொழுதும் வாராநின்றது. அரண்யம் முழுமையும் தானேயாயிருக்கும்படி விலாஸத்துடன் திரிகின்றது. அன்றியே (வாதி) வா-கதி கந்தநயோ;' என்னும் பொருளைப்பற்றித் தான் ஸம்பாதித்த கந்தத்தினால் எல்லோரையும் பரவசமாக்குகின்றது. இப்படி பாதகமாயிருப்பது ஏதோ ஒன்றன்று (வாயு:) ஸர்வர்க்கும் ஜீவநஹேதுவான வாயுவே இங்ஙனம் செய்யாநின்றது. அன்றியே 'பீஷாஸ்மாத் வாத: பவதே' (இந்தப் பரமாத்மாவிடத்தில் அஞ்சி வாயு வீசுகின்றது) என்று என்னிடத்தில் அஞ்சியிருப்பவனே என்னைத் தத்தளிக்கச் செய்கின்றனன். பாதிக்கும்விதத்தைச் சொல்லுகின்றனன் (மநோஹர:) மேலுள்ள பதார்த்தமாகாமல் உள்ளிருக்கும் பதார்த்தமாகிய மனஸ்ஸையுங்கூட அபஹரிக்கின்றது. (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:) என்கையால் குளிர்ச்சியும்; (வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத:) என்கையால் மந்தமாயிருக்கையும், (நிஶ்வாஸ இவ ஸீதாயா:) என்கையால் நன்மணமும் வாயுவுக்குச் சொல்லப்பட்டன. மேலும், இதில் வாயுவுக்கு வழிமடக்கியடிக்கும் திருடர்தன்மைசொல்லப் படுகின்றது. எப்படியெனில்—(பத்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:) தான் இன்னானென்று பிறர்க்குத் தெரியாதபடிக்கும் பயப்படுந்தன்மையர்களைப் பயப்படுத்தும்படிக்கும் திருடர்கள் முகத்தில் கரிபூசிக்கொண்டு வருவதுபோல் வருகின்றது. (வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத:) வழிப்போக்கர்கள் அருகே வரும்

மலைச்சர்ரலில் ஒரு கர்ணிகாரவ்ருக்ஷத்தின்கிளை நன்ருகப்பூத்து அழகாயிருக்கின்றது பார். பலவகையான [1] கைரிக தாதுக்களால் மிகவும் அழகாயிருக்கின்ற இந்தப் பர்வத ஸ்ரேஷ்டமானது காற்றுவேகத்தினுல் கிளப்பப்பட்ட பல வர்ணங்களையுடைய தூளியை வெளிப்படுத்துகின்றது. லக்ஷ்மணு! மலைச்சாரல்களில் பலாசவ்ரு

---

வரையில் மறைந்திருந்து அவர் அருகே வந்தவுடனே திடீலென்று வெளிப்படுவதுபோல் வருகின்றது. (ஸிஸிவாஸஇவ ஸீதாயா:) வெகுநாள் பரிசயப்பட்டவன்போல் ஸரஸஸல்லாபத்துடன் வந்து 'உனனூரென்ன ? பேரென்ன?' என்று வினவுபவனைப்போலிருக்கின்றது. (வாதி) பணம் தன்கையில் அகப்படும்வரையில் ஆசையின்றி இங்குமங்கும் திரிவதுபோல் திரிகின்றது. (வாயு:) தன் திருட்டுத்தனத்தைக் கண்டு எவரேனும் பிடிக்க முயல்வார்களாயின் கையிற்பிடிக்க அகப்படாதது. (மனோஹர:) வெளிப்பட்டதை மாத்ரம் திருடவில்லை; மிகவும் ரஹஸ்யமாக மறைத்துவைத்திருப்பினும் திருடிக்கொண்டு போகின்றது. மேலும் இதில் ஸ்ர்ஹேதுமாகப் பகவானுடைய தயை பெருகும் தன்மையும் வர்ணிக்கப்பட்டது. எப்படியென்ருல்—(பஜ்மகேஸரஸம்ஸ்ருஷ்ட:) (பஜ்மா) லக்ஷ்மியினுடைய (கேஸரை:) தாதுகள்போன்ற அனுராகங்களோடு, (ஸம்ஸ்ருஷ்ட:) கூடினவன். புருஷகாரபூதையான பிராட்டியின் ப்ரீதிக்குட்பட்டு வழிந்துவருகின்றது. (வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருத:) 'ஊர்த்வமூலமதஸ்ஸாகமஸ்வத்தம் ப்ராஹுரவ்யயம்' என்று வ்ருக்ஷமாக நிரூபிக்கப்பட்ட ஸம்ஸாரமண்டலத்தில் பெருகிவருகின்றது. (ஸிஸிவாஸ இவ ஸீதாயா:) 'ஸ்த்ரீப்ராயமிதரத் ஸர்வம்' என்று லோகமெல்லாம் ஸ்த்ரீயைப்போல் பராதீனமாயிருக்கையால் ஸ்த்ரீயைப்போன்றிருப்பதுபற்றி ஸீதாஸப்தத்தினுல் உலகத்தைச் சொல்லுகிறது. உலகத்திற்கு (ஸிஸிவாஸ:) ஆஸ்வாஸப்படுத்துவதும் தாரசமுமாகி ப்ரவஹிக்கின்றது. (வாயு:) எல்லா இடத்திலும் இடங்கொண்டிருப்பது. (மனோஹர:) மனத்திலுள்ள ஸமஸ்த கல்மஷங்களையும் போக்குவது. என்று ஸ்ர்ஹேதுகதயாப்ரவாஹபரமாகவும் பொருள் கொள்க.

1 கைரிகதாது - செங்கற்பொடி.

க்ஷங்கள் முழுமையும் புஷ்பித்து இலைகள் சிறிதுமின்றி நாற்புறத்திலும் அழகாயிருக்கின்றன. அந்தத் தாழ்வரைகள் அங்ஙனஞ் சிவந்தசெடிகளால் ஜ்வாலையுண்டாகப் பெற்று எரிகின்றவைபோல் புலப்படுகின்றன. பம்பாநதிக்கரையில் முளைத்து இதோ ஒன்றோடொன்று பின்னினாற்போல் சேர்ந்து தேன்மணம் கமழப்பெற்று நிரம்பவும் புஷ்பித்துக் கூட்டங்கூட்டமாயுள்ள ஜாதிமல்லிகளும் முல்லைகளும் அலரிகளும், மேலும் நன்றாக நாற்புறத்திலும் புஷ்பித்த தாழைகளும் நொச்சிலிகளும் சிறு மல்லிகைகளும் மணங்கமழ்கின்ற மாதவிப் புதர்களும் முல்லைப் புதர்களும் புன்கு இலுப்பை வஞ்சுளம் வகுளம் சண்பகம் திலகம் புன்னை கடம்பு வரணம் கர்ச்சூரம் மாவிலிங்கை நீலாசோகம் முதலிய மரங்களும் விளங்குகின்றன. மலைத்தாழ்வரைகளில் சிங்கத்தின் கழுத்திலுள்ள ஸடை ரோமம்போல் பொன்வர்ணமுடைய வெள்ளலத்திகளும் புஷ்பித்த அழிஞ்சில்களும் மருதாணிகளும் பூர்ணக வ்ருக்ஷங்களும் வேப்பைமரங்களும் மாமரங்களும் பாதிரிகளும் மலையத்திமரங்களும் ப்ரகாசிக்கின்றன. நாரத்தைகளும் மரமல்லிகளும் செந்தாழைகளும் உத்தாலக வ்ருக்ஷங்களும் காட்டுவாகைகளும் சிம்சுபைகளும் தவவ்ருக்ஷங்களும் மலைச்சாரல்களில் புலப்படுகின்றன. இலவமரங்களும் பலாசவ்ருக்ஷங்களும் செம்மருதாணிகளும் தினிசவ்ருக்ஷங்களும் நக்தமாலங்களும் சந்தனமரங்களும் ஸ்பந்தன வ்ருக்ஷங்களும் காணப்படுகின்றன. லக்ஷ்மணா! நன்கு புஷ்பித்த நுனிகளையுடைய கொடிகளால் நாற்புறத்திலும் சூழப்பெற்று அழகாயிருக்கின்ற பற்பல வ்ருக்ஷங்கள் இந்தப் பம்பையின் கரையில் புலப்படுகின்றன பார். காமவிகாரத்தினால் மனமயக்கமுற்ற மடந்தையர் மணிகள் தமது காதலர் எப்படி போயினும் விடாமல்

க்ஷத்திற்கும் ஒரு மலையினின்று மற்றொரு மலைக்கும் ஒரு வனத்தினின்று மற்றொரு வனத்திற்கும் திரிந்து கொண்டு இப்படி பல இனியரஸங்களைப்பருகி த்ருப்தி யடைந்து மனக்களிப்புற்றவன்போல் மெதுவாக வீசு கின்றது. சில வ்ருக்ஷங்கள் நிரம்பவும் புஷ்பித்துத் தேன்வாஸனை மிகவும் கமழப்பெற்றிருக்கின்றன. மற்றுஞ் சிலமரங்கள் அவ்வளவு புஷ்பங்களில்லாமல் முழுமையும் மொட்டுகளே நிறையப்பெற்று அவைகளின் காம்பு வெளித்தோற்றுகையால் பச்சை நிறமுடையன வாகி ப்ரகாசிக்கின்றன. 'இது அழகாயிருக்கின்றது. இது ருசியுடையது. இது மலர்ந்திருக்கின்றது' என்று வண்டு எதையும் விடுவதற்கு மனம் இல்லாமல் புதிய புஷ்பங்களிலுள்ள பேராசையால் மனமயக்கமுற்றுப் புஷ்பங்கள்தோறும் போய் உட்காருகின்றது. இது இங்ஙனம் தேன்மீதுள்ள ஆசையால் ஒரு செடியின் மேல் கொஞ்சநேரம் இருந்து, பிறகு அதினின்று கிளம்பி மற்றொரு மரத்திற்குச் சென்று இங்ஙனம் பம்பாதீரத்திலுள்ள வ்ருக்ஷங்களெல்லாவற்றிலும் புகு கின்றது. இந்தப் பூமியின்மேல் புஷ்பஸமூஹங்கள் மிக ம்ருதுவாயிருக்கையால், தாமே விழுந்திருப்பது பற்றிப் படுக்கை பரப்பினாற்போல் படுக்க ஸுகமாயிருக்கும்படி நேர்ந்திருக்கின்றன. லக்ஷமணா! மலைச்சாரல்களில் சித்ர விசித்ரமான வர்ணங்களையுடைய புஷ்பங்கள் இங்குமங்கும் தாமே விழுந்திருக்கையால், அவற்றில் சில பச்சையாகவும் சில சிவப்பாகவும் இப்படி விசித்ரமாகிப் பல வர்ணங்களையுடைய படுக்கைகள் பலவும் பரப்பினாற்போலிருக்கின்றன. லக்ஷ்மணா! வஸந்தருதுவில் வ்ருக்ஷங்களுக்குள்ள புஷ்ப ஸம்ருத்தியின் மிகுதி விளங்குவதைக் காண்பாயாக. வஸந்தருதுவில் வ்ருக்ஷங்கள் ஒன்றைக் காட்டிலும் ஒன்று மேலாகப் புஷ்பிக்கவேண்டுமென்று

போட்டியிட்டுக் கொண்டாற்போல் நிரம்பவும் புஷபித் தவையாகி வண்டுகளின் த்வனிகளால் 'நீங்கள் எம் மைப்போல் புஷ்பிக்கவில்லை' என்று ஒன்றை ஒன்று அழைத்துச் சொல்பவைபோன்று கிளைகளின் நுனி யெல்லாம் நிரம்பவும் புஷ்பிக்கப்பெற்று மிகவும் ப்ரகாசிக் கின்றன. இந்த நீர்க்காகப்பறவை தன்காதலியோடு கூட அழகிய ஜலத்தில் இழிந்து எனக்கு மன்மதவிகா ரத்தை வ்ருத்தி பண்ணிக்கொண்டு விளையாடுகின்றது. இந்தப் பம்பாஸரஸ்ஸுக்குள்ள ரூபத்தைப்போலவே மந்தாகினியின் ரூபமும் அழகாயிருக்குமாயின் மனோ ஹரங்களாகி உலகமெங்கும் புகழ்பெற்ற அதன் குணங் கள் தகுந்தவைகளேயாகும். ரகூத்தமனே! அந்த ஸீதை பிறரால் அபஹரிக்கப்படிலென்? அவளோ மஹா பதிவ்ரதை; அப்படிப்பட்ட பதிவ்ரதை மீளவும் புலப்படு வாளாயின், அவளோடுகூட நாமெல்லோரும் இங்கு வஸித்திருக்கக் கூடுமாயின் அயோத்யையைக் குறித் தாயினும், அவ்வளவென்? தேவேந்த்ரபோகத்தைக் குறித்தாயினும், நான் ஆசைப்படமாட்டேன். இப்படி அழகாயிருக்கின்ற இந்தப் புல்ப்ரதேசங்களில் அந்த ஸீதையுடன் நான் கலந்து க்ரீடித்துக்கொண்டிருப்பே னாயின், எனக்கு இவ்வண்ணம் சிந்தை உண்டாகாது. அன்றியும், எப்படிப்பட்ட வேறு வஸ்துவிலும் மன விருப்பமுறேன். இந்த அரண்யத்தில் பலவகைப் புஷ் பங்களோடுகூடி அழகான இலைகளையுடைய இந்த வ்ரு க்ஷங்கள், பார்த்தமாத்ரத்தில் ப்ராணநாயகியைப் பிரிந் திருக்கின்ற என் மனத்திற்கு மிகவும் மயக்கத்தை விளைக்கின்றன. லக்ஷ்மணா! குளிர்ந்த ஜலம் பொருந் தித் தாமரையும் நிறைந்திருக்கின்ற இந்தப் பம்பையை காண்பாயாக. இதில் சக்ரவாகங்கள் ஸஞ்சரிக்கின் றன. இங்கு நீர்க்காகங்களும் உலாவிக்கொண்டிருக்

கின்றன. மேலும் நீர்க்கோழிகளும் க்ரௌஞ்சப்பறவைகளும் நிறைந்திருக்கிறன. இதன்கரைகளில் பன்றிகளும் மான்களும் மேய்ந்துகொண்டிருக்கின்றன. மேலும், இதரபக்ஷிகளும் மதுரமாகக் கூவிக்கொண்டிருக்கையில், பம்பாஸரஸ்ஸு மேன்மேலும் அழகாயிருக்கின்றது. நான், சிறந்த யௌவனமும் சந்த்ரன்போன்ற முகமும் தாமரை யிதழ்போன்ற கண்களும் உடையவளாகி மிகவும் அழகாயிருக்கின்ற என் ப்ராணநாயகியை நினைத்துக் கொள்கிறேன். இங்ஙனம் பலவகைப்பட்ட பறவைகள் மனக்களிப்புற்று மதுரமாகக் கூவிக்கொண்டு எனக்கு மன்மதவிகாரத்தை மேன்மேலும் விளைவிக்கின்றன. விசித்ரங்களான மலைச்சாரல்களில் பெண் மான்கள் ஆண்மான்களோடுகூடி விளையாடுகின்றன. நானோ மான்குட்டியின் கண்போன்ற கண்களையுடைய ஸீதையைப் பிரிந்து வருந்துகின்றேன். இந்த விசித்ரத்தைக் காண்பாயாக. மான்களும் பக்ஷிகளும் கூட்டம் கூட்டமாக நிறைந்த இவ்வழகான மலைச்சாரல்களில் இங்குமங்கும் ஸஞ்சரிக்கின்ற ம்ருகாதிகள் என் மனத்தை வருந்தச் செய்வனபோலிருக்கின்றன. நான் அந்த என் காதலியைக் காண்பேனாயின் அப்பொழுது தான் எனக்கு நன்மை உண்டாகும். லக்ஷ்மணா! நுண்ணிய அழகான இடையுடைய வைதேஹி என்னோடு கூடப் பம்பாஸரஸ்ஸினின்று வீசும் இன்பமான இந்த மந்தமாருதத்தை அனுபவிப்பாளாயின், நான் ஸுகமாக ஜீவித்திருப்பேன். [1] லக்ஷ்மணா! தாமரைகளும்

---

1 இங்கு 'பத்மஸௌகந்திகவஹம் ஶிவம் ஶோகவிநாஶநம் | யந்யா லக்ஷ்மண ஸேவந்தே பம்போபவநமாருதம்' என்பது மூலம். (யந்யா:) காதலிகளோடு கூடியிருக்கும் பாக்யமுடையோர். (பத்மஸௌகந்திகவஹம்) தாமரை செங்கழுநீர் இவைகளுடைய வாஸனை

செங்கழுநீர்களும் நிரம்பின இடங்களினின்று அவற்றின் வாஸனேயோடு வீசுவதும் மங்களத்தை விளைப்பதும் துக்கங்களைப்போக்குந் திறமுடையதுமாகிப் பம்பையின் அருகிலுள்ள வனத்திலிருந்து வீசுகின்ற இம் மந்தமாருதத்தைப் புண்யஞ் செய்தவர்களே காதலிகளோடுகூடி அனுபவிப்பார்கள். யௌவனம் நிரம்பப் பெற்றுத் தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ஜனகராஜன் திருமகளான ஸீதை என்னைப் பிரிந்து ப்ராணனை விடவும் ஸ்வாதந்திரியமின்றிப் பராதீனையான இந்த ஸ்திதியில் ப்ராணன்களை எப்படி வைத்துக் கொண்டிருப்பாள்? பலர் முன்னிலையில், தர்மங்களையுணர்ந்தவரும் ஸத்யத்தையே பேசுந்தன்மையருமாகிய ஜனகமஹாராஜர் ஸீதையின் க்ஷேமத்தைக் குறித்து என்னை வினவுகையில் நான் என்ன உத்தரம் சொல்வேன்? நான் தந்தையால் அரண்யத்தில் அனுப்பப்பட்டனன்; பாக்யமற்றனன்; இப்படிப்பட்ட என்னை,

---

யைக்கொண்டு வருவதும். இங்குத் தாமரை செங்கழுநீர் ஆகிய இவ்விரண்டையும் சொல்லுகையால் நானுபுஷ்பங்களுந் தொடுத்த பூமாலையைத் தரித்தவன்போல் நானுபுஷ்பங்களின் பரிமளத்தைத் தரித்ததென்க. (ஸிவம்) சுத்தமானது. மற்றொன்றில் படாதது. முதல்மலயமாருதமென்று தெரிகிறது. (ஸோகவிநாஸநம்) தென்காற்று விரஹிஜனங்களுக்குச் சோகத்தை வளர்க்குமேயன்றி அதைப் போக்கடிப்பதன்று; ஆகையால் இது ஜீவித்திருப்பவனுக்கன்றோ ஸோகத்தை விளைக்க வல்லது. ப்ராணனைப் போக்கின பின்பு அனுபவிக்குந் தர்மியில்லாமையால் தர்மமான சோகத்தையும் இல்லாததாகச் செய்கிறதென்று கருத்து. (யத்ர) இப்படிப்பட்ட மலயமாருதம் வீசிக்கொண்டிருக்கையில் ஏகாந்தஸ்தலந்தேடி அங்குப் படுத்திருப்பார் சிலர் இருப்பார்களல்லவோ. அவர்கள் (ஸேவந்தே) எப்பொழுது வருமென்று அவஸரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். (பம்போபவநமாருதம்) ஆகரத்தினின்று அக்னிபோலவும் ஸமுத்ரத்தினின்று படபாக்னிபோலவும் இருக்கின்றது.

அவள் பதிவ்ரதைகளின் மார்க்கத்தை அவலம்பித்துப் பின்ருடர்ந்து வந்தனளே! அப்படிப்பட்ட என்ப்ராண நாயகி இப்பொழுது எங்கே இருக்கின்றனள்? லக்ஷ்மண! ராஜ்யத்தினின்று நழுவி மனநிலை தப்பியிருக்கின்ற என்னைப் பின்ருடர்ந்து வந்த அந்த ஸீதையைப் பிரிந்து துக்கத்தினல் பரிதபிக்கின்ற நான் ப்ராணனை எப்படி வைத்துக்கொண்டிருப்பேன்? நிகுநிகென்ற இமைமயிர்களையுடைய கண்கள் விளங்க, நன்மணம் வீசப்பெற்று மங்களகரமாகி மாசற்று அழகாயிருக்கின்ற அவளது முகத்தைக் காணப்பெருமல் என்மனம் மிகவும் பரிதபிக்கின்றது. லக்ஷ்மண! இயற்கையாகவே விளங்கும் புன்னகையுடன்கூடி நடுவே வந்த சிரிப்பும் கலந்து விளக்கமுற்றதாகி, என் வார்த்தைகளைக் காட்டிலும் மிக்க குணம் பொருந்தி மதுரங்களும் ஹிதங்களுமாகி நிகரற்ற ஸீதையின் வார்த்தைகளை மீளவும் எப்பொழுது கேட்கப்போகின்றேன்? நிறைந்த யௌவனவயதுடைய அந்த வைதேஹி, தான் வனத்தில் வருத்தமுற்றிருப்பினும், நான் மன்மத விகாரங்கொண்டிருக்கும்பொழுது துக்கஞ் சிறிது மில்லாதவள்போலவும் ஸந்தோஷ முற்றிருப்பவள்போலவும் நடித்து எனக்கு மனக்களிப்பை விளைக்கும்படியான உரைகளைப் பேசிக்கொண்டு என்னை ஸந்தோஷப்படுத்துவாள். ராஜகுமாரனே! நான் அயோத்யைக்குப் போனதும், சிறந்த மனமுடையளாகிய என் தாய் கௌஸல்யை என்னைப் பார்த்து 'ஸமஸ்த ஸுகங்களையும் துறந்து உன்னைப் பின்ருடர்ந்த என் அழகிய மருகி எங்கே? எப்படி இருக்கின்றனள்?' என்று வினவுவாளாயின், நான் என்னென்று மறுமொழி கூறுவேன்? லக்ஷ்மண! நீ போய் உடன் பிறந்தவரிடத்தில் ப்ரீதியுடையோனுகிய பரதனைக் காண்பாயாக. ஜனக

ராஜன் புதல்வியாகிய ஸீதையைப் பிரிந்து நான் எவ்விதத்திலும் பிழைத்திருக்கப்பொறேன்' என்று ராமன் புலம்பினன். இங்ஙனம் அநாதன்போல் புலம்புகின்ற மஹானுபாவனுகிய ராமனைப் பார்த்துத் தம்பியாகிய லக்ஷ்மணன் பொருந்தியதும் மறுமொழி யில்லாததுமாகி விளங்கும் வார்த்தைகளைச் சொல்லத்தொடங்கி 'ராமா! புருஷோத்தமா! தைர்யத்தைக் கைக்கொள்வாயாக. மனக்கலக்கத்தை அடக்கிக் கொள்வாயாக. உனக்கு மங்கலம் உண்டாகுக. மனவருத்தப்படவேண்டாம். தர்மாத்மாக்களாகிய உன் போன்றவர்களுக்குப் புத்தி எவ்வளவும் கலக்கமுறத் தகாதல்லவோ? 'மிகுந்த ஸ்னேஹம் வைப்பதனுல் பின்பு பிரிவுநேரிடும்போது துக்கம் உண்டாகும்' என்னும் ந்யாயத்தை நினைத்து ப்ரிய ஜனங்கள்மீது அதிக ஸ்னேஹத்தை விடுவாயாக. அதிக ஸ்னேஹம் உளதாயின், (மிக்க எண்ணெய் உளதாயின்) நனைந்த வர்த்தியுங்கூட எரிந்து போய்விடும். ராமா! பாதாளத்திற்குப் போயினும், அன்றி அதைக் காட்டிலும் மேலான எந்த இடத்திற்குப் போயினும் ராவணன் என்னவோ இனிப் பிழைத்திருக்க மாட்டான். பாபிஷ்டனுகிய அந்த ராவணனுடைய ஜாடை மாத்ரம் நமக்குத் தெரியவேண்டும். பிறகு அவன் ஸீதையையாவது கொடுக்கவேண்டும். இல்லையென்றுல் மரணத்தையாவது அடையவேண்டும். ராவணன் ஸீதையை எடுத்துக்கொண்டு ஓடிப்போய் இந்த்ரன் தாயான அதிதியின் கர்ப்பத்தில் புகுவானுயினும், அவ்விடத்திலும் ஸீதையைக் கொடானுயின், அவனைக் கொன்று விடுவேன். மேன்மைப் படுத்துகைக்குரிய மஹானுபாவனே! தைர்யம் நன்மையை விளைக்கவல்லது. அதையே கைப்பற்றுவாயாக. தீனபுத்தியைத் துறப்பாயாக. தைர்யத்தை விட்டு முயற்சியைக் கைக்

கொள்ளாதவர்களுக்கு எவ்விதத்திலும் கார்யஸித்தி உண்டாகாது. பூஜிக்கத்தகுந்தவனே! உத்ஸாஹம் பலீயஸ்ஸாயிருப்பது. உத்ஸாஹத்தைக்காட்டிலும் மேலான பலம் ஒன்றுமே இல்லை. உத்ஸாஹமுடைய வனுக்கு உலகத்தில் பெறக்கூடாதது எதுவும் இல்லை. உத்ஸாஹமுடைய புருஷன் எப்படிப்பட்ட கார்யங்களி லும் வருத்தமுறமாட்டான். நாம் உத்ஸாஹம் ஒன்றைமாத்ரம் கைப்பற்றுவோமாயின் ஸீதையைப்பெறக் கூடும். துக்கத்தைப் பின்புறத்தில் தள்ளி இந்த மன் மதவ்யாபாரத்தை வெல்லுவாயாக. நீ மஹாப்ரபாவ முடையவன்; பேரறிஞனுயிருப்பவன். இப்படிப்பட்ட நீ உன்னையே மறந்திருக்கின்றனை' என்று ராமனுக்கு ஸமா தானம் உண்டாகும்படிக்குச் சொல்லினன். சோகத்தி னல் முழுவதும் கவரப்பட்ட மனமுடைய ராமன், லக்ஷ மணன் இவ்வாறு போதிக்கையில் சோகத்தையும் மோ ஹத்தையும் விட்டு உடனே தைர்யம் பெற்றவனுயினன். நினைக்கவும் அரிதான பராக்ரமத்தையுடைய ராமன் எள்ளளவும் மனவூக்கந்தவருமல் பிறகு ரமணீயமாகி, ரமணீயங்களான வ்ருக்ஷங்கள் காற்றில் அசைந்து கொண்டிருக்கப் பெற்ற பம்பாஸரஸ்ஸைக் கடந்து போயினன். அம்மஹானுபாவன், தானும் லக்ஷ்மண னுமாக அவ்வனம் முழுவதும் திரிந்து பார்த்து அங் குள்ள அருவிகளையும் பர்வத குஹைகளையும் பார்த்துக் கொண்டே ஸீதையைத்தேடி மனப்பரிவுற்று வருத்தம் மேலெழப்பெற்று வேகமாகப் புறப்பட்டுப்போயினன். மதம்பிடித்த யானைபோல் அழகாக நடக்குந்தன்மையு டையவனும் ராமகைங்கர்யலக்ஷ்மி விளங்கப்பெற்றவனு மாகிய லக்ஷ்மணன் அண்ணனிடத்தில் அழியாத மனப் ரீதியும் கைசோராத பெருந்தைர்யமுமுடையவனுகி ராம னது நடையழகை அனுபவித்துக் கொண்டிருப்பினும்

மனவூக்கந்தவறுதலின்றி ஸீதாவியோகத்தினுல் பீடிக்கப்பட்டு மத்தகஜம்போல் நடந்து செல்கின்ற அந்த ஸ்ரீ ராமனுக்கு ராஜநீதி முதலிய தர்மங்களை எடுத்துரைத்தும் தன்பலத்தை வெளியிட்டும் அவனுடைய துக்கத்தை அடக்கிப் பாதுகாத்துக் கொண்டிருந்தனன். ஸுக்ரீவனென்னும் வானரர்தலைவனெருவன் மிகவும் பலிஷ்டனுகிய தன் தமையனுன வாலியிடம் பயமுடையனுகி ருஸ்யமூகபர்வதத்தினருகில் உலாவிக்கொண்டிருப்பது வழக்கம். அவன் ஒரு காலத்தில் பம்பாஸமீபத்தில் உலாவிக்கொண்டிருக்கையில், பார்வைக்கு மிகவும் ஆச்சர்யத்தை விளைக்கின்ற அந்த ராமலக்ஷ்மணர்களைக் கண்டு மிகவும் பயப்பட்டு ஏதுஞ்செய்யத் தோற்ருமல் சிந்தையில் ஆழ்ந்தனன். மத்தகஜம்போல் கம்பீரமான நடையுடைய மஹானுபாவனுகிய ஸுக்ரீவன் அந்தப் பம்பாவனத்தில் வெகுநாழியாகத் திரிந்து கொண்டிருக்கின்ற அந்த ராமலக்ஷ்மணர்களைக் கண்டு அவரது ரூபாதிசயத்திற்குச் சிந்தையுற்றுப் பெரும்பயத்தில் மூழ்கி மிக்க வருத்தமுற்றனன். அவனது மந்த்ரிகளாகிய வானரர்களுங்கூட மஹாதேஜஸ்விகளாகிய அந்த ராமலக்ஷ்மணர்களைக்கண்டு, வாலியால் அனுப்பப்பட்டு முனிவேஷம்பூண்டு வந்தவர்களென்னும் ஸந்தேஹத்தினுல் மிகவும் திகிலுற்றுப், புண்யத்தை வளரச் செய்வதும் ஸுகத்தை விளைப்பதும் முனிஜனங்களுக்கு வாஸயோக்யமுமாகி வானரர்கள் எப்போதும் இடையில் வாஸஞ்செய்யப் பெற்றதாகிய அம்மதங்காஸ்ரமத்திற்குள் ப்ரவேசித்தனர். [1] முதல் ஸர்க்கம் முற்றிற்று.

---

1 இங்ஙனமே மற்றப் புராணங்களிலும் ராமனுக்குப் பம்பையைக் கண்டதனுல் காமவெறி மேலிட்டமை கூறப்பட்டிருக்கின்றது. ஆனதுபற்றியே ராமன் விரஹத்தின் மிகுதியால் வண்டுகள் முதலிய

## ஸுக்ரீவன் ஹநுமானை ராமலக்ஷ்மணர்களிடம் அனுப்புதல்.

அண்ணன் தம்பிகளாகிய அந்த ராமலக்ஷ்மணர்கள் உத்தம லக்ஷணங்களோடு கூடின பெரிய உருவம் பொருந்தி உத்தமங்களான ஆயுதங்களைத் தரித்திருப்பதனால் வீரத்தன்மையுடன் விளங்குவதைக் கண்டு உடனே ஸுக்ரீவன் சங்கையுற்றனன். அந்த வானரர்தலைவன் மனத்தில் பயம் மேலெழப் பெற்றுத் திசைகளையெல்லாம் உற்றுப் பார்த்துக்கொண்டு ஓரிடத்திலும் நிலைகொள்ளாதிருந்தனன். அந்த வானரர் தலைவன் மஹா பலிஷ்டர்களான ராமலக்ஷ்மணர்களைப் பார்த்துக் கொண்டிருக்கையில் மனங்குதிரப் பெறாதிருந்தனன். ஆனால் அவனது மனம் மேன்மேலும் பயம் வளர்ந்துவரப் பெற்று மிகவுந் துயரத்திலாழ்ந்தது. அந்த ஸுக்ரீவன் ராஜதர்மங்களில் மிகுந்த மதியுடையவன். ஆகையால், 'இங்கே நின்றிருக்கக் கூடுமோ? அல்லது ஓடிப்போக வேண்டுமோ? எது நல்லது?'' என்று ஏற்றக்குறைவுகளை மந்த்ரிகளுடன் கலந்து ஆலோசித்து மிகவும் அஞ்சினன். அனந்தரம் வானரப்ரபுவாகிய அந்த ஸுக்ரீவன் அந்த ராமலக்ஷ்மணர்களைப் பார்த்துக்கொண்டே மிகவும் அஞ்சினவனாகி மந்த்ரிகளை நோக்கி 'இவர்கள் வாலியால் அனுப்

---

வற்றைச் சபித்ததாக ஸ்காந்த புராணத்தில் 'வைமுவீயம மங்யஹல் யாஸ்து ஹீரமாாஙஸபதப்ரஹு:| கோகாங்ஙிஸீயே விஸீலேஷம பிக மங்யவிவர்யநம்| சந்தநம ஸர்ப்பஙிலயம வாயும ஸர்ப்பாஸநம தயா| ஜ்யோத்ஸநாங்கலங்கஸஞ்ஹந்நா ஶஶாப ரவுநந்தந:' (வண்டுகளைச் செண்பகந் தீண்டாதிருக்கும்படியும், சக்ரவாகங்களை ராத்ரியில் பிரிந்திருக்கும்படியும, குயில்களை மற்றொன்றால் வளரும்படியும், சந்தன வ்ருக்ஷங்களை ஸர்ப்பங்களுக் கிடமாயிருக்கும்படியும், வாயுவை ஸர்ப்பங்களுக்கு ஆஹாரமாயிருக்கும்படியும், நிலவை மறுவால் மறைக்கப்பட்டிருக்கும்படியும் ராமன் சபித்தான்' என்று சொல்லப் பட்டிருக்கிறது.

பப்பட்ட சாரர்கள்; முனிவேஷமென்னும் வ்யாஜத்தி ஞல் நார்த்துணிகளை உடுத்துத் திரிந்துகொண்டு இங் குப் புகக்கூடாத இவ்வனத்திற்கு வந்தனர். இது நிஜம்' என்றனன். பெருவில்லைத் தரித்திருக்கிற அந்த ராம லக்ஷ்மணர்களைக் கண்டு ஸுக்ரீவன் சொன்னது ஹித மென்று நினைத்து வானரவீரர்கள் அந்தத் தாழ்வரை யினின்று உயர்ந்ததாகிய மற்றொரு பர்வதசிகரத்திற் குப்போயினர். அந்த வானரஸ்ரேஷ்டர்கள் நாலுதிசை களிலும் ஓடிச்சென்று மீளவும் ஓரிடத்தில் ஒன்று கூடித் தமக்கு ப்ரபுவாகிய ஸுக்ரீவனைச் சுற்றிக் கொண்டு அருகே நின்றனர். மீளவும் அவர்கள் ஒருபர் வதத்தினின்று மற்றொரு பர்வதத்திற்குக் குதித்துச் சென்று பர்வத சிகரங்களை அசைக்கிக்கொண்டு க்ரம மாக ஓரிடத்தில் ஒன்றாய்க்கூடி, ஓடிச்சென்று ஒண்டி யாயிருக்கின்ற ஸுக்ரீவனைச் சுற்றுச் சூழ்ந்துகொண் டனர். பிறகு மஹாபலசாலிகளான அந்த வானரர் கள் அனைவரும்,' தொத்திச் சென்று பர்வதங்களில் புஷ்பித்திருக்கிற வ்ருக்ஷங்களை முறித்தனர். அப் பொழுது அந்தவானரர்கள் கிளம்பித் தாண்டிச்சென்று கொண்டும், மான்கள் பூனைகள் புலிகள் முதலியவற் றைத் துரத்திக்கொண்டும் போயினர். அனந்தரம் அந்த ஸுக்ரீவனுடைய மந்த்ரிகள் அனைவரும் ருஶ்யமூகத் தின் தாழ்வரைகளில் முழுமையும் திரிந்து மீளவும் அந்தப் பர்வதத்தைச் சேர்ந்து வானரஸ்ரேஷ்டனாகிய ஸுக்ரீவனுடன் கூடி அவனருகில் கையைக்கூப்பிக் கொண்டு நின்றனர். பிறகு பேசுவதில் நிபுணனாகிய ஹனுமான், வாலி ஏதோ மோசஞ் செய்தானென்று சங்கித்து அஞ்சி வருந்துகின்ற அந்த ஸுக்ரீவனைப் பார்த்து 'நீங்கள் எல்லோரும் வாலி நிமித்தமாக இங் ஙனம் மனம் தத்தளிப்பது யுக்தமன்று. இந்தப் பர்வ

தம் ருஶ்யமூகமேயன்றி வேறன்று. இதில் வாலியால் எள்ளளவும் நமக்குப் பயமில்லை. வானரதிலகனே! வாலி மாறுவேஷம் பூண்டு வந்திருக்கிறுனென்று ப்ரமிக்கின்றனையோ? எவனைப் பார்த்து நீ மனத்தில் இவ்வண்ணம் திகில்பட்டு ஓடிப்போகின்றனையோ அந்த வாலி க்ரூரகர்மமுடையவன்; அவனது காட்சியும் க்ரூரமாயிருக்கும். அந்தக்குறி இவர்களிடத்தில் எனக்குப் புலப்படவில்லை. நல்லியற்கையுடையவனே! உன் பத்னியை அபஹரித்த எந்தப் பாபகர்மாவிடம் பயப்படுகின்றனையே, அந்தத் துஷ்டாத்மாவாகிய உன தண்ணன் வாலியின் குணக்குறிகள் இவரிடத்தில் இல்லை. ஆகையால் உனக்கு எள்ளளவும் பயம் உண்டாகுமென்று எனக்குத் தோற்றவில்லை. நீ தீக்ஷ்ண புத்தியுடன் நன்கு விசாரஞ்செய்து மனத்தை நிலைப்படுத்திக் கொள்ளாமல் தடுமாறுகின்றனையே! ஆ ஆ! உன் வானரத்தன்மை நன்கு வெளியாயிற்றே! புத்தியும் விஜ்ஞானமும் நன்கு விளங்கப்பெற்று இங்கிதங்களால் பிறரது அபிப்ராயங்களை அறிந்து ஸமஸ்த கார்யங்களையும் செய்வாயாக. புத்தி முதலியவை யில்லாத மன்னவன் எந்த ப்ராணியையாயினும் பாதுகாக்க வல்லவனல்லன்' என்றனன். ஸுக்ரீவன், ஹனுமான் சொன்ன சுபவாக்யங்களை யெல்லாங்கேட்டு, அதைக்காட்டிலும் சுபமான வாக்யங்களைச் சொல்லத்தொடங்கி அவனைப்பார்த்து 'முழந்தாள்வரையிலும் நீண்ட பாஹு தண்டங்களை யுடையவர்களும் கண்கள் அகன்றழகாயிருக்கப் பெற்றவர்களும் வில்லையும் பாணங்களையும் கத்தியையும் தரித்துத் தேவகுமாரர்கள்போல் விளங்குவோர்களுமாகிய இவர்களைப் பார்க்கையில் எவனுக்குப் பயம் உண்டாகாது? வாலி எதிரில் வந்திருக்கிறுனென்று பயப்படவில்லை. அவன் இந்தப் புருஷரில

கர்களை என்மேல் அனுப்பினனென்று சங்கைப்படுகின்றேன். ‘இப்படிப்பட்ட புருஷர்கள் வாலிக்கு நேரவழியில்லை’ என்கிறாயோ? ராஜர்களுக்கு ஸ்னேஹிதர்கள் பலர் இருப்பார்கள். ஆகையால் ராஜர்கள்விஷயத்தில் எவ்வளவும் நம்பிக்கை வைக்கலாகாது. சத்ருக்களையுடைய மனிதன் தன்மேல் பகையைத் தீர்த்துக் கொள்ளும்பொருட்டு மறைவாகத் திரிகின்ற பகைவனைக் கண்டுபிடித்துத் தெரிந்துகொள்ளவேண்டும். இல்லையாயின், அவர்கள் அவனைத் தம்மை நம்பும்படிக்குச் செய்து தாம் மாத்ரம் அவனை நம்பாமலேயிருந்து அங்ஙனம் நம்பிக்கையால் அவன் ஏமாந்திருக்கும் ஸமயம் பார்த்துக் கொன்றுவிடுவார்கள். வாலி, வேண்டிய கார்யங்களைச் செய்வதில் மிகவும் தூரத்ருஷ்டியுள்ள பேரறிஞன். அரசர்க்ள் பல உபாயங்களைச் செய்து பகைவனைக் கொல்லப் பார்ப்பர்கள். ஆகையால் மனிதர்கள் தீனவேஷங்களைத் தரித்துத் தெரியாமலிருந்து அவரது அபிப்பிராயங்களை அறியவேண்டும். வானரோத்தமனே! ஒரு ஸாமான்யனுடைய வேஷந்தரித்து அவரிடஞ்சென்று உட்கருத்தை அறிவிக்கும்படியான அவரது சரீரசேஷ்டைகளைப் பரிசீலித்து அவற்றில் ஒவ்வொன்றுக்குமுள்ள பேதங்களைப்பற்றியும், இனிமை கொடுமை முதலிய ஆகாரங்களாலும் ஒருவர்க்கொருவர் பேசும் பேச்சுக்களாலும் அவரது உண்மையைத் தெரிந்துகொள்வாயாக. வானரஶ்ரேஷ்டனே! அவரது அபிப்பிராயத்தைக் கண்டு அறிவாயாக. அவரது மனத்தில் கெடுநினைவு இருக்குமாயின், அது போவதற்கு அந்தந்த நல்லவார்த்தைகளாலும் புகழ்ச்சிகளாலும் அடிக்கடி அவர்க்கு நம்பிக்கையை உண்டுபண்ணி எனக்கு அனுகூலமாயிருக்கும்படி அவரைத் திடப்படுத்திப் பிறகு அவர்கள் வில்லைத் தரித்து இவ்வனம்



1629; ஹனுமான் ஸந்யாஸி வேஷம் பூண்டு ராமலக்ஷ்மண ரிடம் வருதல்.

புகுவதற்கு ப்ரயோஜனம் என்? என்று வினவுவாயாக. ஹனுமானே! வில்லைப்பிடித்து வந்த இவர்கள் மனத்தில் நல்ல எண்ண முடையோர்களாயின், அப்பொழுதும் அவர்களை என் பக்ஷமுடையவர்களாகச் செய்து அவரது வரவுக்கு ப்ரயோஜனத்தை வினவித்தெரிந்துகொள்வாயாக. அவரது வார்த்தைகளாலும் 'அவர்கள் துஷ்டர்களோ நல்லவர்களோ தெரிந்துகொள்ளக் கூடும்' என்றனன். வாயுகுமாரனுகிய அந்த ஹனுமான் அந்தக்கபிராஜன் இங்ஙனம் சொல்லி அனுப்புகையில், நல்லதென்று அந்த ராமலக்ஷ்மணர்களிருக்குமிடம் போக நினைத்தனன். சத்ருக்களுக்கு மிகவும் பயங்கரனும் எதிர்க்க முடியாதவனுமாகிய அந்த ஸுக்ரீவன் மொழிந்த வார்த்தைகளை மஹானுபாவனுகிய ஹனுமான் 'அப்படியே செய்கிறேன்' என்று கொண்டாடி, ராமனும் மஹாபலனுகிய லக்ஷ்மணனும் இருக்குமிடத்திற்குப் போயினன். இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

**ஹனுமான் ராமலக்ஷ்மணர்களோடு ஸம்பாஷித்தல்.**

புத்தியில் மிகுந்தவனுகிய அந்த ஸுக்ரீவன் சொன்னவார்த்தைகளின் அபிப்ராயத்தை ஹனுமான் தெரிந்துகொண்டு அந்த ருஶ்யமூகபர்வதத்தினின்று ராமலக்ஷ்மணர்களிருக்குமிடத்திற்குப் போயினன். அனந்தரம் வாயுகுமாரனுகிய அந்த ஹனுமான் வஞ்சிக்கவேண்டுமென்னும் எண்ணமுடையவனுகையால் வானர உருவத்தை விட்டு ஸந்ந்யாஸிவேஷத்தைக் கொண்டனன். அப்பொழுது அந்த ஹனுமான் வீரர்களாகிய ராமலக்ஷ்மணர்களிடம் வணக்கத்துடன் சென்று பக்தி

மிருந்திருக்குமாறு[1] நமஸ்காரஞ்செய்து ம்ருதுவாகி மிகவும் இனிதாகிய உரைகளைச் சொல்லி உள்ளபடி அவர்களைப் புகழ்ந்தனன். வீரனாகிய அந்த வாயுகுமார

1 இங்கு ஸந்ந்யாஸி வேஷந்தரித்த ஹநுமான் நமஸ்காரஞ் செய்தமைபற்றி ஸந்ந்யாஸி க்ருஹஸ்தாதிகளுக்குங்கூட நமஸ்காரஞ் செய்யவேண்டியதே யென்று தெரிகின்றது. ஸந்ந்யாஸிகள் க்ருஹஸ்தாதிகளை நமஸ்கரிக்கலாகாதென்னும் நிஷேதவசனங்கள் அஜ்ஞர்களான க்ருஹஸ்தாதிகள்விஷயத்திலேயே சொல்லப்பட்டன வென்று நினைக்கவேண்டும். கர்ம மாத்ரத்தினால் அதிகனாகிய ஸந்ந்யாஸி ஜ்ஞாநிகர்களைக் கண்டால் நமஸ்காரஞ் செய்யானாயின், அப்பொழுது 'விப்ராணாம் ஜ்ஞாநதஃ ஶ்ரைஷ்ட்யம்' (ப்ராஹ்மணர்களுக்கு ஜ்ஞாநத்தினால் மேன்மை) என்னும் மனுவசனத்திற்கு விரோதம் வரும். மேலும் ஸந்ந்யாஸி அங்ஙனம் ப்ரணாமஞ் செய்யலாகாதென்று மனுவசனமேதும் புலப்படவில்லை. ஆனால் யதி நமஸ்காரஞ் செய்யலாகாதென்று ஆகரமின்றி வதந்திமாத்ரமாகிய நிஷேத வசனங்கள் அஜ்ஞர்களான க்ருஹஸ்தாதிகளைக் குறித்தவையேயன்றி வேறல்ல. சிலர் 'மிகவும் அற்புதமான ராமலக்ஷ்மணர்களின் உருவத்தைக் கண்டவுடனே வியப்புற்றுத் தான் தரித்திருக்கிற பிக்ஷு வேஷத்தை மறந்து நமஸ்காரஞ் செய்தானெ'ன்பார்கள். அது ஆரம்பத்திற்கே விரோதமாம். பிறனுடைய ஹ்ருதயத்தைச் சேஷ்டை முகவிகாரம் முதலியவற்றால் தெரிந்துகொள்வதற்காக அனுப்பப்பட்ட இவன் மிகவும் நிபுணமதியுடைய மந்த்ரிஶ்ரேஷ்டனாகையால், இந்தக் கார்யம் தான் முயன்ற கார்யத்தைக் கெடுப்பதும் தான் தரித்திருக்கும் வேஷத்திற்கிணங்காததுமாகையால் எதிரிக்கு நம்பிக்கையைப் போக்கி அதன் மூலமாய் அவரது முகவிகாரம் முதலியவற்றை வெளிப்படுத்த நேராதாகையால் இப்படிப்பட்ட கார்யத்தைச் செய்யமாட்டான். மற்றுஞ் சிலர் 'ரூபமேவாஸ்யைதந்மஹிமாநம் வ்யாசஷ்டே' (ரூபமே இவனுக்குள்ள இம்மஹிமையை விவரித்துச் சொல்லுகிறது) என்னும் ந்யாயத்தின்படி அவரைப் பார்த்தமாத்ரத்திலேயே ஸுக்ரீவனது விரோதியைப்போக்க வல்லவரென்று நிச்சயித்து வேறு வேஷந்தரித்திருப்பினும் தான் ஸுக்ரீவனுடைய சாரனேயென்று வெளிப்படுத்துவதற்காக நமஸ்கரித்தா'னென்பார்கள். அப்படியாயின் மேல் ஸுக்ரீவனென்னும் தர்மாத்மா

ஞன ஹநுமான் உண்மையான பராக்ரமமுடைய அவ்விருவரையும் விதியின்படி பூஜித்துப் பக்தி தோன்றும்படி மெதுவான உரையுடன் சொல்லத் தொடங்கினன். 'ம்ருகஸமூஹங்களையும் மற்றும் வனத்தில் ஸஞ்சரிக்கின்ற ஜந்துக்களையும் புதிய உமது உருவங்களால் துரத்திக்கொண்டு பம்பையின்கரையைச் சுற்றி நாற்புறத்திலும் முளைத்திருக்கிற வ்ருக்ஷங்களைப் பார்த்துக் கொண்டிருக்கின்ற உமது உருவம் அழகியதாகி மிகுதிகென்று ஒளிவீசப் பெற்றிருக்கின்றது. ஆகையால் நீங்கள் ராஜர்ஷிகளைப்போலவும் தேவதைகளைப்போலவும் விளங்குகின்றீர்கள். இப்படிப்பட்ட நீங்கள் கொடிய வ்ரதங்களில் முயன்று தாபஸவேஷந் தரித்துப் புகக்கூடாத இந்த ப்ரதேசத்திற்கு எப்படி வந்தீர்கள்? அழகிய ஜலமுடைய இந்தப் பம்பாநதியை உமது தேஜஸ்ஸினுல் விளங்கச் செய்கிறீர்கள். † தாபஸரது வேஷந்தரித்திருக்கிறீர்கள். நல்ல தைர்யம் பொருந்திப் பொன்வர்ணம் அமைந்து மரவுரி உடுத்து அடவியில் திரியும் ஆயாஸத்தினுல் பெருமூச்செறிந்து கொண்டு அழகிய புஜங்கள் விளங்க, என்றுங்காணுத உங்கள் உருவத்தைக் கண்டு இந்தப் பக்ஷிகளும் ம்ருகங்களும் கலக்கமுற்றோடிப் போக, ஸிம்ஹம்போல்

---

வானரக் கூட்டங்களுக்குத் தலைவனெருவன்' என்று சொல்லப்போகிறவற்றை இம்முதலிலேயே சொல்லியிருப்பானுகையால் இதுவும் ஸரியன்று. சிலர் பிக்ஷு வென்றால் ப்ரஹ்மசாரியென்பர்கள். ஹநுமான் முன்னமே ப்ரஹ்மசாரியாகையால் இப்பொழுது புதிதாக அவ்வேஷந்தரிக்கவேண்டிய அவஸ்யமில்லை. சிலர் 'கபிரூபம் பரித்யஜ்ய' என்று வாநரரூபத்தையே விட்டதாகச் சொல்லுகையாலும் மேல் மாறுவேஷம் பூண்டமையைச் சொல்லுகையாலும் மனுஷ்யரூபங் கொண்டமை சொல்லவேண்டுவது அவஸ்யமாகையால் மனுஷ்யரூபத்தோடுகூடின ப்ரஹ்சர்யமே இங்குப் பிக்ஷுசப்தத்தினுல் சொல்லப்படுகிற தாகையால் விரோதமில்லை யென்றனர்.

† தவஞ்செய்பவர்களான ரிஷிகள்.

கம்பீரமான பார்வையுடன் ஸிம்ஹத்தை அதிக்ரமித்த பல பராக்ரமங்களோடு விளங்குகின்றீர்கள். மேலும், இந்த்ர தனுஸ்ஸுபோன்ற வில்லைக் கையில் பிடித்துப் பகைவரை யடக்குந் திறமுடையராகி ஒளிகொண்டு ரூப ஸௌந்தர்யங்கள் துலக்கமுற்று மேலான வ்ருஷபம் போல் செருக்கு பொருந்திய நடை மிடுக்குதோன்ற, யானையின் துதிக்கைபோல் நீண்டு பருத்த புஜமுடைய வர்களாகித் தேஜஸ்ஸுடன் ப்ரகாசிக்கின்றீர்கள். இப்படிப்பட்ட புருஷஸ்ரேஷ்டர்களாகிய நீங்கள் யாவர் உங்களது தேஹகாந்தியால் பர்வதராஜனாகிய இந்த ருஸ்யமூகம் ப்ரகாசிக்கின்றது. நீங்கள் தேவதைகளோ டொத்த பராக்ரமமுடையரா யிருக்கிறீர்கள்; ஆகை யால் தேவலோகத்தினின்றுவந்த வீரர்கள்போல் புலப் படுகிறீர்கள். மேலும், தாமரையிதழ்போன்ற கண்களு டையவரும் ஸௌந்தர்யாதிகளில் ஒருவரை ஒருவர் நிகர்த்தவருமாகித் தெய்வாதீனமாய்ப் பூமிக்குவந்த சந்த்ர ஸூர்யர்கள்போல் விளங்குகிறீர்கள். மேலும், விசாலவக்ஷஸ்தலமும் ஸிம்ஹத்தின் முசுப்புபோல் உயர்ந்த தோள்களும் பொருந்தி மிக்க உத்ஸாஹம் விளங்கப் பெற்று மதித்தவ்ருஷபங்கள்போல் துலங்கலுற்றுத் தேவதைகளைப்போன்ற உருவமுடைய மனுஷ்யவீரர்க ளாகிய நீங்களிருவரும் ஸமஸ்த ராஜலக்ஷணங்களும் அமைந்திருக்கையால் ராஜ்யத்திற்குரியராயிருந்தும் ராஜ்யத்தைத்துறந்து ஜடாமண்டலந்தரித்து இந்த வன ப்ரதேசத்திற்கு ஏன் வந்தீர்கள்? [1] உங்களது புஜங்கள் முழந்தாள்வரையிலும் நீண்டு பாம்பின் உடல்போல் உரு

---

1 இக்கு 'ஆயதாசவிச ஸுவ்ருத்தாவிச வாஹவஃ பரிவோப மாஃ| ஸர்வபூஷணபூஷார்ஹாஃ கிமர்த்தம் ந விபூஷிதாஃ' என்று மூலம். (ஆயதாஃ) முழந்தாள் வரையிலும் நீண்டவைகளும், (ஸுவ்ரு

ண்டு இருப்புத்தடிகள்போல் பலமும் உறுதியும் அமைந்து ஆபரணங்களுக்கும் ஆபரணங்கள்போன்றிருக்கின்றனவே. இப்படிப்பட்ட புஜங்களைப் பூஷணங்களால் ஏன் அலங்கரியாதிருக்கிறீர்கள்? நீங்களிருவரும் ஸமுத்ரத்தினால் சூழப்பட்ட ஸகல வனங்களோடுங் கூடி விந்த்யம் மேரு முதலிய பர்வதங்களும் உடையதாகி விளங்கும் இந்தப் பூமண்டலம் அனைத்தையும் பாதுகாப்பதற்குரியவரென்று யான் நினைக்கின்றனன். பார்வைக்கு ஆஶ்சர்யமும் ஸுந்தரமும் அற்புதமும் பொன்னால் பூசப்பட்டவையுமாகிய இந்தத் தனுஸ்ஸுக்கள் ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்ட இந்த்ரனது வஜ்

---

த்தாமிச) ஸர்ப்பத்தின் உடல்போல் திரண்டுருண்டிருப்பவைகளும், (பரிவோபமா:) தமது ஸௌந்தர்யத்தை அனுபவிப்பவர்களுக்குள்ள ஸமஸ்த விரோதிகளையும் போக்க வல்லவைகளும், (ஸர்வ ஹுஷண ஹுஷார்ஹா:) 'ஆஹரணஸ்யாஹரணம்' என்றாற்போல ஆபரணங்களையும் அலங்கரிக்க வல்லவைகளுமாகிய, (வாஹவ:) புஜங்கள், (கிமர்யம்நவிஹுஷிதா:) ஏன் அலங்கரிக்கப்படவில்லை. இவைகளை ஆபரணங்களால் அலங்கரித்து ஆபரணங்களுக்கும் ஆபரணமாயிருக்குந் தன்மையை ஏன் வெளிப்படுத்தவில்லை யென்றபடி. அன்றியே, த்ருஷ்டிதோஷம் வாராதிருக்கும்பொருட்டு இப்படிப்பட்ட புஜங்களின் ஸௌந்தர்யத்தை ஆபரணங்களால் மறைக்க வேண்டுமே; ஏன் மறைக்கவில்லை யென்றதாம். அன்றியே, ஆபரணங்களால் மறைக்கப்பட்ட இவைகளின் ஸௌந்தர்யமே எம்மை வசப்படுத்தப்போதும். மறைக்காமல் ஸௌந்தர்யத்தை வெளிப்படுத்துவது எங்களை வசீகரிக்க மிக்க மிகுதியானது. அன்றியே, ராஜகுமாரர்கள் ஒரு நொடிப்பொழுதும் தாம்பூலமில்லாதபோது வாடி வதங்குவதுபோல் நொடிப்பொழுது பிரியினும் நிலைபெற்றிருக்கமாட்டாத ஆபரணங்களை ஏன் பிரிய விட்டிருக்கிறீர்களென்று கருத்து. அன்றியே, இங்ஙனம் ஆபரணங்களை விட்டிருக்கை எந்தச் சத்ருவை வேருடன் கொல்லுவதற்கென்று கருத்து. இதனால் தடைபடாத ஸங்கல்பமுடையவனாயினும் நித்யஸூரிகளை விட்டு இங்ஙனம் நால் வகையாக அவதரித்ததற்குக் காரணமென்னென்று வினவினதாகத் தெரியவருகிறது.

ராயுதங்கள்போல் ப்ரகாசிக்கின்றன. பார்க்க இனிய வைகளாயிருக்கின்ற இந்த அம்பறாத் தூணிகளில் மூச்செறிகின்ற ஸர்ப்பங்கள்போல் ப்ராணனை முடிப்பவைகளும் பயத்தை விளைப்பவைகளுமாகிய கூரான பாணங்கள் நிறைந்திருக்கின்றன. மிக்க விசாலமானவைகளும் தங்கத்தினால் அலங்கரிக்கப்பட்டவைகளுமாகிய இந்தக் கத்திகளிரண்டும் தோலுரித்த ஸர்ப்பங்கள்போல் ப்ரகாசிக்கின்றன. நான் இப்படி அடிக்கடி வினவிக்கொண்டிருப்பினும் நீங்கள் ஏன் மறுமொழி கூறாதிருக்கிறீர்கள்? தர்மாத்மாவும் வீரனுமாகிய ஸுக்ரீவனென்னும் ஓர் வானரர்தலைவன் தன் தமையனால் வஞ்சனையாக வெளித்துரத்தப்பட்டுத் துக்கத்தினால் பூமியில் திரிந்துகொண்டிருக்கின்றனன். வானரஸ்ரேஷ்டர்களுக்கெல்லாம் அரசனும் மஹானுபாவனுமாகிய ஸுக்ரீவனால் அனுப்பப்பட்டு நான் இவ்விடம் வந்தனன். நான் ஹனுமானென்னும் பேருடைய வானரன். தர்மாத்மாகிய ஸுக்ரீவன் உங்களோடு ஸ்னேஹஞ் செய்துகொள்ள விரும்புகின்றனன். நான் ஸுக்ரீவனுடைய மந்த்ரி. வானரனும் வாயுகுமாரனுமாக என்னை அறிவீர்களாக. 'ஸந்யாஸி எப்படி ஆனாய்' என்கிறீர்களோ? நான் ஸுக்ரீவனுக்கு ப்ரியஞ்செய்ய விரும்பிப் பிக்ஷுரூபத்தினால் மாறுவேஷம்பூண்டு ருஸ்யமூக பர்வதத்தினின்று இவ்விடம் வந்தனன். நான் நினைத்த இடம்போக வல்லவனென்றும், நினைத்த வடிவங்கொள்ள வல்லவனென்றும் அறிவீர்களாக' என்றனன். ஹனுமான் பேசுவதில் நிபுணனாகையால் வார்த்தை சொல்லுவதில் வல்லவர்களாகிய ராமலக்ஷ்மணர்களை நோக்கி இங்ஙனஞ்சொல்லி மேலொன்றுஞ் சொல்லாமல் மௌனமாய் இருந்தனன். ஸ்ரீமானாகிய ராமன், ஹனுமான் சொன்ன அந்த வார்த்தைகளைக் கேட்டு

முகத்தில் ஸந்தோஷம் விளங்க அருகேயிருக்கின்ற லக்ஷ்மணனைப் பார்த்து 'இவன் மஹானுபாவனாகிய அந்தக்கபிராஜ ஸுக்ரீவனுடைய மந்த்ரி. அந்த ஸுக்ரீவனையே பார்க்க விரும்புகின்ற என்னிடம் இவன்மூலமாக அவனே வந்தனன். லக்ஷ்மணா! சத்ருக்களையழிக்க வல்லவனே! ஸுக்ரீவனது மந்த்ரியும் பேசுவதில் நிபுணனுமாகிய இந்த வானரன் என்னிடத்திலும் ஸுக்ரீவனிடத்திலும் ஸ்னேஹமுடையவன். இவனோடு நீ மதுர வசனங்களைப் பேசுவாயாக. [1] ருக்வேதத்தில் அப்யாஸமில்லாதவனுக்கும் யஜுர்வேதத்தை உணராதவனுக்கும் ஸாமவேதமறியாதவனுக்கும் இங்ஙனம் பேசுவது எவ்விதத்திலும் ஸாத்யமன்று. மேலும்

---

1 இங்கு 'நாந்ருக்வேதவிநீதஸ்ய நாயஜுர்வேததாரிண: । நாஸாமவேதவிது³ஷ: ஶக்யமேவம் ப்ரபா⁴ஷிதும்' என்பது மூலம். சேதநோஜ்ஜீவநம் ஆசார்யமுகமாகவே ஆகவேண்டுமென்றி மற்றொருமூலமாகக் கூடாதாகையால் ஆசார்யன் கிடைத்தமை இதில் சொல்லப்படுகிறது. 'ஆசார்யோ வேத³ஸம்பந்நோ விஷ்ணுப⁴க்தோ விமத்ஸர: । மந்த்ரஜ்ஞோ மந்த்ரப⁴க்தஶ்ச ஸதா³ மந்த்ராஶ்ரய: ஶுசி: । கு³ருப⁴க்திஸமாயுக்த: புராணஜ்ஞோ விஶேஷத: । ஏவம்லக்ஷணஸம்பந்நோ கு³ருரித்யபி⁴தீ⁴யதே' என்று சொல்லப்படும் ஆசார்யலக்ஷணம் இங்கு வெளியிடப்படுகிறது. (நாந்ருக்வேதவிநீதஸ்ய) ருக்வேதத்தில் அப்யாஸமில்லாதவனுக்கு இங்ஙனம் பேசமுடியாதென்க. இங்ஙனமே மேலும் பொருள் உணர்க. ருக்வேதத்தில் ஒவ்வொரு வர்ணத்திற்கும் ஸ்வரம் மிகுந்திருக்கையால் மனத்தை அடக்கி ஊக்கத்துடன் உச்சரிக்கவேண்டுமாகையால் அவ்வளவு ஸாமர்த்யமும் இவனுக்கு உண்டாயிருக்கையால் ருக்வேதம் தெரிந்தவனென்று சொல்லப்பட்டது. யஜுர்வேதத்தில் ஒவ்வொரு அனுவாகத்திலும் மற்றொரு அனுவாகத்தின் வாக்யங் கலந்திருக்கு மாகையால் ஒன்றோடொன்று கலக்காமல் தரித்திருக்கை அரிதென்று, அதுவும் இவனுக் குண்டென்று யஜுர்வேதத்தில் தாரணமுடையவனென்று சொல்லப்பட்டது. (நாஸாமவேதவிது³ஷ:) ஸாமவேதத்தில்

இவன் இலக்கணமெல்லாம் பலவாறு நன்ருகப் படித் திருக்கின்றனன். இது வாஸ்தவம். ஏனென்ருல், இவன் இத்தனை நேரம் எத்தனை வார்த்தை சொன்ன போதிலும் அதில் சிறிதாயினும் அபசப்தம் அகப் படவில்லை. இவன் பேசிக்கொண்டிருக்கையில் இவன் முகத்திலாவது கண்களிலாவது நெற்றியிலாவது புரு வங்களிலாவது மற்றுமுள்ள அவயவங்களிலாவது எதி லாவது எள்ளளவும் விகாரம் புலப்படவில்லை. மேலும், இவனுடைய இந்தவார்த்தைகள் சப்த விஸ்தரமின்றிப் பதவர்ணஸந்தேஹமுமின்றி மிக்க விளம்பமும் மிக்க வேகமும் இல்லாமல் மார்பில் தோன்றிக் கம்பீரஸ்வர முடையதும் கண்டத்தில் வெளிப்பட்டு நடுத்தாமுமாகி

---

ஊஹம் ரஹஸ்யம் முதலியவை நிறைந்திருக்கும் கானவிசேஷங் கள் தெரிவது கஷ்டமாகையால் அதுவும் இவனுக்குண்டென்று ஸாமவைதஷ்யஞ் சொல்லப்பட்டது. இங்ஙனம் மூன்று வேதங் களிலும் விநயமும் தாரணமும் வேதனமும் உடையவ னென்று தெரிகிறது. (விநயம்- அப்பாஸம், தாரணம்- மனமாரு திருத்தல், வேதனம்-அறிவு). அன்றியே (நாந்ய்ருீவேடிவிநீதஸ்ய) (நீங்களிருவரும் இந்தப் பூமிமுழுமையும் ரக்ஷிக்கவல்லவர்) என்று இது முதலியவற்ருல் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகை சொல்லப்பட்டது. ருக்வேதத்தில் 'ஸ்ரஹ்மவா இடிமேக ஏவாக்ர ஆஸீத்' இத்யாதிகளால் அந்த ஸ்ருஷ்ட்யாதிகளைச் செய்தல் சொல் லப்பட்டது. இதை யறிந்திருப்பது பற்றியே இவன் அங்ஙனம் 'நீங்க ளிருவரும்' என்ருனன்றித் தெரியாதபக்ஷத்தில் சொல்ல நேரா தென்க. யஜுர்வேதத்தில் 'அஜாயமானோ வஹுதா விஜாயதே' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதை யறிந்திருப்பது பற்றியே இந்தப் பொருளை உட்கொண்டு 'தேவரூபிகளான மனுஷ்யர்கள்' என்றனன். இதை யறியாதபக்ஷத்தில் இந்த அவதார ரஹஸ்யத் தைச் சொல்லமுடியாதென்க. சாந்தோக்யத்தில் 'தஸ்ய யதா கப்யா ஸம் புண்டரீக மேவமக்ஷிணீ' என்றிருக்கிறது. இதை யறிந்தே 'தாமரையிதழ்போன்ற கண்களையுடையவ'னென்றனன. ஸாமவேத மறியானுகில் இங்ஙனஞ் சொல்ல வல்லனல்லனென்று கருத்தாம்.

அவ்விரண்டிற்கும் இடையில் மிக்க உரப்பும் மிக்கதாழ்வுமின்றி விளங்குகின்றது. இவன் வ்யாகரணஸம்ஸ்காரத்தினுல் சப்த சுத்தியுடன் பதங்கள் தெளிவாகவும் அக்ஷரங்கள் தனித்தனியே ஸ்பஷ்டமாகவும் இருக்கப் பெற்று விரைவும் மெதுவுமின்றி மற்றுமுள்ள குணங்களும் நிறைந்து மனத்திற்கினிதாயிருக்குமாறு மங்களகரமான வாக்யங்களைக் கூறுகின்றனன். அக்ஷரங்கள் வெளியாகும் ஸ்தானமாகிய மார்பு கண்டம் சிரஸ்ஸு ஆகிய இம்மூன்று இடங்களில் நிலையுற்றிருக்கும் உதாத்த அனுதாத்த ஸ்வரிதங்களென்னும் ஸ்வரங்களோடுகூடி வியப்பை விளைக்கின்ற இவனது வார்த்தைகளைக் கேட்கையில், வெட்டுவதற்காக வாளையுருவிக் கையிலேந்தின பகைவனுயிருப்பினும் அவனுடைய மனமும் கொடுமை நீங்கி ஸந்தோஷம் அடையாதிராது. பாபமற்றவனே! (நம்மைப் புகழும் வ்யாஜத்தினுலேயே நமது குலகோத்ராதிகளை யெல்லாம் வினுவினனே.) இப்படி வினவும்படியான ஸமர்த்தன் எந்த அரசனுக்குத் தூதனுயிருப்பானே, அவ்வரசனுக்குக் கார்யங்கள் எங்ஙனம் கைகூடாது போகும்? இப்படிப்பட்ட குணகணங்கள் பொருந்திக் கார்யங்களை ஸாதிக்குந் தூதர் எந்த ராஜனுக்கு இருப்பார்களோ, அந்த ராஜனது கார்யங்களெல்லாம், அவனுக்கு ஶ்ரமமின்றி அந்தத் தூதரது வாக்யமூலமாகவே ஸித்திபெறும்' என்று மொழிந்தனன். இங்ஙனம் ராமன் மொழியக்கேட்ட லக்ஷ்மணன் தான் வார்த்தை சொல்லுவதில் வல்லவனுகையால், ஸுக்ரீவனது மந்த்ரியும் வாக்யங்களை யறிந்தவனும் வாயுகுமாரனுமாகிய அந்த வானரனைப் பார்த்து 'அறிஞனே! மஹானுபாவனுகிய ஸுக்ரீவனது குணங்கள் எமக்குத் தெரிந்திருக்கின்றன. வானரர் தலைவனுகிய அந்த ஸுக்ரீவனையே நாங்களும் இப்பொ

மூது தேடிக்கொண்டிருக்கின்றனம். மிகுந்த நன்மையுடையவனே! ஹனுமானே! நீ இப்பொழுது ஸுக்ரீவனது கட்டளையினால் யாது சொல்லினையோ, அதை அப்படியே நடத்துகின்றோம்' என்றனன். அனந்தரம் வாயு குமாரனாகிய அந்த வானரன், லக்ஷ்மணன் நிபுணமாகச் சொன்ன வார்த்தையைக் கேட்டு மிகவும் ஸந்தோஷமுற்று வாலியை வெல்லும் உபாயத்தைப் பற்றி மனத்தில் நிச்சயித்துக்கொண்டு அந்த ராமலக்ஷ்மணர்களோடு ஸுக்ரீவனுக்கு ஸ்னேஹம் பண்ணுவிக்க விரும்பினன். மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

லக்ஷ்மணன் ஹனுமானுக்குத் தமது வ்ருத்தாந்தத்தைத் தெரிவித்தலும், அவர்கள் ஸுக்ரீவனிடம் போதலும்.

அனந்தரம் ஹனுமான், லக்ஷ்மணன் மதுரமாகச் சொன்ன அந்த வார்த்தைகளைக் கேட்டு, ராமனுக்கு ஸுக்ரீவனால் கார்யம் உளதென்று தெரிகையால் மிகவும் ஸந்தோஷம் அடைந்து ஸுக்ரீவனைக் குறித்துத் தன் மனத்தில், 'ராமன் ஸுக்ரீவனால் கார்யமாக வேண்டி வந்தனன். ஆகையால் மஹாபாக்யமுள்ள ஸுக்ரீவனுக்கு ராஜ்யம் கைபுகக்கூடும். இந்த ராஜ்யங் கைகூடுவதும் ஏறக்குறைய முடிந்தாற்போன்றதே' என்று நினைத்தனன். பின்பு, வார்த்தை சொல்லுவதில் நிபுணனாகிய ஹனுமான் பரம ஸந்தோஷம் அடைந்து ராமனைப் பார்த்து 'நீயும் உன் தம்பியும், பயங்கரமாகி நானாவித ஸர்ப்பங்களும் மிருகங்களும் நிரம்பின தண்டகாரண்யத்திற்கு; அதிலும் பம்பையின் ஸமீபத்திலுள்ள வனங்களால் விளக்கமுற்றுப் புகக்கூடாத இப்படிப்பட்ட ப்ரதேசத்திற்கு ஏன் வந்தீர்கள்?'' என்று வினவினன். லக்ஷ்மணன் அந்த வார்த்தையைக் கேட்டு, ராமனால் மறுமொழி கூறுவாயாக வென்றுரைக்கப்பெற்று ஹனுமானு

க்கு ராமன் மஹானுபாவனென்றும் தசரத குமாரனென்றும் இங்ஙனஞ் சொல்லினன். ‘தசரதரென்று ஓர் மன்னவர் உளர். அவர் மிக்க ப்ரதாபமுடையவர்; தர்மத்தில் நிலைநின்றவர். அவர் தமது தர்மத்தின்படி தவறாமல் எப்பொழுதும் நான்கு வர்ணத்தவர்களையும் பரிபாலித்து வந்தனர். அவர்மேல் த்வேஷமுள்ளவன் ஒருவனும் இரான். அவர்க்கும் ஒருவனிடம் த்வேஷம் உண்டாகாது. அவர் ஸமஸ்த ப்ராணிகளிலும் ப்ரஹ்மதேவன்போல் மிகவும் மேன்மையுடையவர். அவர் நன்கு தக்ஷிணைகள் கொடுத்து அக்னிஷ்டோமாதியாகங்களைச் செய்தனர். இவன், அந்தத் தசரதருடைய மூத்த குமாரன். இவனை ஜனங்கள் ராமனென்பார்கள். இவன் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ரக்ஷகனாயிருப்பவன்; தந்தையினாஜ்ஞையைத் தவறாமல் நிறைவேற்றுவானன்றி ஒருபொழுதும் தவறமாட்டான். மேலும், இவன் வீரன்; தசரதகுமாரர்களெல்லோரிலும் மிகுந்த குணமுடையவன்; ராஜ லக்ஷணங்கள் அமைந்தவன்; மூத்தவனாகையால் ராஜ ஸம்பத்தியோடுங் கூடினவன். இவனுக்கு ராஜ்ய [1] ப்ரம்சம் நேருகையில் வனத்தில் வாஸஞ் செய்யும்பொருட்டு என்னோடுகூட இவ்விடம் வந்தனன். மஹா தேஜஸ்வியாகிய ஸூர்யன் ஸாயங்காலத்தில் காந்தி குறைந்து அஸ்தமிக்கும்பொழுதும் அவனது ப்ரபை அவனைப் பின்செல்வதுபோல் மஹா தேஜஸ்வியாகிய ராமன் ஐச்வர்யத்தை இழந்து அடவிக்கு வரும்பொழுதும் அந்த ஜிதேந்த்ரியனுடைய பார்யையாகிய ஸீதையும் அவனை விடாமல் பின்றொடர்ந்து வந்தனள். [2] நான் இவனுடைய தம்பி, லக்ஷ்மணனென்

1 கைசோருதல்.

2 இங்கு ‘அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர்தாஸ்யமுபாகத:| க்ருதஜ்ஞஸ்ய பஹுஜ்ஞஸ்ய லக்ஷ்மணோநாமநாமத:| ஸுகார்ஹஸ்ய மஹார்ஹஸ்ய வநவாஸாச்ரிதஸ்யச’ என்பது மூலம். (அஸ்ய அவ

னும் பேருடையவன். ராமன், தனக்குப் பிறர் கொஞ்சம் உபகாரஞ் செய்யினும் அதை மிகவும் மேலாக நினைக்குந் தன்மையன்; ஸுகத்தை அனுபவிப்பதற்கே தகுந்தவன்; ஐஸ்வர்யம் அமைந்தவன்; ஸமஸ்தபூதங்களுடைய மேன்மையிலும் மனமுடையவன். இவன் ஐஸ்வர்யத்தைப் போக்கடித்துக்கொண்டு வனவாஸஞ் செய்ய வந்திருப்பினும் இவனது குணங்களுக்கு வசப்பட்டு நான் இவனுக்குத் தாஸனாகி இவனுடன் கூட வந்தனன். நாங்களிருவரும் இல்லாத ஸமயத்தில் காமரூபி

---

ரோஹிராதா) இவனைப்பற்றிப் பார்க்கையில் இவனுக்குப் பின்பிறந்தவனாகின்றனன். (அஹம்து) என்னைப்பற்றிப் பார்க்கில் நான் (குணைர்தாஸ்யமுபாகதஃ) இவன்குணங்களுக்கு மனம் வசப்பட்டு இவனுக்குத் தாஸனேயாயிருப்பவன். லக்ஷ்மணனுக்கு'பரவாநஸ்மி' இத்யாதிகளால் தாஸ்யம் ஸ்வரூபஸித்தமாயிருக்கக் குணங்களைப் பற்றி யென்பது எப்படி யென்றால்—இங்கு ஸ்வரூப ஸித்தமான தாஸ்யம் யோக்யதையின் மிகுதியால் குணங்களைப்பற்றி மிகவும் வளர்ந்திருக்குமென்று கருத்துக் கொள்க. ஆகையால் விரோதமில்லை. (உபாகதஃ) என்கிறவிடத்தில் (உப) என்கிற இத்தால் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளுக்கும் உரியவையான ஸர்வவிதகைங்கர்யங்களையும் ப்ராப்தனானே னென்றமை தோற்றுவிக்கப் படுகிறது. இந்தக் கைங்கர்யமும் எனக்காகவன்று, அவனுடைய முகோல்லாஸத்திற்காக வென்கிறான். (க்ருதஜ்ஞஸ்ய பஹுஜ்ஞஸ்ய) செய்தது சிறிதாயிருப்பினும் அதைப் பெரிதாக நினைப்பவன். இந்தக் கைங்கர்யம் ஸஹஜமென்னும் நினைவோடு சொல்லுகிறான். (லக்ஷ்மணோ நாம நாமதஃ) தன்பேரைப் பற்றியே கைங்கர்ய லக்ஷ்மியமைந்தவனென்று ப்ரஸித்தி பெற்றவன். ஆகையால் இந்தக் கைங்கர்யம் தனக்கு ஸஹஜமென்று கருத்து. (மஹார்ஹஸ்ய) ஐஸ்வர்யம் அமைந்தவன். (வநவாஸாஸ்ரிதஸ்பச) வனவாஸஞ் சென்றவன்; துக்கமுற்றவனென்க. அதாவது ஸம்ருத்திதசையிலும் அஸம்ருத்திதசையிலும் தன்தாஸ்யத்தைச் சொல்லுகையால் அது தனக்கு ஸஹஜமென்பது சொல்லப்பட்டது. கைங்கர்யம் ஸஹஜமே, குணங்கள் அதை வளரச் செய்கின்றனவென்பது கருத்து.

யாகிய ராக்ஷஸனொருவன் இவனது பார்யையை எடுத்துக்கொண்டு போயினன். இவனது பார்யையாகிய அந்த ஸீதையை எடுத்துக் கொண்டு போனவன் எவனோ தெரியாதிருக்கின்றது. தநுவம்சத்தில் பிறந்த ஸ்ரீயென்பவன் புதல்வன் (திதிக்குப் புத்ரன்போன்றிருப்பவன்) சாபத்தினால் ராக்ஷஸனாயிருந்தனன். அவன், வானரர் தலைவனாகிய ஸுக்ரீவன் ஸமர்த்த னென்று மொழிந்தனன். மேலும், அவன் 'மஹாவீர்யனாகிய ஸுக்ரீவன், உன் பார்யையை எடுத்துக்கொண்டுபோனவனைத் தெரிந்துகொள்ளவல்லவன்' என்றுரைத்து அந்தத் தனுஜன் (கபந்தன்) ராக்ஷஸத் தன்மையை விட்டுத் திவ்யதேஹத்துடன் விளக்கமுற்று ஸுகமாக ஸ்வர்க்கம் போயினன். நீ வினவினதற்கு எமது வ்ருத்தாந்தத்தை யெல்லாம் உனக்கு நடந்தபடியே சொல்லினன். நானும் ராமனும் ஸுக்ரீவனைச் சரணம் அடைந்தனம்.[1] இம்மஹானுபாவன் வேண்டுவோர்களுக்குப் பலவகைப்பட்ட

---

1 இங்கு 'ஏஷ தத்வாச வித்தாநி ப்ராப்யசாநுத்தமம் யஶ꞉। லோகநாத꞉ புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி'என்பது மூலம். இங்கு (லோகநாத꞉) என்று லோகசப்தம் தனியேயிருக்கையால் ஸர்வலோகங்களுக்கும் நாதனென்று தோற்றுகிறது. இதனால் பரத்வம் தோற்றுவிக்கப்பட்டது. (ஸுக்ரீவம்நாதமிச்சதி) என்கையால் ஸௌசீல்யம் தோற்றுவிக்கப்பட்டது. ஸௌசீல்யமாவது மேன்மையுடையவன் தாழ்ந்தவரோடு ஒரு நீராகக் கலந்திருக்கை. (ப்ராப்யசாநுத்தமம்யஶ꞉) பரத்வத்தைக் காட்டிலும் அவதாரத்தில் மிகவும் புகழ் தோற்றுகிறது. பரத்வமில்லாத வெறும் ஸௌசீல்யம் குணமாகாமையால் இங்குப் பரத்வத்தோடுகூட ஸௌசீல்யம் சொல்லப்பட்டது. இப்படிப்பட்ட மேன்மையுடையவன் அற்பஜனத்தை என் வேண்டுகிறானென்றால் (இச்சதி) அவனுடைய இச்சையை ஒருவரால் தடுக்கமுடியாது. அந்த ஸ்வதந்த்ர இச்சையோடு வேண்டிக்கொள்வதும் குணமே. பராதீனன் வேண்டுவதே குணமன்றென்று கருத்து.

தனங்களைக் கொடுத்தும் ஒப்பற்ற கீர்த்தியைப் பெற்றும் முன்பு லோகநாதனயிருந்து இப்பொழுது ஸுக்ரீவனைத் தனக்கு நாதனுக விரும்புகின்றனன். எவனது தந்தை தசரதர் முன்பு தர்மவத்ஸலராகி அனைவரும் சரணமடையக்கூடியவராயிருந்தனரோ, அப்படிப்பட்டவரது குமாரன் அனைவரும் வந்து சரணம் புகத்தகுந்தவன், இப்பொழுது ஸுக்ரீவனைச் சரணம் அடைந்தனன். எவன் அருள்புரிவானுயின், இந்த ப்ரஜைகள் அனைவரும் ஸமஸ்த புருஷார்த்தங்களையும் பெற்று மனத்தில் தெளிவுற்றிருப்பரோ, அப்படிப்பட்ட ராமன் இப்பொழுது வானரராஜனுடைய அனுக்ரஹத்தை விரும்புகின்றனன். பூமண்டலத்திலுள்ள ஸமஸ்த ராஜர்களையும், எவர் ஸமஸ்த உபசாரங்களும் பெற்றவராகக் செய்து மன்னித்தனரோ, அப்படிப்பட்ட மஹாராஜ தசரதரது வயிற்றில் பிறந்த பெரிய குமாரன், மூன்று லோகங்களிலும் புகழ்பெற்றவன், ராமன், வனத்தில் திரியும் வானரமாத்ரங்களுக்கு ராஜனுகிய ஸுக்ரீவனைச் சரணம் அடைந்தனன். இங்ஙனம் சோகத்திற்காளாகிச் சோகத்தினுல் பீடிக்கப்பட்டுச் சரணம் அடைந்த ராமனிடத்தில் வானரக்கூட்டங்களுக்குத் தலைவனுகிய ஸுக்ரீவன் அனுக்ரஹஞ் செய்யவேண்டும்' என்றனன். இங்ஙனம் கண்களில் நீர்பெருக மன இரக்கம் உண்டாகும்படி மொழிகின்ற லக்ஷ்மணனைப் பார்த்து ஹனுமான் வார்த்தையின் ஒழுங்கு தோற்ற 'புத்தியிற் சிறந்து கோபத்தை அடக்கி ஜிதேந்த்ரியராயிருக்கும் இப்படிப்பட்டவர்களை ஸுக்ரீவனே தேடிக்கொண்டுவந்து பார்க்கவேண்டும். இப்படிப்பட்ட நீங்களே அவனது பாக்யவசத்தினுல் அவனுக்குத் தர்சனங் கொடுக்கவந்தீர்கள். அந்த ஸுக்ரீவனும் அண்ணனுகிய வாலியோடு வைரங் கொண்டு, அவன் தன் பத்னியை



1643 ஹநுமான் ராமலக்ஷ்மணர்களைத் தோள்மேல் ஏற்றிக்கொண்டு ஸுக்ரீவனிடம் போதல்.

அபஹரித்துத் தன்னை மிகவும் வஞ்சித்துத் துரத்துகையில், ராஜ்யங் கைசோரப் பெற்று வனத்தில் இருக்கின்றனன். ஸூர்யபுத்ரனாகிய அந்த ஸுக்ரீவன் எம்முடன்கூடி ஸீதாதேவியைத் தேடுவதில் உங்களிருவர்க்கும் ஸஹாயஞ் செய்வான்' என்றனன். ஹனுமான் இங்ஙனம் மெதுவாகவும் இனிதாகவும் உரைத்து மீளவும் ராமனைப் பார்த்து 'இனி ஸுக்ரீவனிடம் போவோம்' என்றனன். ஹனுமான் இங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கையில், தர்மாத்மாவாகிய லக்ஷ்மணன், தூதனைப் பூஜிக்க வேண்டிய ந்யாயத்தின்படி பூஜித்து ராமனைப் பார்த்து 'அண்ணா! என் வார்த்தைகளைக் கேட்டு வாயுகுமாரனாகிய இவ்வானரன் ஸந்தோஷ முற்றவனாகத் தோற்றுகையால் ஸீதையைத் தேடும் விஷயத்தை யதார்த்தமாகவே சொல்லுகின்றனன். அந்த ஸுக்ரீவனும் நம்மால் கார்யம் ஆகவேண்டியவனாகவே நேர்ந்திருக்கின்றமையால் நங்கார்யத்தைச் செய்யாமல் தீராது. ஆகையால் நீ கார்யங்கைகூடப் பெற்றனை. வாயுகுமாரனாகிய இவ்வீரன் ஹனுமான் தெளிந்த முகவொளியுடன் ஸந்தோஷமுற்று ஸ்பஷ்டமாகப் பேசுகிறானாகையால்இப்படிப்பட்டவன் அபத்தஞ் சொல்லமாட்டான்' என்றனன். அதன்மேல் மஹாப்ராஜ்ஞனாகிய ஹனுமான் வீரர்களாகிய ராமலக்ஷ்மணர்களை அழைத்துக்கொண்டு வானரப்ரபுவாகிய ஸுக்ரீவடனிடம் போயினன். அந்தக் கபிகுஞ்சரன் ஸந்யாஸி வேஷத்தை விட்டுமீளவும் தனக்கு எப்பொழுதுமுள்ள வானரரூபம் பெற்று அவ்வீரர்களை முதுகின்மேல் ஏற்றிக்கொண்டு போயினன். ஸகலதேவதைகளின் வரப்ரஸாதத்தினால் பெருங் கீர்த்தி பெற்று ஸுக்ரீவன்போன்றவனையும் அடக்கி நடத்தும்படியான மேன்மையுற்ற வானர

னும் மஹாபராக்ரமமும் மிகுந்த புத்தியும் பொருந்தின வாயுகுமாரனுமான ஹநுமான் 'இனித் தவறாமல் ஸுக்ரீவனது அபீஷ்டம் நிறைவேறும்' என்று கார்யம் கைகூடப் பெற்றவன்போல் மிகவும் ஸந்தோஷமுற்று ராம லக்ஷ்மணர்களோடு கூட ருஶ்யமூக பர்வதத்திற்குப் போயினன். நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமனும் ஸுக்ரீவனும் அக்னி ஸாக்ஷிமமாக ஸ்னேஹஞ் செய்து கொள்ளுதல்.

ஹநுமான் ருஶ்யமூக பர்வதத்தினின்று அதன் தாழ்வரையாகிய மலயபர்வதத்திற்குச் சென்று ஸுக்ரீவனைப் பார்த்து அவனுடன் ராம லக்ஷ்மணர்களின் வரவைக் குறித்து 'மிகவும் ப்ராஜ்ஞனும் மஹாபராக்ரமசாலியுமாகிய ராமனும் அவன்தம்பியும் இங்கே வந்திருக்கின்றனர். இந்த ராமன் ஸத்யபராக்ரமன். இவன் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவன்; தசரத மஹாராஜரது புதல்வன்; பரமதார்மிகனென்று ப்ரஸித்தி பெற்றவன்; தந்தையின் ஆஜ்ஞையைத் தவறாமல் நிறைவேற்றுந்தன்மையன்; அப்படிப்பட்ட மஹானுபாவனாகிய இந்த ராமன் நியமங்களில் முயன்று அரண்யவாஸஞ் செய்கையில், இவனது பார்யையை ராவணன் அபஹரித்துக்கொண்டு போயினன். அந்த ராமன் இப்பொழுது உன்னைச் சரணம் புகுந்தனன். ராஜஸூயங்களாலும் அஶ்வமேதங்களாலும் அக்னிக்கு மிகவும் த்ருப்தியைச் செய்வித்து லக்ஷக்கணக்காகப் பசுக்களையும் தக்ஷிணை கொடுத்துத் தவத்தினால் ஸத்யந்தவறாமல் பூமண்டலத்தைப் பாதுகாக்குந் திறமுடைய மஹானுபாவராகிய தசரத மஹாராஜரது குமாரன் ராமன் ஸ்த்ரீ நிந்தமாக உன்னைச் சரணம் புகுந்தனன். அண்ணனும் தம்பியுமாகிய அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் உன்னுடைய ஸ்னேஹத்தை விரும்புகின்றனர். இவ்வீரர்களிருவரும் மிகவும் பூஜிக்கத்

தகுந்தவர். ஆகையால் இவர்களை எதிர்கொண்டு பூஜிப்பாயாக' என்றனன்; ஸுக்ரீவன் ஹநுமான் சொன்ன வார்த்தையைக் கேட்டு மனத்தில் ஸந்தோஷமுற்றவனாகி உள்ளே இருந்த பரிதாபமெல்லாந் தீரப்பெற்று ராமலக்ஷ்மணரிடம் தனக்குண்டாயிருந்த பயத்தைத் துறந்தனன். வானரர் தலைவனான அந்த ஸுக்ரீவன் மனுஷ்ய உருவந்தரித்து மிகவும் இனியனாகி ஸந்தோஷத்துடன் ராமனைப் பார்த்துத் 'தாங்கள் நன்றாகப் பயிற்சி யுடையவர்; மிகுந்த பராக்ரமமுடையவர்; ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் வாத்ஸல்ய முடையவர். உமது குணங்களையெல்லாம் உள்ளபடி ஹநுமான் எனக்குச் சொல்லினன்; 'ப்ரபூ! ஆகையால் கேவலம் ஓர் வானரனாகிய என்னோடு உம்மைப்போன்றவர் ஸ்னேஹம் செய்யவிரும்புவது எனக்கே மிக்கஸத்காரமும் உயர்ந்த லாபமுமாயிருக்கின்றது. உமக்கு ஸ்னேஹம் இஷ்டமாயிருக்குமாயின், இதோ கை நீட்டினன்; கையால் என் கையைப் பிடிப்பீராக. இந்த ஸ்னேஹத்தைக் கடவாதிருக்கும்படி திடமான ஏற்பாடும் நடத்துவீராக' என்றனன். அந்த ராமன், ஸுக்ரீவன் மெதுவாகச் சொன்ன அந்த வார்த்தைகளைக் கேட்ட மாத்ரத்திலேயே மனத்தில் ஸந்தோஷம் மிகப்பெற்று ஸுக்ரீவனது கையைத் தன்கையால் பிடித்துக்கொண்டனன். ராமன் மனத்திற்கு இனியநேசத்தைப்பற்றி ஸுக்ரீவனை அழுந்தக் கட்டிக் கொண்டனன். அப்பால் பகைவரை அடக்குந் திறமுடைய ஹநுமான், தான் ராமலக்ஷ்மணர்களை அழைத்துக் கொண்டுபோன பின்பு மீளவும் தரித்திருந்த ஸந்யாஸி வேஷத்தை விட்டு நிஜரூபத்தைக் கைப்பற்றி அரணிக்கட்டைகளைக் கடைந்து அக்னியைப் பிறப்பித்தனன். பின்பு அந்த ஹநுமான் எரிகின்ற அந்த அக்

னியைப் பூஜித்து அங்ஙனம் பூஜிக்கப்பட்ட அவ்வக்னியை மிகுந்த ப்ரீதியோடும் மனவூக்கத்தோடும் ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் இடையிலே கொண்டு வைத்தனன். அனந்தரம் ஸுக்ரீவனும் ராமனும் கைகளைப் பிடித்துக்கொண்டு எரிகின்ற அந்த அக்னியை ஸாக்ஷியாக வைத்து ஸ்னேஹம் பண்ணிக்கொண்டனர். அதன்மேல், அந்த ராம ஸுக்ரீவர்களிருவரும் மிகவும் மனக்களிபுற்று ஒருவரை ஒருவர் எவ்வளவு பார்த்துக்கொண்டிருந்தபோதிலும் த்ருப்தி அடையவில்லை. ஸுக்ரீவன் ராமனைப் பார்த்து மிகுந்த ஹர்ஷத்துடன் 'நீர் எனக்கு மிகவும் அருமையான ஸ்னேஹிதராயினீர். இனி உமது துக்கமும் என் துக்கமும் ஒன்றே. உமது ஸுகமும் என் ஸுகமும் ஒன்றே' என்றனன். ஸுக்ரீவன், மிகுந்த இலைகளுடையதும் நன்கு புஷ்பித்திருப்பதுமாகிய ஓர் ஸாலவ்ருக்ஷத்தினுடைய கிளையை ஒடித்து அதைப் பரப்பிக்கொண்டு ராமனும் தானுமாக உட்கார்ந்தனன். பிறகு பரமஸந்தோஷமுற்று ஹனுமான் லக்ஷ்மணனுக்காக மிகவும் புஷ்பித்திருக்கிற சந்தன மரத்தின் கிளையை ஒடித்துப் பரப்பினன். பிறகு ஸுக்ரீவன் மிகவும் ஸந்தோஷமுற்று அப்பொழுது கண்களில் ஆநந்த நீர் பெருக, ராமனைப் பார்த்து மிருது மதுர வாக்யத்துடன் 'ராமா என் தமையன் என்னை வஞ்சித்து என்பார்யையை அபஹரித்துக்கொள்கையில், நான் அவனிடம் பயப்பட்டு வருந்திப், புகக்கூடாத இவ்வனத்தில் உன்னைப் பற்றினன். அங்ஙனம் வாலி என்னை வஞ்சித்து என்மேல் வைரங்கொண்டிருப்பதுபற்றி நான் அவனிடம் பயத்தினால் மனத்தில் திப்ரமங்கொண்டு ஏதுந் தோற்றாமல் இவ்வனத்தில் இருக்கின்றனன். மஹாபாக்யமுடையவனே! வாலியிடம் பயத்தினால் பீடிக்கப்பட்டிருக்கிற எனக்கு அபயங் கொடுப்பாயாக. காகுத்ஸ்தனே! எனக்குப் பய

மில்லாதிருக்கும்படி நடத்த வேண்டும்' என்று மொழி கையில், தர்மங்களை யறிந்தவனும் தர்மங்களில் மிக விருப்ப முடையவனும் ககுத்ஸ்த குலாலங்காரனுமாகிய ராமன் மிகவும் தேஜஸ்வியாகையால் ஸுக்ரீவனைப் பார்த்து 'இதெவ்வளவு கார்யம்' என்று முகத்தில் புன்னகை விளங்க 'வானரர் தலைவனே! ஸ்னேஹிதனுயிருக்கைக்கு உபகாரஞ் செய்கையே பலனென்று எனக்குத் தெரிந்தே இருக்கின்றது. ஆகையால் உன் பார்யையை அபஹரித்த வாலியை நான் வதிக்கின்றனன். என் கூரான பாணங்கள் வீணுகாதவை; ஸூர்யனோடொத்திருப்பவை; கழுகின் இறகுகள் கட்டப்பெற்று இந்த்ரனது வஜ்ராயுதத்தை நிகர்த்துக் கூரான நுனியுடன் கூடிக் கோபித்த ஸர்ப்பங்கள்போன்று மஹா வேகத்துடன் அந்த வாலியின்மேல் விழப்போகின்றன. இதோ சீக்ரமாகவே அவ்வாலி க்ருஷ்ணஸர்ப்பங்கள்போல் க்ரூரமான எனது பாணங்களால் அடிக்கப்பட்டுப் பர்வதம்போல் தரையில் பதறி வீழ்ந்திருக்கப் போகின்றனன் பார்' என்றனன். அந்த ஸுக்ரீவன், தனக்கு ராமன் ஹிதமாகச் சொன்ன அந்த வார்த்தைகளைக் கேட்டு மிகவும் மனக்களிப்புற்று மிக்க மேன்மையுடைய வார்த்தையைச் சொல்லத் தொடங்கிப் 'புருஷஸிம்ஹனே! ராமா! உனது அநுக்ரஹத்தினுல் என் ப்ராணநாயகியையும் என் ராஜ்யத்தையும் மீளவும் பெறுவேன். நரதேவனே! ஆகையால் நீ இப்பொழுது அப்படிப்பட்ட வைரத்தினுல் எனக்குப் பகைவனுயிருக்கிற என்தமையனை வதிக்கும்படியான ப்ரயத்னத்தைச் செய்வாயாக' என்றனன். ஸுக்ரீவனும் ராமனும் ஸ்னேஹம் பண்ணிக் கொள்ளும் ஸமயத்தில், தாமரையிதழ் போன்ற ஸீதையின் இடக்கண்ணும் பொன்வர்ணமுடைய வாலியின் இடக்கண்ணும் அக்னிபோல் எரிகின்ற ராவணனது

இடக்கண்களும் ஒரேகாலத்தில் துடித்தன. ஐந்தா வது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுக்ரீவன் ராமகார்யத்தைச் செய்வதாக ப்ரதிஜ்ஞை செய்தல்.

ஸுக்ரீவன் ஸந்தோஷ முற்றவனுகி ரகுகுலகுமாரனுகிய ராமனே மீளவும் பார்த்து 'ராமா! என் மந்த்ரியும் மந்த்ரிகள் அனைவரிலும் மேன்மையுற்றவனுமாகிய இந்த ஹனுமான் நீ ஜனஸஞ்சார மில்லாத இந்த வனத்திற்கு ஏன் வந்தனேயோ அதை எனக்குச் சொல்லியிருக்கின்றனன். நீயும் உன் தம்பி லக்ஷ்மணனும் வனத்தில் வாஸஞ்செய்து கொண்டிருக்கையில், ராவணன் ஸமயம் பார்த்திருந்து, நீயும் புத்திமானுகிய லக்ஷ்மணனும் இல்லாதபோது ஒன்றியாகித் திக்கின்றி ரோதனஞ் செய்கின்ற பதிவ்ரதையும் ஜனகராஜன் புதல்வியுமாகிய உன் பத்னி ஸீதையை அபஹரித்துக் கொண்டு, தடுக்கவந்த ஜடாயுவை வதித்து, அவளைக் கொண்டு போயினன். உனக்கு இனிப் பார்யாவியோக துக்கம் சீக்ரத்திலேயே விட்டுப் போய்விடும். மது கைடபர்கள் அபஹரித்துக்கொண்டுபோன வேதஸ்ருதியை மத்ஸ்யாவதாரஞ் செய்த விஷ்ணு திருப்பிக் கொண்டு வந்தாற்போல், நான் அந்த ஸீதையைக் கொண்டு வந்து கொடுக்கிறேன். சத்ருக்களை யழிப்பவனே! உன் பார்யை, பாதாளத்தில் இருப்பினும் ஆகாயத்திலிருப்பினும் நான் கொண்டுவந்து கொடுக்கிறேன். ராமா! நான் சொல்லும் இவ்வார்த்தை யதார்த்தமே; தப்பாதென்றறிவாயாக. மஹாபாஹுவே! விஷங் கலந்த தின்பண்டத்தைத் தின்றல் எப்படியோ, அப்படியே உன்பார்யையை அபஹரித்து இந்த்ரனும் தேவாஸுரர்களும் ஜரிப்பித்துக் கொள்ள முடியார்கள். மஹாபாஹு! சோகத்தை



1649. ஸுக்ரீவன் ஸீதையின் ஆபரணங்களைக் காண்பித்த
லும், ராமன் அதைக்கண்டு வருத்த முறுதலும்.

விடுவாயாக. உன் காதலியாகிய அந்த ஸீதையை, நான் கொண்டுவந்து கொடுக்கிறேன். கொடுந்தொழிலனாகிய ராக்ஷஸன் கொண்டுபோகுந்தருணத்தில் ‘ராமா ராமா’ என்றும் ‘லக்ஷ்மணா!’ என்றும் விகார ஸ்வரத்துடன் முறையிட்டு ரோதனஞ் செய்து கொண்டு ஸர்ப்பராஜகன்னிகைபோல் ராவணன்மடியில் அல்லாடிக்கொண்டிருக்கும் ஓர் பெண்பிள்ளையைக் கண்டேன். ஊஹித்துப் பார்க்கையில் அவளே ஸீதை யென்று எனக்குத் தோற்றுகிறது. அவளே ஸீதை யென்பதற்கு ஸந்தேஹம் இல்லை. அந்த ஸீதை, நான்கு வானரர்களோடு ஐந்தாவனாகிப் பர்வதத்தின் சாரலி லிருக்கும் என்னைப் பார்த்து உத்தரீயத்தை எடுத்து ஆபரணங்களைக் கழற்றி மூட்டையாகக் கட்டி என்னிடம் விழும்படிக்குப் போகட்டனள். ராமா! நாங்கள் அந்த ஆபரணங்களை எடுத்துப் பத்ரமாக வைத்திருக்கின்றனம். நான் அவைகளை எடுத்துக்கொண்டு வருகிறேன். நீ அவைகளைப் பார்த்து அடையாளங் கண்டு கொள்ளலாம்’ என்றனன். அனந்தரம் ராமன் ப்ரிய வசனங்களைக் கூறுகின்ற ஸுக்ரீவனைப் பார்த்து ‘நண்பனே! அந்த ஆபரணங்களை வேகமாகக் கொண்டு வருவாயாக. தாமதஞ் செய்வதேன்?’’ என்றனன். ராமன் இங்ஙனஞ் சொல்லுகையில், ஸுக்ரீவன் அவனுக்கு ப்ரியஞ்செய்ய விரும்பி உடனே சீக்ரமாக அந்தப் பர்வதத்தில் புகக்கூடாத ஓர் குஹைக்குள் சென்று ஸீதையின் உத்தரீயத்தையும் அழகான ஆபரணங்களையும் கொண்டுவந்து ‘இதோ பாராய்’ என்று ராமனுக்குக் காண்பித்தனன். பின்பு ராமன் அந்த உத்தரீயத்தையும் அழகாகிய அந்த ஆபரணங்களையும் வாங்கிக்கொண்டு சந்த்ரன் பனியால் மூடப்படுவதுபோல் கண்ணீர் நிறைந்தவனாயினன். அவன் அவைகளைப் பார்த்தவுடனே ஸீதையிடத்திலுள்ள ஸ்னேஹத்தினால் பொங்கி வரு

கின்ற கண்ணீரினால் விகாரமுற்றவனாகி ‘ஆ! என் ப்ராணநாயகி’! என்று கதறி ரோதனஞ் செய்துகொண்டு தைர்யத்தை விட்டுத் தரையில் வீழ்ந்தனன். அவன் உத்தமமான அந்த ஆபரணங்களைப் பலவாறாக மார்பின்மேல் வைத்துக்கொண்டு, பலாத்காரஞ் செய்து பிடித்துப் பெட்டியில் அடைக்கையில் கோபத்தினால் மிகவும் பெருமூச்செறிகின்ற ஸர்ப்பம்போல் பெருமூச்செறிந்தனன். ராமன் கண்களினின்று நீர் இடைவீடின்றி வேகத்துடன் பெருகாநிற்க, பக்கத்திலிருக்கின்ற லக்ஷ்மணனைப் பார்த்துப் புலம்பத் தொடங்கினன்: ‘லக்ஷ்மணா! ராக்ஷஸன் கொண்டுபோகையில், ஸீதை தன் சரீரத்தினின்று வாங்கி வீசியெறிந்த இந்த உத்தரீயத்தையும் ஆபரணங்களையும் காண்பாயாக. ஸீதை, தான் அபஹரிக்கப்பட்டுப் போகும்பொழுது,இந்த ஆபரணங்களைப் புல்லுள்ள பூமியில் பொகட்டிருப்பாள். இது வாஸ்தவம். ஆனதுபற்றியே இவை எவ்வளவும் நசுங்காமல் முன்பிருந்தாற் போலவே இப்பொழுதும் புலப்படுகின்றன’ என்றனன். ராமன் இங்ஙனம் சொல்லுகையில் லக்ஷ்மணன் அவனைப் பார்த்து ‘நான், அவளது தோள்வளைகளை அறியேன்; குண்டலங்களையும் அறியேன். நித்யமும் பாதங்களில் வந்தனஞ் செய்துகொண்டிருப்பேனாகையால் அவளது சிலம்பு தண்டைகளை மாத்ரமே அறிவேன்’ என்றனன். அப்பால் ராமன் தைர்யமுற்று ஸுக்ரீவனைப் பார்த்து ‘ஸுக்ரீவனே! பயங்கரமான உருவமுடைய ராக்ஷஸன் என் ப்ராணனைக் காட்டிலும் ப்ரியையாகிய என் காதலியை எவ்விடத்திற்குக் கொண்டுபோகையில் நீ கண்டனை? சொல்வாயாக. எனக்கு இப்படிப்பட்ட மஹாவ்யஸனத்தை விளைவித்த அந்த ராக்ஷஸன் எங்கே வஸிப்பானோ அதையாயினும் சொல்

வாயாக. அவன் நிமித்தமாக நான் ஸமஸ்த ராக்ஷஸர்களையும் நாசஞ்செய்கிறேன். அவன் ஸீதையை அபஹரித்து எனக்கு மிகவும் கோபத்தை உண்டாக்கினுகையால் தன் ப்ராணன் முடிகைக்குத் தானே தன் ம்ருத்யுவின் வாயைத் திறந்து விட்டனன். கபீந்த்ரனே! எனக்கு மிகவும் ப்ரீதிக்கிடமான பத்னியை அரண்யமத்யத்தினின்று பலாத்காரமாக எடுத்துக்கொண்டுபோன அந்த ராக்ஷஸன் என்பகைவன் எவனே எங்கே இருக்கின்றுனே அவற்றையெல்லாம் இப்பொழுதே எனக்குச் சொல்வர்யாக. அவனை இப்பொழுதே யமபுரத்திற்கு அனுப்புகிறேன்' என்றனன்.

ஆறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராம ஸுக்ரீவர்கள் ஒருவர்க்கொருவர் ப்ரதிஜ்ஞை செய்து கொள்ளுதல்.

ராமன் இங்ஙனம் வருந்திச்சொல்லுகையில், ஸுக்ரீவன் அவனது கண்ணீரைக் கண்டு தானும் கண்ணீர் உகுத்து அத்துயரம் குரலைத் தடுக்கையால் உரைகள் குழறக் கைகளைக் குவித்துக்கொண்டு ராமனைப் பார்த்து [1]' துஷ்டவம்சத்தில் பிறந்தவனும் ஸீதையை அப

1 இங்கு ஸுக்ரீவன் தனக்கு ராவணவ்ருத்தாந்தம் ஒன்றுமே தெரியாதென்றனன். ஆனல் அவன் வீதையைத் தேட வானரர்களை யனுப்பும்பொழுது 'த்வீபஸ்தஸ்யாபரேபாரே ஶதயோஜநமாயத: | அகம்யோ மானுஷைர் தேவைஸ் தம் மார்கயிவம் ஸமந்தத: | ஸஹி தேஶஸ்து வத்யஸ்ய ராவணஸ்ய துராத்மந: | ராக்ஷஸாதிபதேர் வாஸஸ்ஸஹஸ்ராக்ஷஸமத்யுதே:' (அந்த ஸமுத்ரத்தினுடைய அக்கரையில் நூறு யோஜனைதூரம் விஸ்தாரமுடையதும் மனிதர்களுக்கும் தேவதைகளுக்கும் புகக்கூடாததுமாகிய ஒர்த்வீபம் இருக்கின்றது. அங்கு முழுவதும் தேடிப்பாருங்கள். அந்தத் தேசம் துஷ்டஸ்வபாவனும் தேவேந்த்ரனை நிகர்த்த தேஜஸ்ஸுடையவனும் ராக்ஷஸாதிபதியுமாகிய ராவணனுடையது) என்று அங்கு ஸுக்ரீவனுக்கு ராவணனுடைய இருப்பிடமும் ஸாமர்த்யமும் பராக்ரமமும் நன்கு தெரியுமென்று வெளியாகின்றது. இப்படியிருக்க அவன் ராமனைப் பார்த்து

ஹரித்த பாபிஷ்டனுமாகிய அவனது ஸாமர்த்யமாவது

அவையொன்றும் தனக்குத் தெரியாதென்பது எப்படி யென்றால்— இது தவறே ஆயினும் ஸுக்ரீவன் தன் கார்யத்தை முதலில் நடத்திக் கொள்ளும்பொருட்டு இங்ஙனம் கூறினன். ஆனதுபற்றியே ராமன் பின்பு 'ஸுக்ரீவா! எவ்விடத்திற்கு ஸீதையை எடுத்துக்கொண்டு போகக் கண்டனை ?' என்று வினவினதற்குங்கூட மறுமொழி கூறவில்லை; ஏனெனில்—'அவள் எடுபட்டுப் போகையில் கண்டேன்' என்று சொன்னால் தனக்கு அவள்போன இடங்கூட எப்படி தெரியாமற் போகும் ? இங்ஙனம் தெரிந்ததாக ஸூசனை செய்ததையுங்கூட மீளவும் வினவும்பொழுது சொன்னவனல்லன். இங்ஙனம் தெரிந்தும் சொல்லாதிருப்பின் ஆதியிலேயே மித்ரத்ரோஹஞ் செய்தவனென்று சொல்லலாகாது. ஸுக்ரீவன் தீர்க்க ஆலோசனையோடு தன் மனத்தில் 'நான் ராவணவ்ருத்தாந்தம் எனக்குத் தெரியுமென்று சொல்வேனாயின், அப்பொழுது ராமன் பெரும் வ்யஸனத்திலாழ்ந்திருக்கையால் முதலிலேயே ஸீதையைத் தேடவேண்டுமென்பான். அது யுக்தமன்று. வானரர்கள் வாலிக்கு அதீனராயிருக்கிறார்களேயன்றி எனக்கு வசப்பட்டவரல்லர். எப்படியாவது அவர்களில் சிலரை வசப்படுத்திக் கொண்டாலும் ராவணனுடன் ஸ்னேஹம் பண்ணிக்கொண்டிருக்கிற வாலி நாம் விரும்பினபடி நடத்த எப்படி பொறுத்திருப்பான். ஆகையால் இருவர்கார்யமும் பாழாய்விடும்' என்று ஆலோசித்து மிகுந்த மதியுடையோனாகையால் தெரியாது போல் நடனஞ் செய்தனன். இப்படியாயின் பிறகு வானரர்களை அனுப்பும்பொழுது ஸுக்ரீவன் ராவணனைக் குறித்துச் சொல்லும் வார்த்தைகளைப் பற்றி ராமனுக்குச் சங்கை உண்டாகாதிருக்குமா வென்றால்—தாரை லக்ஷ்மணனோடு சொன்ன வார்த்தைகளைக் கேட்டதனால் ராமனுக்கு அங்ஙனம் சங்கை உண்டாக அவகாசமில்லை. அதாவது 'ஸுக்ரீவன் பூர்வத்தில் ராவணனுடைய ஸங்கதியை அறியான். பிறகு தாரையின் வார்த்தைகளால் அறிந்தான்' என்று ராமனுக்கு மனத்தில் தோற்றமென்க. லக்ஷ்மணனைப் பார்த்துத் தாரை 'ஶதகோடிஸஹஸ்ராணி லங்காயாங்கில ராக்ஷஸா: । அயுதானிச ஷட்த்ரிம்ஶத் ஸஹஸ்ராணி ஶதானிச । அஹத்வா தாம்ஶ்ச துர்தர்ஷாந் ராக்ஷஸாந்காமரூபிண: । நஶக்யோ ராவணோ

பராக்ரமமாவது குலமாவது எனக்கு ஒன்றுமே தெரி

---

ஹந்தும யேந ஸா மைதிலீ ஹ்ருதா' (லங்கையில் நூறுயிரங்கோடி ராக்ஷஸர்கள் இருக்கின்றனர். அவர்களெல்லோரையும் கொல்லாமல் ஸீதையை யெடுத்துக் கொண்டுபோன ராவணனைக் கொல்ல ஸாத்ய மில்லை) என்றனள். மேலும் சக்ரவாளபர்வதம்வரையில் பூமிமுழு வதும் திரிந்த ஸுக்ரீவனுக்கு அதனுள்ளிருக்கும் ராவணனுடைய இருப்பிடம் முதலியவை எப்படி தெரியாதிருக்கும்? அங்ஙனம் தெரிந்திருப்பதுபற்றியே ராமனது பலத்தைப் பரீக்ஷிக்கும்பொழுது வாலி துந்துபி முதலானவர்களோடு எதிரிட்டதை ப்ரஸ்தாவிக்கும் ஸமயத்தில் வாலி ராவணன் ஜயித்த வ்ருத்தாந்தத்தைச் சொல்ல வில்லை. ஆனல், ஸுக்ரீவனுக்கு அப்பொழுது தெரியாது. தாரை சொன்னபிறகே தெரியுமென்னலாகாதோ வென்றால்—தாரையைப் பார்த்தது முதலாகக் காமவிகாரங்கொண்டு மெய்ம்மறந்திருக்கும் ஸுக் ரீவன் தாரையோடு ராமகார்யத்தைக் கலந்தாலோசிப்பதற்கு ப்ரஸக் தியே நேரிட்டிராது. ஸுக்ரீவன் ஸர்வப்ரகாரத்தாலும் ராவணன் ஸங்கதி அறியானுபின் அப்பொழுது ஸீதையின் கூக்குரல் முதலிய வற்றால் அவன் போனதிக்கையாயினும் நன்றாகத் தெரிந்தமட்டும் அவஸ்யம் சொல்லியிருப்பான். இங்ஙனம் தெரிந்ததையுங்கூடச் சொல்லாமையால் மற்றவையும் தெரிந்திருந்தும் வேண்டுமென் றே சொல்லாதிருந்தானென்று ஊஹித்துக்கொள்க. சிலர், 'ராவண னுடைய ஸ்தலத்தை அறியேன்' என்பதற்கு இப்பொழுது ராவண னிருக்குமிடம் தெரியாது என்று பொருள்கொள்ளவேண்டுமென்பர். ஆனல் அது ஸரியன்று. ராமன் ஸர்வப்ரகாரத்தாலும் ராவண வ்ருத் தாந்தம் தெரியாமல் அவன் ஸ்வரூபம் கொஞ்சமாயினும் தெரியட்டு மென்னு மெண்ணத்துடன் ஸுக்ரீவனைப் பார்த்து 'அந்த ராக்ஷஸன் எங்கே வாஸஞ்செய்வான்' என்று வினவினன். அதற்கு ஸுக்ரீவன் தனக்குத் தெரிந்த அளவும் சொல்லாமல் 'அவன் இப்பொழுதிருக்கு மிடம் எனக்குத் தெரியாது' என்று மறுமொழி யுரைப்பது கபடமா கும். அவன் எப்போதும் வஸித்திருக்குமிடத்தை ராமன் வினவினு னன்றி அப்பொழு திருக்குமிடத்தை வினவவில்லை. ராவணனுடைய இருப்பிடம் மாத்ரம் தெரியிலும் அதை நாசஞ் செய்கையில் அவன் தானேஇவ்விடம் வருவானென்றன்றோ ராமனுக்குக் கருத்து. மேலும்

யாது. சத்ருக்களையழிப்பவனே! நீ சோகத்தை விடு

ஸுக்ரீவனுக்கு அப்பொழுது ராவணனிருக்குமிடம் தெரியாமற் போயினும் தனக்குத் தெரிந்திருக்கிற அவனுடைய ஸாமர்த்யபராக்ர மங்களையாயினும் சொல்லவேண்டுமல்லவா? அவைகளையுங்கூடச் சொல்லவில்லை. 'ஸுக்ரீவனுக்கு ராவணனிருக்குமிடம் தெரிந்திருக் குமாயின் அந்தத் திசைக்குமாத்ரமே வானரர்களை அனுப்புவான ன்றி மற்றைத்திசைகளுக்குங்கூட அனுப்புவானோ' என்றால் அவன் அந்தவானரர்களைப் பார்த்து 'ராவணனையும் ஸீதையையும் இங்குமங் கும் தேடிப்பார்க்கவேண்டும்' என்றுரைப்பது 'ராவணன் ஸீதையைக் கொண்டுபோய் வெகுகாலமானபடியால் அவன் அந்த ஸீதையை எங் கேனும் மறைத்துவைத்திருப்பான்' என்னும் எண்ணத்துடன்சொன்ன தாகக் கொள்ளவேண்டு மாகையால் இதுவும் பொருந்துகின்றது. மற்றுஞ்சிலர் 'நஜாநே நிலயம் தஸ்ய ஸர்வதா பாபரக்ஷஸ:' என்று ஸர்வ விதத்திலும் அந்தப்பாபராக்ஷஸனிருக்குமிடம் தெரியாதென்கையால் அவனிருக்குமிடம் எல்லாவிதத்திலும் அடிமுதல் நுனிவரையில் தெரியாது. ஏதோ சிலவிதமாகக் கொஞ்சமே தெரியுமென்றும், இங்ங னங்கொள்கையால் மேல் ஸுக்ரீவன் கொஞ்சம் ராவணனுடைய ஸங்கதியைத் தெரிந்துகொண்டு சொல்லுவதோடு விரோதம் வாரா தென்றும் சொல்லுகின்றனர். இப்படியாயின் ஸுக்ரீவன் பின்பு வா னரர்களோடு ராவணனைக்குறித்து எவ்வளவுசொன்னானோ அவ்வளவு முதலிலுங்கூட ராமனோடு சொல்லியிருக்கவேண்டுமல்லவா? அங்ங னஞ் சொல்லாமையால் இப்படியுங் கூறலாகாது. மற்றுஞ்சிலர் 'ஒரு ஸம்வத்ஸரம் வரையில் ராவணன் ஸீதைக்குத் துயரம் விளைக்காதிருந் ததுபற்றி அவனுக்கு அவளைக் கொண்டுவந்ததனால் பயன் இல்லாமற் போயிற்று. ராவணன் தினந்தோறும் சிவபூஜை செய்வது தான் விரும் பினதெல்லாம் கைகூடும்பொருட்டே; அவன் ஸீதையைக்கைப் பற்ற விரும்பி அவனுக்கு அது கைகூடாதாயின் அவன் செய்த சிவபூஜை வீணுமென்று நினைத்து அந்தப் பூஜைக்கு வேறொரு பலனையாயினும் கொடுப்பதற்காகத் தெய்வமே நின்று தடைசெய்கையில் ஸுக்ரீவனு க்கு ராவணனைப்பற்றித் தெரிந்தும் தெரியாதுபோலவே யாயிற்று' என்பார்கள். நேரான காரணம் இருக்கையில் அத்ருஷ்டத்தைக் காரணமாகக் கற்பித்துச் சொல்வது யுக்தமன்று. பரதாரங்களைப் புண ருவது சிவபூஜாபலமென்பது நிரம்பவும் அழகாயிருக்கின்றனது; ஆகையால் ஸுக்ரீவன் ராவணவ்ருத்தாந்தம் தெரிந்தும் வேண்டு மென்று மறைத்தானென்பதே பொருந்துகின்றது.

வாயாக. இது ஸத்யம். ப்ரதிஜ்ஞை செய்கின்றேன். நீ ஸீதையைப் பெறும்படி தகுந்த ப்ரயத்னங்கள் செய்கின்றேன். நான் என்பௌருஷத்தினால் ராவணனைப் பரிவாரங்களோடு கூடக் கொன்று உன்னை ஸந்தோஷப்படுத்தி உனக்கு ப்ரீதி உண்டாகும்படி சீக்ரத்தில் நடத்துகின்றேன். மனக்களிப்பற்றிருந்தது போதும். உனக்கு ஸஹஜமாக உள்ளேயிருக்குந் தைர்யத்தை நினைத்து அதைக் கைபற்றுவாயாக. உன்னைப்போன்றவர்க்கு இப்படிப்பட்ட [1] லாகவம் யுக்தமன்று. நான் உன்னைப் போலவே பார்யாவியோகம் அடைந்து மஹாவ்யஸனத்தில் ஆழ்ந்திருக்கின்றனன். ஆனால் உன்னைப்போல் இப்படி துக்கிக்கவில்லை; தைர்யத்தையும் கைவிடவில்லை. நான் கேவலமான ஓர் வானரனேயாயினும் என் காதலியைக் குறித்து வருந்தாதிருக்கின்றேனே. இனி, மஹானுபாவன், பெரியோர்களிடம் சிக்ஷைபெற்றுத் தீர்ந்திருப்பவன், தீரன்; இப்படிபட்ட நீ வருந்தலாகாதென்று சொல்லவேண்டுமோ? கண்களினின்று பெருகி வருகின்ற நீரைத் தைர்யங்கொண்டு நிறுத்துவாயாக. வ்யவஸாயமுடையவர்க்கு என்றும் மாறாதிருக்கும் மர்யாதையாகிய தைர்யத்தை நீ எள்ளளவும் துறக்கலாகாது. தைர்யமுடையவன், துக்கமாயினும் தனநாசமாயினும் ப்ராணாந்தகரமான பயமாயினும் நேரிடினும் மனவருத்தமுறான். எவன் தெளிவில்லாதவனாகி எப்பொழுதும் அதைர்யத்தைத் தொடர்ந்திருப்பானோ, அவன், பாரம் மிகுந்த ஓடம் ஜலத்தில் மூழ்குவது போல், ஸ்வாதீனந் தப்பிச் சோகத்தில் மூழ்குவான். இதோ நான் உனக்குக் கைகளைக் குவித்தனன். வேண்

1. அற்பத்தனம்.

டுகின்றனன். ஸ்னேஹத்தினுல் உன்னைத் தேற்றுகின்றே னன்றி வேறில்லை. பௌருஷத்தைக் கைப்பற்றுவாயாக. சோகத்திற்கு இடங்கொடுக்கலாகாது. எவர் எப்பொழுதும் சோகத்தைக் கைப்பற்றியிருப்பார்களோ, அவர்களுக்கு ஸுகமே உண்டாகாது. மேலும், அவரது தேஜஸ்ஸும் க்ஷீணித்துப் போமாகையால் நீ சோகிப்பது யுக்தமன்று. ராஜேந்த்ரனே! எப்பொழுதும் சோகம் மேலெழப்பெற்றிருப்பவனுக்கு ப்ராணஸம்சயங் கூட நேரிடும். ஆகையால் நீ சோகத்தை விடுவாயாக. தைர்யத்தையே கைப்பற்றுவாயாக. நான் ஸ்னேஹிதனுகி உனக்கு ஹிதஞ் சொல்லுகிறேனன்றிக் குருவைப் போல் உனக்கு உபதேசஞ் செய்யவில்லை. என் ஸ்னேஹத்தைக் கௌரவித்துக்கொண்டிருப்பது பற்றியாயினும் நீ என்வார்த்தையைக் கேட்டுச் சோகியாதிருக்கவேண்டும்' என்றனன். ஸுக்ரீவன் இங்ஙனம் இனிய உரைகளால் ஸமாதானப் படுத்துகையில் ராமன் கண்ணீர் தோய்ந்திருக்கும் முகத்தை வஸ்த்ரத்தின் நுனியால் துடைத்துக்கொண்டனன். ப்ரபுவாகிய ராமன் ஸுக்ரீவனது வார்த்தைகளால் தனக்கு எப்பொழுதுமுள்ள ஸ்வபாவத்தை ஏற்றுக்கொண்டு அவனைக் கட்டியணைத்த 'ஸுக்ரீவா! மித்ரனும் ஸ்னேஹிதனும் மேன்மையை விரும்புமவனுமாகிய ஒருவன் என்ன செய்யவேண்டுமோ அந்த நல்வார்த்தை சொல்லுங் கார்யத்தை, நீ, உன்ஸ்னேஹத்திற்குத் தகுந்தபடியும் என் வருத்தத்தைப் போக்கும்படியும் செய்தனை. நண்பனே! நீ என்னை ஸமாதானப்படுத்தினதால் இதோ நான் எனக்கு எப்பொழுதுமுள்ள தைர்யத்தைப் பெற்றனன். இப்படிப்பட்ட பந்து, விசேஷித்து இப்படிப்பட்ட ஆபத்காலத்தில் அகப்படுவது நிரம்பவும்

அரிது. ஆனால் என்னவெனில்—நீ, ஸீதை எங்கேயிருக்கிறாளென்பதையும், பயங்கரனும் துராத்மாவுமாகிய ராக்ஷஸன் ராவணன் எங்கே இருக்கிறானென்பதையும் தெரியத் தேடும்பொருட்டு ப்ரயத்னஞ் செய்யவேண்டும். இனி நான் என்னசெய்யவேண்டுமோ அதை, என்னிடம் நம்பிக்கைவைத்துச் சொல்வாயாக. வர்ஷாகாலத்தில் நல்ல நிலத்தில் எல்லாம் பலிப்பதுபோல், நீ விரும்பும் ஸமஸ்தகார்யமும் என்னிடத்தில் நன்றாக ஸித்திக்கும். வானரஸ்ரேஷ்டனே! நானும் இப்பொழுது அபிமானத்தினால் இந்த வார்த்தையை மொழிந்தேனல்லவா? இது யதார்த்தமேயென்று கெட்டியாக நினைத்துக் கொள்வாயாக. நான் இதுவரையில் அபத்தஞ் சொன்னதும் இல்லை. இனி ஒருகாலும் சொல்வதும் இல்லை. நான் வாலியைக் கொல்லுகிறேனென்று இதோ ப்ரதிஜ்ஞை செய்கின்றனன். உனக்காக இதோ ஸத்யத்தின்மேல் ஆணையிடுகின்றேன்' என்றனன். பின்பு ஸுக்ரீவனும் அவனது மந்த்ரிகளாகிய மற்றவர்களும், ராமன் சொன்னவார்த்தைகளையும் விசேஷித்து அவன்செய்த ப்ரதிஜ்ஞையையும் கேட்டு மிகவும் ஸந்தோஷமுற்றனர். இங்ஙனம் அந்த ராமனும் ஸுக்ரீவனும் ஏகாந்தத்தில் ஸ்னேஹஞ் செய்துகொண்டு பிறகு ஒருவர்க்கொருவர் ஸமமான தத்தமது துக்கங்களைச் சொல்லிக்கொண்டனர். வானரஸ்ரேஷ்டனாகிய அந்த ஸுக்ரீவன் நல்ல அறிவுடையவனாகையால் மஹானுபாவனாகிய புருஷஸ்ரேஷ்டன் ராமன் சொன்ன வார்த்தையைக் கேட்டு அப்பொழுது தன் கார்யம் நிறைவேறினாற்போலவே மனத்தில் நினைத்துக்கொண்டனன். ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுக்ரீவன் தன் சோகத்தின் காரணத்தை ராமனுக்குத் தெரிவித்தல்.

ஸுக்ரீவன், ராமன் சொன்ன அந்த வார்த்தையைக் கேட்டு மிகவும் ஸந்தோஷப்பட்டு லக்ஷ்மணனுக்கு முன்னிலையில் ராமனைப் பார்த்து, ராஜயோக்யங்களான ஐச்வர்யம் தைர்யம் முதலிய ஸமஸ்தகுணங்களும் அமைந்திருக்கிற நீ எனக்கு ஸகாவாக நேரிட்டனையாகையால் நான் எல்லாவிதத்திலும் தேவதைகளுடைய தயைக்குப் பாத்ரமாயினன். இதற்கு ஸந்தேஹம் இல்லை. ராமா! நிர்த்தோஷ ஸ்வபாவனே! உன்னைப் போன்றவன் ஸஹாயமாயிருக்கையில், தேவராஜ்யமேயாயினும் பெற ஸாத்யமே யல்லவா? ப்ரபூ! இனி என் கபிராஜ்யத்தைப் பெறுவதுபற்றிச் சொல்லவேண்டுமோ? எனக்கு ரகுவம்சத்தில் பிறந்தாரொருவர் அக்னிஸாக்ஷிகமாக மித்ரமாக நேரிட்டிருக்கிறாராகையால், நான் பந்துக்களுக்கும் ஸ்னேஹிதர்களுக்கும் பூஜிக்கத் தகுந்தவனாயினன். நானும், உனக்குத் தகுந்த மித்ரனாயினேனென்று நீ க்ரமக்ரமமாகத் தெரிந்துகொள்வாய். என்னிடமுள்ள குணங்களை நானே சொல்லிக்கொள்வதற்குமாத்ரம் நான் ஸமர்த்தனல்லேன். மஹானுபாவர்களும் தீர்ந்த மதியுடையவர்களுமான உன்னைப் போன்றவர்களுக்கு உண்டாகும் ப்ரீதி, ஆத்மஜ்ஞானிக்கு உண்டாகும் தைர்யம்போல் அதிசயித்து நிச்சலமாயிருக்கும். நட்புடையவர்கள், ஒருவர்க்கொருவருடைய வெள்ளி பொன் ஆடை ஆபரணம் முதலியவற்றைத் தமக்கு எல்லாம் ஒன்றென்றே நினைப்பார்களன்றி எவன்ஸொத்து யாருடையதென்று பேதம் பாராட்டமாட்டார்கள். தனமுடையோனாயினும் தரித்ரனாயினும் துயரமுற்றவனாயினும் ஸுகித்திருப்பவனாயினும் தோஷமுடையவனாயினும் நிர்த்தோஷனாயினும் மித்ர

னே பரமகதி. ஸ்னேஹிதர்கள் தமக்குத் தகுந்த உத்தமமான ஸ்னேஹத்தைக் காண்பார்களாயின், அப்படிப்பட்ட ஸ்னேஹ முடையவன் நிமித்தமாகத் தனத்தையாயினும் ஸுகத்தையாயினும் தேஹத்தையாயினும் விடுவார்கள்' என்றனன். ராமன், புத்தியுடையவனும் காந்தியால் இந்த்ரன்போன்றவனுமாகிய லக்ஷ்மணனுக்கு எதிரில் ப்ரியமுரைப்பவனுகிய ஸுக்ரீவனைப் பார்த்து 'நீ சொன்னது சரி' என்றனன். பிறகு ஸுக்ரீவன், ராமனும் லக்ஷ்மணனும் நின்றுகொண்டிருப்பது கண்டு நல்ல கிளை யொன்றுக்காக அடவியில் நாற்புறமும் தன் கண்களைச் செலுத்தி உற்றுப்பார்த்தனன். பிறகு அந்தக் கபிராஜன் அருகில் நன்கு புஷ்பித்துத் தளிர் அதிகமாகவும் இலைகள் கொஞ்சமாகவும் உடையதாகி வண்டுகளால் அலங்கரிக்கப் பட்ட ஓர் வ்ருக்ஷத்தைக் கண்டனன். ஸுக்ரீவன் அந்த வ்ருக்ஷத்தில் தளிர் மிகுந்திருப்பதும் நன்கு புஷ்பித்திருப்பதுமாகிய ஓர் கிளையை முறித்து அதைப் பரப்பி ராமனும் தானுமாக அதில் உட்கார்ந்தனன். அனந்தரம் அவ்விருவரும் உட்கார்ந்திருப்பது கண்டு ஹனுமான், லக்ஷ்மணன் விநயத்தால் அந்தக் கிளையின்மேல் உட்காராமையால் தான் மற்றொரு மரத்தின் கிளையை முறித்து அவனை உட்காரவைத்தனன். பிறகு பழங்களும் புஷ்பங்களும் நிறைந்திருக்கிற அந்தச் சிறந்த பர்வதத்தின் மேல் ஸுகமாயுட்கார்ந்து ஸமுத்ரம்போல் கம்பீரமாகவும் அழகாகவும் விளங்குகின்ற ராமனைப் பார்த்து மெதுவும் இனியதுமாகிய வாக்யத்துடன் ஸந்தோஷத்தினுல் வார்த்தைகள் தழதழக்கப்பெற்று 'என் தமையன் என்னை வஞ்சித்து என் பார்யையை அபஹரித்துக் கொள்கையில் மிகவும் வருந்திப் பயத்தினுல பீடிக்கப் பட்டவனுகி, இந்த ருஶ்யமூகபர்வதத்தில் திரிகின்ற

னன். ராமா! என் தமையன் வாலி என்னை வஞ்சித்து என்னோடு வைரங்கொண்டிருப்பது பற்றிப் பயமுற்று மனத்தில் திக்ப்ரமங் கொண்டு ஒன்றும் தோன்றாமல் இங்கு வாஸஞ்செய்கின்றனன். ராமா! நீ ஸர்வலோகங்களுக்கும் அபயங் கொடுப்பவன், ஆகையால் எனக்கும் அபயங் கொடுக்க வேண்டியவனே. வாலிபயத்தினால் பிடிக்கப்பட்டு அநாதனாயிருக்கின்ற என்னிடத்திலும் விசேஷித்து ஸ்னேஹமுடையவனாகையால் அனுக்ரஹஞ் செய்யவேண்டும்' என்றனன். மஹாதேஜஸ்ஸுடன் ப்ரகாசிக்கின்றவனும் தர்மஜ்ஞனும் தர்மவத்ஸலனுமாகிய ராமன், ஸுக்ரீவன் அங்ஙனஞ் சொல்லக் கேட்டு நான் ப்ரதிஜ்ஞை செய்திருக்கையில் மீளவும் வேண்டுகின்றனே' என்று புன்னகை செய்துகொண்டு அவனைப்பார்த்து 'உபகாரஞ்செய்தலே மித்ரனாயிருத்தலுக்குப் பலன். அபகாரஞ்செய்தல் சத்ருவுக்கு லக்ஷணம். ஆகையால் உன்பார்யை அபஹரித்த அந்த வாலியை இப்பொழுதே வதித்து விடுகிறேன். இதோ என் பாணங்களைக் காண்பாயாக. மிகுந்த வேகமுடையவைகளும் இறகுகளோடுகூடி மிகவும் தீக்ஷணமாக ப்ரகாசிப்பவைகளுமாகிய இந்தப் பாணங்கள் சரவணத்தில் பிறந்தன. ஸ்வர்ணத்தினால் அலங்காரஞ் செய்யப்பட்டுக் கழுகின் இறகுகளால் மறைக்கப் பட்டவைகளும் மஹேந்த்ரனது வஜ்ராயுதத்தை நிகர்த்துச் சிறந்த கணுக்களும் அமைந்து கூரான நுனியுடன் கூடிச் சினந்த ஸர்ப்பங்கள் போல் ப்ரகாசிக்கின்றனவே. அண்ணனென்னும் பேரோடுகூடிப் பகைவனாகி உனக்கு இவ்வளவு பாபகார்யத்தைச் செய்த வாலி இனி என்கூரான பாணங்களால் அடிக்கப்பட்டவனாகிப் பிளக்கப்பட்ட பர்வதம்போல் கீழே விழப்போகின்றான்' என்றனன். வானரஸேனாதிபதியாகிய ஸுக்

ரீவன், ராமன் சொன்னதுகேட்டு நிகரில்லாத ஸந்தோஷம் அடைந்து 'நல்லது நல்லது' என்று கொண்டாடி, 'ராமா! நான் சோகத்தினால் மிகவும் பீடிக்கப்பட்டிருக்கின்றனன். நீயோ, சோகத்தினால் பீடிக்கப்பட்டவர்களுக்குக் கதியாயிருக்கின்றனை. நீ என்னைப் போன்றவனுக்குத் திக்காயிருப்பதுபற்றியே யன்றி நான் உனக்கு நண்பனாயிருப்பது ப்ற்றியும் உன்னிடம் என் துக்கங்களை முறையிடுகின்றேன். நீ கைகொடுத்து அக்னிஸாக்ஷிகமாக எனக்கு ஸ்னேஹிதனானா யல்லவா? ஆகையால் நீ எனக்கு ப்ராணனைக்காட்டிலும் மேலாயினை. இதற்கு வேண்டுமானால் ஸத்யத்தின்மேலுங்கூட ஆணையிடுகின்றனன். மேலும், நீ எனக்கு ஸ்னேஹிதனா யிருப்பதுபற்றி, உள்ளே யிருந்துகொண்டு என்றும் என் மனத்தை உருக்கி உண்கின்ற துக்கத்தை உன்னுடன் நம்பிக்கையோடு புலம்புகின்றேன்' என்றனன். அந்த ஸுக்ரீவன் இவ்வளவுமாத்ரம் சொல்லிக் கண்களில் நீரைப் பெருக்கி அதன்வேகத்தினால் வார்த்தைகள் தழதழக்கப்பெற்று உரக்கச் சொல்லமுடியாதிருந்தனன். ஸுக்ரீவன் நதீப்ரவாஹம்போல் பெருகி வருகின்ற கண்ணீர்ப் பெருக்கை, ராமனது முன்னிலையில் தைர்யத்தை அடைந்து உடனே அடக்கிக்கொண்டனன். மிகவும் தேஜஸ்வியாகிய ஸுக்ரீவன், அங்ஙனம் வந்த கண்ணீரை அடக்கி அழகிய கண்களைத் துடைத்துப் பெருமூச்செறிந்துகொண்டு ராமனைப்பார்த்து 'ராமா! முன்பு பலிஷ்டனாகிய வாலி என்னை யௌவராஜ்யத்தினின்று தொலைத்து க்ரூரவாக்யங்களைச் சொல்லி ராஜ்யத்தினின்று துரத்திவிட்டனன். மேலும் அவன், என் ப்ராணன்களைக் காட்டிலும் மேலான என் ப்ராண நாயகியையும் அபஹரித்தனன்; என் ஸ்னேஹிதர்களையுங்கூடச் சிறையில் அடைத்துவிட்டனன். ராமா! அவன் மிகவும் கொடியமனத்துடன் என்னைக்

கொல்வதற்காக பரயத்னங்கள் செய்துகொண்டிருக்கின்றனன். அவன் அனுப்பின வானரர்கள் பலரையும் நான் அடித்திருக்கின்றேன். ராமா! நான் வாலியனுப்பினுனென்னும் சங்கையால் பரமகாருணிகனுன உன்னைப் பார்த்தபொழுதும் பயப்பட்டு உன்னிடம் வரவில்லை. பயத்திற்குக் காரணம் உள்ளபொழுது எல்லோரும் பயப்படுவார்களல்லவோ? எனக்கு இந்த ஹனுமான் முதலானவர்கள்மாத்ரமே ஸஹாயமன்றி மற்றெவரும் இல்லை. இவரது ஸஹாயத்தைப் பற்றியே நான் இவ்வளவு கஷ்டத்தை அடைந்தும் சரீரத்தில் ப்ராணனை வைத்துக்கொண்டிருக்கின்றேன். இந்த வானரர்கள் என்மேல் மிகுந்த ஸ்னேஹமுடையவராகி என்னை எல்லாவற்றினின்றும் காப்பாற்றிக்கொண்டிருக்கின்றனர். நான் எவ்விடம் போகவேண்டியிருப்பினும் கூடவே வருவார்கள். நான் எவ்விடத்திலிருப்பினும் தாமும் அவ்விடத்திலேயே இருப்பார்கள். ராமா! உன்னேடு ஆயிரம் படச் சொல்லியென்? சுருக்கமாகச் சொல்லுகிறேன்; கேள். பராக்ரமத்தில் புகழ்பெற்ற என்தமையன் எனக்குப் பகைவன். அவன் முடிந்த அனந்தரமே என் துக்கம் தீரும். என் ஸுகமும் ஜீவிதமும் கூட அவன் முடிந்த பின்பே உண்டாக வேண்டியவைகளே யன்றி வேறொன்றில்லை. இதுவே என் துக்கத்திற்கு மூலம். துக்கத்தைப் பொறுக்க முடியாமல் உனக்குச் சொல்லிக் கொண்டேன். ஏனென்றால் துக்கித்திருப்பினும் ஸுகித்திருப்பினும் மித்ரனுக்கு மித்ரனே எப்பொழுதும் கதி' என்றனன். ராமன், ஸுக்ரீவன் சொன்னதைக் கேட்டு அவனேடு 'உனக்கும் வாலிக்கும் எந்தக் காரணத்தினுல் வைரம் உண்டாயிற்று? உள்ளதை உள்ளபடியே கேட்க விரும்

புகின்றனன். ஸுக்ரீவா! வைரத்திற்குக் காரணத் தைக் கேட்டுப் பிறகு வைரம் பலீயஸ்ஸா? அதன்கார ணம் பலீயஸ்ஸா? என்று அவ்விரண்டின் பலாபலத்தை விசாரித்துப் பின்பு உனக்கு ஸுகம் விளையுமாறு நடத் துகின்றேன். வாலி உன்னை அவமானித்தது கேட்ட வுடனே, வர்ஷாகாலத்து ஜலப்ரவாஹம்போல் மிகவும் பலீயஸ்ஸான கோபம் உண்டாகி என் ஹ்ருதயத்தைத் தடுமாற்றமுறச் செய்துகொண்டிருக்கின்றது. நீ ஸந் தோஷமுற்று நம்பிக்கையுடன் சொல்லுவாயாக. வாலி ஒழிந்தபின்பும் உனக்கு ஏன் மனவருத்தம்? 'வாலி இன்னும் ஒழியவில்லையே' என்கிறாயோ? நான் என் தனுஸ்ஸில் நாணேற்றிப் பாணத்தை ப்ரயோகித் ததும் உன்சத்ருவாகிய வாலி ஒழிந்தாற்போலவேதான். ஆகையால் நீ ஸந்தேஹப்படாமல் நம்பிக்கையுடன் என க்குச் சொல்லுவாயாக. 'க்ரமத்தில் சொல்லுகிறே னென்கிறாயோ? நான் பாணம் விடவேண்டியதே தடை. விட்டவுடனே உன்பகைவன் முடிந்தா னென்று நினைத்துக்கொள்வாயாக' என்றனன். மஹா னுபாவனாகிய ராமன் இங்ஙனம் சொல்லுகையில், ஸுக் ரீவன் அவன் மந்த்ரிகள் நான்கு வானரர்களும் தானு மாகப் பரமஸந்தோஷம் அடைந்தனன். அனந்தரம் ஸுக்ரீவன் பரமஸந்தோஷமுற்று லக்ஷ்மணனுக்குத் தமையனாகிய ராமனுக்கு வைரகாரணத்தை யெல் லாம் உள்ளபடி சொல்லத்தொடங்கினன். எட்டா வது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ வாலி தனக்குச் செய்த அபராதங்களை ஸு க்ரீவன், ராமனுக்குச் சொல்லுதல். }

முன்பு சத்ருக்களை உருமாய்க்கவல்ல என் தமைய னாகிய வாலியை, என் தந்தை மிகவும் கௌரவித்துக் கொண்டிருந்தனர்; நானும் அப்படியே கௌரவித்துக்

கொண்டிருந்தனன். என் தந்தை மரணம் அடைந்த பின்பு மந்த்ரிகள் மூத்த குமாரனென்று வாலியை, வானரராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ் செய்தனர். அந்த வாலி, தந்தை பாட்டன் காலத்தினின்றுவந்த பெரிய வானரராஜ்யத்தைப் பரிபாலித்துக்கொண்டு வருகையில், நான் அவனுக்கு ஸமஸ்த காலங்களிலும் ஸேவகன்போல் வணக்கமுற்றிருந்தனன். துந்துபியின் ஜ்யேஷ்ட குமாரன் மாயாவியென்னும் மஹாபராக்ரமசாலியாகிய ராக்ஷஸனொருவன் இருந்தனன். அவனுக்கும் வாலிக்கும் ஸ்த்ரீநிமித்தமாகப் பெரும் வைரம் உண்டாயிற்று. இது உலகமெங்கும் ப்ரஸித்தமான வ்ருத்தாந்தம். அந்த மாயாவி, ஒருநாள் எல்லோரும் தூங்கிக்கொண்டிருக்கும் பொழுது அர்த்தராத்ரியில் கிஷ்கிந்தாத்வாரத்திற்கு வந்து மிகவும் விஜ்ரும்பணஞ்செய்து கர்ஜ்ஜித்துக்கொண்டு வாலியை யுத்தத்திற்கு அழைத்தனன். அப்பொழுது நித்ரைசெய்கின்ற என தண்ணன் பயங்கரமான அவனது கர்ஜன த்வனியைக் கேட்டு அதைப் பொறுக்கமுடியாமல் அப்பொழுது வேகமாக வெளிப்புறப்பட்டனன். பிறகு ஸ்த்ரீகளும் நானும் வணக்கத்துடன் எவ்வளவு தடுத்தபோதிலும் நிற்காமல் வாலி கோபத்தினால் அஸுரஸ்ரேஷ்டனாகிய அந்த மாயாவியை வதிக்கும் பொருட்டுப் புறப்பட்டனன். மஹாபலசாலியாகிய அவ்வாலி எங்களெல்லோரையும் உதறிக்கொண்டு யுத்தத்திற்குப் போயினன். பிறகு நானும் ஸ்னேஹத்தினால் அவன் ஒன்றியாகப் போவதைப் பொறுக்கமாட்டாமல் அவனைப் பின்றொடர்ந்து போயினன். பிறகு என தண்ணனும் தூரத்தில் நானும் வருவதை அவ்வஸுரன் கண்டு பயப்பட்டு அதிவேகத்துடன் அங்கிருந்து ஓடிப்போயினன். அவன் அஞ்சியோடுகையில், நாங்களும் அவனைக்காட்டிலும் வேகமாகப் பின்றொடர்ந்தோடினோம்.

அப்போழுது சந்த்ரன் உதயமாய்க் கொண்டிருந்தனன். அதனுல் மார்க்கமும் வெளிச்சமாயிருந்தது. அந்த ராக்ஷஸன் பூமியில் பற்களால் மூடப்பட்டுப் புகக் கூடாதிருக்கிற ஓர் மஹாபிலத்தில் வேகமாகப் போய்ப் புகுந்தனன். நாங்களிருவரும் அந்தப் பிலத்வாரத்தின் ஸமீபத்தில் சேர்ந்தனம். வாலி, பகைவன் அம்மஹா பிலத்தில் புகுவது கண்டு கோபத்திற்காளாகி இந்த்ரியங்களெல்லாங் கலங்கப்பெற்று அப்பொழுது என்னை 'ஸுக்ரீவா! நான் இந்தப் பிலத்திற்குள் புகுந்து சீக்ரத்தில் பகைவனைக் கொன்று வரும்வரையில் நீ மன ஊக்கத்துடன் இந்தப் பிலத்தின் வாயலிலேயே இருப்பாயாக' என்றனன். நான் இந்த வார்த்தையைக் கேட்டுப் பரந்தபனுகிய அவனை, நானும்கூட வரும்படி எவ்வளவு வேண்டிக்கொண்ட போதிலும் அவன் கேளாமல் என்னுல் தன் பாதங்களின்மேல் ஆணையிடுவித்துக் கொண்டு அம்மஹாபிலத்தில் ப்ரவேசித்தனன். அவன் அம்மஹாபிலத்தில் ப்ரவேசித்த பின்பு குறைவின்றி ஒரு ஸம்வத்ஸரம் ஆயிற்று. நான் பிலத்வாரத்தில் அந்த ஸம்வத்ஸரம் முழுவதும் காத்துக்கொண்டிருந்தனன். அவன் அந்த ஸம்வத்ஸரம் முழுமையும் எனக்குப் புலப்படாமையால் ஸ்னேஹத்தைப்பற்றி எனக்கு மிகவும் மனப்பரிவு உண்டாயிற்று. அண்ணனும் புலப்படவில்லை. ஆகையால் என் மனத்தில் மரணம் அடைந்தானே என்று ஸம்சயம் உண்டாயிற்று. அனந்தரம் நெடுநாள் சென்றபின்பு அந்தப் பிலத்தினின்று நுரையுடன்கூடிச் சிவந்த ரக்தம் வெளிப்பட்டது. நான் அதைக் கண்டு மிகவும் வருத்தமுற்றவனுயினன். அனந்தரம் அஸுரர்கள் கர்ஜிக்கும் த்வனியும் யுத்தத்தில் தோல்வி யடைந்து என் தமையன் முறையிடும் த்வனியும் எனக்குச் செவிப்பட்டன. நண்பனே! நான் இந்த மரண காலத்தின் சிஹ்னங்களால் என் தமையன்

வாலி அவர்களால் அடிபட்டு முடிந்தானென்று புத்தி யிற் கொண்டு மலைபோன்ற ஓர் பாறையால் அந்தப் பிலத்வாரத்தை மூடிவிட்டு வருத்தத்தினால் பரிதபித் துக்கொண்டு ஜலதர்ப்பணஞ் செய்து கிஷ்கிந்தைக்கு வந்தனன். நான் யதார்த்தத்தை மறைத்துக்கொண் டேயிருப்பினும், மந்த்ரிகள் பல ப்ரயத்னங்களால் என் னிடமிருந்து நிஜமாக வாலி மரணத்தைத் தெரிந்து கொண்டனர். அனந்தரம் மந்த்ரிகள் எல்லோரும் கூடி ஸம்மதியுடன் எனக்குப் பட்டாபிஷேகஞ் செய் வித்தனர். ராமா! நான் இங்ஙனம் ந்யாயத்தின் படி ராஜ்யத்தைப் பரிபாலித்துக் கொண்டிருக்கையில், வாலியும் தன் சத்ருவாகிய அந்த அஸுரஸ்ரேஷ்ட னை மாயாவியைக் கொன்று வெளி வந்தனன். வாலி, பட்டாபிஷேகம் பெற்று ராஜ்யபரிபாலனஞ் செய்து கொண்டிருக்கிற என்னைப் பார்த்தவுடனே கோபித் துக் கண்கள் சிவக்கப்பெற்று என் மந்த்ரிகளைப் பந்த னஞ் செய்து என்னைப் பார்த்துப் பருஷ வசனங்களைச் சொல்லினன். ராமா! அப்பொழுது நான் மந்த்ரி முத லியவர்களோடும் ஸைன்யங்களோடுங் கூடியிருப்பத னால் பாபிஷ்டனாகிய வாலியை நிக்ரஹஞ் செய்ய வல்ல வனாயிருந்தும் அண்ணனென்னும் கௌரவத்திற்கு உட் பட்டு என் புத்தி நிக்ரஹஞ் செய்யப் பொறுக்கவில்லை. அப்பொழுது மஹாத்மாவாகிய எனதண்ணன் பகை வனைக் கொன்று பட்டணத்தில் புகுந்தவுடனே நான் ந்யாயத்தின்படி அவனைக் கௌரவித்து நமஸ்காரஞ் செய்தனன்; அந்த வாலி அதற்கு மனத்தில் ஸந்தோஷ முற்று எனக்கு ஆசீர்வாதமுங் கூடச் செய்யவில்லை. ப்ரபூ! பிறகு நான் மீளவும் என் கிரீடம் அவனது அடி களில் பட ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்தனன். அப்பொழுதும் வாலிக்கு என்மேல் கோபத்தினால் அனுக்ரஹம் உண்டாகவில்லை. ஒன்பதாவது ஸர்க் கம் முற்றிற்று.

{ஸுக்ரீவன் வாலியை வேண்டிக்கொள்ளலும், வாலி தயை பாராமல் ஸுக்ரீவனை நிக்ரஹஞ் செய்தலும்.}

'அனந்தரம் வாலி மிகவும் கோபம் மேலெழப் பெற்றுப் பரபரப்புடன் வருவது கண்டு, நான் அவனை ஸந்தோஷப்படுத்தவேண்டுமென்னும் எண்ணத்தினல் அவனைத் தெளிவுறச் செய்யும்பொருட்டு 'அத்ருஷ்டத்தினல் நீ க்ஷேமமாக வந்தனை. சத்ருவையுங் கூட வதித்தனை. நீ அநாதர்கள் அனைவரையும் ஸந்தோஷப் படுத்துந் தன்மையன். அநாதவனுகிய எனக்கும் நீ யொருவனே யன்ருே நாதன். பல கம்பிகளிடப்பெற்று உதயமான பூர்ணசந்த்ரன் போல் விளங்குகின்ற இந்த வெண்கொற்றக்குடையை எடுத்து உனக்குப் பிடிக்கின்றனன். இந்தச் சாமரங்களையும் வீசுகின்றனன். அங்கீகரிப்பாயாக. ராஜனே! நான் பிலத்வாரத்தில் ஒரு ஸம்வத்ஸரம் காத்திருந்தனன். இவ்வளவேயன்றி நீ வராமற்போனதுடன் அந்தப் பிலத்வாரத்தினின்று ரக்தமும் வெளிப்படுவது கண்டு வருத்தமுற்றவனுயினன். அனந்தரம் நான் துக்கத்தினல் மனம் நடுங்கவும் இந்த்ரியங்கள் மிகவும் கலங்கவும் பெற்று நீ பார்த்தபடியே பிலத்வாரத்தை ஓர் பர்வத சிகரத்தால் மூடி, அங்கிருந்து புறப்பட்டு வந்து கிஷ்கிந்தாபுரஞ் சேர்ந்தனன். பட்டணத்து ஜனங்களும் மந்த்ரிகளும், வந்த என்னைப் பார்த்து ராஜ்யம் கெட்டுப் போமென்னும் வருத்தத்தினல் எனக்குப் பட்டாபிஷேகஞ் செய்தார்களேயன்றி நான் வேண்டவில்லை. ஒருக்கால் என்மேல் தப்பிருப்பினும் நீ பொறுக்க வேண்டும். நீயே ராஜன்; பூஜிக்கத்தகுந்தவன். நான் முன் போலவே இளவரசனுயிருந்து உன்னைப் பணிந்து வருகின்றனன். ஆனல் இதுவரையில் நீ இல்லாமையால் நான் ராஜாவாயிருந்து ராஜ்யத்தைப் பாதுகாத்து வந்தேனன்றி வேறில்லை. இந்த ராஜ்யம் என்

னிடம் காப்பாற்றும்படி வைக்கப்பட்டிருந்ததாகவே எண்ணி நான் மந்த்ரிகளோடும் பட்டணத்து ஜனங்களோடும் பட்டணத்தோடுங்கூட இந்த ராஜ்யத்தை இதுவரையில் கண்டகமொன்று மில்லாதிருக்கும்படி காப்பாற்றி வந்தனன். மீளவும் உன் ஸொத்தை உனக்கே ஒப்புவிக்கின்றனன். சத்ருக்களை யடக்கும் வீரனுயிருக்கின்றனே; மேலும், நல்லியற்கை யுடையவன்; ராஜன்; என்மேல் கோபஞ் செய்யவேண்டாம். உன்னைத் தலைவணங்கி நமஸ்கரித்து வேண்டுகின்றனன். இதோ உனக்குக் கைகூப்பினன். மந்த்ரிகளும் பட்டணத்து ஜனங்களும் ஒன்றுகூடித் தேசம் ராஜனில்லாதிருப்பதைத் தொலைக்கவேண்டுமென்னும் விருப்பத்துடன் பலாத்காரமாக என்னை ராஜாவாகச் செய்தார்களேயன்றி நானுக விரும்பிச் செய்யவும் இல்லை. என் அங்கீகாரத்தை எதிர்பார்த்தும் செய்யவில்லை' என்று மொழிந்தனன். நான் இவ்வளவுதூரம் இப்படி ஸ்னேஹம் விளங்குமாறு சொல்லிக்கொண்டிருப்பினும் என்னை அதட்டிச் சீயென்று வைது, மேலும் சொல்லக்கூடாத அந்தந்த வார்த்தைகளைச் சொல்லினன். மேலும், அவன் பட்டணத்து ஜனங்களையும் தனக்கு வேண்டின மந்த்ரிகளையும் வரவழைத்து ஸ்னேஹிதர்களிடையில் என்னைக் குறித்து அவர்களோடு மிகவும் நிந்தைக்கிடமான வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கி 'ஒருநாள் ராத்ரி க்ரூரனும் மிகவும் துர்ப்புத்தியுமாகிய மஹாராக்ஷஸன் மாயாவியென்பவன் யுத்தம் விரும்பி என்னை அழைத்த ஸங்கதி உங்களுக்குத் தெரியுமல்லவா! அவன் அங்ஙனம் கூப்பிட்டது கேட்டு நான் பட்டணத்தினின்று புறப்பட்டனன். அனந்தரம் மிகவும் பயங்கரனுகிய என் தம்பி இவனும் என் பின்னே வந்தனன். மஹாபலனுகிய அந்த மாயாவி, அன்றிரவு நானும் மற்றொருவனும் தன்மேல் வருவது

கண்டு பயந்து ஓடிப்போயினன். நாங்களும் அவனைப் பின்றொடர்ந்து ஓடினோம். நாங்கள் இங்ஙனம் பின்றொடர்கையில், அவன் வேகமாக ஓர் மஹாபிலத்தில் நுழைந்தனன். அவன் அங்ஙனம் மிகவும் பயங்கரமாகி மிகப் பெரியதாயிருக்கும் அந்தப் பிலத்தில் புகுவது கண்டு கொடிய எண்ணங்கொண்ட என் தம்பியாகிய இவனைப் பார்த்து 'நான் இந்த அஸுரனைக் கொல்லாமல் இங்கிருந்து பட்டணம் போகப்பொறேன். ஆகையால் நான் கொன்று திரும்பிவரும் வரையில், இந்தப் பிலத்வாரத்தில் காத்திருப்பாயாக' என்று மொழிந்தனன். இவன் வாயலில் காத்திருக்கிறுனென்று நினைந்தே நான் புகமுடியாத அந்தப் பெரும்பிலத்தில் புகுந்தனன். உடனே அந்த அஸுரனைத் தேடிக்கொண்டிருக்கையில் ஒரு ஸம்வத்ஸரம் கடந்தது. அனந்தரம் பயங்கரனுகிய அந்தச் சத்ரு எனக்குப் புலப்பட்டனன். அவனையும் அவனது பந்துக்களையும் நான் ப்ரயாஸமின்றியே அவ்விடம் கொன்றனன். அந்தப் பூமியின் விவரத்தில் என் அடிக்குப் பொருமல் அந்த மாயாவி கூச்சலிட்டுக் கொண்டிருக்கையில் அப்பொழுது அவனது முகத்தினின்று ரக்தம் ப்ரவாஹம்போல் பெருகி அந்தப்பிலம் முழுவதும் நிரம்புகையில் அதிலிருக்க அஸாத்யமாயிருந்தது. நான் பராக்ரமமுடைய அந்தத்துந்துபி குமாரனுகிய மாயாவியைக் கொன்று அந்தப்பிலத்தினின்று வெளிப்பட்டுவர யத்னிக்கையில் அதன் த்வாரம் மூடப்பட்டிருக்கையால் மிகவும் வருத்தமுற்றவனுயினன். பிறகு நான் காலால் பலவாறு உதைத்து அந்தப் பிலத்தின் த்வாரத்தில் மூடியிருந்த கல்லை உடைத்தனன். அனந்தரம் நான் அந்த வழியாக வெளியே வந்து முன்போலவே இவ்விடம் சேர்ந்தனன். க்ரூரனுகிய இந்த ஸுக்ரீவன் தனக்கு ராஜ்யம் வேண்டுமென்று

விரும்பி உடன் பிறந்தவனிடத்தில் ஸ்னேஹத்தையும் மறந்து அந்தப் பிலத்தினின்று என்னை வெளிவர வொட்டாதபடி தகைந்தான்' என்றனன். வாலி இங்ஙனம் ஸ்னேஹிதர்களிடையிற் சொல்லி அப்பொழுது என்னைக் கொஞ்சமாயினும் சங்கையின்றி ஒரு வஸ்த்ரத்துடன் ஊரினின்று துரத்தி விட்டனன். ராமா! அவன் என்னை அடித்து என் பார்யையுங்கூட அபஹரித்தனன். நான் வாலிபயத்தினாலேயே இந்தப் பூமியெல்லாவற்றிலும் இதிலுள்ள ஸமுத்ரங்களிலும் எல்லா வனங்களிலும் திரிந்தனன். அங்ஙனம் பார்யை அபஹரிக்கப் பட்டதற்கு வருந்தி நான் மற்றொரு காரணத்தைப்பற்றி வாலிக்குப் புகக்கூடாத இந்த ருஶ்யமூகபர்வதத்தில் இருக்கின்றனன். ராமா! இந்த வைரவ்ருத்தாந்தம் பெரியது. எல்லாவற்றையும் உனக்குச் சொல்லினன். நான் எந்த அபராதமும் செய்யாதிருப்பினும் எனக்கு வ்யஸனம் நேரிட்டது; காண்பாய். ராமா! நீ வீரன்; ஸமஸ்த லோகங்களுக்கும் அபயங் கொடுப்பவன். வாலியிடம் பயத்தினால் வருந்துகின்ற எனக்கு அவனை நிக்ரஹித்து அனுக்ரஹஞ் செய்யத் தகும்' என்றனன். ராமன் மிகவும் தேஜஸ்வி; மேலும் தர்மங்களை யறிந்தவன். ஆகையால் அவன் ஸுக்ரீவன் சொன்னது கேட்டு முகத்தில் புன்னகை விளங்க அவனைப் பார்த்துத் தர்மம் அமைந்திருக்கும்படி 'வீணாகாதவைகளும் ஸூர்யன்போன்றவைகளும் கூராயிருப்பவைகளுமான இந்த என் பாணங்கள் மஹாவேகத்துடன் துராசாரனாகிய அந்த வாலியின்மேல் விழப்போகின்றன. உன் பார்யையை அபஹரித்த அந்தப் பாபிஷ்டன் எதுவரையில் என் கண்ணில் படாதிருப்பானோ; அதுவரைக்குமே பெரியோர்கள் பேர் கெடும்படியான கொடுநடத்தையுடைய அவன் பிழைத்திருப்பான். உன் துக்கத்தைப் பிடித்து ஊஹித்துப்

பார்க்கையில், நீ துக்க ஸமுத்ரத்தில் மூழ்கிக்கிடக்கிரு யென்று தெரிகின்றது. அந்தத் துக்கஸமுத்ரத்தினின்று உன்னைத் தாண்டுவிக்கின்றனன். புஷ்கலமாக உன் அபீஷ்டம் ஸித்திக்கப்போகின்றது' என்றனன். ராமன் தனக்கு ஹிதமாகச் சொன்ன அந்த வார்த்தையைக் கேட்டு ஸுக்ரீவன் மிகவும் ஸந்தோஷமுற்றவனுகி ராமனை மிகவும் பெருமையுள்ள வாக்யங்களால் கொண் டாடினன். பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுக்ரீவன் வாலியின் பராக்ரமத்தையும் துந்துபி யுத்தத்தையும் மதங்கசாபத்தையும் வாலி ஸப்தஸாலரந்த்ரஞ் செய்ததையுங் கூறுதலும், ராமன் துந்துபிசரீரத்தைத் தூக்கி யெறிதலும், ஸுக்ரீவன் ஸப்த ஸாலங்களைப் பேதிக்க வேண்டுதலும்.

ராமன் ஸந்தோஷமும் பௌருஷமும் பெருகும்படி பேசக்கேட்ட ஸுக்ரீவன் ராமனைக் கைகூப்புதல் முதலியவற்றல் பூஜித்து இங்ஙனம் புகழ்ந்தனன். 'நீகோபமுறுவாயாயின் ப்ரளயகாலஸூர்யன்போல் விளக்கமுற்றுத் தகதகவென்று ஜ்வலித்து மர்மங்களைப் பிளந்துகொண்டு போகும்படியான கூருள்ள பாணங்களால் உலகங்களை யெல்லாங் கொளுத்தி விடுவாய். ஸந்தேஹம் இல்லை. வாலியின் பலத்தையும் பராக்ரமத்தையும் வீர்யத்தையும் தைர்யத்தையும் மனவூக்கத்துடன் கேட்டு அதன் பிறகு செய்யவேண்டியவற்றைச் செய்வாயாக. வாலி ப்ராஹ்மமுஹூர்த்தத்தில் எழுந்து ஸூர்யன் உதயமாவதற்கு முன்னமே ஸந்த்யாவந்தனத்திற்காக மேற்கு ஸமுத்ரத்தினின்று கீழ் ஸமுத்ரத்திற்கும் தென்ஸமுத்ரத்தினின்று உத்தரஸமுத்ரத்திற்கும் இப்படி நான்குஸமுத்ரங்களுக்கும் ஆயாஸமின்றி ஸுகமாகவே போய்க்கொண்டிருப்பான். மஹாவீர்யமுடையோனுகியவாலி பர்வதங்களின் நுனிகளில் ஏறி அங்கு

மிகப்பெரிய பர்வத சிகரங்களை வேகத்துடன்மேலெழும் படிவிட்டுப் பிடித்துக்கொள்வான். வாலி, தன் பலத்தை வெளியிடுவதற்காக வனங்களில் ஸாரமுடைய நானுவித வ்ருக்ஷங்கள் பலவற்றைத் தன்புஜபலத்தினுல் முறித் திருக்கின்றனன். துந்துபியென்னும் மஹாபராக்ரமசா லியாகிய ஒரு ராக்ஷஸன் உண்டு. அவன் மஹிஷத் தின் உருவமுடையவன்; கைலாஸ சிகரம்போல் அவன் புலப்படுவான். அவனுக்கு ஆயிரம் யானைபலம் இருந் தது. மிகவும் பெரிய சரீரமுடைய அந்தக் கொடுந் தன்மையன் பராக்ரமத்தினுல் கர்வங்கொண்டு வரம் பெற்ற மஹிமையால் மெய்ம்மறந்து நதீபதியாகிய ஸமுத் ரத்தினிடஞ் சென்று அதன்மேல் எதிர்த்துச் சண்டை செய்ய விரும்பி அலைகளுடன் விளக்கமுற்று ரத்னராசி கள்நிரம்பப்பெற்ற அம்மஹாஸமுத்ரத்தைப் பார்த்து 'எனக்கு யுத்தங் கொடுப்பாய்' என்று வினவினன். ராஜனே! அனந்தரம் தர்மஸ்வபாவனும் மஹாபலிஷ் டனுமாகிய அந்த ஸமுத்ரராஜன் மனுஷ்ய உருவத்து டன் எழுந்து ம்ருத்யுவால் ஏவப்பட்ட அந்த ராக்ஷஸ னைப் பார்த்து 'அடா! நீ யுத்தத்தில் பண்டிதன். உன் னேடு யுத்தஞ் செய்ய எனக்கு ஸாமர்த்யமில்லை' உன் னேடு யுத்தஞ்செய்யத் தகுந்தவனைச் சொல்லுகிறேன்; கேள். மஹாரண்யத்தில் பர்வதராஜனெருவன் இருக் கின்றனன். அவன் முனிவர்களுக்கு மேலான வாஸஸ் தானம்; மேலும், சங்கரனுக்கு மாமன்; பேரினுல் ஹிம வானென்று ப்ரஸித்தி பெற்றவன். அவன் பெரிய குஹைகளும் அருவிகளும் நிரம்பப்பெற்றுப் பல சிறிய குஹைகளோடும் கல்பிளவுகளோடும் கூடியிருப்பான். அவன் உனக்கு யுத்தத்தில் நிகரில்லாத த்ருப்தியைக் கொடுப்பான்' என்றனன். அந்த ராக்ஷஸோத்தமன், அந்த ஸமுத்ரராஜன் தனக்குப் பயந்தானென்று

தெரிந்துகொண்டு வில்லினின்றும் விடப்பட்ட பாணம் போல் மிக்க வேகத்துடன் ஹிமவத்பர்வதத்தின் தாழ் வரைக்குப் போயினன். அனந்தரம் துந்துபி, அந்தப் பர்வதத்தில் யானைபோன்ற வெளுத்த கற்களைப் பூமி யில் வீசியெறிந்து கூக்குரலிட்டனன். அனந்தரம் அந்த ஹிமவத்பர்வதம் வெளுத்த மேகம்போன்ற உருவத் துடன் ஸௌம்யனுகித் தன்னுருவம் பார்த்தமாத்ரத்தி லேயே பெரும் ப்ரீதியை விளைவிக்குமாறு விளங்கப் பெற்றுத் தன் சிகரத்திலேயேயிருந்து அவனைப் பார்த் துத் 'தர்மத்தில் ப்ரீதியுடையவனே! துந்துபீ! நீ என்னை வருந்தச் செய்யவெண்டாம். நான் யுத்தத்தில் ஸமர்த்தனல்லேன். அன்றியே என்னிடத்தில் ரிஷிகள் வாஸஞ் செய்கிறுர்களாகையால் எனக்கு யுத்தம் செய் யவும் ஸாத்யமில்லை' என்றனன். புத்தியிற் சிறந்த அந்தப் பர்வதராஜன் சொன்ன அவ்வார்த்தைகளைக் கேட்டு, துந்துபி கோபத்தினுல் கண்கள் சிவக்க 'உன க்கு யுத்தஞ் செய்யச் சக்தி இல்லாமற் போயினும் சக்தி இருப்பினும் எனக்குப் பயந்து யுத்தத்திற்கு முயற்சி செய்யாமற் போயினும் ஸரி. உன்னேடு யுத்தஞ்செய்ய வில்லை. ஆனல் எனக்கு யுத்தஞ்செய்ய வேண்டுமென்று மிகவும் விருப்பமாயிருக்கையால் இப்பொழுது என் னேடு யுத்தஞ் செய்பவன் எவனே அவனைச் சொல்வா யாக' என்றனன். தர்மாத்மாவாகிய அந்த ஹிமவத் பர்வதராஜன், இதுவரையில் எப்பொழுதும் சொல்லாத அந்த வாக்யத்தைக் கேட்டுச் சினந்து வார்த்தைகளில் நிபுணனுகையால் அந்த ராக்ஷஸோத்தமனைப் பார்த்து 'நிகரில்லாத ஒளியுடன் விளங்குகின்ற கிஷ்கிந்தாபுரத் தில் வாலியென்னும் ஓர் வானரோத்தமன் இருக்கின்ற னன். அவன் மஹாப்ராஜ்ஞன்; பராக்ரமத்தில் தே வேந்த்ரனுக் கொப்பானவன். மிகுந்த செல்வப்பெருக் குடையவன். அந்த மஹாப்ராஜ்ஞன் யுத்தத்தில் பண்

டிதனுகையால் நமுசிக்குத் தேவேந்த்ரன் கொடுத்தாற் போல் உனக்குப் பெரிய த்வந்த்வ யுத்தங் கொடுக்க வல்லவன். உனக்கு இப்பொழுது யுத்தம் வேண்டுமாயின், சீக்ரம் அந்த வாலியிடம் போவாயாக. அவன் எப்பொழுதும் எப்படிப்பட்டவர்க்கும் எதிரிடக் கூடாதவன். யுத்த வ்யாபாரத்தில் சூரன்' என்றனன். அந்தத் துந்துபி ஹிமவான் சொன்ன வார்த்தையைக் கேட்டுப் பெருங் கோபாவேசமுற்று அப்பொழுதே புறப்பட்டு, வாலி பரிபாலித்துவரும் கிஷ்கிந்தாபுரிக்குப் போயினன். அந்தத் துந்துபி மஹிஷத்தின் உருவந் தரித்துக் கூரான கொம்புகளுடன்கூடி மிக்க பயங்கரனுகி வர்ஷாகாலத்தில் ஆகாயத்தின்கண் ஜலம் நிறைந்த மஹாமேகம்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனன். அனந்தரம் மஹாபலமுடைய அந்தத் துந்துபி கிஷ்கிந்தாநகரத்வாரஞ் சேர்ந்து பூமி அதிரும்படி பேரிவாத்யம்போல் பெருஞ் சப்தத்துடன் கர்ஜித்தனன். அவன் மத்தகஜம்போல் அருகிலிருக்கும் வ்ருக்ஷங்களை முறித்துக்கொண்டும் குளம்புகளால் பூமியைப் பிளந்துகொண்டும் கொம்புகளால் அந்தப் பட்டணத்து வாசற்படியைக் கொழுப்புடன் பேதித்துக்கொண்டும் கர்ஜனை செய்தனன். அப்பொழுது அந்தப்புறத்திலிருந்த வாலி அந்த த்வனியைக் கேட்டு அதைப் பொறுக்காமல் காதலிகளோடு, ஆகாயத்தில் நக்ஷத்ரங்களோடுகூடிய சந்த்ரன்போல் வெளிப்பட்டு வந்தனன். அனந்தரம் ஸமஸ்த வானரர்களுக்கும் வனத்தில் திரியும் கரடி முதலியவற்றிற்கும் நாதனுகிய அவ்வாலி அக்ஷரங்களும் உரைகளும் தெளிவாயிருக்குமாறு மெதுவாகவும் கொஞ்சமாகவும் அவனைப் பார்த்து, ' துந்துபீ ! நீ மஹாபலமுடையவன். நீ எனக்குத் தெரிந்தவனே ! அப்படியிருக்க இந்தப் பட்டணத்து வாசலை இங்ஙனம்

தகைந்துகொண்டு கர்ஜனை செய்கின்றனை ஏன்? உன் ப்ராணன்களைப் பாதுகாத்துக் கொள்வாயாக. திரும்பிப் போவாய்' என்றனன். புத்திமானுகிய அந்த வானரர் தலைவன் சொன்ன அவ்வார்த்தையைக் கேட்டுத் துந்துபி கோபத்தினுல் கண்கள் சிவக்க 'வீரா! நீ இங்ஙனம் ஸ்த்ரீகளின்முன்பு அவர்கள் மயங்கும்படியான வார்த்தை சொல்வது யுக்தமன்று. இப்பொழுது என்னுடன் யுத்தஞ் செய்வாயாக. அதன்பிறகு உன் பலத்தைத் தெரிந்துகொள்கிறேன். வானரா! அப்படியில்லையாயின் இந்த ராத்ரியெல்லாம் என் கோபத்தை அடக்கிக்கொண்டிருந்தனன்; உனக்கு மன்மத போகங்களுக்காக நாளை விடியற்காலம் வரையில் கெடு கொடுக்கின்றனன். அதுவரையில் இஷ்டப்படி அனுபவிப்பாயாக. நீ ஸமஸ்த வானரர்களுக்கும் அதிபதி, ஆகையால் பந்துக்களாகிய வானரர்களெல்லோரையும் கட்டியணைத்துக்கொண்டு சரமகாலத்தில் அவரவர்க்குக் கொடுக்கவேண்டியவற்றைக் கொடுப்பாயாக. மேலும் உனக்கு வேண்டிய நண்பர்களோடு கொஞ்சநேரம் கலந்திருப்பாயாக. கிஷ்கிந்தை முழுவதையும் நன்கு ஆசை தீரும்படி ஒருதடவை பார்த்துக்கொள்வாயாக. உன்னைப்போன்ற மற்றொருவனைப் பட்டணத்தில் அரசனுக ஏற்படுத்துவாயாக. ஸ்த்ரீகளோடு இஷ்டப்படி க்ரீடிப்பாயாக. உன் விருப்பங்களெல்லாந் தீர்த்துக்கொண்டபின்பு நான் உன்கொழுப்பை அடக்குகின்றனன். எவன் மதம்பிடித்தவனையும், ஏமாறியிருப்பவனையும், நித்ரைசெய்கின்றவனையும், ஆயுதமில்லாதவனையும், உன்னைப்போல் பெண்களினிடையிலிருந்து காமத்தினுல் மெய்ம்மறந்திருப்பவனையும் வதிப்பானே; அவன் ப்ரூணஹத்யைபோன்ற பாபத்தைப் பெறுவான்' என்று மொழிந்தனன். அந்த வாலி அப்போது தாரை முதலான ஸ்த்ரீகளை அந்தப்புரத்திற்கு அனுப்

பிக் கோபத்தினல் அந்த அஸுரோத்தமனைப் பார்த்துச் சிரித்து மெதுவாக 'நீ யுத்தத்தில் பயமில்லாதிருப்பாயாயின், இவன் மதித்தவனென்று நினைக்க வேண்டாம். இந்த மதமே இப்போது செய்யப் போகிற யுத்தத்திற்கு வீரபாண மென்று நினைப்பாயாக' என்றனன். வாலி இங்ஙனம் அந்த ராக்ஷஸனுக்குச் சொல்லிப் பிறகு வெகு கோபத்துடன் முன்பு தனக்குத் தேவேந்த்ரன் கொடுத்த காஞ்சனமாலையுடன் யுத்தத்திற்குப் புறப்பட்டனன். அப்பொழுது வானரர்தலைவனாகிய அவ்வாலி பர்வதம்போன்ற உருவத்தையுடைய துந்துபியைக் கொம்புகளில் பிடித்துக் கர்ஜனை செய்து கொண்டு கிருகிருவென்று திருப்பிவிட்டனன். வாலி அவனை அங்ஙனந் திருப்பித் தரையில் விழத்தள்ளியடித்துப் பெருந் த்வனி உண்டாகும்படி ஸிம்ஹநாதஞ் செய்தனன். அனந்தரம் அங்ஙனம் விழுகின்ற அந்தத் துந்துபியின் காதிலிருந்து ரக்தம் பெருகிற்று. அங்ஙனம் ஒருவரையொருவர் ஜயிக்க விரும்புகின்ற அந்த வாலி துந்துபிகளுக்குக் கோபவேகத்தினல் பயங்கரமான யுத்தம் நடந்தது. அப்பொழுது தேவேந்த்ரனோடொத்த பராக்ரமமுடைய வாலி முட்டிகளால் குத்தியும் முழங்கால்களால் குமிக்கியும் கற்களால் வீசியெறிந்தும் வ்ருக்ஷங்களைக்கொண்டு அடித்தும் யுத்தஞ் செய்தனன் அப்பொழுது அவ்விடத்தில் வாலியும் துந்துபியும் ஒருவரையொருவர் அடித்து யுத்தஞ்செய்துகொண்டிருக்கையில், யுத்தத்தில் அவ்வளவுக்கவ்வளவு துந்துபியின் பலம் க்ஷீணித்துவிட்டது. தேவேந்த்ரகுமாரனாகிய வாலியின் பலம் மேன்மேலும் பெருகி வந்தது. யுத்தத்தில் துந்துபி செயலும் வீர்யமும் தைர்யமும் பராக்ரமும் க்ஷீணிக்கப் பெற்று அசக்தனாயிருப்பது கண்டு, வாலி அவனை மேலுக் கெடுத்துத் தரையில் பொகட்டுக் குத்தினன். அப்

பொழுது ப்ராணன்களைப் போக்கும்படி பயங்கரமான அந்த யுத்தத்தில் பெருஞ் சரீரமுடைய துந்துபி, தேஹம் முழுவதும் முறியும்படி பிசையப்பட்டு மரணம் அடைந்து தரையில் வீழ்ந்தனன். வாலி மஹாபலமுடையவனுகையால் ப்ராணன்கள் தொலைந்து ப்ரஜ்ஞையின்றித் தரையில் வீழ்ந்திருக்கின்ற அந்தத் துந்துபியின் சரீரத்தைக் கைகளால் எடுத்து இப்படியும் அப்படியும் ஆட்டி ஒரே வேகத்தில் ஒரு யோஜனை தூரத்திற்கப்புறம் போய் விழும்படி வீசியெறிந்தனன். அங்ஙனம் வேகத்துடன் வீசியெறியப்பட்ட அந்தத் துந்துபியின் வாயிலிருந்து ரக்த பிந்துக்கள் காற்றினல் தள்ளுண்டு மதங்கமாமுனியின் ஆஶ்ரமத்தில் போய் வீழ்ந்தன. மஹாத்மாவாகிய அம்மதங்கமாமுனிவர் தம் ஆஶ்ரமத்தில் வீழ்ந்திருக்கிற அந்த ரக்தபிந்துக்களைப் பார்த்துக் கோபித்து 'இந்தக் கார்யஞ்செய்தவன் எவன்' என்று தமக்குள் சிந்தித்து 'என்மேல் ரக்தபிந்துக்கள், முன்பின் பாராமல் திடீலென்று விழும்படி செய்த அந்த துஸ்ஸ்வபாவன் அந்தத் துர்ப்புத்தி மனம் ஸ்வாதீனமாயிருக்கப்பெருத அம்மூடன் எவன்?' என்று மொழிந்து, உடனே அம்முனிவர் ஆஶ்ரமத்தினின்று வெளிப்பட்டுவந்து ஓரிடத்தில் ப்ராணன்கள் தொலைந்து தரையில் வீழ்ந்திருக்கின்ற பர்வதாகாரமுடைய மஹிஷரூபந்தரித்த துந்துபியைக் கண்டனர். அம்முனிவர் தபோத்ருஷ்டியால் அந்தக் கார்யஞ் செய்தவன் வாலியென்று தெரிந்துகொண்டு, அங்ஙனம் துந்துபியை வீசியெறிந்த அவ்வாலியின்மேல் பெருஞ்சாபமிட்டனர். 'எவன் தபோவனம் ரக்தபிந்துக்கள் பட்டுக் கெடும்படியும், இந்த வ்ருக்ஷங்கள் அனைத்தும் முறிந்து போகும்படியும் ராக்ஷஸ சரீரத்தை இங்கு வீசியெறிந்தனனே; அவன் இனி இவ்வனத்தில் புகக்கூடாது. புகுவானுயின் சாவான். அந்தத் துர்ப்புத்தி என் ஆஶ்ரமத்தைச்

சுற்றிலும் யோஜனைதூரத்திற்குள் வருவானாயின் அவன் எள்ளளவும் ஜீவிக்கமாட்டான். இது ஸ்பஷ்டமே. அந்த வாலியைச் சேர்ந்த வானரர்கள் எவரெவர் என் வனத்தில் இருக்கின்றார்களோ, அவர்களும் இனிமேல் இங்கிருக்கலாகாது. இந்த வார்த்தையைக் கேட்டு ஸுகமாக இதை விட்டுப் போவார்களாக. நான் இந்த வனத்தைக் குழந்தையைப்போல் நித்யமும் காப்பாற்றிக்கொண்டு வருகின்றனன். அந்த வானரர்கள் இனி இங்கிருப்பார்களாயின், இருந்து இலைகளையும் தளிர்களையும் நாசஞ் செய்துகொண்டு பழங்களையும் வேர்களையும் பாழாக்கிக்கொண்டிருப்பார்களாயின், அவர்களையுங்கூடச் சபித்துவிடுவேன். இந்தச்சாபம் நடத்தைக்கு வர ஒருநாள் கெடு கொடுத்தனன். நாளைத்தினம் எவனாயினும் வானரன் இதில் என்கண்ணிற் படுவானாயின் பல ஆயிரம் ஆண்டுகள் பர்வதமாயிருப்பானாக, என்று சாபங்கொடுத்தனர். அந்த வானரர்கள் மதங்கமுனிவர் சொன்ன சாபவாக்யத்தைக் கேட்டு உடனே அந்த வனத்தினின்று புறப்பட்டு வாலியிடம் போயினர். வாலி அவர்களைக் கண்டு 'மதங்கவனத்தில் வாஸஞ்செய்துகொண்டிருந்த நீங்களெல்லோரும் என்னிடம் வந்தீர்களென்? வானரர்களெல்லோர்க்கும் க்ஷேமமேயன்றோ?' என்று வினவினன். அனந்தரம் வானரர்களெல்லோரும் அப்பொழுது காஞ்சனமாலையுடைய அவ்வாலிக்கு, துந்துபி சரீரம் விழுந்தது முதலாக மதங்கமுனிவர் சாபங்கொடுத்த தீருகத்தாம் வந்ததற்குள்ள காரணத்தை யெல்லாம் சொல்லினர். அந்தவாலி, வானரர்கள் சொன்ன அவ்வார்த்தையைக் கேட்டு அப்பொழுதே புறப்பட்டு மதங்கமுனியின் ஸந்நிதானத்திற்குச் சென்று கைகளைக் குவித்துச் 'சாபமோக்ஷத்தை அனுக்ரஹிக்கவேணும்' என்று

ப்ரார்த்தித்தனன். அப்பொழுது மஹர்ஷி வாலியைப் பாராட்டாமலே தனது ஆஶ்ரமத்திற்குப் போயினர். அனந்தரம் வாலி சாபம் அனுபவிக்கவேண்டி வந்ததற்குப் பயப்பட்டு விலவிலத்துக் கிஷ்கிந்தைக்குப் போயினன். நரநாதனே! அந்தமுனிசாபபயத்தினால் வாலி ருஶ்யமூக மஹா பர்வதத்திற்கு வரமாட்டான். பார்க்கவுங்கூடப் பொறான். ராமா! அந்த வாலி இவ்விடம் வரமாட்டானென்று தெரிந்தே நான் மந்த்ரிகளோடு கூட வருத்தமின்றித் திரிந்துகொண்டிருக்கின்றனன். வாலி வீர்யகர்வத்தின் மிகுதியால் வீசியெறிந்த அந்தத் துந்துபியின் பெருஞ்சரீரம் உலர்ந்த எலும்புகள் மாத்ரம் குவியலாய் மிகுந்திருக்கப்பெற்று ஓர் பர்வத சிகரம்போல் இதோ இருக்கின்றது; பார். இதோ பெருத்த ஏழு ஸால வ்ருக்ஷங்கள் கிளைகள் தழைத்து விளங்கப்பெற்றுத் தென்படுகின்றனவே: இவைகளில் வாலி வெறும் பாஹுபலத்தினால் ஒரு ஸாலவ்ருக்ஷத்தைப் பிளந்து அந்த மரத்தில் பாணமும் அதன் இறகுகளும் வெளிப்பட்டுத் தோன்றும்படி அப்புறஞ் சென்று மற்றொரு மரத்தில் பொத்துக் கொள்ளுமாறு பாணப்ரயோகஞ் செய்யவல்லவன். இந்த மரங்களில் ஒன்றை அசக்குவானாயின், அது இலைகள் யாவும் உதிர்ந்து மொட்டையாய்விடும். ராஜனே! இதுவே வாலியின் பராக்ரமம்; நிகரற்றது. உனக்கு விவரித்து விட்டனன். அப்படிப்பட்ட வாலியை நீ எப்படி யுத்தத்தில் வதிக்க வல்லனாவாய்?” என்று வினவினன். ஸுக்ரீவன் அங்ஙனஞ் சொல்லிக்கொண்டிருக்கையில், லக்ஷ்மணன் சிரித்துக்கொண்டு அவனைப் பார்த்து ‘என்ன கார்யஞ் செய்தால் ‘இவன் வாலியைக் கொல்ல வல்லவ’னென்று உனக்கு நம்பிக்கை உண்டாம்’ என்று வினவினன். பிறகு ஸுக்ரீவன் லக்ஷ்மணனைப் பார்த்து

'முன்பு வாலி இந்த ஸப்தஸாலவ்ருக்ஷங்களில் ஒவ்வொன்றையும் பாணத்தால் அடித்துப் பின்பு முன் சொன்னபடி அவைகளைப் பாணங்களால் பலதடவையும் அடித்துப் பிளந்திருக்கின்றனன். லக்ஷ்மணா! ராமன் இந்த ஸால வ்ருக்ஷங்களில் ஒன்றை ஒரு பாணத்தால் பிளப்பானாயின், போதும். அடிபட்ட துந்துபியின் எலும்புக்குவியலை ஒரு காலால் எடுத்து இருநூறு வில்லளவு தூரம் போய்விழும்படி வேகத்துடன் வீசி யெறிவானாயினும், அப்பொழுது ராமனது பராக்ரமத்தைக் கண்டு வாலி ஹதனானென்று நினைப்பேன்' என்றனன். ஸுக்ரீவன் இங்ஙனஞ் சொல்லிப் பிறகு முஹூர்த்தகாலம் வெறுமனே சிந்தித்திருந்து மீளவும் சிவந்த கடைக்கண்களையுடைய காகுத்ஸ்த ராமனைப் பார்த்து 'வாலி, மஹாசூரன், சூரர்களைக் கொன்றவன்; பல பௌருஷங்களில் புகழ்பெற்றவன்; மிகுந்த பலமுடையவன்; என்றும் இதுவரையில் யுத்தத்தில் தோல்வியடையாதவன். இந்த வாலி தேவதைகளுக்குங்கூடச் செய்யமுடியாத பல கார்யங்களைச் செய்திருப்பது யாவர்க்கும் தெரிந்த விஷயமே. நான் அவை யெல்லாவற்றையும் ஆலோசித்தே பயந்து இந்த ருஶ்யமூகபர்வதத்தில் புகுந்திருக்கின்றனன். எவர்க்காயினும் வெல்லமுடியாமலும் எவர்க்காயினும் எதிரிடக்கூடாமலும் விளங்கிப் பெருங்கோபமுற்றிருக்கும் வானரர்தலைவனாகிய வாலியை நினைத்தே நான் இந்த ருஶ்யமூக பர்வதத்தை எப்பொழுதும் விடாதிருக்கின்றனன். மேலும் நான் என்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுடைய ஹனுமான் முதலான மந்த்ரிஶ்ரேஷ்டர்களோடு இம்மஹாவனத்தில் பயந்து ஸந்தேஹப்பட்டுக் கொண்டே திரிந்துகொண்டிருக்கின்றனன். நண்பர்களிடம் மிகுந்த வாத்ஸல்ய முடையவனே! இவ்வளவே யன்றி எனக்குப்



1681. ராமன் துந்துபி சரீரத்தை மேற்கிளம்பும்படி எடுந்தெறிதல்.

புகழத்தகுந்த நல்ல நண்பனும் அகப்பட்டனே. புருஷ திலகனே! உன்னை ஹிமவத்பர்வதத்தைப் போல் ஆஸ்ரயித்தனன். ஆனாலென்னென்கிருயோ? மஹாபல சாலியும் என் கொடும் உடன்பிறந்தவனுமாகிய வாலியின்பலம் எனக்குத் தெரியும். உன் வீர்யத்தை மாத்ரம் யுத்தத்தில் நான் இதுவரையில் பார்த்ததில்லை. அந்த வாலி நடத்தின பயங்கர கார்யங்களைப் பற்றி எனக்குப் பயம் உண்டாகி இந்த வார்த்தைகளைச் சொல்லுகின்றேனன்றி உனக்குச் சலனம் விளைக்க வேண்டுமென்னும் எண்ணத்துடன் சொல்லவில்லை; உன்னை அவமதிப்பதற்காகவும் அன்று; அன்றியே, பயப்படுத்துவதற்காகவும் அன்று. ராமா! ஒரே தீர்ப்பாயிருக்கின்ற உன் வார்த்தையும் புத்தியும் தைர்யமும் ஆகாரமும், நீறுபூத்தநெருப்புப்போன்ற உன் மஹாதேஜஸ்ஸைத் தெரிவிக்கின்றன. ஸந்தேஹமில்லை' என்றனன். ப்ரபுவாகிய அந்த ஸ்ரீராமன் மஹானுபாவனாகிய ஸுக்ரீவன் சொன்ன வார்த்தையைக் கேட்டுப் புன்னகையுடன் அவனைப் பார்த்து 'ஸுக்ரீவா! எமது பராக்ரமத்தில் உனக்கு நம்பிக்கை இல்லையாயின், இப்பொழுது நான் உனக்கு யுத்தவிஷயமாக வேண்டிய நம்பிக்கையை விளைவிக்கின்றேன்' என்றனன். மஹாபாஹுவாகிய லக்ஷ்மணனுக்ரஜன் ராமன் ஸுக்ரீவனுக்கு இங்ஙனஞ் சொல்லி, அவனை ஸமாதானப்படுத்திக் கொண்டு அந்தத் துந்துபியின் சரீரத்தைக் காலால் எடுக்காமலே கால்கட்டை விரலால் அவலீலையாகவே எடுத்து ஆட்டுவித்துப் பத்துயோஜனைதாரத்திற்கப்புறம் போய் விழும்படி வீசியெறிந்தனன். வீர்யம்பொருந்தின அந்த ஸுக்ரீவன் துந்துபியின் சரீரம் உலர்ந்திருக்கையால் முன்பைவிட அற்பமாயிருக்கையில் அதை ராமன் கால்கட்டை விரலால் வீசியெறிந்தது கண்டு மீளவும்

ராமனைப் பார்த்து லக்ஷ்மணனுக்கு முன்னிலையில் 'நண்பனே! முன்பு இந்தச்சரீரம் ரக்தத்தால் நனைந்து புதிதாகிக் கொஞ்சம் ப்ராணசேஷ்டையுடன்கூடி மாம்ஸமும் நிறைந்திருக்கையில் வீசியெறியப்பட்டது. ராகவா! இப்பொழுது இது உலர்ந்து மாம்ஸமெல்லாம் அற்றுப் புற்குவியல்போல் அற்பமாயிருக்கையில் எறியப்பட்டது. ஆகையால் இதைப்பற்றி உன்பலம் அதிகமோ அவன் பலம் அதிகமோ தெரிந்துகொள்ள முடியாது. ராமா! 'நனைந்தது, உலர்ந்தது' என்பதே மிகவும் பெரிய தாரதம்யத்திற்கிடமாயிருக்கின்றது. ஆகையால் உன்பலத்திலும் வாலிபலத்திலும் முன்பிருந்த ஸந்தேஹமே இருக்கின்றது. நீ ஒரு ஸாலவ்ருக்ஷத்தைப் பாணத்தால் பேதிப்பாயாக. அப்பொழுது பலாபலம் விசேஷித்து வெளியாகும். நீ யானைத்துதிக்கைபோல் நீண்டிருக்கின்ற இந்தத் தனுஸ்ஸை நாணேற்றிக் காதுவரையிலும் இழுத்துப் பெரிய பாணமொன்றை விடுவாயாக. ராஜகுமாரனே! நீ ப்ரயோகிக்கும் பாணம் இந்த ஸாலவ்ருக்ஷத்தைப் பேதிக்கும். இதில் ஸந்தேஹம் இல்லை. மீளவும் என் நம்பிக்கை விளைவிக்க வேண்டுமென்று ஆலோசிக்கவேண்டாம். எனக்கு ஸந்தோஷத்திற்காகவேயன்றி உன்னைப் பரீக்ஷிப்பதற்காகவன்று. இது நிஜம். இப்படி யென்று உன்மேல் ஆணையிடுகின்றனன். தேஜஸ்ஸுடையவர்களில் ஸூர்யனும் மஹா பர்வதங்களில் ஹிமவத் பர்வதமும் $ சதுஷ்பாதஜாதிகளில் ஸிம்ஹமும் மேலாயிருப்பதுபோல், நீ பராக்ரமத்தில் ஸமஸ்த மனுஷ்யர்களிலும் மேலாயிருப்பவன்' என்றனன். பதினொன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

$ நாற்கால் ஜந்துக்களில்.



1683. ராமன் ஸப்த ஸாலங்களைப் பேதித்தல்.

ராமன் ஸப்தஸாலங்களைப் பேதித்தலும்,
வாலி ஸுக்ரீவர்களின் ப்ரதம யுத்தமும்.

மஹாதேஜஸ்வியாகிய ராமன், ஸுக்ரீவன் நன்ருகச் சொன்ன இந்த வார்த்தையைக் கேட்டு அவனுக்கு நம்பிக்கை உண்டாகும்பொருட்டுத் தனுஸ்ஸை எடுத்துக்கொண்டனன். பகைவரை அடக்கும் பராக்ரமசாலியாகிய அவ்வீரன் பயங்கரமான தனுஸ்ஸையும் ஒரு பாணத்தையும் எடுத்துக்கொர்ண்டு நாண்சப்தத்தினுல் திசைகள் நிரம்பச் செய்துகொண்டு ஸாலவ்ருக்ஷத்தைக் குறிசெய்து பாணத்தை ப்ரயோகித்தனன். பலவானுகிய அந்த ராமன் ஒரு ஸாலத்தைக் குறிசெய்து நாட்டுகையில் ஸ்வர்ணரேகைகளால் விளங்குகின்ற அந்தப் பாணம் ஏழு ஸாலவ்ருக்ஷங்களைப் பேதித்து அந்த மலைச்சாரலையும் பிளந்துகொண்டு பூமியுள் புகுந்தது. பூமியைப் பிளந்த அந்தப் பாணம் மஹாவேகமுடையதாகையால் முஹூர்த்தகாலத்தில் பூமியினின்று வெளிப்பட்டு வந்து மீளவும் எப்பொழுதும் தானிருக்குமிடமாகிய அம்பருத்தூணியில் புகுந்தது. வானர ஶ்ரேஷ்டனுகிய ஸுக்ரீவன் ராமனது பாணவேகம் ஏழு ஸாலவ்ருக்ஷங்களையும் பேதித்தமை கண்டு மிகவும் ஆச்சர்யம் அடைந்தனன். அந்த ஸுக்ரீவன் பரமஸந்தோஷம் அடைந்து ராமனுக்கு அஞ்சலி செய்து சிரஸு பூமியில்பட வயிறு தரையில் படுதலால் ஆபரணங்கள் அசையப்பெற்று ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்தனன். ஸுக்ரீவன் அந்த வ்யாபாரத்திற்கு மிகவும் ஸந்தோஷம் அடைந்து, தர்மங்களை யறிந்தவனும் ஸர்வாஸ்த்ரங்களையும் நன்குணர்ந்தவனும் சூரனுமாகிய ராமன் நின்றுகொண்டிருக்கக் கண்டு 'புருஷதிலகனே! நீ, யுத்தத்தில் தேவேந்த்ரனேடுகூடத் தேவதைகளனைவரும் கலந்துவரினும், அவர்களெல்லோ

ரையும் பாணங்களால் வதிக்கவல்லவன். இனி வாலி யை வதிப்பது சொல்லவேண்டுமோ? ராமா! ஒரு பா ணத்தால் ஏழு பெரிய ஸாலவ்ருக்ஷங்களையும் பர்வதத் தையும் பூமியையும் பேதித்து விட்டனையே! இப்படிப் பட்ட உன்முன்பு எவன் நிற்கவல்லவன்? மஹேந்த்ர வருணர்களை நிகர்த்த உன்னை நண்பனாகப் பெற்றேனா கையால் இப்பொழுது என் துக்கம் தீர்ந்துபோய் விட்டது. இப்பொழுது எனக்குப் பரம ஸந்தோஷம் உண்டாயிற்று. ராமா! எனக்கு உடன்பிறந்தவனென் னும் உருவத்துடனிருக்கும் பகைவனாகிய அந்த வாலி யை,எனக்கு ப்ரியஞ்செய்வதற்காக இப்பொழுதே முடிப் பாயாக. இதோ உனக்குக் கைகூப்பினேன்' என்றனன். அனந்தரம் ராமன் மஹாப்ராஜ்ஞனாகையால் இனிய காட்சியுடைய ஸுக்ரீவனைக் கட்டியணைத்து லக்ஷ்மண னுக்கு ஸம்மதமான உரைகளைச் சொல்லத் தொடங்கி 'ஸுக்ரீவா! இங்கிருந்தே கிஷ்கிந்தைக்குப் போவோம். நீ சீக்ரமாகக் கொஞ்சம் முன்னமே போவாயாக. போ ய்த் தம்பியைப் பீடிக்கும் வாலியை யுத்தத்திற்கு அழைப்பாயாக' என்றனன். அனந்தரம் ராமன் முத லாக அவர்கள் அனைவரும் விரைவாக வாலியின் பட்ட ணமாகிய கிஷ்கிந்தைக்குப் போய் அங்குப் புகக்கூடாத ஓர் வனத்தில் வ்ருக்ஷங்களின் மறைவில் மறைந்திருந்த னர். ஸுக்ரீவன் கெட்டியாக வஸ்த்ரத்தை இடையில் கட்டிக்கொண்டு வாலியைக் கூப்பிடுவதற்காகக் கர்ஜ னங்களால் ஆகாயம் இருபிளவாகும்படி பயங்கரமாகக் கோஷமிட்டனன். மஹாபலனாகிய வாலி தம்பியின் கர்ஜனையைக் கேட்டுச் சினந்து மஹாவேகத்துடன் அஸ்தமயபர்வதத்தினின்று ஸூர்யன் புறப்படுவது போல் புறப்பட்டு வந்தனன். அனந்தரம் ஆகாயத்தில் புதன் அங்காரகன் ஆகிய இந்த க்ரஹங்களுக்குப்போல் அந்த வாலிஸுக்ரீவர்களுக்குப் பயங்கரமான துமுல

யுத்தம் நடந்தது. அண்ணன் தம்பிகள் இருவரும் கோபாவேசத்தினுல் உடம்பு தெரியாமல் யுத்தத்தில் இடிபோன்ற உள்ளங்கையறைகளாலும் வஜ்ராயுதம் போன்ற முட்டிகளாலும் ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டனர். அனந்தரம் ராமன் கையில் வில்லைத் தரித்து வீரர்களாகிய அந்த வாலிஸுக்ரீவர்களிருவரும் அஶ்வினதேவதைகள் போல் ஒருவரை யொருவர் நிகர்த்திருக்கக் கண்டு 'இவன் ஸுக்ரீவன், இவன் வாலி' என்று அடையாளந் தெரிந்துகொள்ள முடியாமையால் ப்ராணன்களை யழிக்கும்படியான பாணத்தை விடுவதற்குப் புத்தி உண்டாகப் பெருதிருந்தனன். இதன் நடுவில் ஸுக்ரீவன் அந்த வாலியால் தோல்வி யடைந்து தனக்குத் திக்கான ராமனைக் காணுமல் ருஶ்யமூக பர்வதத்திற்கு ஓடிப்போயினன். அந்த ஸுக்ரீவன் இளைப்புற்று ரக்தம் பெருகப்பெற்றுப் புடைகளால் உடம்பு முழுவதும் தழும்புற்றுப் பருஷமாகச் செய்யப்பட்டு, வாலியும் கோபத்தினுல் பின்ருெடர்ந்து துரத்துகையில் அந்த மதங்கமஹாவனத்தில் புகுந்தனன். ஸுக்ரீவன் அவ்வனத்தில் புகுவது கண்டு மஹாதேஜஸ்வியாகிய வாலி சாபபயத்தினுல் வருந்தி 'அடா! தப்பித்துக்கொண்டனை' என்று மொழிந்து வெறுமனே திரும்பிப்போயினன். ராமனும் தம்பி லக்ஷ்மணனும் வருவது கண்டு ஸுக்ரீவன் வெட்கித் தரையைப் பார்த்துக்கொண்டு தீனவசனத்துடன் 'எனக்குப் பராக்ரமத்தைக் காட்டி, வாலியை யுத்தத்திற்கு அழைப்பாய்' என்று என்னுடன் சொல்லி என்னை வாலியால் அடிபடச் செய்தனையே! நீ என்ன நினைத்திருந்தனையோ? ராமா! நான் உன்னை வினவும்பொழுதே 'நான் வாலியை வெல்லவல்லனல்லேன்' என்று யதார்த்தமாகச் சொல்லி யிருக்கவேண்டும்.

அப்படி செய்திருப்பாயாயின் நான் இங்கிருந்து புறப் பட்டுப் போகவே மாட்டேனல்லவா ?" என்றனன். மஹா னுபாவனுகிய அந்த ஸுக்ரீவன் கேட்போர்களுக்குக் கருணை உண்டாகும்படி இங்ஙனம் தீனவாக்யங்களைச் சொல்லிக்கொண்டிருக்கையில் கேட்டு ஸ்ரீராமன் அவ னைப் பார்த்து 'ஸுக்ரீவா! நான் பாணம் விடாததற்குக் காரணம் யாதோ அதைச் சொல்லுகிறேன், கேள். கோபத்தை விடுவாயாக. ஸுக்ரீவா! அலங்காரத்திலும் வேஷத்திலும் அளவிலும் நடையிலும் நீயும் வாலியும் ஒருவரை யொருவர் நிகர்த்திருக்கிறீர்கள். ஸுக்ரீவா! கண்டத்வனியிலும் காந்தியிலும் பார்வையிலும் நடை யிலும் வார்த்தைகளிலும் உங்களிருவர்க்கும் பேதம் சிறிதும் எனக்கு அகப்படவில்லை. வானரோத்தமனே! அங்ஙனம் உங்களிருவர்க்கும் ரூபம் ஒன்றாகவே யிருப் பதுபற்றி நான் மோசம் போயினன். நான் உங்களி ருவருடைய மூர்த்தியும் ஸமானமா யிருப்பதுபற்றி ஸந் தேஹித்தே 'நம்மிருவர்க்கும் முதலே மோசம் வாரா திருக்குமாக' என்று நினைத்து மஹாவேகமுடைய தும் பகைவரைக் கொல்வதும் ப்ராணன்களை முடிப்பது மாகிய கொடிய பாணத்தை ப்ரயோகிக்கவில்லையே யன்றி மற்றேதுமில்லை. வானரோத்தமனே! எனது அஜ்ஞானத்தினுலும் லாகவத்தினுலும் உனக்கு ஏதே னும் ஆபத்து ஸம்பவிக்குமாயின், என்னுடைய மூடத் தனமும் பால்யமும் நாற்புறத்திலும் வெளியாகுமல்ல வா? எவனுக்கு அபயங் கொடுத்தோமோ, அவனை வதிப்பது மஹாபாதக மென்பர்கள். நானும் லக்ஷ்ம ணனும் பெண்மணியாகிய ஸீதையும் நாங்களெல்லோ ரும் உன்னதீனத்திலிருக்கின்றனம். எங்களுக்கு இவ் வனத்தில் நீயே சரணம். வானரோத்தமனே! ஆகை யால் நீ மீளவும் சென்று யுத்தஞ் செய்வாயாக. என்

மேல் ஸந்தேஹம் வேண்டாம். ஸுக்ரீவா!] இப்பொழுது யுத்தத்தில் வாலியை ஒரு பாணத்தினலேயே வதித்துப் பூமியில் வீழ்ந்து புரளச் செய்கின்றனன், பார். கபீந்த்ரனே! மீளவும் நீ வாலியுடன் த்வந்த்வ யுத்தஞ் செய்யும்பொழுது உன்னை நான் குறித்தறியும்படி நீ ஏதேனும் ஓர் அடையாளந் தரிப்பாயாக. லக்ஷ்மணா! சுபலக்ஷணமாகிப் புஷ்பித்திருக்கின்ற இந்தக் கஜபுஷ்பியென்னும் ஓஷதியைப் பிடுங்கி மஹானுபாவனாகிய ஸுக்ரீவனது கண்டத்தில் கட்டுவாயாக' என்றனன். அனந்தரம் லக்ஷ்மணன் மலைச்சாரலில் முளைத்து நன்கு புஷ்பித்திருக்கின்ற அந்தக் கஜபுஷ்பியென்னும் ஓஷதியைப் பிடுங்கிக்கொண்டு வந்து அந்த ஸுக்ரீவனது கண்டத்தில் கட்டினன். ஸ்ரீமானாகிய அந்த ஸுக்ரீவன் கண்டத்தில் அந்தக் கொடியைத் தரித்து, ஆகாயத்தில் நக்ஷத்ரமாலையால் சுற்றப்பட்ட ஸூர்யன்போல் ப்ரகாசித்தனன். பொன் வர்ணமுடைய அந்த ஸுக்ரீவன் அம்மாலையால் ஸந்த்யாகாலத்து மேகம்[1] தாரைகளின் ஸமூஹத்தால் சூழப்பட்டு விளங்குவதுபோல் சரீரம் ப்ரகாசிக்கப் பெற்று ராமனது வாக்யத்தினால் ஸமாதனம் அடைந்து ராமனுடன் கூடவே வாலியால் பாதுகாக்கப்பட்ட கிஷ்கிந்தாபுரத்திற்குப் போயினன். பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

### ராம ஸுக்ரீவாதிகள் மீளவும் கிஷ்கிந்தைக்குப் போதல்.

லக்ஷ்மணனுக்குத் தமையனாகிய ராமன் தர்மஸ்வபாவனாகையால் ஸுக்ரீவனைப் பின்னே அழைத்துக்கொண்டு, வாலியின் பராக்ரமத்தினால் பாதுகாக்கப்பட்ட கிஷ்கிந்தாபுரத்திற்குப் போயினன். ராமன் ஸ்வர்ணத்தினால் ப்ரகாசிக்கின்ற பெரிய தனுஸ்ஸையும்

---

1. நக்ஷத்திரங்களின்.

யுத்தத்தில் வெற்றியை விளைவிக்கவல்லவைகளும் ஸூர்யன்போல் ப்ரகாசிக்கின்றவைகளுமான திவ்ய பாணங்களையும் எடுத்துக்கொண்டு புறப்பட்டனன். மஹானுபாவனுகிய ராமனுக்கு முன்னுக, நெருங்கின கண்டத்தையுடைய ஸுக்ரீவனும் மஹானுபாவனுகிய லக்ஷ்மணனும் போயினர். ராமனுக்குப் பின்பு வீரனுகிய ஹனுமானும் நலனும் நீலனும் மஹா பராக்ரமம் அமைந்து வானர ஸமூஹங்களில் தலைமையுடையோனுகிய தாரனும் போயினர். பாரத்தினுல் தழைந்திருக்கின்ற வ்ருக்ஷங்களையும் நிர்மல ஜலப்ரவாஹத்துடன் விளக்கமுற்று ஸமுத்ரத்தைக் குறித்துச் செல்கின்ற நதிகளையும் க்ருஹங்கள்போன்ற குஹைகளையும் பர்வதங்களையும் கல்வெடிப்புகளையும் ஸாதாரண குஹைகளையும் உயர்ந்த சிகரங்களையும் பார்க்க இனியவைகளான குஹாவிசேஷங்களையும் பார்த்துக்கொண்டே போயினர். மேலும் வைடூர்ய மணிகள்போன்ற தாமரை யிலைகளையும் சிறிது மலர்ந்த மொக்குகளோடு கூடின தாமரைகளால் ரமணீயங்களும் நல்ல ஜலமுடையவைகளுமாகி நீர்க்காகங்களும் ஸாரஸப் பறவைகளும் ஹம்ஸங்களும் வஞ்சுலங்களும் நீர்க்கோழிகளும் சக்ரவாகங்களும் மற்றுமுள்ள பறவைகளும் அருகில் கலகலவென்று கூவப்பெற்று விளங்குகின்ற தாமரைக் குளங்களையும் பார்த்துக்கொண்டு போயினர். மேலும் அவர்கள், மெத்தென்ற இளம் புற்களின் முளைகளை மேய்ந்துகொண்டு பயமற்று அரண்யபூமிகளில் நாற்புறத்திலும் திரிந்தும் நின்றும் இருக்கிற மான்களையும் கண்டனர். அவர்கள் ஸுக்ரீவனைப் பின்றொடர்ந்து வனத்தில் தடாகங்களைக் கெடுப்பவைகளும் இரண்டு வெளுத்த தந்தங்கள் விளங்கப்பெற்றுப் பயங்கரங்களாகி ஒவ்வொன்றுகத் திரிபவைகளும் ஆற்றின் கரைகளைக் கொத்திக்குளம் பறிப்பவைகளும் மதித்தவைகளும் மலைச்சாரல்களைக் குத்தி விளை

யாடுபவைகளும் நடந்து செல்லும் பர்வதங்களோ என்னும்படி பெரிய உருவமுடையவைகளும் மேகங்கள்போல் கறுத்துப் பூமியின் தாட்களால் அழுக்கடைந்தவைகளுமாகிய யானைகளையும் வனத்தில் திரியும் மற்றுமுள்ள ம்ருகங்களையும் ஆகாயத்தில் பறக்கும் பக்ஷிகளையும் பார்த்துக்கொண்டு வேகமாகப் போயினர். அங்கு அவர்களெல்லோரும் வேகமாகப் போய்க்கொண்டிருக்கும்பொழுது, ராமன் வ்ருக்ஷ ஸமூஹங்கள் நெருங்கியிருக்கின்ற ஓர் வனத்தைக் கண்டு ஸுக்ரீவனைப் பார்த்து 'மேகஸமூஹம்போல் விசாலமாகி நாற்புறத்திலும் ஓரங்களில் வாழைமரங்கள் சூழப்பெற்று விளங்குகின்ற இந்த வ்ருக்ஷஸமூஹம் ஆகாயத்திலிருக்கும் மேகம்போல் ப்ரகாசிக்கின்றது. நண்பனே! இதுவென்? இதைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று எனக்குக் குதூஹலமாயிருக்கின்றது. நீ என் விருப்பத்தைத் தீர்க்கவேண்டுமென்று விரும்புகின்றேன்' என்று மொழிந்தனன். ஸுக்ரீவன், மஹானுபாவனுகிய ராமனது வார்த்தையைக் கேட்டு நடந்துபோய்க்கொண்டே அம்மஹாவனத்தைக் குறித்த வ்ருத்தாந்தத்தை யெல்லாஞ் சொல்லத் தொடங்கி 'ராமா! இது ஓர் ஆஶ்ரமம். இது விசாலமாய்க் குளிர்ந்திருக்கையால் ஶ்ரமத்தைப் போக்குந்தன்மை யுடையது; உத்யானவனங்கள் பலவும் நிரம்பப்பெற்று ருசியுள்ள காய் கிழங்குகளும் வேர்களும் ஜலமும் நிறைந்திருக்கும். இந்த ஆஶ்ரமத்தில் ஸப்தஜனங்களென்னும் முனிவர்கள் எழுவர் வாஸஞ்செய்து கொண்டிருந்தனர். அவர்கள் மிகவும் கொடியவ்ரதங்களைச்செய்துகொண்டு தலைகீழாக ஜலத்திலிருந்து நியமத்துடன் தவஞ்செலுத்திக் கொண்டிருப்பார்கள். அம்மஹர்ஷிகள் இந்த வனத்தில் ஏழு ராத்ரிகளுக்கு ஒருதடவை வாயுவை ஆஹாரமாகக்கொண்டு எழுநூறு ஸம்வத்ஸரங்கள் தவஞ்

செய்து சரீரத்துடனே ஸ்வர்க்கஞ்சென்றனர். இங்ஙனம் மஹாப்ரபாவர்களான அம்மஹர்ஷிகளின் ஆஶ்ரமம், சுற்றிலும் வ்ருக்ஷங்களால் வேலியுண்டாகப் பெற்று இந்த்ரனோடுகூடித் தேவாஸுரர்கள் வரினும் எவ்வளவும் எதிரிடமுடியாததாயிருக்கும். இனி மனிதர்கள் இவ்வாஶ்ரமத்தில் புகமுடியாதென்பது சொல்லவேண்டுமோ? பக்ஷிகளும் மற்றும் அடவியில் திரியும் ஜந்துக்களும் இவ்வாஶ்ரமத்திற்குள் எவ்விதத்திலும் புகமாட்டா. அங்ஙனம் தெரியாமல் எவையாயினும் புகுமாயின், அவை எவ்விதத்திலும் அங்கிருந்து திரும்பி வருவதில்லை; அங்கேயே அகப்பட்டுச் சாகவேண்டுவதே. அந்த ஆஶ்ரமத்தில் நர்த்தனஞ் செய்யும் அப்ஸர ஸ்த்ரீகளின் ஆபரணத்வனிகளும் அவ்யக்த மதுரமான அக்ஷரங்களோடு கூடின கீதசப்தங்களும் வாத்ய கோஷங்களும் எப்பொழுதும் செவிப்பட்டுக் கொண்டிருக்கும். மேலும் அதில் திவ்யகந்தம் எப்போதும் வீசிக்கொண்டிருக்கும். இவ்வாஶ்ரமத்தில் எப்பொழுதும் மூன்று அக்னிகளும் விளங்கிக் கொண்டிருக்கும். அதற்கு நிதர்ஶனமாக இந்தப் புகை தட்டமாக வ்ருக்ஷங்களின் நுனிகளைச் சுற்றிக்கொண்டு புறாவின் மேனியின் வர்ணமுடையதாகிப் புலப்படுகின்றதல்லவா? இந்த வ்ருக்ஷங்கள், சிகரங்களில் புகைகளால் மூடப்பட்டிருப்பது பற்றி மேகஸமூஹங்களால் மூடப்பட்ட வைடூர்ய பர்வதம்போல் ப்ரகாசிக்கின்றன. தர்ம ஸ்வபாவனே! நீயும் லக்ஷ்மணனும் பரிசுத்தமான மனமுடையராகி அஞ்சலிசெய்து ஏதேனும் பலனை உத்தேசித்து அம்மஹர்ஷியைக் குறித்து நமஸ்காரஞ் செய்வீர்களாக. ராமா! ஆத்மவித்துக்களான அம்மஹர்ஷிகளுக்கு எவர் நமஸ்காரஞ் செய்வார்களோ, அப்படிப்பட்டவர்களுக்குத் தேஹத்தில் வ்யாதி முதலான கெடுதிகள் எள்ளளவும் புலப்படா. ஆகையால்

நமஸ்காரஞ் செய்வீர்களாக' என்றனன். அனந்தரம் ராமனும் அவன் தம்பி லக்ஷ்மணனும் கைகூப்பி மஹானுபாவர்களான அம்மஹர்ஷிகளை உத்தேசித்து நமஸ்காரஞ் செய்தனர். அங்ஙனம் நமஸ்கரித்து தர்ம ஸ்வபாவனாகிய ராமனும் தம்பி லக்ஷ்மணனும் மற்றை வானரர்களும் பரமஸந்தோஷத்துடன் போயினர். அவர்கள் அந்த ஸப்தஜன முனிவரது ஆஶ்ரமத்தினின்று வெகுதூரம் நடந்து வாலியால் பரிபாலிக்கப்படுவதும் ஆனதுபற்றியே பகைவரால் எதிரிடக் கூடாததுமாகிய கிஷ்கிந்தாபுரத்தைக் கண்டனர். அனந்தரம் ராமனும் லக்ஷ்மணனும் ஸுக்ரீவன் முதலிய வானரர்களும் நிகரில்லாத ஒளியுடன் விளக்கமுற்று ஆயுதங்களைத் தரித்துச் சத்ருவைக் கொல்லும் பொருட்டு எல்லோரும் ஒரேகாலத்தில் தேவேந்த்ர புத்ரனாகிய வாலியால் பராக்ரமங்கொண்டு பாதுகாக்கப்பட்ட கிஷ்கிந்தாபுரஞ் சேர்ந்தனர். பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

(ஸுக்ரீவன் வாலியை யுத்தத்திற் கழைக்கப் பயப்படுகையில் ராமன் அவன் பயத்தைப் போக்குதல்)

ராமன் முதலிய அவர்களெல்லோரும் சீக்ரமாக வாலியால் காக்கப்பட்ட கிஷ்கிந்தையைச் சேர்ந்து புகக்கூடாத ஓர் வனத்தில் வ்ருக்ஷத்தின் மறைவில் மறைந்திருந்தனர். அரண்யங்களில் ப்ரீதியுடையோனும் அகன்ற கண்ட முடையவனுமாகிய ஸுக்ரீவன் அடவியில் நாற்புறத்திலும் கண்களை விட்டுப் பார்த்து மிகவும் கோபத்தை யேற்றுக் கொண்டனன். அனந்தரம் அந்த ஸுக்ரீவன் ஹநுமான் முதலிய பரிஜனங்கள் சூழ்ந்திருக்கப் பெற்று வாயுவேகத்துடன் கூடிக் கர்ஜிக்கின்ற மஹாமேகம்போல் ஆகாயம் பேதிக்கும்படி ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு வாலியை யுத்தத்திற்கு

அழைத்தனன். அனந்தரம் அப்போது பால ஸூர்யன்போல் விளக்கமுற்று மதித்த ஸிம்ஹம்போன்ற நடைமிடுக்குடன் ப்ரகாசிக்கின்ற ஸுக்ரீவன், கார்யங்களில் ஸமர்த்தனுகிய ராமனைப் பார்த்து 'நாம் வாலி பட்டணமாகிய கிஷ்கிந்தைக்கு வந்தோம். இது கேவலமாயிருப்பதன்று. ம்ருகங்களைப் பிடிக்கும் வலைபோல் பகைவரைப் பிடித்துப் பீடிக்கவல்ல வானரர்கள் பலர் இதில் நிறைந்திருக்கின்றனர். மேலான ஸ்வர்ணங்களால் இந்தப் பட்டணத்தின் த்வாரங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. மேலும் த்வஜங்களும் யந்த்ரங்களும் இங்கு நிறைந்திருக்கின்றன. இப்படிப்பட்ட வாலிநகரத்திற்கு வந்தோம். வீரர்களில் தலைவனே! நீ முன்பு வாலியைக் கொல்லுகிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்திருக்கின்றனை. பலிக்க வேண்டிய காலம் வந்தபொழுது, கொடி தவருமல் பலிப்பதுபோல் அந்த ப்ரதிஜ்ஞைக்கும் *பலகாலம் இதோ வந்திருக்கிறதாகையால் அதை ஸபலஞ்செய்வாயாக' என்றனன். ஸுக்ரீவன் இங்ஙனம் சொல்லுகையில் சத்ருக்களை யழிக்குந் திறமுடைய ராமன் தர்மஸ்வபாவனுகையால் ஸுக்ரீவனைப் பார்த்து 'லக்ஷ்மணன், அடையாளத்திற்காகக் கஜபுஷ்பியென்னும் கொடியைப் பிடுங்கி உன்கழுத்தில் போட்டிருக்கிருனுகையால், நீ இதனுல் ஸுகமாக அறியத்தகுந்தவனு யிருக்கின்றனை. வீரா! நீ கழுத்தில் இந்தக் கொடியைத் தரித்தவனுகி ஆகாயத்தில் நக்ஷத்ரமாலையால் சுற்றப்பட்ட ஸூர்யன்போல் மிகவும் ப்ரகாசிக்கின்றனை. ஸுக்ரீவா! உனக்கு வாலியிடம் உண்டாயிருக்கும் பயத்தையும் அவனுக்கு உன்னிடத்தில் உண்டான வைரத்தையும் நான் இப்பொழுது யுத்தத்தில் ஒரு பாணத்தினுலேயே தீர்த்து விடுகின்றனன். பயப்படவேண்டாம். ஸுக்ரீவா! உடன் பிறந்தவனென்ற

---

* பலிக்க வேண்டியகாலம்.

உருவத்தோடிருக்கின்ற உன் சத்ருவை எனக்குக் காட்டுவாயாக. நான் அவனைப் பார்ப்பது மாத்ரமே தடை. பார்த்தவுடனே அவன் அடிக்கப்பட்டு இவ்வனத்தில் தூசியின்மேல் புரளப் போகின்றனன். அவன் என் கண்களில் பட்டு மீளவும் ப்ராணன்களோடு போவானாயின், அப்பொழுது, நான் அந்தத் தோஷஞ் செய்ததற்கு என்னிடம் வந்து அந்தக்ஷணமே என்னை நிந்திப்பாயாக. வாலி என் கண்களுக்கெதிரில் தோன்றி மீளவும் ப்ராணன்களோடு போகாதிருப்பானாயின், அப்பொழுது நீ என்னை நிர்த்தோஷனாகத் தெரிந்து கொண்டு என்னை உடனே நிந்தியாதிருப்பாயாக. நான் ஸப்தஸாலங்களை ஒரே பாணத்தால் பிளந்தது உனக்கு ப்ரத்யக்ஷமாகத் தெரிந்த விஷயமே. அந்த வ்ருக்ஷங்களைப் பிளந்த பலத்தினாலேயே இதோ வாலியைத் தள்ளிவிட்டேனென்று தெரிந்துகொள்வாயாக. வீரனே! நான் எவ்வளவு கஷ்டம் வந்தபொழுதும் தர்மலோபத்தைப் பொறுக்க முடியாமல் இதுவரையில் என்றும் அபத்தஞ் சொன்னதில்லை. இனிமேலும் எவ்வளவு கஷ்டம் நேரிடினும் சொல்லப்போகிறதுமில்லை. மூளைத்த சம்பாப்பயிரை இந்த்ரன் மழைபெய்து பலிக்கச்செய்வதுபோல் நான் வாலியைக் கொல்வதாகச் செய்த ப்ரதிஜ்ஞையைப் பராக்ரமத்தினால் ஸபலமாக்குகின்றனன். எவ்விதத்திலும் ப்ரதிஜ்ஞையைத் தவறமாட்டேன். ஆகையால் ஸந்தேஹமுற்றுத் தடுமாறவேண்டாம். அதனால் நீ இப்போது காஞ்சன மாலையுடைய வாலியை அழைப்பதன் நிமித்தம் எந்த த்வனி செய்தால் அவன் வேகமாகப் புறப்பட்டு வருவானோ அப்படிப்பட்ட சப்தத்தைச் செய்வாயாக. வாலி எப்பொழுதும் வெற்றியால் விளங்குந்தன்மையன்; பலத்தினால் மிகவும் புகழ்பெற்றவன்; மேலும் பலத்தைக் கொண்டாடுந்தன்மையன்;

யுத்தத்தில் விருப்பமுடையவன். முன்பு நீ அவனை எதிர்த்திருக்கிருயாகையால் அந்தக் கோபத்தினுல் நீ சப்தஞ் செய்தவுடனே எவ்வளவும் தாமதஞ் செய்யாமல் கிளம்பி வருவான். சூரராயிருப்பவர் யுத்தத்தில் சத்ருக்கள் செய்யுந் திரஸ்காரத்தை எள்ளளவும் ஸஹிக்கமாட்டார்கள். மேலும், தமது பராக்ரமம் அதிகமென்று நினைத்திருப்பாராயின், அதிலும் விசேஷித்து ஸ்த்ரீகளின் எதிரில் இருப்பார்களாயின், எள்ளளவும் ஸஹிக்கமாட்டார்கள்' என்றனன். பொன்போன்ற வர்ணம் பொருந்திய அந்த ஸுக்ரீவன் ராமன் சொன்னது கேட்டு ஆகாசம் பிளந்து போகும்படி பயங்கரமான கர்ஜனையுடன் கூச்சலிட்டனன். நற்குலத்தில் பிறந்த பெண்டிர்கள் ராஜனில்லாத தோஷத்தினுல் கேட்பவரின்றிப் பரபுருஷர்கள் தலைமயிரைப் பிடித்திழுக்கையில் போகவேண்டிய இடத்திற்குப் போகமுடியாமல் வருத்தப்படுவதுபோல், அந்த ஸுக்ரீவன் செய்த த்வனியைக் கேட்டுப் பசுக்கள் திகிலடைந்து முகவொளி மழுங்கப்பெற்று வ்யாகுலமுற்றுப் போயின. மான்கள் யுத்தத்தில் உடல் முறியப்பெற்ற குதிரைபோல் எள்ளளவும் வேகத்துடன் ஓடிப்போக முடியாதிருந்தன. ஆகாயத்தில் நக்ஷத்ர ரூபத்துடன் விளங்கும் புண்ய புருஷர்கள் தாம் செய்த புண்யமெல்லாம் க்ஷீணித்த பின்பு பூமியில் விழுவதுபோல் பக்ஷிகள் தரையில் விழ்ந்தன. ஸூர்யபுத்ரனுகிய அந்த ஸுக்ரீவன், மேக ஸமூஹம் ஒன்றுகூடிக் கர்ஜிப்பதுபோல், ஸிம்ஹநாதஞ் செய்வதில் ப்ரஸித்தனுகையால் காற்றுல் அலைகள் மேலெழும்பப் பெற்ற ஸமுத்ரம்போல் வேகமாக நாதஞ் செய்து பராக்ரமத்தினுல் தேஜோவிசேஷம் பெருகப் பெற்றிருந்தனன். பதினுன்காவது ஸர்க்கம் முற்றிற்று.

———

வாலி ஸுக்ரீவனது நாதத்தைக் கேட்டு இரண்டாந் தடவை யுத்தத்திற்குப் புறப்படுதலும், தாரை வேண்டா மென்று தடுத்தலும்.

அனந்தரம், தம்பியாகிய ஸுக்ரீவன் மிகுந்த தைர்யத்துடன் செய்த மஹாத்வனியை அந்தப்புரத்தில் இருக்கும் வாலி எள்ளளவும் பொறுக்க முடியாமல் செவியுற்றனன். ஸமஸ்த பூதங்களையும் நடுங்கச்செய்ய வல்ல அந்தஸுக்ரீவனது பெருந்த்வனியைக்கேட்டவுடனே வாலிக்கு ஓரடியில் காமத்தைப்பற்றின மதமெல்லாம் தொலைந்து பெருங்கோபம் உண்டாயிற்று. அவன் கோபத்தினால் சரீரம் முழுவதும் சிவக்கப்பெற்று ஸந்த்யாகாலத்து வெயில் போன்ற காந்தியுடையவனாகி அந்த க்ஷணத்திலேயே ராஹுவால் பிடிக்கப்பட்ட ஸூர்யன் போல்காந்தியற்றவனாயினன். வாலி வெளுத்த கோரைப் பற்களால் பயங்கரனாகிக் கோபத்தினால் எரிகின்ற அக்னி போல் புலப்பட்டு மலர்ந்த செந்தாமரைகளோடும் வெண்மையான தாமரைத்தண்டுகளோடும் கூடின ஓர் மடுவைப்போல் ப்ரகாசித்தனன். ஸுக்ரீவனது ஸிம்ஹநாதம் சூரனுக்கு எள்ளளவும் ஸஹிக்கமுடியாதாகையால் வாலி அதைக் கேட்டவுடனே வேகத்தினால் பூமியைப் பிளப்பவன்போல் அடிகளிட்டுக் கொண்டு யுத்தத்திற்கு விரைவாகப் புறப்பட்டனன். தாரை அப்பொழுது பயத்தினால் வேகமுற்றவளாகி ஸ்னேஹத்தினால் கட்டிக் கொண்டு தன் மனத்திலுள்ள ஸ்னேஹம் வெளியாகும்படி ஹிதத்தை முன்னம் விளைவிக்கவல்ல வாக்யங்களைச் சொல்லத் தொடங்கி 'தீரோத்தமா! நதீப்ரவாஹம் போல் எதிரில்லாமல் பெருகிவருகின்ற இந்தப் பெருங் கோபத்தை, விடியற்காலத்தில் படுக்கையினின்று எழுந்திருந்து சூட்டியனுபவித்த தலைப்பூமாலையை வீசியெ

றிவதுபோல், சிறிதும் சேஷமின்றி விட்டுத் தொலைப்பாயாக. உனக்கு இந்த ஸுக்ரீவனோடு யுத்தஞ் செய்ய வேண்டுமென்னும் விருப்பம் உளதாயின், நாளை விடியற்காலம் அவனோடு யுத்தஞ்செய்வாயாக. நீ மேலான வீரத்தன்மை யுடையவன்; ஆகையால் இங்ஙனஞ் செய்வதில் உனக்கு ஒரு லாகவமும் உண்டாகாது. உன் சத்ருவுக்கும் ஓர் கௌரவம் உண்டாகாது. நீ கொஞ்சமும் முன்பின் ஆலோசியாமல் திடீலென்று யுத்தத்திற்குப் புறப்படுவது எனக்கு எள்ளளவும் யுக்தமாகத் தோற்றவில்லை. நான் உன்னை ஏதுக்காக வேண்டாமென்கிறேனே, அதைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. ஸுக்ரீவன் முன்பு மேல் விழுந்து வந்தனன். நீ கோபத்துடன் புறப்பட்டுச் சென்று யுத்தத்தில் தலைப்பட்டு அவனை அடித்துத் துரத்துகையில் திசைகளைப்பற்றி ஓடிப்போயினன். இப்படி உன்னால் துரத்தப்பட்டது மாத்ரமேயன்றி அடியும்பட்டு விசேஷித்துப் பீடிக்கவும்பட்டு ஓடிப்போயினன். இவன் மீளவும் இவ்விடம் வந்து நின்று உன்னை யுத்தத்திற்கு அழைப்பதைக் கண்டால், இவனுக்கு ஏதேனும் ஒரு பலீயஸ்ஸான ஸஹாயம் இருக்குமோ என்று ஸந்தேஹம் உண்டாகின்றது. இவ்வளவேயன்றி, இந்த ஸுக்ரீவன் கர்ஜிக்கும்பொழுது அவனது கொழுப்பையும் ப்ரயத்னத்தையும் நாதத்தையும் ஆடோபத்தையும் கண்டால், இவைகளுக்கெல்லாம் ஏதோ பெரியகாரணம் ஒன்று இல்லாமற் போகாது. அப்படிப்பட்ட ஸுக்ரீவன் இப்பொழுது இவ்விடம், வருவதுபற்றி ஸஹாயமின்றி இருக்கமாட்டானென்று எனக்கு நன்றாகத் தோன்றுகிறது. இவன் ஏதோ பெரிய ஸஹாயத்தைப் பற்றியே இருக்கின்றனன். அங்ஙனம் ஸஹாயமுண்டாயிருப்பது பற்றியே இங்ஙனம் கர்ஜிக்கிறானன்றி வெறுமனேயன்று. ஸஹாயம் ஏற்பட்டதென்று உனக்கு

எப்படி தெரியுமென்கிருயோ? ஸுக்ரீவன் ஸஹஜ மாகவே மிகுந்த ஸாமர்த்யமுடையவன்; மேலும், பேரறிஞனுமிருப்பவன். ஆகையால் தனக்கு ஸஹாய மாயிருப்பவனது பராக்ரமத்தை நன்கு பரீக்ஷித்துப் பாராமலே அவனைப் பின்ருெடர்ந்து வரமாட்டான். உன் பராக்ரமத்தைக்காட்டிலும் அவன் பராக்ரமம் மேற்பட்டதென்று நிதர்ஶனங்களால் தெரிந்துகொண் டே அவனுடன் வந்திருப்பான். வீரா! நான் வெறு மனே ஊஹித்து இது சொல்வது மாத்ரமேயன்று. நான் முன்னமே குமாரனுகிய அங்கதன் மூலமாக வும் கேட்டிருக்கின்றனன். உனக்கு ஹிதமான உரை களைச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. இந்த நம் குமாரன் அங்கதன் விளையாடுவதற்காக அரண்ய மத் யத்திற்குப் போய் வந்தனன். அங்கு ஆப்தர்களான சாரர்மூலமாய்க்கேட்ட வார்த்தையை எனக்குச் சொல் லினன். அது என்னவென்ருல்'—'அயோத்யாதிபதி யாகிய தசரதமஹாராஜரது குமாரர்களான ராமலக்ஷ் மணர்களிருவர் உளர். அவர்கள் சூரர்கள். யுத்தத்தில் அவரைவெல்ல எவர்க்கும் தரமன்று. அவர்கள் இக்ஷ் வாகுவம்சத்தில் பிறந்தவர்கள்; மிகவும் ப்ரஸித்தி பெற்று எப்படிப்பட்டவர்க்கும் அணுகமுடியாத அவ்வி ருவரும் ஸுக்ரீவனுக்கு ஸஹாயஞ்செய்யும்பொருட்டு ருஶ்யமூகபர்வதத்தில் வந்திருக்கிருர்களாம். உன் தம் பிக்கு ஸஹாயஞ்செய்யவந்த ராமன், இதுவரைக்குமே விராதாதிகளைக் கொன்று ப்ரஸித்தி பெற்றவன்; யுத் தத்தில் மிகவும் கைதீர்ந்தவன்; பின்வாங்காதிருப்ப வன்; சத்ருஸைன்யங்களைப் பாழ்செய்யவல்லவன்; கிளம் பியெரிகின்ற ப்ரளயகாலாக்னிபோன்றவன்.[1] அவன் எல்

---

1 இக்கு 'நிவாஸவ்ருக்ஷஸ்ஸாதூநாமாபந்நாநாம் பரா கதி: । ஆர்த்தாநாம் ஸம்ஶ்ரயஶ்சைவ யஶஸஶ்சைகபாஜநம்' என்றும், 'ஜ்ஞாந விஜ்ஞாநஸம்பந்நோ நிதேஶே நிரத: பிது: । யாதூநாமிவ ஶை

லோர்க்கும் குளிர்ந்த நிழலைக் கொடுத்துத் தாபத்தைப் போக்கும் நிவாஸ வ்ருக்ஷம்போல் ஸாதுக்களுக்கு வருத் தங்களைப்போக்கி ஸந்தோஷத்தைக் கொடுக்கும் புகு

லேந்த்ரோ ஜ்ஞானாமாகரோ மஹாந்' என்றம் மூலம். தாரை ஸ்ரீ ராமனது உண்மையை வெளியிடுகின்றனள். (ஸாதூநாம் நிவாஸவ்ருக்ஷ:) ராமன் ஸுக்ரீவனுக்கு ஸஹாயமாவானாயின் எனக்சேன் ஆக மாட்டானென்று வாலி வினவுவானேவென்று நினைத்து (ஸாதூநாம்) என்கிறாள். தனது நிழலை யடைக்கும் அனுகூலர்க்கு நிவாஸவ்ருக்ஷமாயிருப்பவன். இங்கு ராமனை வ்ருக்ஷமேயாகப் பேதமின் றிச் சொல்லுகையால் எல்லாவிதத்திலும் வ்ருக்ஷத்தோடு ஒத்திருக் கை தோற்றுகிறது. வ்ருக்ஷம் முதலில் தாபத்தைப் போக்கிப் புஷ்பம் பழம் முதலியவற்றைக் கொடுக்கையால் ஸமஸ்த இந்த்ரியங்களுக் கும் எப்படி த்ருப்தியை விளைவிக்குமோ, அப்படியே இவனுமென்று கருத்து. (நிவாஸ) என்னும் விசேஷணத்தால் ஒருக்கால் நிழல் கொடுக்கும் வ்ருக்ஷமன்றென்றும் எப்பொழுதும் நிழல் கொடுக்கும் வ்ருக்ஷம் போன்றவனென்றும் தோற்றுவிக்கப்பட்டது 'வாஸுதேவதருச்சாயா நாதிஸீதா நவர்மதா। நரகாங்காரஸமநீ ஸா கிமர்த்தம் நஸேவ்யதே' (வாஸுதேவனென்னும் வ்ருக்ஷத்தினுடைய நிழல் அதிக குளிர்ச்சியுடையதன்று, ஸந்தாபத்தைக் கொடுப்பதுமன்று, நரக மென்னும் நெருப்பை அணைக்கவல்லது' என்று க்ரந்தாந்தரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நாம் ஸுக்ரீவனுக்கு த்ரோஹஞ்செய்வது பற்றிச் சிறிதும் ஸாதுக்களாகமாட்டோம். ஆகையால் அவன் நமக்கு இப்படியாகமாட்டான். ஸாதுக்களுக்கே அவன் இப்படியாவான். (ஆபந்நாநாம் பராகதி:) தன்னை அடைந்தவர்களுக்குப் பெருந் திக்காயிருப்பவன். 'அநந்யாஸ் சிந்தயந்தோமாம் யே ஜநா: பர்யுபாஸதே। தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்' 'எவர் இதர விஷயங்களில் மனம் வைக்காமல் வேறொரு கதியுண்டென்று நினையாமல் என்னையே த்யானஞ்செய்து கொண்டு என்னை உபாஸிக் கிறார்களோ, அங்ஙனம் எப்பொழுதும் என்னிடத்திலேயே மனஞ் செல்லப்பெற்ற அவர்களுடைய யோகக்ஷேமங்களை நானே நடத்து கிறேன்' என்கிறபடியே தன்னைப் பற்றினார்விஷயத்தில் உபாயானுஷ்டானதசை முதலாகப் பலஸித்திவரையிலும் நடுவுள்ள ஸமஸ்த

மிடமாயிருப்பவன் ; தன்னை யடைந்தவர்களுக்கு அவன்

கார்யங்களேயும் நடத்துவோனென்று பொருள். (ஆர்த்தாநாம் ஸம ஸ்ரயஸ்சைவ) அந்த ஆஸ்ரிதர்களில் வருந்தினவர்களுக்கோ வென் ருல் (ஸாஸ்ரயஃ) எப்பொழுதும் தகுந்த ஆஸ்ரயமானவன். ஸர்வ கார்யங்களேயும் நிர்வஹிக்குந் தன்மையன். இப்படியே இருக்கட்டும்; எனக்கும் இப்படிப்பட்ட ஆஸ்ரயம் ஒன்று கிடைக்குமென்கிறதாகக் கொண்டு சொல்லுகிருள்—(யஶஸஸ்சைகஹாஜநம்) கீர்த்திக்கு ஒரே இருப்பிடமாயிருப்பவன். அப்படிப்பட்ட கீர்த்தியுடையவன் ராமனெ ருவனே. அதாவது இப்படிப்பட்ட ரக்ஷகன் உலகத்தில் மற்றொரு வன் எவனும் அகப்படான். ஆகையால் இப்படிப்பட்ட ரக்ஷகனைப் பற்றின ஸுக்ரீவனைத் திடீலென்று பார்க்கலாகாது. இங்கு 'சதுர் வியா ஹஜந்தே மாம ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந| ஆர்த்தோ ஜிஜ்ஞா ஸுரர்யார்யீ ஜ்ஞாநீச ஹரதர்ஷஹ' (அர்ஜுனு! இழந்த ஐஸ்வர்யத் தை விரும்புமவனும் ஜ்ஞானத்தை விரும்புவமனும் புதிதாக ஐஸ்வர் யத்தை விரும்புமவனும் ஜ்ஞாநியும் ஆகிய புண்யவான்களாகிய இந் நான்குவகைப்பட்ட ஜனங்களும் என்னை அடைகின்ருர்கள்) என்று சொல்லப்பட்ட அதிகாரிகள் யாவரும் சொல்லப்படுகின்றனர். எப் படியென்ருல் (ஸாயஙிநாம்) ஆத்மயாதாத்ம்யத்தை அறியவிரும்பின ஜிஜ்ஞாஸுக்களுக்கு-கைவல்யத்தை ஆசைப்படுமவர்களுக்கு. (ஆபந் நாநாம்) தமக்கு இதுவரையில் இல்லாத ஐஸ்வர்யத்தை விரும் பும் அர்த்தார்த்திகளுக்கு. (ஆர்த்தாநாம்) இழந்த ஐஸ்வர்யத்தைப் பெற விரும்பும் ஆர்த்தர்களுக்கு. (யஶஸஸ்ச) 'உதாராஸ் ஸர்வ ஏ வைதே ஜ்ஞாநீத்வாத்மைவ மேமதம்' (இவர்களெல்லோரும் உதாரர் களே - தாராளமுடையவர்களே. ஜ்ஞானிமாத்ரம் எனக்காத்மாவே யென்று என் அபிப்ராயம்) என்று பகவான் சொல்லும்படியான மஹாயஶஸ்ஸையுடைய ஜ்ஞானிக்கு. இந்த ஒருமையால் ஜ்ஞானி மிகவும் அரியனென்று தோற்றுகிறது. (ஏகஹாஜநம்) ஒரே ஸ்தான மாயிருப்பவன் - நிகரில்லாத ஆஸ்ரயம். அன்றியே (ஸாயஙிநாம்) உபாஸகர்களுக்கும், (ஆபந்நாநாம்) 'ஸக்ருதேவப்ரபந்நாய' என்கிற படியே ஒருகால் நீயே தஞ்சமென்று தன்னைப்பற்றி அவ்வளவில் பயந்தீர்ந்திருக்கும் ப்ரபன்னர்களுக்கும், (ஆர்த்தாநாம்) ஒருகால் பற் றியும் ஸம்ஸார பயத்தினுல் ஓயாது முறையிடும் ஆர்த்த ப்ரபன்னர்

மேலானகதி; வருந்தினவர்களுக்கு நல்ல புகுமிடமா யிருப்பவன்; கீர்த்திக்கு முக்யஸ்தானமாயிருப்பவன். அந்த ராமன் லோகஜ்ஞானமும் சாஸ்த்ரஜ்ஞானமும் மிகுந்திருக்கப் பெற்றவன்; தந்தையின் ஆஜ்ஞையைச் சிறிதும் தாண்டாதவன்; ஹிமவத்பர்வதம் கைரிக

களுக்கும், (யஶஸஃ) கீர்த்திக்கும், (ஏகஹாஜநம்) ஒரே இடமாயிருப்பவன். இப்படிப்பட்டவன் மற்றொருவன் இல்லையென்றபடி. ஆஸ்ரிதர்கள் வேண்டினவற்றை அறிந்து நிறைவேற்றுகைக்கீடான ஜ்ஞான பூர்த்தியைச் சொல்லுகிறது—(ஜ்ஞாந விஜ்ஞாநஸம்பந்நஃ) ஜ்ஞானமாவது லௌகிகஜ்ஞானம். விஜ்ஞானமாவது—சாஸ்த்ராப்யாஸத்தால் பிறக்கும் ஜ்ஞானம். அவ்விரண்டும் நிறைந்திருக்கப்பெற்றவன். அன்றியே ஜ்ஞானஸ்வரூபனும் ஜ்ஞானகுணம் நிறைந்தவனுமாவன். இங்ஙனம் ஜ்ஞான பூர்த்தியைச் சொல்லி, மேல் அனுஷ்டான பூர்த்தியைச் சொல்லுகிறான்—(நிதேஶே நிரதஃ பிதுஃ) பித்ருவசன பரிபாலனம் ப்ரதானமாகையால் இங்குச் சொல்லப்பட்டதேயன்றி இது மற்றைத் தர்மங்களுக்கும் உபலக்ஷணம். மற்ற தர்மங்களையும் இங்குச் சொன்னாற்போலவே கண்டுகொள்க. ஆகையால் லௌலப்யமும் இங்குச் சொல்லப்பட்டது. ஸமஸ்த கல்யாணகுண ஸம்ருத்தியைச் சொல்லுகிறான்—(குணாநாமாகரஃ) குணங்களுக்குப் பிறப்பிடம். இங்குக் குணங்களுக்கென்னும் பன்மையால் அவை கணக்கிட முடியாவென்று தெரிவிக்கப்பட்டது. (ஆகரஃ) கனி யென்கையால் குணங்களையுடைய ராமன் குணங்களைக்காட்டிலும் மேற்பட்டவனென்று தோற்றுவிக்கப்பட்டது. (மஹாந்) பெரியகனி யென்கையால்—குணங்களுக்குக்கூட ஸ்வபாவஸித்தமான மேன்மையைக்காட்டிலும் மேன்மேலும் மேன்மையைக் குணியாகிய ராமனது ஸ்வரூபம் விளைவிக்குமென்று தெரிவிக்கப்பட்டது. (யாதுநாமிவஶைலேந்த்ரஃ) (யாதுநாம்) என்கையால் கைரிகதாதுக்கள்போல் ராமகுணங்களும் ஜ்ஞானம் சக்தி பலம் ஐஶ்வர்யம் என்னும் பேதங்களால் பற்பல வகைப்பட்டிருக்குமென்கை சொல்லப்பட்டது. (ஶைலேந்த்ர இவ) ஹிமவத்பர்வதம்போல் என்னும் உபமானத்தால் ராமனிடத்திலுள்ள குணங்களுக்குச் சலனமில்லாமை, அல்லது—ராமனது சலியாத தைர்யத்தின் மிகுதி தோற்றுகிறது.

தாதுக்களுக்கு விளைநிலமாயிருப்பதுபோல், ஸமஸ்த குணங்களுக்கும் ஆகரமாயிருப்பவன். அதனால் யுத்தங்களில் ஜயிக்க முடியாதவனாகி இவ்வளவு அவ்வளவென்று அளவிடவொண்ணாத மேலான மஹாத்ம்யங்களையுடைய அந்த ராமனுடன் விரோதித்துக்கொள்வது நமக்கு எவ்வளவும் யுக்தமன்று. சூரனே! உனக்கு ஒரு வார்த்தை சொல்லுகிறேன். உன்மேல் ஓர் தோஷத்தை ஏற்றவேண்டுமென்று எப்பொழுதும் விரும்புபவளல்லேன். நான் ஹிதஞ் சொல்லிக்கொண்டிருக்கையில் தோஷத்தை ஏற்றவேண்டாம். உனக்கு ஹிதஞ் சொல்லுகிறேன். அதைச் செவிகொடுத்துக் கேட்பாயாக. அங்ஙனம் கேட்டு அப்படியே நடத்துவாயாக. வீரா! ஸுக்ரீவனை யௌவராஜ்யத்தில் (இளவரசு பட்டத்தில்) சீக்ரத்தில் நன்கு பட்டாபிஷேகஞ் செய்வாயாக. பலிஷ்டனாகிய தம்பியுடன் யுத்தம் வைத்துக்கொள்ள வேண்டாம். ஏனெனில்—இப்பொழுதுள்ள ஸ்திதியைப்பற்றி ஆலோசித்துப் பார்க்கையில், ராமனோடு ஸ்னேஹஞ் செய்துகொள்வதும் ஸுக்ரீவனோடு வைரத்தைத் தூரத்தில் துறந்து ப்ரீதிபண்ணிக்கொள்வதும் உனக்குத் தகுந்தவையென்று எனக்குத்தோற்றுகின்றது. உன் தம்பியாகிய இந்த ஸுக்ரீவன் உனக்கு எவ்விதத்திலும் உபலாலனஞ் செய்யத் தகுந்தவனேயல்லவா? இவன் ருர்யமூக பர்வதத்தில் இருந்தால் என்? இவ்விடத்திலிருந்தால் என்? எப்படியாயினும் உன் பந்துவேயன்றி வேறுபட்டவனல்லன். உனக்கு அவனைப்போன்ற பந்து பூமியில் எங்கும் மற்றொருவனும் அகப்படான்: ஆகையால் அவனுக்குப் பணம் பொன் முதலியவற்றைக் கொடுத்துக் கௌரவத்திலும் ஐஶ்வர்யத்திலும் உனக்குப் பின் இரண்டாவனாகச் செய்து வைத்துக்கொள்வாயாக. ஸுக்ரீவன் என்றும்

உனக்குப் பந்து. ஆகையால் இவனுடன் விரோதத்தை விட்டு அகன்ற கண்டத்துடன் விளங்கும் ஸுக்ரீவனை உன்பார்ஶ்வத்தில் இருக்கும்படி செய்விப்பாயாக. நீ இப்பொழுது தம்பியுடன் ஸ்னேஹஞ் செய்துகொள்வாயாக: இப்பொழுது உனக்கு இவனைக் காட்டிலும் வேறு கதி ஒருவனும் இல்லை. எனக்கு ப்ரியஞ் செய்ய வேண்டுமென்று நீ நினைப்பாயாயின், நான் உன் ஹிதத்தை விரும்புபவளென்று நீ அறிந்திருப்பாயாயின், நான் இவ்வளவு பல ப்ரயத்னங்களோடு வேண்டிக்கொள்வதற்கு ஹிதமான என் வார்த்தையை அங்கிகரித்து அவ்வண்ணம் செய்வாயாக. கோபத்தை விட்டு மனக்கலக்கம் தெளியப்பெற்று நான் சொல்லும் ஹிதவசனத்தைச் செவியில் ஏற்றுக்கொள்வாயாக. கோபத்தையே பின்றொடர்ந்து செல்வது யுக்தமன்று. நீ இந்த்ரனை நிகர்த்த பராக்ரமமுடையவனாயினும் கோஸலராஜன் குமாரனாகிய ராமனோடு போராடுவது உனக்கு எவ்வளவும் யுக்தமன்று' என்றனள். தாரை ஹிதஞ்சொல்ல வேண்டிய அக்காலத்தில், வாலிக்கு இவ்வளவுதாரம் மேன்மையை விளக்கும்படியான நல்வார்த்தைகளைச் சொன்னாளல்லவா? ஆயினும் வாலி ம்ருத்யுவின் கையில் அகப்பட்டிருப்பதுபற்றியும் விநாசகாலம் ஸமீபித்திருப்பது பற்றியும் அவனுக்கு அந்த ஹித வசனங்கள் எவ்வளவும் ருசிக்கவில்லை. பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

வாலி தாரைக்கு ஸமாதானங் கூறுதலும், வாலி ஸுக்ரீவர்கள் மீளவும் யுத்தஞ் செய்தலும், ராமன் வாலிமேல் பாணப்ரயோகஞ் செய்தலும்.

சந்த்ரபிம்பம்போன்ற முகமுடைய தாரை இங்ஙனஞ் சொல்லிக்கொண்டிருக்கையில் வாலி அவளை அதட்டி

'அழகிய முகமுடையவளே! இவன் கர்ஜனை செய்கின்றனன். அதிலும் எனக்குத் தம்பியும் விசேஷித்துப் பகைவனுமாயிருந்து ஸிம்ஹநாதம் செய்துகொண்டிருக்கையில், இவனது ஆடோபத்தை எந்தக் காரணத்தைப் பற்றிப் பொறுத்திருப்பேன்? நீ பயப்படுந் தன்மையளாகையால் உனக்குத் தெரியாது. எப்பொழுதும் எவரிடத்திலும் திரஸ்காரம் பெறுமலும் யுத்தங்களில் பின் வாங்காமலும் விளக்கமுற்றிருக்கும் வீரர்களுக்கு எவராயினும் திரஸ்காரஞ் செய்வார்களாயின், அதைப் பொறுப்பது மரணத்தைக்காட்டிலும் மேலாயிருக்கும். மரணத்தையாயினும் பொறுத்திருப்பார்களேயன்றி அவமானத்தைப் பொறுக்க வல்லரல்லர். இப்படிப்பட்ட நான் கண்டம் மந்தமாயிருக்கப்பெற்ற ஸுக்ரீவன் யுத்தத்தில் விருப்பமுற்றுப் போர் புரிய வருவாயென்று கர்ஜித்துக் காட்டும் ஆடோபத்தை எள்ளளவும் பொறுக்க மாட்டேன். ராமனுல் எனக்கு ஏதேனும் பாதை உண்டாமென்று நீ எவ்வளவும் வருத்தப்பட வேண்டாம். அவன் தர்மங்களை யுணர்ந்தவன்; பிறர் செய்யும் கார்யாகார்யங்களை நன்காராய்ந்தறியுந் திறமுடையவன். ஆகையால் நிரபராதியாகிய என்னைக் கொல்லும் பாபகார்யத்தை எப்படி செய்வான்? தாரே! நீ உன்னுடன் வந்த ஸ்த்ரீகளோடு திரும்பிப் போவாயாக. 'போ' என்ருல் மீளவும் என்னை ஏன் பின்ருெடர்ந்து வருகின்றனை? என்னிடத்தில் உனக்குள்ள ஸ்னேஹத்தைக் காட்டினை. என்னிடத்தில் உனக்குள்ள பக்தியையும் நிறைவேற்றினை. இவ்வளவே போதும். நான் போய் ஸுக்ரீவனேடு யுத்தஞ் செய்கின்றனன். நீ தொந்தரவு பட வேண்டாம். அவனது கொழுப்பை மாத்ரம் போக்குவேனன்றி ப்ராணன்களை வாங்கமாட்டேன். போர் புரிவதில் மனக்கவலை யுற்றிருக்கின்ற நீ அவன் ப்ரா

ணன்களைக் காப்பது எப்படி யென்னவேண்டாம். அவன் ப்ராணன்களை வாங்காதிருக்கையே யன்றோ நம் விருப்பம். நான், அவன் யுத்தத்தில் தலைப்படினும் நான் விரும்பினபடி அவன் ப்ராணன்கள் போகாதிருக்கும்படி பாதுகாத்து வருவேன். ஆகையால் அவன் என்னால் வ்ருக்ஷங்களாலும் குத்துவரிசைகளாலும் பீடிக்கப்பட்டுத் திரும்பிப் போய் விடுவான். துராத்மாவாகிய அந்த ஸுக்ரீவன் யுத்தத்தில் என் கர்வத்தையும் என் ப்ரயத்னத்தையும் எவ்வளவும் ஸஹிக்க வல்லனல்லன். தாரே! நீ தெரிந்தமட்டும் சொல்லி எனக்குப் புத்தியால் நிரம்பவும் ஸஹாயஞ் செய்தனை. என்னிடத்திலுள்ள ஸ்னேஹத்தையும் காட்டினை; இனிப் போகலாம். என் ப்ராணன்களின் மேல் உனக்கு ஆணையிடுகின்றனன். சீக்ரம் திரும்புவாயாக. நான் ஜயிக்கும்படி ஆசிர்வாதஞ் செய்து மீளுவாயாக. நான் என் தம்பி ஸுக்ரீவனை யுத்தத்தில் வென்று திரும்பி வருகின்றேன்' என்றனன். இனிய உரைகளை உரைக்கின்ற அந்தத் தாரை தன் விஷயத்திலும் பிறர் விஷயத்திலும் ஒரே ரீதியாக ஹிதத்தை விரும்புந் தன்மையளாகையால், பர்த்தாவுக்கு மறுமொழி ஏதுஞ் சொல்லமுடியாமல் அவ்வாலியை அணைத்து அமங்கலமென்னும் பயத்தினால் மெதுவாக ரோதனஞ் செய்துகொண்டு அவனுக்கு ப்ரதக்ஷிணஞ் செய்தனள். அனந்தரம் தாரை வாலிக்கு க்ஷேமம் உண்டாகவேண்டுமென்று பௌராணிக மந்த்ரங்களால் ஸ்வஸ்த்யயனஞ் செய்து மனவருத்தத்தினால் ஒன்றும் தோற்றப்பெறாமல் பரிதபித்துக்கொண்டு ஸ்த்ரீகளோடுகூட அந்தப்புரத்திற்குப் போயினள். இங்ஙனம் தாரையும் அவளுடன் வந்த ஸ்த்ரீகளும் அந்தப் புரத்திற்குப் போனபின்பு, அதுவரையில் அவர்கள் பயப்படுவார்களென்று தன் கோபத்தை அடக்கிக்கொண்டிருந்த வாலி, அப்பொழுது கோபித்து மஹாஸர்ப்பம்போல் நெடுமூச்செறிந்து

கொண்டு கிஷ்கிந்தாபுரத்தினின்று வெளிப்பட்டனன். மஹாதேஜஸ்வியும் மிகுந்த கோபிஷ்டனுமாகிய அவ் வாலி நெடுமூச்செறிந்துகொண்டு பகைவனுகிய ஸுக்ரீவனைக் காண்பதற்காக நாற்புறத்திலும் கண்ணை விட்டுப் பார்த்தனன். அனந்தரம் வீரலக்ஷ்மி யமைந்த அவ்வாலி, ஸுக்ரீவன் இடையில் வஸ்த்ரத்தைக் கெட்டியாகக் கட்டிக்கொண்டு யுத்தத்திற்கு ஸந்நாஹப்பட்டு ஜ்வலித்துக்கொண்டிருக்கும் அக்னிபோல் பொன் வர்ணம் விளங்கப்பெற்று நின்றிருக்கக் கண்டனன். மஹாகோபஸ்வபாவனுகிய அவ்வாலி, அங்ஙனம் யுத்த ஸந்நாஹத்துடன் அருகிலிருக்கின்ற மஹாவீர்யமுடைய ஸுக்ரீவனைக் கண்டு தானும் இடையில் வஸ்த்ரத்தைக் கெட்டியாகக் கட்டிக்கொண்டனன். இங்ஙனம் வீர்யசாலியாகிய அவ்வாலி இடையில் ஆடையைக் கட்டிக்கொண்டு யுத்தத்தில் உத்ஸாஹம் விளங்கப் பெற்றுக் கையைப் பிடியாகப் பிடித்துக்கொண்டு ஸுக்ரீவன்மேல் தலைப்பட்டனன். ஸுக்ரீவனும் கெட்டியாகப் பிடியைப் பிடித்துக்கொண்டு மிகுந்த வேகத்துடன் காஞ்சனமாலையுடைய வாலிமேல் எதிர்த்துப் போயினன். வாலி கோபத்தினுல் கண்கள் சிவக்கப்பெற்று அங்ஙனம் தன்மேல் யுத்தத்தில் கைதீர்ந்த வீரனுகிய ஸுக்ரீவன் மஹாவேகத்துடன் வந்துகொண்டிருப்பது கண்டு ‘இதோ! இந்தப் பிடியைப் பார். விரல்களையெல்லாம் கெட்டியாக மடக்கிக்கொண்டு நன்றாக இதைப் பிடித்துக் கொண்டிருக்கிறேன். இதனுல் வேகத்துடன் ஒரு குத்து குத்ினவுடன் உன் ப்ராணன்களை எடுத்துக் கொண்டுபோம்’ என்றனன். வாலி இங்ஙனஞ் சொல்லுகையில் ஸுக்ரீவன் கோபித்து வாலியைப் பார்த்து ‘இதோ என்பிடி உன் தலையில் பட்டு உன் ப்ராணன்களையே தொலைக்கப் போகின்றது’

என்றனன். வாலி அங்ஙனம் சொன்னதுமாத்ரமன்றித் தீரர்களின் ஏற்பாட்டைக் கடந்து ஸுக்ரீவன்மேல் எதிர்த்துவந்து முட்டியால் குத்துகையில் அந்த ஸுக்ரீவன் மிகவுங்கோபித்து வேகத்துடன் வாலிமேல் எதிர்த்து உடம்பெல்லாம் ரக்தம் பெருகப்பெற்று அருவியோடு கூடின மலைபோல் இருந்தனன். அப்பொழுது ஸுக்ரீவனும் வேர்களுடன் ஒரு ஸாலவ்ருக்ஷத்தைத் தனது பராக்ரமத்தினால் அநாயாஸமாகத் தடையின்றிப் பிடுங்கி வாலியின் அவயவங்களெல்லாவற்றிலும் படும்படி வஜ்ராயுதத்தினால் ஓர் பெரிய மலையை அடிப்பதுபோல் அடித்தனன். அவ்வாலியும் அந்த ஸாலவ்ருக்ஷத்தின் அடியினால் அவயவங்கள் விலவிலக்கப் பெற்று ஸமுத்ரத்தில் பாரத்தின் மிகுதியால் மூழ்குகின்ற வர்த்தகர்களின் ஓடம்போல் நடுக்க முற்றனன். பயங்கரமான பல பராக்ரமங்கள் அமைந்தவர்களும் கருடனைப் போன்ற வேகமுடையவர்களும் பயங்கரமான உருவத்துடன் விளக்கமுற்றவர்களுமாகிய அந்த வாலி ஸுக்ரீவர்கள் பூர்ணிமையினன்று சந்த்ரனும் ஸூர்யனும்போல் மேல்மேலும் வளர்ந்து வந்தனர். பகைவரை அடக்குந் தன்மையுள்ள அவ்விருவரும் யுத்தத்தில் ஒருவர்மேல் ஒருவர் அவகாசந் தேடிக் கொண்டிருந்தனர். அனந்தரம் பல வீர்யங்கள் அமைந்த வாலி மாத்ரம் கொஞ்சநேரத்தில் யுத்தத்தில் பலம் பெருகப் பெற்றவன். ஸூர்ய புத்ரனாகிய ஸுக்ரீவன் மஹாவீர்யனாயிருந்தும் வாலியிடம் அது ஓங்கப்பெறாமல் வீர்யம் குறையப் பெற்றனன். அப்பொழுது ஸுக்ரீவன் வாலியால் தன் கொழுப்படங்கவும் ப்ராக்ரமம் குறையவும் பெற்று வாலியிடம் கோபித்துக்கொண்டு தனது அற்பத்தனத்தை வெளியிடலாயினன். பிறகு அவ்விருவரும் கிளைகளோடும் நுனிகளோடும் பிடுங்கினவ்ருக்ஷங்



1707. வாலி ஸுக்ரீவர்களின் யுத்தமும், வாலியின்மேல் ராமன் பாணப்ரயோகஞ் செய்தலும்.

களாலும் வஜ்ராயுதத்தின் நுனிகளை நிகர்த்த நகங்களாலும் குத்துவரிசைகளாலும் முழந்தாள்களாலும் கால்களாலும் கைகளாலும் ஒருவனை யொருவன் அடிக்கடி புடைத்துக்கொண்டு வ்ருத்ராஸுரனும் தேவேந்த்ரனும்போல் பயங்கரமாக யுத்தஞ் செய்தனர். வனசாரிகளான அந்த வானரர்களிருவரும் ரக்தத்தினால் நனைந்து பெருங் கர்ஜனைகளால் ஒருவனை யொருவன் அதட்டிக்கொண்டு காண்போர்களனைவரும் தத்தளிக்கும்படி யுத்தஞ்செய்தனர். அதன்மேல் ஸ்ரீராமன், வானரஸ்ரேஷ்டனாகிய ஸுக்ரீவன் பலத்தில் குறைந்து வாலியின்முன் நிற்கமுடியாமல் தன் முயற்சி தெரியும்படி அடிக்கடி நாற்றிசைகளையும் நோக்கிக் கொண்டிருக்கக் கண்டனன். அப்பால் வீரனும் மஹாதேஜஸ்வியுமாகிய ராமன் கபீந்த்ரனான ஸுக்ரீவன் வருந்துவதைக் கண்டு வாலியைக் கொல்லும் பொருட்டு அதற்குத் தகுந்த நல்ல பாணம் எதுவென்று ஆலோசித்தனன். பிறகு ராமன் மஹாவிஷமுள்ள ஸர்ப்பம்போன்ற ஓர் பாணத்தைத் தனுஸ்ஸில் ஸந்தானம் பண்ணி யமன் காலசக்ரத்தைப்போல் அந்தத் தனுஸ்ஸைக் காதுவரையிலும் இழுத்தனன். அந்த ராமனது நாணும் கைத்தலமும் ஒன்றோடொன்றுறைந்து மோதிக்கொள்வதாலுண்டாகும் பெருங் கோஷத்தைக் கேட்டுப் பெருப்பெரிய பக்ஷிகளும் ம்ருகங்களும் ப்ரளயகாலத்திற்போல் பயந்து ஏதும் தெரியாமல் திசைகளைப்பற்றி ஓடிப்போயின. ராமன் அந்த மஹாபாணத்தை வில்லினின்றும் விட்டவுடனே அது வஜ்ராயுதம்போல் பெருங்கோஷமிட்டுக் கொண்டு தளதளவென்று மின்னற்கொடிபோல் விளக்கமுற்று வாலியின் வக்ஷஸ்தலத்தில் போய்ப்பொத்துக்கொண்டது. மஹாதேஜஸ்வியும் வீர்யத்தில் கர்வ

மூற்றவனுமாகிய அந்த வானரேஸ்வரன் வாலி அந்தப் பாணவேகத்தினால் அடிக்கப்பட்டு ஒளி மழுங்கி ப்ரஜ்ஞையும் தப்பிக் கார்த்திகைமாஸத்துப் பூர்ணிமையினன்று உத்ஸவத்தின் முடிவில் நிலத்தில் தள்ளப்பட்ட இந்த்ரத்வஜம் விழுவதுபோல் கீழே விழுந்தனன். புருஷதிலகனாகிய ராமன் ப்ரளயகாலத்தில் ருத்ரன் முகத்தினால் புகையோடுகூடி ஜ்வாலைகளை விடுகின்ற அக்னியைக் கக்குவதுபோல் ப்ரளய காலத்து மிருத்யுவை நிகர்த்துப் பொன்னாலும் வெள்ளியாலும் அலங்காரஞ் செய்யப்பெற்றுப் பகைவரைப் படுசூர்ணஞ் செய்வதும் தகதகவென்று விளங்குவதும் இறகுகள் கட்டப்பெற்றிருக்கையால் புகையோடுகூடின அக்னிபோல் புலப்படுவதுமாகிய அம்மேலான பாணத்தை வாலியின்மேல் ப்ரயோகித்தனன். அதன்மேல் அந்த இந்த்ரகுமாரனாகிய வாலி யுத்தத்தில் தேஹம் முழுவதும் ரக்தப்ரவாஹத்தின் பெருக்கினால் நனைந்து ப்ரஜ்ஞை தவறப்பெற்று நன்கு புஷ்பித்த அசோகவ்ருக்ஷம் காற்றினால் முறிக்கப்பட்டுத் தரையில் வீழ்வதுபோலும் உத்ஸவத்தின் முடிவில் தள்ளப்பட்ட இந்த்ரத்வஜம் பூமியில் வீழ்வதுபோலும் தான் பூமியில் வீழ்ந்தனன். பதினாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## வாலி ராமனை நிந்தித்தல்.

அதன்மேல் யுத்தத்தில் கைதேர்ந்த வல்லவனாகிய வாலி ராமபாணத்தினால் அடிக்கப்பட்டு அறுக்கப்பட்ட வ்ருக்ஷம்போல் கபீலென்று தரையில் வீழ்ந்தனன். மேலான பொன்பூஷணங்களை அணிந்திருக்கின்ற அவ்வாலி கட்டுக்கயிறு அறுகையில் இந்த்ரத்வஜம் தரையில் விழ்வதுபோல் அவயவங்களெல்லாந் தரையில் படும்படி விழுந்தனன். வானரஸமூஹங்களுக்கெல்லாம் ப்ரபுவாகிய அவ்வாலி தரையில் வீழ்ந்த

வுடனே சந்த்ரனில்லாத ஆகாயம்போல் பூமி முழுவதும் விளக்கமுறுதிருந்தது. அங்ஙனம் அம்மஹானுபாவன் தரையில் வீழ்ந்திருப்பினும் அவன் தேஹத்தைக் காந்தியும் ப்ராணன்களும் ப்ரதாபமும் விட்டுப் பிரியவில்லை. வீரனாகிய அவ்வானரர்தலைவன் அந்தக் காஞ்சனமாலையைத் தரித்திருக்கையால் சுற்றிலும் ஸந்த்யாராகம் படர்ந்திருக்கப்பெற்ற மேகம் போல் புலப்பட்டனன். அப்பொழுது அவ்வாலி தரையில் வீழ்ந்திருப்பினும் அவன் தேஹமும் அவனது காஞ்சனமாலையும் அவனது மர்மஸ்தானத்தில் பொத்துக் கொண்டிருக்கிற ஸ்ரீ ராமபாணமும் ஆக இம்மூன்றும் விளங்குவதுகண்டால் அவனது தேஜஸ்ஸு அம்மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டதுபோல் மிகவும் விளங்கிற்று. அந்த அஸ்த்ரம் ஸாதாரணமாகத் தன்னால் மரணம் அடைந்தவர் அனைவர்க்கும் ஸ்வர்க்கமார்க்கத்தை விளைவிக்கவல்லது. அது மேலும் ராமதனுஸ்ஸினின்று புறப்பட்டதாகையால் வீரனாகிய அவ்வாலிக்குப் புனராவ்ருத்தியில்லாத பரமகதியையே விளைவித்தது. அங்ஙனம் அப்பொழுது யுத்தத்தில் தரையில் விழுந்து ஜ்வாலையில்லாத அக்னிபோன்றவனும் 'பாணத்தை நன்றாக எய்தான்' என்று பாணப்ரயோகஞ்செய்த அவ்வீரனைப் புகழ்ந்து 'அவன் எங்கிருக்கிறான்' என்று தெரிந்துகொள்ளும் பொருட்டுப் பெருவேதனையுடன் மெல்ல மெல்ல உற்றுப் பார்க்கின்றவனும் புண்யம் முடிகையில் தேவலோகத்தினின்று பூமியில் வீழ்ந்த யயாதியைப் போலவும் ப்ரளயகாலத்தில் தெய்வத்தினால் பூமியில் தள்ளப்பட்ட ஸூர்யன் போலவும் புலப்பட்டுக்கொண்டு மஹேந்த்ரனைப்போல் எதிரிடவொண்ணாதவனும் மஹேந்த்ரனைப்போல் எதிர் நின்று பிறர்க்குப் பொறுக்க முடியாதவனும் ஸிம்ஹம்போல் அகன்ற மார்புடைய

வனும் நீண்ட பாஹுதண்டங்களும் பளபளவென்று ஜ்வலிக்கின்ற முகமும் பொன்வர்ணமான கண்களும் காஞ்சனமாலையும் விளங்கப் பெற்றுத் தரையில் வீழ்ந் திருக்கின்றவனுமாகிய வாலியை ராமன் கண்டு தானும் லக்ஷ்மணனுமாக அவனருகிற் சென்றனன். வாலியும் ராமனையும் மஹாபலனாகிய லக்ஷ்மணனையும் கண்டு வணக்கத்துடன் பருஷமாகவும் தர்மம் அமைந்திருக் கும்படிக்கும் சொல்லத்தொடங்கி 'நீ மஹாராஜனாயி ருக்கின்றனை; மிகவும் புகழ்பெற்றவன்; சாஸ்த்ரங்க ளில் விருப்பமுடையவன்; நற்குலத்தில் பிறந்தவன்; பலம் மிகுந்திருக்கப் பெற்றவன்; மஹாதேஜஸ்வி; பல வ்ரதங் களை ஆசரித்தவன். நான் உன்னை எதிரிடாமல் மற்றொ ருவனோடு யுத்தஞ் செய்யும் ஸம்ப்ரமத்தி லிருக்கையில் என்மார்பில் பாணத்தை நாட்டி யடித்தனையே! இப் படி வேறுமுகமாயிருப்பவனை அடிப்பதனால் உனக்கு என்ன பெருமை உண்டாயிற்று?' ராமன் காருண்ய மறி ந்தவன்; ப்ரஜைகளின் ஹிதத்தில் மனவூக்க முடைய வன்; தயை நிறைந்தவன்; உத்ஸாஹத்தை வென்றவன்; பெரியோர்களது ஆசாரங்களை அறிந்தவன்; வ்ரதங்க ளைத் தவறாமல் நடத்துந்தன்மையன்' என்று பூமியில் உன்கீர்த்தியை ஸமஸ்த பூதங்களும் சொல்லுகின்றன. ராஜனே! இந்த்ரியநிக்ரஹமும் சித்தப்ரசாந்தியும் (மன அடக்கமும்) பொறுமையும் தைர்யமும் ஸத்யமும் பராக்ரமமும் அபராதிகளிடம் தண்டனையும் ஆகிய இவை ராஜலக்ஷண மென்பார்கள். நான், உன்னிடத் தில் அந்த நற்குணங்களையும் மேலும் நீ பெருங்குலத் தில் பிறந்ததையும் நினைத்துத் தாரை போகவேண்டா மென்று தடுத்தபோதிலும் கேளாமல் எனக்கு நீ ஏதுங் கெடுதி செய்ய மாட்டாயென்று ஸுக்ரீவனோடு யுத்தஞ் செய்ய வந்தனன். உன்னைப் பாராதிருக்கும் பொழு து 'நான் மற்றொருவனோடு யுத்தஞ்செய்துகொண்டு

பராக்காயிருக்கையில், ராமன் என்னை எதுஞ்செய்பவனல்லன்' என்று நினைத்திருந்தனன். உன்னைப் பார்த்த பின்பு உனது வாஸ்தவமான ஸ்வபாவம் தெரியவந்தது. நீ மிகவும் புத்தி கெட்டவனென்றும் லோகங்களை வஞ்சிப்பதற்காகத் தர்மசிஹ்னங்தரித்தவனென்றும் வாஸ்தவத்தில் அதார்மிகனென்றும் பாபாசாரமுடையவனென்றும் புல்மூடினகிணறுபோன்றவனென்றும் எனக்குத் தெரியாது. நீ ஸத்புருஷர்களைப் போல் வேஷந் தரித்துத் தர்மமென்னும் வ்யாஜத்தினால் உனது உண்மையை மறைத்துக் கொண்டு நீறு பூத்த நெருப்புப்போன்ற பாபிஷ்டனென்று குறிதெரியப்பெறாதுபோயினன். உன் தேசத்திலாவது உன் பட்டணத்திலாவது நான் எள்ளளவும் அபகாரஞ்செய்யவில்லை. உன்னை நான் எவ்விதத்திலும் அவமானித்ததில்லை. இப்படி ஒன்றுஞ் செய்யாமல் காய்களையும் வேர்களையும் தின்றுகொண்டு அரண்யத்தில் திரியுந்தன்மையுள்ள ஓர் கேவல வானரனும், உன்னோடு எதிர்த்துச் சண்டைசெய்யாதவனும், அதிலும் உனக்கு முகங்காட்டாமல் மற்றொருவனோடு யுத்தஞ் செய்கின்றவனும் எந்தப் பாபத்தையும் அறியாதவனுமாகிய என்னை எதனால் வதித்தனை? ராஜனே! தர்மம்போல் தோற்றுங் கபடமும்கூட உன்னிடத்தில் இருக்கவே இருக்கின்றது. இது ஸ்பஷ்டமாக உன் கார்யத்தினால் தெரிய வருகின்றது. க்ஷத்ரியகுலத்தில் பிறந்து கல்வியுடையவன் எவன் தர்மவேஷத்தினால் தன்னை மறைத்துக்கொண்டு சிறிதும் சங்கையின்றிப் பாபகார்யத்தைச் செய்வான்? ராமா! நீ ராஜவம்சத்தில் பிறந்தனை. தர்மிஷ்டனென்று பெரும்புகழ் பெற்றனை. இப்படியிருந்தும் வாஸ்தவத்தில் கொடுந்தன்மையனாகிப் பிறரை வஞ்சனை செய்வதற்காக மேலுக்கு ஸாதுவேஷத்துடன் திரிகின்றனையேன்? ராஜனே! நல்லவார்த்தையும் தானமும்

பொறுமையும் தர்மமும் ஸத்யமும் தைர்யமும் பராக்ரமமும் அபராதஞ் செய்தவர்களைத் தண்டித்தலும் ஆகிய இவை ராஜகுணங்கள். நரநாதனே! நாங்கள் காய் கிழங்குகளை ஆஹாரமாகக் கொண்டு அடவியில் திரியும் மிருகங்களாயிருக்கின்றனம். இது எங்கள் ப்ரக்ருதி. நீயோ மனுஷ்யன். அதிலும் மனிதர்களுக்கெல்லாம் மன்னவனுயிருப்பவன். பூமி பொன் வெள்ளி ஆகிய இம் மூன்றும் யுத்தத்திற்குக் காரணமாயிருப்பவை. அவைகளிலாவது அல்லது இவ்வனத்திலுள்ள எனது இதர பலங்களிலாவது உனக்குப் பேராசையேதேனும் உண்டாயிருக்கிறதா? நீதியும் அனுக்ரஹமும் நல்ல ராஜர்களுடைய தர்மங்கள். அபநீதியும் நிக்ரஹமும் கெட்ட ராஜர்களுடைய தர்மங்கள். இங்ஙனம் ராஜர்களுடைய நிலை வேறுவேறுயிருப்பவைகளேயன்றி ஒன்றோடொன்று கலந்து கூடிக்கொண்டிருப்பவையல்ல. மனம் போனபடி நீதி அபநீதிகளையும் நிக்ரஹ அனுக்ரஹங்களையும் கலந்து நடத்தலாகாது. ஆகையால் ராஜர்கள் மனந்தோன்றினபடி நடக்கத் தகாது. உனக்கோ காமமே முக்யமாயிருக்கின்றது. நீ கோபஸ்வபாவன்; மர்யாதையற்றவன்; அக்ரமமாக, ஒன்று செய்யவேண்டியிருக்க மற்றொன்று செய்கின்றனே. ஆகையால் உனது ராஜநிலைமை விபரீதமாயிருக்கின்றது. (ஸங்கீர்ணமாயிருக்கிறது.) மேலும் வேட்டையையே முக்யமாக வைத்துக்கொண்டு மனத்தில் தோன்றினவனையெல்லாம் வதித்துக்கொண்டிருக்கின்றனே. மனிதர்களுக்குத் தலைவனே! உனக்குத் தர்மத்தில் எள்ளளவும் ஶ்ரத்தை இல்லை. பணவிஷயத்திலும் கூட உன் புத்திக்குப் பிறர் த்ரவ்யம் கூடாதென்னும் ஏற்பாடில்லை. மேலும் இஷ்டம் போனபடியெல்லாம் நடந்துகொண்டு இந்த்ரியங்கள்போனவழியெல்லாம் போகின்றனையாகை

யால் காமத்திலும் உனக்கு வ்யவஸ்தை இல்லை. ராமா! நீ பெரிய ககுத்ஸ்தவம்சத்தில் பிறந்தவன். உனக்கு எந்த அபராதமும் செய்யாத என்னைப் பாணத்தை யெய்து அடித்தனையே! இங்ஙனம் நிந்தைக்கிடமான கார்யத்தைச்செய்து நற்செயலராகிய ஸத்புருஷர்களின் முன்பு என்ன ஸமாதானஞ் சொல்லப்போகின்றனை? ராஜனைக் கொன்றவனும் ப்ராஹ்மணனைக் கொன்றவனும் கோவதஞ் செய்தவனும் திருடனும் எப்பொழுதும் ப்ராணிஹிம்ஸை செய்கின்றவனும் நாஸ்திகனும் அண்ணன் விவாஹமின்றி யிருக்கத் தான் விவாஹஞ் செய்துகொண்டவனும் ஆகிய இவ்வனைவரும் நரகத்தை அடைவார்கள். கோள் சொல்பவனும் லோபியும் மித்ரகாதுகனும் குருபார்யையைப் புணர்ந்தவனும் ஆகிய இவர்கள் பாபிஷ்டர்கள் பெறும் லோகத்தைப் பெறுவார்கள். இதில் ஸந்தேஹம் இல்லை. 'ராஜர்களாகிய எங்களுக்கு வேட்டையாடுவது தோஷமன்றே! ஏன் பழிக்கிறாய்? என்ன வேண்டாம். தர்மத்தை ஆசரிக்குந் தன்மையுள்ள உன்னைப்போன்ற ஸத்புருஷர்களுக்கு என்தோல் மான்தோலைப்போல் உடுக்கத் தக்கதன்று. எனது ரோமங்களும் அவர்க்கு உதவாதவைகளே யன்றிச் சாமரம்போல் உபயோகப் படத் தகுந்தவை யல்ல. எனது எலும்புகள் யானையின் எலும்புபோன்றவை யல்ல; நிஷேதிக்கப் பட்டவைகளே. என் மாம்ஸமும் பக்ஷிக்கத் தகுந்ததன்று. ராமா! ஐந்து நகமுடைய ம்ருகங்களில் முள்ளம் பன்றி காட்டுப்பன்றி உடும்பு முயல் ஆமை ஆகிய இவ்வைந்து ம்ருகங்கள்மாத்ரமே ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்யர்களுக்குப் பக்ஷிக்கத் தகுந்தவை. மற்றவை பக்ஷிக்கத் தகுந்தவை யல்ல. பண்டிதராயிருப்பவர் என்தோலையும் எலும்புகளையும் தொடமாட்டார்கள். என் மாம்ஸத்தைப் பக்ஷிக்கமாட்டார்கள். இங்ஙனம் பக்ஷிக்

கத் தகாத பஞ்சநக ம்ருகங்களில் (ஐந்து நகமுடைய ம்ருகங்களில்) ஒருவனுகிய என்னை வீணுகக் கொன்றனே. இவ்வளவு * பாபசிந்தையும் உனக்கு இல்லாமற் போயிற்றே! ஸர்வஜ்ஞையாகிய தாரை ஹிதமும் ஸத்யமுமாகிய வாக்யத்தையே எனக்குச் சொல்லினள். நான் தெரியாமையால் அந்த வார்த்தையை அதிக்ரமித்து ம்ருத்யுவசத்தில் வீழ்ந்தனன். நல்லொழுக்கமுடைய பெண்மணி, காதலனிருந்தும் அவன் தூர்த்தனுயிருப்பானுயின், அவள் நாதனற்றவள்போலவே இருப்பதுபோல், அதர்மிஷ்டனுகிய நீ பூமிக்கு நாதனுயிருந்தும் அது நாதனற்றதே யாகும். நீ தெரியாமல் பிறர்க்கு அநிஷ்டஞ் செய்பவன். பிறர்க்கு அபகாரஞ் செய்கையே உன் பிழைப்பு. மேலுக்குச் சாந்தனுயிருப்பவன்போல் அபிநயஞ் செய்யுங் குடிலன்; பாபிஷ்டன். இப்படிப்பட்ட நீ மஹானுபாவனுகிய தசரத மஹாராஜன் வயிற்றில் எப்படி பிறந்தனே? மதங்கொண்ட யானை கட்டுக் கயிற்றை அறுத்துக்கொண்டு ஸாதுவான யானைகளின் மர்யாதையைக் கடந்து மாவெட்டியையும் பொருள் செய்யாமல் அகப்பட்டவர்களை அடிப்பதுபோல், நீ நன்னடத்தையைத் துறந்து அபராதஞ் செய்தவர்களைமாத்ரமே தண்டிக்கவேண்டுமென்னும் ஸாதுக்களது மர்யாதையைக் கடந்து தர்மத்திற் குட்படாமல் என்னைக் கொன்றனே. நீ அமங்களத்தை விளைப்பதும் தகாததும் பெரியோர்களனைவரும் மிகவும் பழிப்பதுமாகிய இப்படிப்பட்ட கார்யத்தைச் செய்தனையே? இனி எப்பொழுதாயினும் ஸத்புருஷர்களோடு கலக்கும்பொழுது அவர்க்கு 'இப்படிப்பட்ட அக்ருத்யத்தைச் செய்தேன்' என்று சொல்ல வேண்டியிருக்கும். அன்றி அவர்க்கு என்ன சொல்லப் போகின்றனே? உன்விஷயமாக ஏதும் அபராதஞ்

* 'இது பாபம், ஆகையால் இதை நாம் செய்யலாகா'தென்னுஞ் சிந்தை.

செய்யாதிருக்கிற என்மீது நீ காட்டின பராக்ரமத்தை உனக்கு அபகாரஞ்செய்த ராவணுதிகளிடம் காட்டக் காணுதிருக்கின்றனன். ராஜகுமாரனே! நீ என் முன்னம் புலப்பட்டுக்கொண்டு என்னேடு யுத்தஞ் செய்திருப்பாயாயின், அப்பொழுது என்னல் அடிக்கப்பட்டவனுகி இப்பொழுது யமதேவனைப் பார்த்திருப்பாய். நீ கண்ணுக்குப் புலப்பட்டு யுத்தஞ் செய்வாயாயின், என்னருகில் வருவதுங்கூட உனக்குத் தரமன்று. மத்யபானஞ் செய்து மெய்ம்மறந்து நித்ரை செய்கின்றவனை ஸர்ப்பம் கடித்துக் கொல்வதுபோல், நீ கண்ணுக்குப் புலப்படாதவனுகி என்னைக் கொன்றனை. முதலில் நீ ஸீதையைத் தேடிக்கொடுக்கவேண்டுமென்று என்னையே வேண்டியிருப்பாயாயின், நான் ஒரு தினத்திலேயே உன் பார்யையாகிய ஸீதையை எங்கிருக்கின்ருளோ தேடிக் கண்டுபிடிப்பது மாத்ரமேயன்றிக் கொண்டுவந்து உனக்குக் கொடுத்துமிருப்பேனே! நீ ராவணனுக்காக ஸுக்ரீவனுக்கு ப்ரியஞ்செய்ய உத்தேசித்தன்ருே என்னைக் கொன்றனை? நீ என்னையே ஸஹாயஞ் செய்யவேண்டியிருப்பாயாயின், நான் அந்த ராவணனை யுத்தத்தில் கொன்று, கழுத்தில் கட்டி இழுத்துக்கொண்டு வந்து உனக்குக் கொடுத்திருப்பேன். நீ, 'ஸீதையைத் தேடிக் கொடுப்பாய்' என்று எனக்கு ஆஜ்ஞை யிட்டிருப்பாயாயின், முன்பு மதுகைடபர்களால் பாதாளத்தில் மறைக்கப்பட்ட பெண் வெண்கோவேறுகழுதை யுருவந்தரித்த வேதத்தைப் பகவானுகிய ஹயக்ரீவன் ஸாதித்தாற்போல், ராவணன் அவளை ஸமுத்ர ஜலத்திலாவது இன்னம் மற்றையெவ்விடத்திலாவது மறைத்து வைத்திருப்பானுயினும் நான் ஸாதித்துக் கொண்டுவந்து உனக்குக் கொடுத்திருப்பேன். நான் மரணம் அடைந்தபின்பு ஸுக்ரீவன் வானரராஜ்யத்திற்கு அதிபதியாக வேண்டுமென்பது

யுக்தமே! அவன் என்னைக் கொன்று ராஜனுவது யுக்தமே. ஆனல் மற்றொருவனேடு யுத்தஞ்செய்து கொண்டிருக்கையில் நீ அதர்மத்திற்குட்பட்டு என்னை வதிப்பது எள்ளளவும் யுக்தமன்று. எப்படியாயினும் பிறந்தவன் மரணம் அடையவேண்டியதேயாகையால் உலகத்தார் இங்ஙனம் காலத்தினலாயினும் மரணத்திற்குட்படுவது ஸஹஜமாகவே இருக்கட்டும். ஆயினும் நீ இங்ஙனம் கண்ணுக்குப் புலப்படாமல் என்னை அடித்தது உனக்கு இன்னம் யுக்தமாகவே தோற்றுமாயின், அவைகளுக்கு ஸமாதானம் நன்கு மொழிவாயாக' என்றனன். இங்ஙனம் பாணத்தினல் அடிக்கப்பட்டு மிகவும் வருந்தி அம்மஹானுபாவன் தேவேந்த்ர குமாரன் வாலி இவ்வாறு மொழிந்து அனந்தரம் மேன்மேலெனப் பேசுவதாலுண்டாகும் ஆயாஸத்தினல் வாய் உலரப்பெற்று, உடனே ஸூர்யன்போல் மிகவும் ஜ்வலித்துக் கொண்டிருக்கிற ராமனைப் பார்த்து மௌனமாகவே இருந்தனன். பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ ராமன் வாலிக்கு மறுமொழி கூறுதல். }

வாலி அடிபட்டுக் கொஞ்சம் கொஞ்சம் தடைபடுகின்ற அறிவுடன் ராமனைக் குறித்து இவ்வாறு வணக்கம் பொருந்தியதும் தர்மார்த்தங்கள் மிகுந்திருப்பதும் தனக்கு ஹிதமுமாகத் தோற்றும்படி பருஷவசனத்தைப் பேசினன். வாலி அங்ஙனம் ராமனைப் பேசிப் பழித்த பின்பு ஒளிமழுங்கின ஸூர்யன்போலவும் ஜலத்தை யெல்லாம் பெய்து சூன்யமாயிருக்கும் மேகம்போலவும் எரிந்தெரிந்தணைந்த அக்னிபோலவும் ஒளியும் சேஷ்டையும் பராக்ரமமு மற்றிருக்கிற வானரர்தலைவனுன வாலியைப் பார்த்து ஸ்ரீராமன் தர்மார்த்தங்கள் அமைந்திருப்பதும் குணங்கள் நிறைந்தது

மாகிய வார்த்தையை அழகாயிருக்கும்படி மொழியத் தொடங்கி 'நீ தர்மத்தையும் அர்த்தத்தையும் காமத்தையும் லௌகிகமான ஆசாரங்களையும் அறியாமல் விபரீதமாக நடக்குந்தன்மையினுயினும் தெரியாமையால் உன்விஷயத்தில் எந்தத் தப்புஞ்செய்யாத என்னை எப்படி பழிக்கின்றனை? நல்லியற்கை யுடையவனே! புத்தியமைந்தவர்களையும் பெரியோர்களையும் பூஜ்யர்களான ஆசார்யர்களையும் இந்தத் தர்மார்த்த காமாதிகளின் ஸ்வரூபத்தை வினவித் தெரிந்துகொள்ளாமல் வானரத் தன்மையாலுண்டாகுஞ் சாபல்யதோஷத்தினுல் என்னைக் குறித்து வீணுக ஏன் பேச விரும்புகின்றனை? ஸமஸ்த பர்வதங்களோடும் அரண்யங்களோடும் மஹாரண்யங்களோடும் கூடின இந்தப் பூமண்டலமெல்லாம் இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுடையதாயிருக்கின்றது. ம்ருகங்களையும் பக்ஷிகளையும் மனிதர்களையும் நிக்ரஹிப்பதும் அனுக்ரஹிப்பதும் இக்ஷ்வாகுவம்சத்தின் அதிகாரகார்யங்களே யாகின்றன. அந்தப்பூமியைத் தர்மாத்மாவும் ஸத்யவாதியும் நிஷ்கபடனுமாகிய பரதன் பரிபாலித்து வருகின்றனன். அவன் தர்மார்த்த காமங்களின் உண்மையை நன்கறிந்தவன். துஷ்டர்களை நிக்ரஹிப்பதிலும் சிஷ்டர்களை அனுக்ரஹிப்பதிலும் விருப்பங்கொண்டு தர்மந் தவருமல் பாதுகாக்கின்றனன். எவனிடத்தில் நீதியும் சிக்ஷையும் இரண்டும் ஸத்யமும் சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட பராக்ரமமும் எப்பொழுதும் நன்ருக நிலைநின்றிருக்குமோ, எவன் தேசகாலங்களை அறிவானே, அப்படிப்பட்ட பரதன் இப்பொழுது ராஜனுயிருக்கின்றனன். அந்தப்பரதன் ராஜதர்மத்தை அனுஸரித்துச்செய்த ஆஜ்ஞையை ஏற்றுக்கொண்டு நாங்களும் மற்றை ராஜர்களும் தர்மாபிவ்ருத்தியை விரும்பிப் பூமிமுழுவதும் திரி

கின்றனம். ராஜஸ்ரேஷ்டனும் தர்மத்தில் ஊக்கமுடையவனுமாகிய பரதன் ஸமஸ்த பூமண்டலத்தையும் எள்ளளவும் தர்மத்தைத் தவறுதிருக்கும்படி பரிபாலித்து வருகையில் தர்மஹானியை எவன் செய்யக்கூடும்? அங்ஙனம் செய்வானுயின், தப்பாமல் தண்டனையடைவான். அங்ஙனம் பரதனுல் ஆஜ்ஞாபிக்கப்பட்ட நாங்கள், உத்க்ருஷ்டமான எமது ஸ்வதர்மத்தை அவலம்பித்துப் பரதனது ஆஜ்ஞையை முன்னிட்டுக்கொண்டு தர்மந்தவறி நடப்பவனே விதியின்படி தண்டித்து வருகின்றனம். நீயோ தர்மத்தை அழித்துத் திரிபவன். உன் கார்யங்களேப் பற்றிப் பார்க்கையில் நீ மிகவும் நிந்தைக்கிடமாயிருப்பவன். உனக்குக் காம வ்யாபாரமே முக்யம். ஆகையால் அரசனிருக்க வேண்டிய மார்க்கத்தில் சிறிதும் இருப்பவனல்லே. தமையனும் தந்தையும் தனக்குக் கல்வி கற்பித்தவனும் ஆகிய இம்மூவரும் தந்தைகளேயென்று தர்மமார்க்கத்தில் இருப்பவன் எப்பொழுதும் பாவிக்கவேண்டும். தர்மத்தின்படியே நடக்கும்பக்ஷத்தில், தன் புதல்வனும் தம்பியும் குணமுள்ள சிஷ்யனும் ஆகிய இம்மூவரையும் பிள்ளைகளாகவே பாவிக்கவேண்டும். தர்மத்தின்படி நடக்காத பக்ஷத்தில் வேறுவிதமாகப் பாவிக்கலாமன்றித் தர்மத்தை அனுஸரித்து நடக்கவேண்டுமாயின் அவஶ்யம் இவ்வண்ணமே பாவிக்கவேண்டும். தர்மம் மிகவும் ஸூக்ஷ்மமாயிருப்பது; இந்த்ரியங்களுக்குப் புலப்படாதது. ஆகையால் அது ஸத்புருஷர்களுக்குங்கூட எவ்விதத்திலும் அறிய முடியாதது. வானரனே! இனி உன்னைப் போன்றவர்களுக்கு எப்படி தெரியும்? ஸர்வபூதங்களின் ஹ்ருதயங்களில் அந்தராத்மாவாகி நிலையுற்றிருக்கும் பரமாத்மா ஒருவனே சுபாசுபகாரணமான தர்மாதர்மங்களை அறிவானன்றி மற்றெவனுக்கும் அவற்றை அறியத் தரமன்று. நீ மனம்போனபடி

போகுஞ் சபலன். பிறவிக் குருடனுயிருப்பவன் பிறவிக் குருடர்களோடு கலந்தாலோசிப்பதுபோல் புத்தியில்லாத உன்னைப்போன்ற சாபலமுடைய வானரர்களோடு கலந்து எவ்வளவு ஆலோசனை செய்யினும் உனக்கு என்ன தெரியக்கூடும்? இதற்குமுன் பிள்ளையும் தம்பியும் சிஷ்யனும் ஆகிய இம்மூவரும் புத்ரர்களேயென்று மொழிந்தனனே; இவ்வார்த்தையின் அபிப்ராயத்தை ஸ்பஷ்டமாகத் தெரியும்படி உனக்குச் சொல்லுகின்றேன். அப்பொழுது உனக்கு உன் தப்பு தெரியவரும். ஆகையால் அறிவின்றிக் கேவலம் ரோஷத்தைப்பற்றி என்னைப் பழிப்பது உனக்கு எள்ளளவும் தகாது. எதற்காக நான் உன்னைக் கொன்றேனே அந்தக் காரணத்தைச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. நீ ஸனாதனமான தர்மத்தைக் கைவிட்டு உன் தம்பியாகிய ஸுக்ரீவனது பார்யையுடன் க்ரீடிக்கின்றனை. இம்மஹாபாபமே உன்னைக் கொன்றதற்குக் காரணம். ஸுக்ரீவன் உனக்குத் தம்பியாகையால் பிள்ளையைப்போன்றவனே யாவான். ஆனதுபற்றி அவன் பார்யை உனக்கு மருமகளாகவேண்டும். மஹானுபாவனுகிய ஸுக்ரீவன் பிழைத்திருக்கையில் நீ பாபகார்யஞ் செய்ய முயன்று அவன் பார்யையும் உன் மருமகளுமாகிய ருமையினிடத்தில் காமத்தினுல் ரமித்துக் கொண்டிருக்கின்றனை. வானரனே! ஆனதுபற்றி நீ தர்மத்தைக் கடந்து மனம்போனபடியெல்லாம் நடந்துகொண்டு தம்பியின் பார்யையோடு வ்யபிசாரஞ் செய்தாயாகையால் அந்தத் தோஷத்திற்காக உனக்கு இந்தத் தண்டனை செய்யப்பட்டது. அப்படியாயின் தண்டனையே செய்யவேண்டுமன்றி வதிப்பானேன்’ என்கிருயோ? கபிராஜனே! தர்மத்திற்கு விபரீதமாக நடந்துகொண்டு லோகாசாரந் தப்பியிருப்பவனைச் சிக்ஷிக்கவேண்டுமேயன்றி அதைக்காட்

டினும் வேறுவிதமாக நிக்ரஹஞ் செய்யும் உபாயம் புலப்படவில்லை. நான் நற்குலத்தில் பிறந்த க்ஷத்ரியன்; ஆகையால் நீ செய்த பாபத்திற்குத் தகுந்த சிக்ஷை செய்யாமல் வெறுமனே பொறுத்திருக்கமாட்டேன். ஒருவன் தன் குமாரத்தியையும் உடன்பிறந்தவளையும் தம்பியின் பார்யையையும் காமத்தினால் புணருவானாயின் அவனுக்கு வதமே சிக்ஷை சொல்லப்பட்டது. இப்பொழுது பரமதார்மிகனாகிய பரதன் ராஜனாயிருக்கின்றனன்; அவன் எள்ளளவும் தர்மத்தைக்கடக்கப் பொறுக்கமாட்டான். நாங்களோ அவனது ஆஜ்ஞையிலிருப்பவர்களேயன்றித் தான்தோன்றியாகித் திரிபவரல்லோம். தர்மத்தின்படி தவறாமல் நடத்தவேண்டியவர்களாயிருக்கின்றனம். நீ தர்மத்தை அதிக்ரமித்தனை. நாங்கள் உன்னை எங்ஙனம் வெறுமனே விட முடியும்? பரதன் ராஜனாகையால் எல்லாரிலும் மேலானவன்; எல்லாமறிந்தவன்; ஆகையால் தர்மத்தை எள்ளளவும் ஜனங்கள் கடக்காதிருக்கும்படி பார்த்துக்கொண்டிருப்பான். ஆகையால் இஷ்டம் வந்தபடியெல்லாம் தர்மத்தை மீறி நடப்பவர்களைச் சிக்ஷிப்பதில் தீக்ஷித்துக்கொண்டிருக்கின்றனம். வானரர்தலைவனே! நாங்களோ அந்தப் பரதனது ஆஜ்ஞையையே சாஸ்த்ரமாகக் கொண்டு அதின்படி, தர்மநிலைமையைக் கடந்து நடக்கும் உன்னைப்போன்றவனைச் சாஸ்த்ரத்தின்படி சிக்ஷை செய்வதிலேயே திடமாக நிலைகொண்டிருக்கின்றனம். ஆகையால் உன்னை வெறுமனே எப்படி விடமுடியும்? இவ்வளவேயன்றி ஸுக்ரீவனுக்கும் எனக்கும் உள்ள ஸ்னேஹம் லக்ஷ்மணனுக்கும் எனக்குமுள்ள ஸ்னேஹம் போன்றதே; ஆகையால் எவ்வளவும் பரிஹரிக்க முடியாது. மேலும் என்ஸ்னேஹம் பார்யைக்காகவும் ராஜ்யத்திற்காகவும் நேரிட்டது. அந்த ஸுக்ரீவனும் என்க்ஷேமத்திலேயே எப்பொழும் மனவூக்கமுடைய

வன். அப்படிப்பட்ட ஸ்னேஹிதனது பார்யையை அபஹரித்த உன்னை எப்படி வெறுமனே விட்டிருக்க முடியும்? அந்த ஸ்னேஹஞ் செய்துகொண்ட ஸமயத்தில் நான் வாலியைக் கொல்லுகிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்தனன். என்னைப் போன்றவன் செய்த ப்ரதிஜ்ஞையை எப்படி தவற முடியும்? இங்ஙனம் உபேக்ஷித்திருக்கக்கூடாதாகையால் நான் தர்மம் நிறைந்திருக்குமாறு இதுவரையில் சொன்ன பெரிய காரணங்களையெல்லாம் பற்றிப் பார்க்கையில், தம்பியின் பார்யையை அபஹரித்த உனக்குச் செய்த தண்டனை சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டதேயென்று நீ அங்கீகரிக்க வேண்டும். ஆகையால் உன்னைச் சிக்ஷிப்பது எல்லா விதத்திலும் தர்மமேயன்றி எள்ளளவும் அதர்மமன்றென்று தெரிந்துகொள்ளத் தக்கது. தர்மத்தையே முக்யமாக அனுஸரித்திருக்கும் மித்ரனுங்கூடத் தன் மித்ரனது சத்ருவைத் தப்பாமல் நிரஸிக்கவேண்டும். நீ அதர்மத்தையே அனுஸரிப்பவனாவாயாயின், உன்னை நிக்ரஹஞ் செய்த கார்யம் உன் பாபத்திற்கு ப்ராயஸ்சித்தமாகின்றதென்று ஒப்புக்கொள்ளத் தகுந்தது. வானரனே! முன்பு மனு ஸதாசாரத்தையே குறித்து இரண்டு ஸ்லோகங்களை மொழிந்தனர். தர்மத்தில் நிபுணராயிருப்பவர் அனைவரும் அவ்விரண்டு ஸ்லோகங்களை அங்கீகரித்திருக்கின்றனர். அந்த ஸ்லோகங்களிற் சொன்னபடி நான் இப்பொழுது ஆசரித்தனன். அந்த ஸ்லோகங்கள் எவையென்றால்:—

"ராஜபிர்த்ருததண்டாஸ்து க்ருத்வா பாபாநி மாநவா:।
நிர்மலா: ஸ்வர்கமாயாந்தி ஸந்த: ஸுக்ருதிநோ யதா ॥
ஸாஸநாத்வா விமோக்ஷாத்வா ஸ்தேநஸ் ஸ்தேயாத்விமுச்யதே।
ராஜாத்வஸாஸந்பாபஸ்ய ததவாப்நோதி கில்பிஷம் ॥"

'பாபஞ்செய்தவர் அரசர்களால் சிக்ஷிக்கப்படுவார்களாயின், பிறகு அவரது பாபமெல்லாம் நசிப்பதுமாத்ரமேயன்றி அவர்கள் புண்யம் மிகுந்த ஸத்புருஷர்களைப்போல் ஸ்வர்க்கம் அடைவார்கள். அரசன் சிக்ஷை செய்யினும்,

சிக்ஷை செய்யாமல் விட்டுப் போகடினும் திருட்டுத்தன் மையால்உண்டான பாபம் என்னவோ நசித்துப்போகின் றது. ஆனல் சிக்ஷிக்காமலே விடும்பக்ஷத்தில் அரசன் திருடனுடைய பாபத்தைத் தானே அடைகின்றான்" என்று இவ்விரண்டு ஸ்லோகங்கள் மனுவால் பாடப்பட் டவை. நீ இப்பொழுது பாபஞ்செய்தவாறு முன்னம் ஓர் ஶ்ரமணன் பாபஞ் செய்தனன். அப்பொழுது எமது வம் சத்தில் பூர்விகரும் பூஜ்யருமாகிய மாந்தாதாவென்பவர் அவனுக்குப் பயங்கரமான சிக்ஷை விதித்தனர். அந்த ஶ்ரமணனும் நீயும்மாத்ரமே அன்று; ராஜர்கள் ஏமாறி யிருக்கும்பொழுது மற்றவரும்கூடப் பலர் பாபஞ் செய்தி ருக்கின்றனர். அனந்தரம் அந்தராஜர்கள் ஏமாறுதலைத் தவிர்ந்து ராஜகார்யங்களைப் பராமர்ஶிக்கும்பொழுது அந்தப் பாபிஷ்டர்களுக்கு வதாதியான ப்ராயஶ்சித்தங் களை நடத்துவார்கள். அதனல் அவரது பாபம் நசித் துப்போம். இது இப்பொழுதும் ஆசாரமாயிருக்கின் றது. வானரர்தலைவனே! ஆகையால் இது விஷயத் தில் பரிதாபஞ்செய்யவேண்டாம்; பட்டதுபோதும். தர்மத்தை அனுஸரித்தே உன்னைக் கொலை செய்தனம். நாங்கள் தோன்றினபடி செய்யும் ஸ்வதந்த்ரரல்லோம். நாம் சாஸ்த்ரத்திற்கு உட்பட்டவராகையால் அதின்படி அவஶ்யம் நடத்தவேண்டியவர்களேயன்றிக் கோபம் வந்தபொழுது தண்டிப்பதற்கும் தயை வந்தபொழுது விடுவதற்கும் அவகாசம் இல்லை. கபிராஜனே! வீரா! மேலும் இன்னொரு காரணம் சொல்லுகிறேன் கேள். அது மிகவும் ஹேதுவுடன் கூடியிருக்குமாகையால் அதைக்கேட்ட பின்பு என்மேல் கோபஞ் செய்யாதிருப் பாயாக. என்னை யமலோகத்திற்கு அனுப்புவேனென் றனை. மறைந்திருந்து வதித்தேனென்றனை. நீ அங் ஙனம் சொன்னதற்கு எனக்குச் சிறிதும் மனஸ்தாபம் இல்லை. அன்றியே கோபமும் உண்டாகாது. மனிதர் கள் மறைந்திருந்தாவது புலப்பட்டுக்கொண்டாவது வலை

களாலும் பாசங்களாலும் பலவகைப்பட்ட கபடவ்யாபாரங்களாலும் அரண்யத்திலிருக்கும் அனேக ம்ருகங்களைப் பிடிக்கின்றனர். மேலும், மாம்ஸம் விரும்புவோர் அரண்யத்தில் ம்ருகங்களை ஓடிக்கொண்டிருக்கும்பொழுதும் பயந்திருக்கும் பொழுதும், தம்மைப்பாதிப்பவர் எவரும் இல்லையென்று நிர்ப்பயமாயிருக்கும்பொழுதும் ஏமாறியிருக்கும்பொழுதும் மனவூக்கத்துடனிருக்கும்பொழுதும தப்பாமல் கொல்லுகின்றனர். இவ்விஷயத்தில் தோஷமொன்றும் புலப்படாது. தர்மத்தில் ஸமர்த்தராகிய ராஜரிஷிகளுங்கூட அரண்யத்தில் வேட்டையாடுவதற்குப் போகின்றனர். நீயும் சாகாம்ருகம் (குரங்கு). ஆகையால் ம்ருகஜாதியிற் சேர்ந்தவனே. ஆதலால் நீ என்னோடு யுத்தஞ் செய்துகொண்டிருப்பினும் யுத்தஞ் செய்யாதிருப்பினும் ஆலோசிக்கவேண்டியதில்லை. ஆகையால் உன்னை, ஸுக்ரீவனோடு யுத்தஞ்செய்துகொண்டிருக்கும்பொழுது பாணத்தினால் வதித்தனன். வானரஸ்ரேஷ்டனே! பெறக்கூடாத தர்மத்தையும் ஜீவனத்தையும் சுபத்தையும் ப்ரஜைகளுக்கு ராஜர்களே விளையச் செய்கின்றனர். இதற்கு ஸந்தேஹமே இல்லை. தேவதைகளே மானிட உருவந் தரித்துப் பூலோகத்தில் பிறந்து தர்மரக்ஷணத்தின்பொருட்டு அந்தந்த ராஜர்களாகத் திரிகின்றனர். ஆகையால் ராஜர்களை எவ்விதத்திலும் ஹிம்ஸிக்கையாவது நிந்திக்கையாவது ஆக்ஷேபிக்கையாவது அப்ரியங் கூறுகையாவது யுக்தமன்று. நீயோ தர்மம் எள்ளளவும் தெரியாமல் கேவலங் கோபமுற்றிருக்கிறாயாகையால் தந்தை பாட்டன் நாள் முதலாகத் தவறாமல் வருகின்ற தர்மத்தில் ஓர் மயிரிழையும் தவறாமல் நின்றிருக்கிற என்னை மிகவும் தூஷிக்கிறாய்' என்றனன். ராமன் இங்ஙனம் சொல்லுகையில் வாலி தர்மஸ்வரூபத்தை நன்றாக அறிந்து

தன்னை வதிப்பதில் யாதுந் தோஷமில்லையென்று தெரிந்துகொண்டு ராமனை அங்ஙனம் ஆக்ஷேபித்ததற்கு மிகவும் மனவருத்த முற்றனன். அனந்தரம் வானரர்தலைவனுகிய வாலி ராமனைப் பார்த்துக் கைகளைக் குவித்துக்கொண்டு 'புருஷோத்தமா! நீ யாது மொழிந்தனையோ, அது அப்படியே. இதில் ஸந்தேஹமேயில்லை. தர்ம ஸூக்ஷ்மம் மிகவும் பெரிய விஷயம். அப்படிப்பட்ட விஷயத்தில் அற்பனுயிருப்பவனுக்குப் பதில் சொல்ல முடியாதல்லவா? மேலும் ஸர்வஜ்ஞனுகிய நீ சொன்னதற்கு அல்பஜ்ஞனுகிய நான் பதிலுரைக்கவல்லனல்லேனென்பது தெரிந்த விஷயமே. ராமா! நான் ஸுக்ரீவனுக்குச் செய்த அக்ருத்யத்தில்மாத்ரமேயன்றித் தெரியாமல் இதற்கு முன்பு உன்னை அயுக்தங்களான அப்ரிய வசனங்களை மொழிந்தேனே, அந்த விஷயத்திலுங்கூடத் தோஷத்தை நினையாமல் பொறுத்தருளவேணும். நீ எல்லாவற்றையும் அறிந்தவன்; தத்வந்தெரிந்தவன்; மேலும் ப்ரஜைகளுக்கு மேன்மை செய்வதிலேயே ஆஸக்தியுடையவன். தண்டனை இதுவென்றும் அதற்குக் காரணமான பாபமிப்படிப்பட்டதென்றும் தெரிந்துகொள்ளும் விஷயத்தில் உன்புத்தி யாதொரு வைஷம்யமுமின்றி நிர்மலமாகிக் கெடுதியில்லாமல் நிலைநின்றிருப்பது. தர்மஜ்ஞனே! நான் செய்யவேண்டுந் தர்மத்தைச் செய்யாதவனும் செய்யத்தகாத அக்ரமத்தைச் செய்தவனுமாயிருக்கின்றனன். இப்படிப்பட்ட பர்பிஷ்டனுகிய என்னைத் தர்மம் பொருந்திய உன் வார்த்தையால் பொறுத்தேனென்றுரைத்துக் காப்பாயாக. நான் அடிபட்டுப் போனேனென்று என்னைக் குறித்தாவது தாரையைக் குறித்தாவது பந்துக்களைக் குறித்தாவது அவ்வளவாக எனக்கு வருத்தமில்லை. ஆனல் குணங்களில் மேலானவனும் பொன்தோல்வளை

களால் விளக்கமுற்றுக் கண்ணுக்கினியனும் அருமைக் குமாரனுமாகிய அங்கதனைக் குறித்தே எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கின்றது. அவன் பிறந்தநாள்முதல் மிக்க அருமையுடன் என்னால் வளர்க்கப்பட்டு வருகின்றமையால் என்னைப் பாராமல் நிமிஷமாயினும் இருக்கமாட்டான். ஆகையால் அவன், நான் மரணம் அடைந்தபின்பு என்னைப் பார்க்க நேராமையால் வருந்தித் தடாகம் நீரெல்லாம் வற்றினபின்பு உலர்ந்துபோவதுபோல் மிகவும் இளைத்துப்போவான். ராமா! தாரையிடத்தில் போயும் வந்தும் நான் இவனொருவனையே பெற்றனன். மேலும் இவன் இளம்பிராயமாயிருப்பவன்; ஒன்றுந் தெரியாதவன்; எனக்கு மிகவும் அருமையான ஒரே புதல்வன்; மிகுந்த பலமுடையவன்; நீ இவனைப் பாதுகாக்கவேண்டும். ஸுக்ரீவனிடத்திலும் அங்கதனிடத்திலும் பேதமின்றி ஒரு ரீதியான புத்தியை நிகரில்லாதிருக்குமாறு வைப்பாயாக. இவ்விருவர்களில் எவரேனும் தீமை நன்மைகளைச் செய்யில் சிக்ஷிப்பவனும் ரக்ஷிப்பவனுமாகிய நீ இருக்கிறாயல்லவா? ஆகையால் இருவரையும் ஸமமாகப் பார்த்துக்கொள்வாயாக. மனிதர்களுக்கதிபனே! உனக்குப் பரதனிடத்திலும் லக்ஷ்மணனிடத்திலும் எந்த ப்ரீதி உள்ளதோ அப்படிப்பட்ட ப்ரீதியை ஸுக்ரீவனிடத்திலும் அங்கதனிடத்திலும் வைப்பாயாக. தாரை தோஷமற்றவளாயினும் என் பார்யையாகையால் என் தோஷத்தைப்பற்றி அவளும் ஸுக்ரீவனுக்குத் தோஷஞ் செய்தவளேயாவாள். ஆகையால் ஸுக்ரீவன் தாரையைச் சிறிதும் அவமதியாதிருக்குமாறு நீ ஏற்பாடு செய்யவேண்டும். உனது அனுக்ரஹம் பெற்று உனக்குட்பட்டு நடந்துகொண்டு உன் சித்தத்தை அனுஸரித்திருப்பேனாயின் எனக்கு ராஜ்யம் வைத்துக்கொண்டு பாதுகாத்து வரு

வது ஸாத்யமேயாகும். கேவலம் எனது ராஜ்யமே யன்று; பூமண்டலத்தையெல்லாம் பரிபாலிப்பதற்கும் தேவலோகத்தைக் கைப்பற்றுவதற்கும் ஸாத்யமே. ஆனல் அப்படி ஏன் செய்யவில்லையென்பாயாயின், எனக்குமாத்ரம் எப்படியாயினும் உன்னால் மரணம் அடைய வேண்டுமென்று விருப்ப மிருந்தபடியால், என்னைத் தாரை எவ்வளவு வேண்டாமென்று தடுத்தபோதிலும், நான் என் தம்பியாகிய ஸுக்ரீவனுடன் த்வந்த்வயுத்தஞ் செய்யவந்தேன்' என்றனன். வானரர்தலைவனாகிய வாலி இங்ஙனம் வணக்கத்துடன் ராமனிடம் விண்ணப்பஞ்செய்து பிறகு வெறுமனே யிருந்தனன். அங்ஙனம் மயக்கமின்றித் தெளிந்து அறிவுடனிருக்கிற வாலியைப் பார்த்து ராமன் தர்மத்தின் உருவம் தெளிவாகும்படி இனிய ஸமாதான வார்த்தைகளால் 'வாலி! உன் குமாரனைக் காப்பாற்றும் விஷயத்தில் நீ எள்ளளவும் மனக்கவலை யடையவேண்டாம். வானரர்தலைவனே! நாங்கள் தப்புச் செய்தோமென்று எங்களைக் குறித்தாவது தம்பியின் பார்யையை அபஹரித்துப் பாபஞ்செய்தேனே யென்று உன்னைக் குறித்தாவது நீ எவ்வளவும் சிந்திக்க வேண்டாம். ஏனெனில்:— நீ செய்த பாபத்தைப்பற்றி நாங்கள் உனக்கு ப்ராயச்சித்த ரூபமாகிய சிக்ஷையை விதித்தோமாகையால் அது தர்மமேயென்று ஸந்தேஹமின்றி நிச்சயித்திருக்கின்றனம். ஆனது பற்றியே எங்களைக் குறித்துச் சிந்திக்கவேண்டிய அவச்யமில்லை. உனக்கு ப்ராயச்சித்தம் நேர்ந்தமையால் உன்னைக் குறித்தும் சிந்திக்க வேண்டியதில்லை. எந்த அரசன் தண்டிக்கத் தகுந்தவன்மேல் தண்டனை விதிப்பானே, அன்றியே, தண்டிக்கத் தகுந்தவன் எவன் தண்டிக்கப்படுவானே, அவர்களிருவரும் ஒருவன் தண்டனை விதித்தமை

யாலும்,மற்றொருவன் தண்டனையைப் பெற்றமையாலும் தந்தமது ப்ரயோஜனங் கைகூடப் பெறுகையால் எள்ளளவும் பாபத்தினுல் கெடுதியைப் பெறுர்கள். அரசன் தண்டிக்கத் தகுந்தவனையே தண்டித்தமையால் தன் தர்மத்தை நடத்தி க்ருதார்த்தனுவான். தண்டிக்கப்பட்டவன் தனது அபராதத்திற்குத் தகுந்த தண்டனை பெறுகையால் பாபந்தொலைந்து க்ருதார்த்தனுவான். ஆகையால் நீ தர்ம சாஸ்த்ரத்திற் சொல்லியபடி உன் தண்டனையைப் பெற்ருயாகையால் உன் பாபம் தொலைந்து தர்மம் பொருந்தின உன் சுத்த ஸ்வரூபத்தைப் பெற்றனை. வானரர் தலைவனே! உன் மனத்திலுள்ள சோகத்தையும் மோஹத்தையும் பயத்தையும் விட்டுத் தொலைப்பாயாக. வீணுகப் பாதைப்படுவதேன்? ப்ராரப்தகர்மமென்னும் விதியை உன்னுல் கடக்கப்போமோ? வானரேஸ்வரனே! அங்கதன் உன்னிடத்தில் இதுவரையில் எப்படி தந்தை யென்னும் பக்தியுடன் உன் வாத்ஸல்யத்தை அனுபவித்துக் கொண்டிருந்தானே, 'அப்படியே இனி ஸுக்ரீவனிடத்திலும் என்னிடத்திலும் பித்ருபக்தி உண்டாகப் பெற்று எமது வாத்ஸல்யத்தை அனுபவித்துக்கொண்டு ஸுகமாயிருக்கப் போகிறுன்' என்றனன். அங்ஙனம் மஹானுபாவனும் தர்ம மார்க்கத்தில் நிலைநின்றவனும் யுத்தங்களில் பகைவரையொழிக்கும் பராக்ரமசாலியுமாகிய ராமன் இனிதாக மொழிந்த ஸமாதான வசனங்களைக் கேட்டு அவ்வாலி மிகவும் அமைந்திருக்கும்படி, 'ப்ரபூ! மனிதர்களுக்குத் தலைவனே! நீ தேவேந்த்ரனைப் போன்றவன்; பயங்கரமான பராக்ரமமுடையவன். ஆகையால் நான் உன்பாணங்களால் பீடிக்கப்பட்டு ப்ரஜ்ஞை தப்பித் தெரியாமல் உன்னை மிகவும் தூஷித்தனன். இந்த அபராதத்தைப் பற்றி நீ என்னிடத்தில்

மனக்கலக்கமில்லாதிருக்கும்படி ப்ரார்த்திக்கிறேனுகை யால் என்னை அனுக்ரஹித்து மன்னிக்க வேண்டும்" என்றனன். பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தாரை மரணம் அடைந்த வாலியிடம் வருதல்.

ராமபாணத்தினுல் மிகவும் அடிக்கப்பட்டுத் தரையில் வீழ்ந்திருக்கும் வானரமஹாராஜனுகிய வாலி, ராமன் யுக்திகள் அமைந்திருக்கும்படி மொழிந்த மறுமொழியைக் கேட்டு 'என்னைப் பொறுத்தருள வேண்டும்' என்றிவ்வளவே மொழிந்து பிறகு ஒன்றும் பேசாமல் மௌனமாயிருந்தனன். அவ்வாலி, முன்பு ஸுக்ரீவன் தன்மேல் எறிந்த கற்களால் அவயவங்கள் தழதழக்கப் பெற்றும் வ்ருக்ஷங்களால் நன்கடிக்கப்பட்டும் இப்பொழுது ராமபாணத்தால் பாதைப்பட்டுக் கொண்டும் இருக்கையால் ப்ராணுந்தஸமயத்தில் மூர்ச்சித்துக் கிடந்தனன். பிறகு அங்ஙனம் ராமன் ப்ரயோகித்த பாணத்தால் யுத்தத்தில் வானர ஸ்ரேஷ்டனுகிய வாலி ஹதனுனென்று அவன் பார்யையாகிய தாரை கேள்விப் பட்டனள். தாரை, ராமனுல் உன் பர்த்தா வதிக்கப்பட்டானென்று அப்ரியமாகி மிகவும் பயங்கரமான இவ்வார்த்தையைக் கேட்டு மிகுதியும் பயந்துபிள்ளையுந் தானுமாக நானுவித கட்டடங்கள் பொருந்திப் பர்வத குஹைபோன்ற கிஷ்கிந்தையினின்று புறப்பட்டு வந்தனள். அங்கதனுக்குப் பரிசாரகர்களும் மஹாபராக்ரமசாலிகளுமாகிய வானரர்கள் அனைவரும், அப்படிப்பட்ட வாலியையே ஒரு பாணத்தால் முடித்த ராமன் வில்லைப் பிடித்து நிற்கையில் அவனைப் பார்த்தவுடனே பயந்து பின்வாங்கி ஓடிப்போயினர். கூட்டத்திற்குத் தலைமையான மிருகம் அடிபட்டபின்பு பயந்து கூட்டத்தினின்று சிதறிப்பறக்கும் மிருகங்கள்போல்,வாலி அடிபட்டதனுல்

பயந்தோடிவருகின்ற அந்த வானரவீரர்களைத் தாரை வழியில் கண்டனள். இங்ஙனம் துக்கித்து ராமனுக்குப் பயந்து ராமன் ப்ரயோகிக்கும் பாணங்களால் பின்றொடரப்பட்டவர்போல் வேகத்துடன் ஓடிவருகின்ற அந்த வானரர்களைக் கண்டு தாரை வருத்தமுற்று 'வானரர்களே! பயங்கரனாகிய தம்பி ஸுக்ரீவன் அண்ணனாகிய வாலியை ராஜ்யத்தின்நிமித்தமாக ராமனைக் கொண்டு வெகுதூரஞ் செல்லவல்ல கொடிய பாணங்களைத் தொடுக்கச் செய்து கொன்றுவிட்டானாயின் உங்களுக்கு என்ன பயம்? உங்களைக் கொல்விப்பதற்கு உங்களுக்கு ராஜ்யம் இல்லையே? வாலியைப் போல் உங்களுக்கும் பயம் ஏன்? நீங்கள் எவனுடைய வேலைக்காரர்களோ அப்படிப்பட்ட ராஜஸ்ரேஷ்டனாகிய வாலியைக் கைவிட்டுத் திக்கற்று மிகவும் திகிலுற்று இப்படி ஏன் ஓடிவருகின்றீர்கள்' என்று வினவினள். காமரூபிகளான (இஷ்டப்படி வடிவங்கொள்ளவல்ல) அந்த வானரர்கள் வாலிபத்னியாகிய தாரை வினவின வார்த்தையைக் கேட்டு அந்த மடந்தையைப் பார்த்து அப்பொழுதைக்குத் தகுந்த யுக்திகள் பொருந்தின வசனங்களைச் சொல்லத் தொடங்கி 'அம்மா! உன் பிள்ளை ஜீவித்திருக்கின்றனன். ஆகையால் நீ திரும்பிப் போவாயாக. உன்பிள்ளையாகிய அங்கதனைக் காப்பாற்றிக் கொள்வாயாக. இப்பொழுது ம்ருத்யுவே ராமனென்னும் உருவத்துடன் வந்து வாலியைக் கொன்று பரலோகத்திற்குக் கொண்டு போகின்றனன். வாலி, ஸுக்ரீவன் எறிந்த வ்ருக்ஷங்களையும் பெரிய கற்களையும் தடுத்துக் கடைசியில் ராமனால் வஜ்ரம்போன்ற பாணங்களால் முடிக்கப்பட்டனன். தேவேந்த்ரனை நிகர்த்த பராக்ரமமுடைய வானரஸ்ரேஷ்டனாகிய வாலி முடிந்துபோகையில் முன்பு கிஷ்கிந்தையினின்று புறப்பட்டுவந்த இந்த ஸைன்யமெல்லாம் பயத்தினால் மூலைக்

கொன்றுகச் சிதறி மீளவும் கிஷ்கிந்தையை நோக்கி ஓடிப் போகின்றது. பட்டணத்து வாசற்படியைக் கத வையிட்டு ஜாக்ரதையுடன் காத்துக்கொண்டிருக்க வேண்டும். அங்கதனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய வேண்டும். வாலிகுமாரனுகிய அங்கதன் ராஜ்யபாரஞ் செய்கையில் அவனையே வானரர்களெல்லோரும் சூழ்ந் திருப்பார்கள். அழகிய முகமுடையவளே! நாங்கள் சொன்னபடி செய்யாயாயின் போகட்டும்? நீ இந்தக் கிஷ்கிந்தையில் இருப்பதே எங்களுக்கிஷ்டமன்று. ஏ னென்றல்:—நமக்குப் பகைவரான வானரர்கள் சீக்ரத் திலேயே கிஷ்கிந்தையில் நமதிருப்பிடத்தையும் மற் றுமுள்ள கோட்டை முதலான எல்லாவற்றையும் பிடித்துக்கொள்ளப்போகின்றனர். ஆனலென்னென்கி ருயோ? வாலி இங்கிருந்து வானரர்கள் பலரையுந் துரத்தியிருக்கின்றனன். அவர்களில் சிலர் தமது பார் யைகளைப் பிரிந்திருக்கின்றனர். சிலர் பிறருடைய பார் யைகளைக் கைப்பற்றி யிருக்கின்றனர். இவர்களெல் லோரும் கிஷ்கிந்தையினின்று ஓடிப்போய்க காட்டில் திரிந்துகொண்டிருக்கின்றனர். இங்ஙனம் பார்யை களைப் பிரிந்திருப்பவர்களும் தாம் வைத்துக்கொண்டி ருந்த பிறருடைய பார்யைகளை ஆசைப்படுமவர்களும் ஸொந்த ஜ்ஞாதிகளான ஸுக்ரீவாதிகளும் திரும்பி வருகையில், அவரால் நமக்கு இவ்விடத்தில் எப்பொழு தும் பயம் நேர்ந்துகொண்டே யிருக்கும்' என்றனர். தாரை இங்ஙனம் அவர்கள் பேசுவதற்குக் கொஞ்சம் இடங்கொடுத்து அந்த அற்பபுத்திகள் சொன்னதைக் கேட்டுப் புன்னகை விளங்கப் பெற்றுத் தன்புத்திக்குத் தகுந்தபடி அவர்களை நோக்கி 'வானரஸ்ரேஷ்டனும் மஹாபாக்யனுமாகிய பர்த்தாவே போய்க்கொண்டிருக் கையில் இனி எனக்குப் பிள்ளையால் என்ன ப்ரயோஜ

னம்? ராஜ்யம் ஏதுக்கு? இந்தச் சரீரமே எனக்கு ஏது க்கு? ராமன் ப்ரயோகித்த பாணத்தினுல் அடியுண்டு தரையில் வீழ்ந்திருக்கிற அம்மஹானுபாவனது பாதமூலத்திற்கே போய்ச்சேருவேன்' என்றனள். தாரை இங்ஙனஞ் சொல்லி உடனே துக்கத்தினுல் வருந்தி ரோதனஞ் செய்துகொண்டு துக்கத்தைப் பொறுக்க முடியாமல் தலையையும் மார்பையும் கைகளால் மோதிக்கொண்டு ஓடிப்போயினள். அங்ஙனம் ஓடிச்சென்று எப்படிப்பட்ட யுத்தத்திலாயினும் பின்வாங்காத மஹாசூரர்களான மாயாவி முதலிய ராக்ஷஸஸ்ரேஷ்டர்களைக் கொன்று மேன்மையுற்றிருப்பவனும் யுத்தங்களில் இந்த்ரன் வஜ்ராயுதத்தை ப்ரயோகிப்பதுபோல் பெரிய பர்வதங்களை வீசியெறிபவனும் மஹாவாயுக்களெல்லாம் ஒன்று சேர்ந்தாற்போல் தடுக்க முடியாத மஹாவேகமுடையவனும் மஹாமேகஸமூஹம் கர்ஜிப்பதுபோன்ற பெரிய கண்டத்வனியுடையவனும் இந்த்ரனை நிகர்த்தபராக்ரமமுடையவனும் மழைபெய்து ஓய்ந்திருக்கிற மேகம்போல் ஓய்ந்திருப்பவனும் கர்ஜிப்பவர்களனைவரிலும் பயங்கரமாகக் கர்ஜிப்பவனும் சூரனுமாகிய தன் பர்த்தாவான வாலி,சூரனுகிய ராமனுல் முடிக்கப்பட்டுத் தரையில் வீழ்ந்திருக்கக் கண்டனள். மேலும், அவன், மாம்ஸத்தின் நிமித்தமாக மிகுந்த பராக்ரமமுடைய ஸிம்ஹத்தினுல் அடிக்கப்பட்ட மற்றொருஸிம்ஹம்போன்று பராக்ரமாதி குணங்களைப்பற்றி ஸமஸ்தலோகங்களாலும் பூஜிக்கப்பட்டவனுயிருந்தும் தம்பியின் பார்யையைக் கைப்பற்றின தோஷத்தைப்பற்றி ராமனுல் முடிக்கப்பட்டிருக்கையால், ஸமஸ்தலோகங்களாலும் பூஜிக்கப்படுவதும் த்வஜத்தினுல் அலங்காரஞ் செய்யப்பெற்றதும் இளைப்பாறுவதற்குரிய திண்ணைகளால் விளக்கமுற்றதுமாயினும் தன்னிடத்தில் ஸர்ப்பம் புகுந்து மறைந்திருக்குக்

தோஷத்தைப்பற்றிக் கருடனால் முறிக்கப்பட்ட தேவாலயம்போல் புலப்பட்டனன். தாரை இப்படிப்பட்ட அவ் வாலியைக் கண்டு உடனே தனுஸ்ஸைத் திடமாக ஊன்றிக்கொண்டு நிற்கின்ற ராமனையும் ராமனுக்குத் தம்பியாகிய லக்ஷ்மணனையும் தன் மைத்துனன் ஸுக்ரீவனையும் கண்டனள். இங்ஙனங் கணவனை முடித்த ராமனையும் கொல்ல ஸஹாயமாயிருந்த லக்ஷ்மணனையும் கொல்வித்த மைத்துனனையும் கண்டும் தன் பர்த்தாவிடத்திலுள்ள தோஷத்தைப்பற்றி இவர்க்கு இங்ஙனம் செய்யவேண்டியதாய் வந்ததாகையால் இவர்களிடத்தில் தப்பேது மில்லையென்று நினைத்து அவர்களிடத்தில் சிறிதும் த்வேஷம் பாராட்டாத மனமுடையவளாயினள். அனந்தரம் அந்தத் தாரை ராமாதிகளைத் தாண்டிச்சென்று யுத்தத்தில் அடிப்பட்டு வீழ்ந்திருக்கிற பர்த்தாவைக் கிட்டி அவனை உற்றுப்பார்த்து, அவனுக்குத் தான்வந்திருப்பது தெரியாமையால் பாமரனேனென்று மிக வருத்தத்துடன் மூர்ச்சித்துத் தரையில் விழ்ந்தனள். அனந்தரம் தூங்கி விழித்துக் கொள்வதுபோல் எழுந்து 'ஆர்யபுத்ரா' என்று கணவன் பேரைச் சொல்லிக் கண்ணீர் பெருக்கினள். இங்ஙனம் யமபாசத்தினால் கட்டப்பட்டு மரணம் ஸமீபித்திருக்கப்பெற்ற பர்த்தாவைக் கண்டு தாரை ஐயோவென்று கதறத் தொடங்கினள். அங்ஙனம் அழுகுரல்பக்ஷி போல் கூக்குரலிட்டுப் புலம்புகின்ற தாரையையும் அவ்விடம் வந்து முகம்வாடி நிற்கிற அங்கதனையும் பார்த்தவுடனே ஸுக்ரீவனுக்கு மிகுதியும் துக்கம் உண்டாயிற்று. பத்தோன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---



1733; தாரை வாலியைக்கண்டு புலம்புதல்.

## தாரை புலம்புதல்.

சந்த்ரன் போன்ற முகமுடைய அந்தத் தாரை, ராமன் தனுஸ்ஸினின்று ப்ராணனை முடிக்கும்படியாக ப்ரயோகித்த பாணத்தினால் அடிக்கப்பட்டுத் தரையில் வீழ்ந்திருக்கின்ற தன்ப்ராணேஸ்வரனாகிய வாலியைப் பார்த்து அருகிற் சென்று அவனை அழுந்தக் கட்டிக் கொண்டனள். மதித்த யானைபோல் புலப்பட்டு மஹேந்த்ரனைப்போல் விளங்கும் வாலி ஒரு பாணத்தினால் அடிக்கப்பட்டு வேரறுந்த வ்ருக்ஷம்போல் தரையில் வீழ்ந்திருக்கக் கண்டு தாரை மிகவும் வருந்திப் பேரொலியுடன் இங்ஙனம் புலம்பினள். 'வீரர்களில் தலைவனே! வானரசூடாமணீ! யுத்தத்தில் உன் பராக்ரமம் மிகவும் பயங்கரமாயிருக்குமே! நான் ஓரபராதமும் செய்தறியேனே; மேலும், தீனையாயிருப்பவள். இப்படிப்பட்ட என்னுடன் ஏன் இப்பொழுது ஒன்றும் பேசாதிருக்கின்றனையோ? வானரஸிம்ஹனே! உன்னைப்போன்ற ராஜஸ்ரேஷ்டர்கள் தரையில் படுக்கார்களாகையால் நீ இங்ஙனம் இங்குப் படுத்திருப்பது யுக்தமன்று. எழுந்திருப்பாயாக. மேலான படுக்கையின்மேல் படுத்துக்கொள்வாயாக. பூநாதனே! நீ மரணம் அடைந்த பின்பும் என்னையுங்கூட விட்டு இந்தப் பூமியையே ஸமஸ்த அவயவங்களாலும் அணைத்துக்கொண்டிருக்கிறாயே. ஆகையால் உனக்கு என்னைக்காட்டிலும் பூமியே மேலான அன்பிற்கிடம். வீரர்களில் தலைவனே! நீ தர்மத்தின் மஹிமையால் ஸ்வர்க்கத்திற்குப் போகும் வழியில் இந்தக் கிஷ்கிந்தையைப்போலவே மிகவும் அழகான மற்றொரு பட்டணம் ஏற்படுத்திக்கொண்டிருக்கிறாப்போல் ஸ்பஷ்டமாகத் தெரியவருகின்றது. ஆனதுபற்றியே இதைவிட்டுப் போகத் தொடங்கினை. இல்லையாயின் போகமாட்டாய். நீ அந்தந்த காலங்களில் எங்களோடு கூடித் தேன்மணங்கமழப் பெற்ற உத்யானவனங்களில் நடத்தின விளையாடல்களெல்லாம் இப்பொழுது முடிந்துவிட்டனவே! நீ கேவலமாயிருப்பவனல்லையே!

பெரிய வானரக்கூட்டத்தலைவர்களுக்கெல்லாம் அதிபதியன்றோ! இப்படிப்பட்ட நீ மரணம் அடைந்தனையே! நீ இப்படியானதால் நான் ஆநந்தஞ் சிறிதுமில்லாதவளானேன். இப்பொழுது இல்லாமற்போயினும் இனிமேலாவது உன்னைப்பெற நேருமென்கிறாயோ? அந்த ஆசையும் எனக்கு இல்லாமற் போயிற்றே! இப்படிப்பட்ட கதி உண்டாயிற்றே! என் துக்கத்தை எவ்வாறு கூறுவேன்? துக்கமஹாஸமுத்ரத்தில் மூழ்கிப்போயினன். நீ அடிபட்டுத் தரையில் வீழ்ந்திருக்கக் கண்டும் என்மனம் ஆயிரஞ் சுக்கலாய் வெடித்துப் போகாதிருக்கின்றதே! ஆகையால் இதை மிகவும் கெட்டிக்கல்லென்று சொல்லவேண்டும். வானரநாதனே! நீ ஸுக்ரீவனுடைய பார்யையை அபஹரித்தனை. அத்தோடு போகாமல் அவனை ஊரைவிட்டோடத் துரத்திவிட்டனை. அதன் பலனே உனக்கிப்பொழுது ஸம்பவித்ததேயன்றி வேறில்லை. வானரர்தலைவனே! நான் உன்மேன்மையை விரும்பி உனக்கு ஹிதஞ் சொல்லினன். அப்பொழுது உன் மேன்மையை விரும்பின என்னைத் தெரியாமல் நிந்தித்தனை. சத்ருக்களது கர்வத்தை யழிப்பவனே! நண்பர்களுக்கு மேன்மையை விளைவிப்பவனே! பெரியோனே! வீரஸ்வர்க்கம் பெற்றனை. ஆகையால் இனி ஸ்வர்க்கத்தில் உருவத்தினாலும் யௌவனத்தினாலும் செருக்குற்றுக் காமதந்த்ரங்களில் சாதுர்யமுடையவர்களுமாகிய அப்ஸரஸ்த்ரீகளது மனங்களை மயங்கச்செய்து கலக்கிக் கொள்ளை கொள்ளப்போகின்றனை. இது வாஸ்தவம். நீ எவர்க்கும் ஸ்வாதினப்படாதவன். இப்படிப்பட்ட உன்னைத் தனது ஸாமர்த்யத்தினால் மனமயங்கச்செய்து ஸுக்ரீவன் வசம் அகப்படும்படி செய்தது, உன் ப்ராணன்களைக் கொள்ளும் பொருட்டு வந்த ம்ருத்யுவேயன்றி வேறன்

று. இவ்விஷயத்தில் ஸந்தேஹமேயில்லை. நான் இது வரையில் எள்ளளவும் துக்கப்படாமலும் தீனத்தன் மையறியாமலும் இருந்து இப்பொழுது தீனையாகி வை தவ்யம் அடைந்து துக்கத்தினல் பொரபொரவென்று பரிதபிக்கப்போகின்றனன். வீரனுகிய அங்கதன் இதுவ ரையில் உன்னுல் செல்வத்துடன் வளர்க்கப்பட்டு வந்த னன்; மிகவும் ஸுகுமாரனுகையால் ஸுகத்திற்கே தகுந்தவனன்றிக் கஷ்டத்தை அனுபவிக்கச் சிறிதும் பொருதவன். இந்தச் சிறுவன் உனக்குப் பின்பு, சிற் றய்யன் கோபத்தினுல் மெய்ம்மறந்து அடித்துப் பயப்ப டுத்துகையில் எந்த அவஸ்தை அடையப்போகிருனே? ஏதுமின்றித் தப்பாமல் நசித்துப் போவானே' என்று மொழிந்து, உடனே அங்கதனைப் பார்த்துக் 'குழந் தாய்! தர்மவத்ஸலனுகிய உன்னைப்பெற்ற தந்தையை இப்பொழுதே நன்ருகப் பார்த்துக் கொள்வாய். என் னப்பனே! இனி உனக்கு அவனைப் பார்க்க முடியாது' என்றுரைத்து மீளவும் பர்த்தாவைப் பார்த்து 'நீ வெகு தூரதேசத்திற்கு ப்ரயாணமாய்ப் போகிருயாகையால், உன் பிள்ளையை உச்சிமோந்து ஸமாதானப்படுத்துவா யாக. இவனுக்குச் சொல்லவேண்டிய ஸமாசாரத்தைச் சொல்லிவிட்டுப் போவாயாக. ராமன் உன்னை வதிக் கையால் பெரிய வீரகார்யஞ் செய்தவனுயினன். அவன் ஸுக்ரீவனுக்குச் செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றிக் கடனைத் தீர்த்துக் கொண்டனன்' என்று மொழிந்து ஸுக்ரீவனைப் பார்த்து 'ஸுக்ரீவா! உன் தமையன், உன் சத்ரு, ஹதனுயினன். ஆகையால் இனி உன் விரு ப்பங்களையெல்லாந் தீர்த்துக்கொள்வாயாக. பெருமை யைப் பெறுவாய். இனிக் கண்டகமொன்று மில்லாமை யால் திகிலின்றி ராஜ்யத்தை அனுபவிப்பாயாக' என்று மாழிந்து உடனே மீளவும் வாலியைப் பார்த்து 'வான

ரர் தலைவனே! நான் இங்ஙனம் ஓயாமல் புலம்புகின்றே னே! இங்ஙனம் புலம்பிக்கொண்டிருப்பினும் என்மேல் கொஞ்சமாயினும் ப்ரீதியை வைத்துப் பேசாதிருக்கின் றனை யேன்? இதோ உத்தமைகளான உன் பார்யைகள் பலர் வந்திருக்கின்றனர். இவர்களையாயினும் காண் பாயாக' என்றனள். அந்தத் தாரை அங்ஙனம் கதறி னதைக் கேட்டு வாலியின் பார்யைகளான அவ்வானர ஸ்த்ரீகள் அனைவரும் சேர்ந்து துக்கத்தினால் வருந்தித் தீனனாகிய அங்கதனை அணைத்துக்கொண்டு வாலியைப் பார்த்து இங்ஙனம் ரோதனஞ் செய்தனர். தாரை 'நாதா! தோள்வளைகளால் விளக்க முற்று வீர்யப்பெ ருக்கினால் துலங்கும் புஜங்களுடையவனே! அங்கதனை விட்டு இப்பொழுது ஏன் நெடுநாள் தூரதேசத்திலிருக் கப் போகின்றனை? நீயோ பிள்ளையிடத்தில் மிகுந்த ப்ரீ தியுடையவன். இவனும் குணங்களில் ஏறக்குறைய உன் னைப் போன்றவன். இப்படிப்பட்ட நீ இவ்வளவு குண முள்ள பிள்ளையை இங்ஙனம் விட்டுப்போவது யுக்த மன்று. அன்பிற்கிடமானவனே! அழகிய உருவமுடை யவனே! நாதா! என்னிடத்திலும் அங்கதனிடத்திலும் அவ்வளவுமேலான ப்ரீதியுடைய நீ இப்பொழுது என் னையும் அங்கதனையும் கைவிட்டு வெகுதூரதேசத் திற்குப் போக ப்ரயாணமாயிருக்கின்றனையே! அவ்வ ளவு தப்பு நானாவது உன்பிள்ளை அங்கதனாவது என்ன செய்தோம்? நீண்ட புஜங்களுடையவனே! கபிகுலநா தனே! வீரா! நான் எனக்கும் தெரியாமல் ஏதேனும் அப்ரியம் உனக்குச் செய்திருப்பேனாயின், இப்பொழுது என் தலை உன் பாதங்களில் பட வணங்குகிறேன். என் அபராதத்தைத் தயை செய்து பொறுக்கவேணும்' என்று புலம்பினள். புகழும்படியான மேனியின் வர் ணத்தையுடைய தாரை பார்ப்போர்களுக்கும் துயரம்

உண்டாகும்படி வானரஸ்த்ரீகளும் தானுமாகப் பர்த்தாவினருகில் ரோதனஞ் செய்துகொண்டேயிருந்து வாலி வீழ்ந்திருக்குமிடத்தில் அவன் பக்கத்தில் தானும் ப்ராயோபவேசஞ் செய்வதாக நிச்சயித்துக்கொண்டனள். இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

### ஹநுமான் தாரைக்கு நல்வார்த்தை சொல்லுதல்.

அனந்தரம் வானரர்கூட்டத்துத்தலைவனாகிய ஹநுமான், வாலியினருகில் தரையில் வீழ்ந்திருப்பவளும் ஆகாயத்தினின்று பூமியில் வீழ்ந்திருக்கிற நக்ஷத்ரம்போல் விளங்குகின்றவளுமாகிய தாரையை மெல்ல மெல்ல இனிய உரைகளால் ஸமாதானப்படுத்த முயன்று 'ஒவ்வொரு ப்ராணியும் தன் தன் கர்மவாஸனையைப் பற்றித் தெரிந்தும் தெரியாமலும் தான் செய்யும் நன்மை தீமைகளுக்கு நேரிடும் ஸுகதுக்கங்கள் பரலோகத்திலும் தப்பாமல் கூடவே வரப்பெற்று அவைகளை அநுபவிக்கின்றனன். இப்படி ஒவ்வொருவனும் தன் கர்மபலனையே அநுபவிக்கிறானன்றி, ஒருவனால் மற்றொருவனுக்கு நன்மை தீமைகள் உண்டாகின்றனவென்னலாகாது. வாலியும் தன் கர்மத்தினாலேயே ஹதனானானன்றி ஸுக்ரீவனாலன்று. நீ 'நான் எந்தக் கர்மத்தினால் எந்த லோகத்திற்குப் போவேனோ' என்று உன்னைப் பார்த்து நீயே துக்கிக்கவேண்டியதாயிருக்கின்றதே! இப்படியிருக்க உன்னைப்போன்ற மற்றொருவனைப் பார்த்து ஏன் சோகிக்கின்றனை? உனக்குள் நீயே தீனையாயிருக்கின்றனையே! மற்றை எந்தத் தீனனைப் பார்த்து மனமிரக்கமுறுகின்றனை? தாம் தம்மைப் பார்த்துத் துக்கப்படவேண்டியதும் தீனர்களாவதுமின்றியிருப்பவரன்றோ அங்ஙனம் இல்லாதவரைப் பார்த்து வருந்தி

மன இரக்கமுறவேண்டும். மேலும், உன் தேஹம் நீர்க்குமிழிபோன்றது. எல்லோருடைய தேஹமும் அப்படிப்பட்டதே யாகையால் தேஹத்தின் நிமித்தமாக எவரைப்பார்த்து எவர் துக்கிக்கவேண்டியிருக்கிறது? துக்கிப்பவருடைய தேஹமும் நீர்க்குமிழிபோன்றதே யல்லவா? உனக்குப் பிள்ளை இருக்கிறுனுகையால் ஸஹகமனஞ்செய்யலாகாது. நீ உன் பிள்ளை அங்கதனைப் பார்த்துக்கொள்ளவேண்டியதாயிருக்கிறது. அவனுக்கு இனி முன்னம் நீ நன்மைகள் எவை செய்யவேண்டுமோ அவைகளை ஆலோசிப்பாயாக. தாரே! நீ அறிவுடையவள். பூமி முதலிய பூதங்களின் வரத்துப்போக்குகள் நிலை நின்றவை யல்லவென்று நீ அறிவாயல்லவா? ஆகையால் இவ்வுலகத்தில் வழங்கிவரும் அசுபமான ரோதனுதிகளையும் சுபமான ப்ரேத கார்யங்களையும் நடத்துவாயாக. எவன் ஆயிரம் பத்துலக்ஷம் அர்ப்புதமென்னும் கணக்குள்ள வானரகோடிகளை அவரவர்க்குத் தகுந்தபடி பிரிவினைகளைச் செய்து ஜீவனத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தானே, அப்படிப்பட்ட மஹானுபாவனுகிய வாலி இப்பொழுது காலதர்மத்தை அடைந்தனன். பலரைப் போஷித்துவந்த புண்யபலனை அனுபவிப்பதற்காகப் பரலோகம் போயிருக்கையில் அப்படிப்பட்டவனைக் குறித்து வருந்துவது யுக்தமன்று. இந்த வாலி சாஸ்த்ரங்களை நன்ருக வாசித்துத் தத்வார்த்தங்களை உணர்ந்து தன்ஜனங்கள் வருந்துவராயின் இனிய உரைகளால் ஸமாதானப்படுத்தியும் யாசகர்களுக்கு வேண்டினவற்றைக் கொடுத்தும் அபராதிகளைத் தயையால் பொறுத்தும் இப்படி தர்மத்தில் நிலைநின்றிருந்து தர்மத்தைக் கைவசஞ்செய்துகொண்ட புண்யாத்மாக்கள் வஸிக்கும் உத்தமலோகங்களைப் பெற்றனன். ஆகையால் இவனைப் பற்றி வருந்துவது யுக்தமன்று.

னிந்தைக் கிடமாகாதவளே! இந்த ஸமஸ்தவானரர் தலைவர்க்கும் உன்பிள்ளையாகிய இவ்வங்கதனுக்கும் இந்தக்குரங்குகரடிராஜ்யத்திற்கும் நீயே அரசாணி. நீயே திக்கு. பெண்மணியே! இந்தச் சோகத்தை யும் பரிதாபத்தையும் மெதுவாக விட்டுத் தொலைப் பாயாக. உன்னை ஸஹாயமாகப்பற்றி இவ்வங்கதன் ராஜ்யபரிபாலனஞ் செய்வானாக. ஸந்ததி எந்த ப்ரயோ ஜனத்திற்காகத் தோற்றியதோ, எந்தக் கார்யம் இப் பொழுது செய்யத்தக்கதோ, அந்த ப்ரேதகார்யங் களையெல்லாம் முன்பு வாலிக்கு அங்கதனைக்கொண்டு செய்விப்பாயாக. இதுவே இப்பொழுதைக்குத் தகுந் ததன்றிச் சோகிப்பது யுக்தமன்று. வானரராஜனாகிய வாலிக்கு ஸம்ஸ்காரஞ் செய்விக்கவேண்டும். அங்கத னுக்குப் பட்டாபிஷேகம் நடத்தவேண்டும். ஸிம்ஹா ஸனத்தின்மேலேறி ராஜ்யஸுகங்களை அனுபவிக்கின்ற பிள்ளையைப் பார்த்துக்கொண்டு துக்கத்தை மறந்து ஸுகித்திருப்பாய்' என்று ஆஶ்வாஸப்படுத்தினன். அங் ஙனம் பர்த்தாவின் வ்யஸனத்தினால் வருத்தமுறு கின்ற அந்தத் தாரை ஹநுமான் சொன்ன வார்த்தை யைக் கேட்டுத் தான் சொல்வதைக் கேட்கும்பொருட்டு மனவூக்கத்துடனிருக்கின்ற அவனைப் பார்த்து 'என்னை ஸஹகமனத்தைவிட்டுப் பிள்ளையைப் பார்த்துக்கொண் டிருப்பாய்' என்றனை. அங்கதனைப்போல் குணமு டைய நூறுபிள்ளைகள் ஒரு தட்டில் இருக்கட்டும்' ஹத னாகிய இவ்வீரனுடைய அங்கத்தை ஆலிங்கஞ்செய்வ தும் ஒரு தட்டிலிருக்கட்டும். எனக்கு என்னவோ! ஹத னாகிய இவ்வீரனுடைய அங்கத்தை ஆலிங்கனஞ் செய் வதே மேலாயிருக்கின்றது. வாலிக்கு ஸம்ஸ்காரஞ் செய்து அங்கதனுக்குப் பட்டங் கட்டுவாயென்றனை. வானரர்தலைவனாகிய வாலிக்கு ஸம்ஸ்காரஞ் செய்யவா வது அங்கதனுக்குப் பட்டங்கட்டவாவது நான் வல்ல

எல்லேன். வாலிக்குப் பின்பு ஸர்வகார்யங்களேயும் நிறைவேற்ற வேண்டியவன் அங்கதனுக்குச் சிற்றப்யனு கிய ஸுக்ரீவனேயன்றி மற்றொருவனுமல்லன். வானர ஶ்ரேஷ்டனே! அங்கதனைக் காப்பாற்றிக்கொண்டு அவ னுக்கு ஹிதமான கார்யங்களை முன்னம் ஆலோசிக்க வேண்டியவள் நானென்று நினைத்தனையோ! இவ்வெ ண்ணம் நீ கொள்ளலாகாது. ஏனெனில்—பிள்ளையின் ஹிதத்தை விரும்பி அவனைப் பார்த்துக்கொள்ளவேண் டிய பந்து தந்தையேயன்றித் தாயன்று. அப்படிப்பட்ட தந்தைபோயினும் தந்தைக்குப் பின்னுள்ளவன் சிற்றப் யனேயன்றி நானல்லேன். வானரராஜனுகிய வாலியைத் தொடருவதைக் காட்டிலும் மேலாக உரியது இவ்வுல கத்திலாவது பரலோகத்திலாவது மற்றொன்றும் இல் லை. ஆகையால் யுத்தத்தில் சத்ருவுக்கு எதிர்முகமா யிருந்து அடிபட்ட வீரனுகிய வாலி படுத்திருக்கின்ற இந்தப்படுக்கையே எனக்கும் படுக்க உரியது. இதைக் காட்டிலும் மற்றொன்றுமில்லை' என்றனள். இருபத் தொன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

மரணம் அடைந்தாற்போல் மூர்ச்சித்துக் கிடக்கும் வாலி மூர்ச்சைதெளிந்து மேல் செய்யவேண்டுங் கார்யத்தைக் கூறுதல்.

குற்றுயிரோடிருக்கும் வாலி மெதுவாக மூச்சுவிட் டுக்கொண்டு நாற்புறமும் பார்த்து முதலில் தன்பின் னைக்கு முன்னேயிருக்கின்ற ஸுக்ரீவனைக் கண்டனன். வானரர் தலைவனுகிய அவ்வாலி வெற்றிபெற்றிருக்கின்ற அந்தஸுக்ரீவனைக் கண்டு தெளிவான வார்த்தைக ளால் அழைத்து ஸ்னேஹம் விளங்குமாறு 'ஸுக்ரீவா! உன்னை ராஜ்யத்தினின்று துரத்தி உன் பார்யையை

அபஹரித்துப்பாபஞ்செய்தேனென்று நீ அதன் விஷயமாக என்மேல் தோஷம் நினைக்கவேண்டாம். இப்படிப்பட்டபலன் மேலே உண்டாகவேண்டிய காரணத்தைப்பற்றித் தெய்வாதீனத்தினுல் என்புத்திக்கு உண்டான மயக்கம் பலாத்காரஞ்செய்து என்னை இழுத்து இங்ஙனம் என்னைக்கொண்டு செய்வித்ததென்று தெரிந்து கொள்வாயாக. அப்பனே! நம்மிருவர்க்கும் ராஜ்ய ஸுகமும்உடன்பிறந்தவர்களுக்குரிய ஸ்னேஹமும் ஒரே காலத்தில் உண்டாகக்கூடாதென்று தெய்வம் ஸங்கல்பித்தாற்போல் எனக்குத் தோற்றுகிறது. இந்தத் தெய்வத்தின் ஏற்பாடு தவருமல் அப்படியே ஆகுமன்றி மற்றொருவிதம் ஆக நேராது. நான் இப்பொழுதே சீக்ரத்தில் யமலோகத்திற்குப் போகிறேனென்று உணர்வாயாக. ஆகையால் நீ இனி வானரராஜ்யத்தை யெல்லாங் கைப்பற்றிப் பாதுகாத்து வருவாயாக. ப்ராணன்களும் ராஜ்யமும் விஸ்தாரமான இந்த ஸம்பத்தும், அன்றியே வாலி எப்படிப் பட்டவர்களுக்கும் ஜயிக்கமுடியாதவனென்னும் பழிக்கிடமாகாத யசஸ்ஸும் என்னை இதோ சீக்ரமாக விட்டுப்போகின்றன. வீரனே! வானரராஜனே! இப்பொழுது என்னுடைய அந்திமகாலத்தில் உனக்கு எந்த வார்த்தை சொல்வேனே, அது உனக்குச் செய்து நிறைவேற்றக் கஷ்டமாயிருப்பினும் நீ தப்பாமல் அதைச் செய்தே தீரவேண்டும். இவ்வங்கதன் செல்வத்துடன் ஸுகமாக வளர்க்கப்பட்டவனுகையால் ஸுகத்திற்கே தகுந்தவன்; கஷ்டப்படத் தகுந்தவனல்லன். மேலும் வயதில் பாலனுயினும் புத்தியில் பாலனல்லன். இவன் முகத்தில் கண்ணீர் பெருகப் பெற்றுப் பூமியில் விழுந்திருக்கின்றனன் பார். இந்தக் குமாரன் எனக்கு ப்ராணன்களைக் காட்டிலும் மேலான அன்பிற்கிடம். இவனை நீ பெற்ற பிள்ளையாகப் பார்த்

துக் கொள்ளவேண்டும். தந்தையாகிய நான் இவனை விட்டுப் போகிறேனுகையால் இவனுக்கு உன்னிடத்தில் ஒருகுறையும் வாராதிருக்கும்படி நன்ருகக் காப்பாற்ற வேண்டும். வானரர் தலைவனே! இவ்வங்கதனுக்கு இனிமேல் என்னைப்போலவே வேண்டியவஸ்துக்களையெல்லாம் கொடுப்பவனும், ஆபத்துக்களைப்போக்கி ரக்ஷிப்பவனும், பயம் உண்டாகும் ஸமயத்தில் அபயங் கொடுப்பவனும் நீயே யன்றி மற்றெவர் இருக்கின்றனர்? ஸ்ரீமானுகிய இந்தத் தாராகுமாரன் பராக்ரமத்தில் உனக்கொப்பானவன், ஸமஸ்த கார்யங்களிலும் உனக்கு ஸஹாயமாயிருப்பது மாத்ரமே யன்றி ராக்ஷஸர்களை வதிக்கும்பொழுது உனக்கு முன்னே நிற்பான். இந்தத் தாரையின் குமாரன் அங்கதன் நல்ல வயதுடையவனும் மஹா பலமுடையவனும் மிகுந்த வேகமுடையவனுமாகையால் யுத்தத்தில் பராக்ரமத்தைச் செலுத்தித் தனக்குத் தகுந்த பெரியகார்யங்களை நடத்துவான். ஸுஷேணன் புதல்வியாகிய இந்தத் தாரை ஸூக்ஷ்மார்த்தங்களை நிச்சயிப்பதிலும், மேலும் வரப்போகிற பலவகை ஆபத்துக்களை ஆராய்வதிலும் மிகவும் தேர்ச்சியுடையவள். தாரை ஏதேனும் ஓர் அபிப்ராயஞ் சொல்வாளாயின் அது வேறுவிதமாகத் திரும்பமாட்டாது. ஆகையால் இவள் எதை நல்லதென்று சொல்வாளோ அதை ஸந்தேஹமின்றிச் செய்யவேண்டும். ராமகார்யத்தையுங்கூட நீ எள்ளளவும் சங்கைப்படாமல் அவஸ்யம் செய்யவேண்டும்; செய்யாத பக்ஷத்தில் அதர்மம் விளைவது மாத்ரமேயன்றி, ராமன் பேச்சுத் தவறித் தன்னை இங்ஙனம் அவமானித்ததற்குக்கோபித்து உன்னை வதிப்பான். ஸுக்ரீவா! எனக்குத் தேவேந்த்ரன் கொடுத்த திவ்யமான இந்தக் காஞ்சனமாலையையுங்கூட இப்பொழுதே கைப்பற்றுவாயாக. ஏனெனில்,

நான் மரணம் அடைந்தபின்பு இதிலுள்ள சிறந்த காந்தி மழுங்கிப்போம். ப்ராணன்கள் போவதற்கு முன்னமே வாங்கிக்கொள்வாயாக' என்றனன். வாலி அங்ஙனஞ்சொல்லுகையில் ஸுக்ரீவன் உடன்பிறந்தவனிடத்திலுள்ள ஸ்னேஹத்தினல் மனக் களிப்பின்றி வருந்தி ராஹுவால் பீடிக்கப்பட்ட சந்த்ரன்போல் காந்தியற்றவனாயினன். ஸுக்ரீவன் வாலி சொன்னபடி வைரத்தை விட்டுச்சோம்பலின்றி வாலியின் சொற்படி நடப்பவனாகி அண்ணனிடம் அனுமதியைப்பெற்று அந்தக் காஞ்சனமாலையைப் பெற்றுக்கொண்டனன். வாலி அந்தக் காஞ்சனமாலையை ஸுக்ரீவனுக்குக் கொடுத்துத் தான் மரணம் அடைவதற்கு ஸந்நாஹப்பட்டுத் தன்மனதிரில் நிற்குங் குமாரனாகிய அங்கதனைப் பார்த்து ஸ்னேஹம் விளங்கும்படி 'நான் போனபின்பு நீ தேசத்தையும் காலத்தையும் அறிந்து ப்ரியத்தையாவது அப்ரியத்தையாவது ப்ரபு சொல்வானாயின் ப்ரியத்தைப்போலவே அப்ரியத்தையும் துக்ககாலத்தில் ஸுகத்தையும் ஸுககாலத்தில் துக்கத்தையும் பொறுத்துக்கொண்டு ஸுக்ரீவனுக்கு உட்பட்டு வர்த்திப்பாயாக. மஹாபாஹுவே! உன்னை நான் எப்பொழுதும் எப்படி பாராட்டிக்கொண்டிருந்தேனோ, அவ்விதமாகவே ஸுக்ரீவன் நீ எப்படியிருப்பினும் உன்னை வெகுமானத்துடன் பாராட்டமாட்டானாகையால் நீ இவனுடைய மதப்படியிருந்து இவன் மகிழும்படி நடப்பாயாயின் இவனும் உன் மீது அன்புடன் இருப்பான். சத்ருக்களை அழிப்பவனே! இந்த ஸுக்ரீவனது சத்ருக்களோடு சேரும் புருஷனோடாவது இவனது சத்ருக்களோடாவது சேரவேண்டாம். நீ ப்ரபுவாகிய ஸுக்ரீவனது கார்யங்களில் ஆஸக்தியுடையனாகி இந்த்ரியங்களை வென்று அவனது ஆஜ்

ஞையின்படி நடந்துகொண்டிருப்பாயாக. அதிகஸ்னே ஹஞ்செய்தலும் ஸ்னேஹமே செய்யாதிருத்தலும் பெரியதப்புக்களாகையால் அவ்விரண்டையும் விட்டு இவைகளுக்கு இடையிலிருப்பவனுகி நடப்பாயாக' என்றனன். வாலி இங்ஙனம் அங்கதனுக்குச் சொல்லிப் பிறகு பாணபாதை மிகவும் அதிகமாகையில் கண்கள் கிருகிருவென்று சுழலவும் பற்கள் வெளிப்பட்டுப் பயங்கரமாகத் தோற்றவும்பெற்று ப்ராணன்களை விட்டனன். அனந்தரம் அங்குள்ள வானரஸ்ரேஷ்டர்களும் பல வானரஸமூஹங்களைப் பாதுகாப்பவருமாகிய வானரர்கள் அனைவரும்'வானராதிபதியாகிய வாலி ஸ்வர்க்கத்திற்குப்போனுகையால் கிஷ்கிந்தாபுரம் பாழடைந்தாற்போல் காந்தி குன்றப்பெற்றதே! உத்யானங்களும் பர்வதங்களும் அரண்யங்களும் சூன்யங்களாயின. வானரஸிம்ஹனுகிய வாலி ஹதனுகையில் வானரர்களனைவரும் ஒளிமழுங்கப்பெற்றனர். அவ்வாலி நடந்து போகும் பொழுது பெரிய அவனது துடைகளின் வேகத்தினுல் மஹாரண்யங்களும் சிறியவனங்களும் புஷ்ப ஸமூஹங்களோடுகூட அவனைப் பின்றொடர்ந்து செல்லுமே! இப்பொழுது அப்படிப்பட்ட கார்யத்தை எவன் செய்யவல்லவன்? இவன் மஹானுபாவனும் மஹாபுஜனுமாகிய கோலபனென்னுங் கந்தர்வனேடு பதினைந்து ஸம்வத்ஸரங்கள் பெரியயுத்தஞ் செய்தனன். அந்தயுத்தம் ராத்ரியும் பகலும் ஓயாமல் பதினைந்து ஸம்வத்ஸரங்கள் நடந்தது. பிறகு பதினாவது ஸம்வத்ஸரத்தில் கோலபன் கீழே தள்ளப்பட்டனன். துஷ்டனுகிய அந்தக் கோலபனையுங்கூட வதித்துப் பயங்கரமான கோரைப் பற்கள் விளங்க நம்மெல்லோர்க்கும் எப்படிப்பட்ட பயம் உண்டாயினும் அபயங்கொடுத்துக் கொண்டிருந்த இவ்வாலி இப்பொழுது எவ்வாறு முடிக்கப்பட்டனன்? ஆச்

சர்யமாயிருக்கிறதே' என்று பெருங்கோஷம் ஒன்று உண்டாகும்படி ரோதனஞ் செய்தனர். அப்பொழுது ஸிம்ஹம் இருக்கிற பெரிய அரண்யத்தில், கூட்டத்தில் தலைமையுள்ள காளையெருது வதிக்கப்படுகையில் அங்குள்ள பசுக்கள் பயப்படுவதுபோல்; ராமனால் வீரனாகிய வானரர் தலைவன் வாலி ஹதனாகையில் (ராமனிருக்கும் அவ்வனத்தில்) வானரர்கள் சிறிதும் ஸுகத்தைக்காணாமல் மிகவும் பயம் அடைந்தனர். அனந்தரம் அந்தத் தாரை, மரணம் அடைந்திருக்கும் தன் பர்த்தாவின் முகத்தைப் பார்த்துப் பெருந்துயரமாகிற ஸமுத்ரத்தில் மூழ்கி மஹாவ்ருக்ஷம் அறுப்புண்டு வீழ்கையில் அதைச் சுற்றிக்கொண்டிருந்த கொடி அத்துடன்கூடத் தரையில் வீழ்வதுபோல, ஹதனாகிய வாலியை அணைத்துக்கொண்டு பூமியில் வீழ்ந்தனள். இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ வாலி மரணம் அடைந்தபின்பு தாரை புலம்புதல். }

அனந்தரம் தாரை, வானரராஜனாகிய வாலியின் முகத்தை மோந்துகொண்டு, மரணம் அடைந்து இவ்வுலகத்தினின்று லோகாந்தரஞ்சென்ற கணவனைக்கண்டு 'வீரர்களில் தலைவனே! நீ என்வார்த்தையைக் கேளாமற்போயினையே! ஆகையால் கற்கள் நிறைந்து மேடுபள்ளமாகி மிகவும் பாதையை விளைக்கின்ற பூமியின் மேல் கஷ்டமாகப் படுத்திருக்கின்றனையே! வானரநாதா! நீ பூமியை அணைத்துக்கொண்டு படுத்து என்னோடு மறுமொழி கூறாதிருப்பதுபற்றி உனக்கு இந்தப்பூமியே என்னைக் காட்டிலும் ப்ரீதிக்கிடமென்பது நிஜம். வீரனே! ஸாஹஸஞ் செய்யும் தன்மையனே! என் ப்ரீ

திக்கிடமா யிருப்பவனே! உன்னிடம் பல தடவைகள் பயந்தோடின ஸுக்ரீவன் கையில் அகப்பட்டனையே! அங்ஙனம் ஓடிப்போன ஸுக்ரீவனே இப்பொழுது பராக்ரமம் மிகப்பெற்றனன். தெய்வம் இங்ஙனஞ் செய் வதை, ஐயோ! என்னவென்னலாம்? மஹாபலனுகிய உன்னை ஸ்ரேஷ்டர்களான [1] பல்லூகர்களும் வானர முக்யர்களும் சூழ்ந்திருக்கின்றனர். (அவர்களை ஏன் உதாஸிக்கின்றனை?) இவர்களது ரோதனத்வனியை யும் துக்கித்திருக்கிற அங்கதனுடைய புலம்பலையும் என் கதறலையும் கேட்டு எழுந்திராதிருக்கின்றனை ஏன்? முன்பு நீ சத்ருக்களை வதித்து எதன்மேல் படுக்கவைத் தனையோ, அப்படிப்பட்ட இந்த வீரசயனத்திலே யே, நீ இப்பொழுது யுத்தத்தில் அடிபட்டுப்படுத் திருக்கின்றனை. நீ யுத்தத்தில் விருப்பமுடையவனு கையால் உனக்கு யுத்தத்திலேயே மரணம் நேரிட்டது. நீ பலத்தைக் கபடயுத்தத்தில் உபயோகப்படுத்தமாட் டாய்; ஆகையால் இது தோஷமின்றிப் பரிசுத்தமா யிருப்பது. உனக்கு யுத்தமென்றுல் மிகவும் விருப்பம். என் ப்ராணநாதா! வெகுமதி கொடுப்பவனே! இப்படிப் பட்ட நீ, இப்பொழுது என்னை அநாதையாக்கித் தனி யேவிட்டுப் போயினையே! எனக்கு எவர் திக்கு? பண்டி தனுயிருப்பவன் பெண்ணைச் சூரனுக்கு எவ்விதத்தி லும் கொடுக்கலாகாது. சூரனது பார்யையாகிய நான் விதவையாகிப் பாழானேன் பார். எனது மேன்மை போயிற்று. எனக்குச் சாஸ்வதமாயிருந்த பதிஸுஸ்ரூ ஷையும் தொலைந்தது. இவ்வளவு மாத்ரமன்றே! ஆழ்ந்ததும் மிக விஸ்தாரமுடையதுமான துக்கஸமுத் ரத்தில் மூழ்கினன். ப்ராணேஸ்வரனுகிய நீ ஹதனுன தைக் கண்ணுரக்கண்டும் என் மனம் நூறு சுக்கலாய் வெடித்துப்போகா திருக்கின்றதே! இவ்வளவு கடினமா

1 கரடிகள்.

யிருப்பதால் இது கல்லில் சிறந்த பாகத்தை யெடுத்துச் செய்யப்பட்டதாக வேண்டுமேயன்றி வேறில்லை. இது நிச்சயம். எனக்குக் கணவனும் நண்பனும் இயற்கையாகவே எனக்கு ப்ரீதியை விளைப்பவனும் யுத்தத்தில் மிகுந்த பராக்ரம முடையவனுமாகிய சூரன் மரணம் அடைந்தனனே! மற்றெவன் இருந்தென்ன? பதி போனபின்பு பெண்பிள்ளை புத்திரவதியாயினும் மிகவும் பரிபூர்ணமாகத் தனதான்ய முடையவளாயினும், அவளைப் பண்டிதர்கள் விதவையென்றே சொல்லிக்கொள்வார்கள். வீரனே! நீ சரீரத்தினின்று பெருகின ரக்த ப்ரவாஹத்தின்மேல் படுத்திருப்பது கண்டால் பட்டுப் பூச்சியின் வர்ணம்போல் சிவந்த மெத்தையுடைய படுக்கையின்மேல் படுத்தாற்போலிருக்கிறது. வானரதிலகனே! உன் தேஹமெல்லாம் தூசியும் ரக்தமும் கலந்து சுற்றிலும் நிறைந்திருக்கின்றது; ஆகையால் என்கையில் நிற்காமல் நழுவிப்போகையால் இதைக் கட்டியணைக்கவும் ஸாத்யப்படாதிருக்கின்றனன். ஸுக்ரீவனுக்கும் உனக்கும் பெரியவைரம் உண்டா யிருக்கும்பொழுது, ராமன் ஸுக்ரீவனுக்கு உன்னாலுண்டான பயத்தை ஒரு பாணத்தினாலேயே போக்கிவிட்டானாகையால் இனி ஸுக்ரீவன் ப்ரயோஜனங் கைகூடப் பெற்றவனே! நீ மரணம் அடைகையில் உன்னைத் தழுவி அணைப்பதற்கும் நேராதபடி உன்மார்பில் நாட்டின பாணம் தடுக்கையால் உன்னை வெறுமனே கண்களால் காண்பது மாத்ரமேயாகப் பெற்றவளானேன்' என்று புலம்பினள். அப்பொழுது நீலன், பர்வதகுஹையில் மறைந்து ஜ்வலிக்கின்ற க்ரூரவிஷ ஸர்ப்பத்தை இழுப்பதுபோல் வாலியின் தேஹத்தில் நாட்டப்பட்டிருக்கிற ராமபாணத்தைப் பிடுங்கிப்போட்டனன். அங்ஙனம் பிடுங்குகையில் அந்தப்பாணத்தின் ஒளி, ஸூர்யனிடத்தினின்று புறப்

பட்டு அஸ்தமய பர்வதத்தின் சிகரத்தில் தடைபடுகின்ற கிரணம்போல்ப்ரகாசித்தது. பர்வதத்தினின்று சிவந்த கைரிகதாதுக்களோடு கலந்து சிவந்த ஜலதாரைகள் பெருகுவதுபோல் வாலியின் தேஹத்திலுள்ள வ்ரணங்களினின்று ரக்ததாரைகள் பெருகின. தாரை, அஸ்த்ரத்தினுல் அடிக்கப்பட்டுப் போர்க்களப் புழுதிகளால் நிரம்பிய சூரனுகிய தன்பர்த்தாவைக் கண்ணீர்களால் தேஹம் முழுவதும் தூசிபோகும்படி நனைத்து விட்டனள். அங்ஙனம் ராமபாணத்தினுல் அடிக்கப்பட்டு அவயவமெல்லாம் ரக்தத்தில் நனைந்திருக்கிற கணவனைப் பார்த்துத் தாரை பொன் வர்ணம் பொருந்திய கண்களையுடைய தன் புதல்வனுகிய அங்கதனை அழைத்துக் 'குழந்தாய்! மிகவும் பயங்கரமான தந்தையின் கடைசி அவஸ்தையை (மரணுவஸ்தையை)க் காண்பாயாக. பாபகர்மத்தினுலுண்டான வைரம் இப்போது முடிந்து விட்டது. குமாரா! யமக்ருஹத்திற்குப்போகும் வானரேஸ்வரனுக்கு, உதயஸூர்யன்போல் சிவந்த சரீரமுடையவனுக்கு, மானங்கொடுப்பதும் கெடுப்பதுஞ் செய்பவனுக்கு, உன்னைப்பெற்ற தந்தைக்கு, நமஸ்காரஞ் செய்வாயாக' என்றனள். தாய் இங்ஙனஞ் சொல்லுகையில் அங்கதன் எழுந்திருந்து 'நான் அங்கதன்" என்று தன்பேரைச் சொல்லிக்கொண்டு பருத்துருண்ட புஜதண்டங்களால் தந்தையின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்காரஞ் செய்தனன். அப்பொழுது தாரை வாலியைப் பார்த்து 'அங்கதன் உனக்கு நமஸ்காரஞ் செய்கையில் முன்போல் 'குழந்தாய்! ஆயுள் வளரப் பெற்றிருப்பாயாக' என்று ஏன் இவனை ஆசீர்வதியாதிருக்கின்றனை? ஸிம்ஹத்தினுல் அந்தக்ஷணத்தில் கொல்லப்பட்ட எருதைப் பசுவும் கன்றும் விடாமல் சுற்றிக்கொண்டிருப்பதுபோல், ஹதனுகி ப்ராஜ்ஞையில்லாதிருக்கின்ற உன்னை நானும் என் புதல்வனும்

பணிந்துகொண் டிருக்கின்றனம். நீ யுத்தமென்னும் யாகத்தைச்செய்து ராமபாணமென்னும்ஜலத்தில் அவப்ருதஸ்னனஞ் செய்தனையே! பார்யையாகிய என்னை விட்டு எப்படி செய்தனை? முன்பு தேவேந்த்ரன் யுத்தத்தில் ஸந்தோஷமுற்று உனக்குக்கொடுத்த காஞ்சன மாலை இப்பொழுது உன் வக்ஷஸ்தலத்தில் எனக்குப் புலப்படவில்லையே! ஏன்? மானங்கொடுப்பதும் கெடுப்பதுஞ் செய்பவனே! ஸூர்யன் எப்பொழுதும் ப்ரதக்ஷிணஞ் செய்துகொண் டிருக்கையால் அவனது காந்தி மேருபர்வதத்தை விடாதிருப்பதுபோல், நீ மரணம் அடைந்திருப்பினும் ராஜ்யலக்ஷ்மி உன்னை விடாதிருக்கின்றது. நீ, நான் சொன்ன ஹிதவசனத்தைக் கேளாமற் போயினை. உன்னை அப்பொழுது யுத்தத்திற்குப் போகவொட்டாமல் தடுப்பதற்கு எனக்கு ஸாத்யப்படாமற் போயிற்று. யுத்தத்தில் நீஹதனுகும்பொழுதே என் லக்ஷ்மியும் என்னை விட்டுப்போயிற்று' என்று புலம்பினள். இருபத்து மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தாரையின் புலம்பலைக்கேட்டு ஸுக்ரீவன் துக்கித்தலும், ராமன் அவனை ஸமாதானப் படுத்துதலும், தாரை ராமனிடம் ப்ரபத்தி செய்தலும்.

அனந்தரம் பலிஷ்டனுகிய வாலி தம்பி ஸுக்ரீவன், அங்ஙனம் கண்ணுங் கண்ணீருமாகி ரோதனஞ் செய்து கொண்டு அணுகமுடியாத சோகஸமுத்ரத்தில் மூழ்கியிருக்கின்ற, தாரையைப் பார்த்து வருத்தமுற்றவனுகித் தன் தமையனைத் தானே, எங்குமில்லாதபடி கொன்றதற்கு மிகவும் பரிதாபமுற்றனன். அந்த ஸுக்ரீவன் பெரிய மனமுடையவன். ஆகையால் முகம் முழுவதும் கண்ணீர் பெருகப்பெற்றுத் தாரையைப் பார்த்து க்ஷணமாத்ரத்தில் ப்ராத்ருவத்தைப்பற்றி மிகவும் மனம்

பரிதபிக்கப்பெற்று ப்ருத்யர்களால் சூழப்பட்டு மெல்ல மெல்ல ராமனது அருகிற் சென்றனன். அங்ஙனம் வில்லைக் கையிற்பிடித்து ஸர்ப்பம்போன்ற பாணங்கள் அமைந்து உத்தமனுகி எங்கும் பெரும் புகழ்பெற்றுச் சுபலக்ஷணங்கள் பொருந்தி அழகான மேனியுடையனுயிருக்கின்ற ராமனிடம் ஸுக்ரீவன் சென்று 'நரேந்த்ரனே! நீ செய்த ப்ரதிஜ்ஞையின்படி உன் கார்யத்தைச் செய்தனை அதற்குப் பலனுகிய ராஜ்யத்தை எனக்கு விளைவித்தனை. ஆனுல், ராஜகுமாரனே! எனக்குப் போகங்களில் மாத்ரமேயன்று, ஜீவிதத்திலுங்கூட எள்ளளவும் மனம் பொருந்தாதிருக்கின்றது. ராமா! பட்டமஹிஷியாகிய இந்தத் தாரை இப்படி மிதமின்றி ரோதனஞ் செய்து கொண்டிருக்கையில், கிஷ்கிந்தாபுரத்திலுள்ள வானரர்கள் அனைவரும் துக்கத்தினுல் பரிதபித்து முறையிட்டுக் கொண்டிருக்கையில், அண்ணனுகிய வாலி ஹதனுகையில், அங்கதனும் பித்ருமரணத்தினுல் பிழைப்பனே மாட்டானே என்னும்படி ஸந்தேஹப்படவேண்டியிருக்கையில், இந்த ராஜ்யம் எள்ளளவும் என்மனத்திற்கு இஷ்டமாயில்லை. இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்தவனே! முன்பு நிஷ்காரணமாக என்னைத் துரத்தின கோபத்தினுலும் பருஷமாகச்சொன்ன வார்த்தைகளைப் பொறுக்க முடியாதிருந்தமையாலும் என்னை அவமதித்து மிகவும் தலைக்குமேலேறியிருந்தமையாலும் அண்ணனைக் கொல்லுவது எனக்கு ஸம்மதமாயிருந்தது. இப்பொழுது நீ வானரக்கூட்டங்களுக்குத் தலைவனுகிய வாலியைக் கொன்றபின்பு மிகவும் தீவ்ரமாகப் பரிதபிக்கின்றனன். எனக்குப் பரிதாபம் பொறுக்க முடியாதிருப்பினும், இனி எப்படியோ ஒரு விதத்தில் என் வானரஜாதிக்குத் தகுந்த வ்ருத்தியைக்கொண்டு நான் ஜீவித்திருக்கும் காலம் முழுமையும் அந்த ருஶ்யமூக பர்வதத்தில்

வாஸஞ் செய்கையே எனக்கு மிகவும் நன்மையாகத் தோற்றுகின்றது. இந்த வாலியைக் கொன்று ஸ்வர்க்கம் நேருமாயினும் எனக்கு வேண்டாம். அது எனக்கு மேலன்று. ராமா! மதியிற் சிறந்த மஹானுபாவனாகிய இவ்வாலி 'உன்னைக் கொல்ல எனக்கு இஷ்டம் இல்லை. நீ இஷ்டப்படி போவாய்' என்று என்னுடன் சொல்லினன். அந்த வார்த்தை மஹானுபாவனுடைய புத்திக்கே தகுந்திருக்கின்றது. துர்ப்புத்தியாகிய எனக்கோ இங்ஙனம் அவனைக் கொல்விக்கையே உரியதாயிற்று. ராமா! அண்ணனைக் கொல்வதாலுண்டாகும் ராஜ்யஸுகம் அதிகமோ? கொன்றபிறகு உண்டாகும் துக்கம் அதிகமோ? விசாரியாமல் கேவலம் காமத்தையே முன்னிட்டுக்கொண்டு தம்பியாயிருப்பவன் எவ்வளவு பாபிஷ்டனாயினும், எங்காயினும் மஹா குணமுடைய அண்ணனை எப்படியாயினும் வதிக்க விரும்புவானா? ஆகையால் என்னைப்போன்ற பாபிஷ்டன் ஒருவனும் இல்லை. வாலி மிகவும் பெருந்தன்மையுடையோனாகையால் தன் பெருந்தன்மையைக் கடக்காதிருந்தமைபற்றி என்னைக் கொல்வது அவனுக்கிஷ்டமாகவில்லை. நான் மிகவும் துர்ப்புத்தியாகையால் அண்ணனது ப்ராணன்களைத் தீர்க்கும்படியான மர்யாதைமீறின கார்யத்திற்கு ப்ரயத்னித்தனன். வாலி, நான் வ்ருக்ஷத்தின் கிளைகளால் அடிக்கப்பட்டுப் பாதையைப் பொறுக்க முடியாமல் கூச்சலிட்டுக்கொண்டிருக்கையில், என்னைப் பார்த்து நல்வார்த்தைகளைச் சொல்லி 'மீளவும் இப்படி யுத்தஞ்செய்ய வரவேண்டாம்' என்று மொழிந்தனன். வாலி உடன்பிறந்தமையையும் பூஜ்யஸ்வபாவத்தையும் தர்மத்தையும் பத்ரமாக வைத்துக்கொண்டிருந்து என்னைக் கொல்லாமல் விட்டுக்கொண்டு வந்தனன். நான் கோபத்தையும் காமத்தையும் கைப்பற்றி என் வானர ஸ்வபாவத்திற்குத் தகுந்த கார்யத்தை நிறைவேற்றி

னன். நரேந்த்ரா! முன்பு த்வஷ்டாவின் குமாரனுகிய விஶ்வரூபனைக் கொன்று இந்த்ரன் மஹா பாபத்தைப் பெற்றாற்போல், நான் இப்பொழுது அண்ணனை வதிப்பித்து இவ்வளவு அவ்வளவென்று எண்ணக்கூடாததும் ஸத்புருஷர்கள் பரிஹஸிக்கத் தகுந்ததும் அன்றி ஒரு காலத்திலும் விரும்பத்தகாததும் பார்ப்பதற்கு எவ்வளவும் யோக்யமாகாததுமாகிய மஹா பாபத்தைப் பெற்றனன். அவன் தேவேந்த்ர னுகையால் வரங்களைக் கொடுப்பானென்னும் ஆசையால் அவனது பாபத்தைப் பூமியும் ஜலமும் வ்ருக்ஷங்களும் ஸ்த்ரீகளும் வாங்கிக்கொண்டனர். இனிக் கேவலம் ஓர் குரங்காகிய என் பாபத்தை எவன் வாங்கிக்கொள்ள ஸம்மதிப்பான்? ராமா! அதர்மிஷ்டமும் வம்சநாசத்திற்கு மூலமாயிருப்பதுமாகிய இந்தப் பாபத்தைச் செய்து இனி ப்ரஜைகளால் 1 ராஜ ஸம்மானம் பெறுவதற்குத் தகுந்தவ னல்லேன்; யௌவ ராஜ்யத்திற்கும் உரியனல்லேன்; இனி மஹாராஜ்யத்திற்கு உரியனல்லேனென்பது சொல்ல வேண்டுமோ? சிஷ்டஜனங்கள் மிகவும் நிந்திக்கத் தக்கதும் தோஷத்திற்கிடமும் ஸமஸ்த லோகங்களாலும் கைவிடப்பட்டதுமாகிய மஹா பாபத்தைச் செய்தவனுயினன். மழையினுண்டான ஜலப்ரவாஹம் பள்ளத்தைக் குறித்துப் போவதுபோல், இம்மஹா துக்கம் என்னை அடைந்தது. மதித்தயானை ஆற்றின் கரையைக் கொம்புகளால் குத்திக் கிளறுவதுபோல், அண்ணனைக் கொல்லுவதே பின்புறமும் வாலுமாகவும் அவனுக்கு மனவருத்தத்தை விளைக்கையே துதிக்கையும் கண்களும் சிரஸும் தந்தங்களுமாகவும்பெற்று விளங்கும் மஹா பாபமென்னும் மத்தகஜம் மிகவும் மேலெழுந்து க்ஷணந்தோறும் வளர்ந்து

1. ராஜனென்னும் கொண்டாட்டம்.

கொண்டு என்னை ஹிம்ஸிக்கின்றது. விவேகாதிகளால் சோகத்தை அடக்கிக்கொள்வாய் என்கிருயோ? புருஷ திலகனே! ராமா! அக்னியில் வர்ணம்மாறின பொன்னைக் காய்ச்சும்பொழுது அது தன்னுேடிருந்த அழுக்கைப் பொறுக்காமல் அதை எப்படி வேறுபடுத்துமோ, அப்படியே என்மனத்தில் ஜன்மாந்தர ஸுக்ருதத்தினுல் விவேகம் முதலிய ஸாது வ்ருத்தங்கள் எவையேனும் இருப்பினும் அவை தன்னுேடிருக்கின்ற நான் செய்த ப்ராத்ரு வதமென்னும் பாபத்தைப் பொறுக்க முடியாமல் புறப்பட்டுப்போகும். ஐயோ! என் செய்வேன். ராகவா! மேலும், என் நிமித்தமாகவே இவ்வங்கதன் தந்தை மாண்டதற்குப் பரிதபிப்பதைக் கண்டு மஹா பலிஷ்டர்களான இவ்வானர கணுதிபதிகளின் கூட்டத்திற்கு, இப்பொழுதே பாதிப்ராணன் போனுற்போல் எனக்குத் தோற்றுகின்றது. வீரோத்தமனே! ஸௌஜன்ய முண்டாகப் பெற்றுச் சொன்னபடி தவருமல் கேட்கும் புதல்வனையும் உலகத்தில் ஸுகமாகப் பெறலாமன்றி அங்கதனைப்போன்ற நற்பிள்ளையைப் பெறுவதுமாத்ரம் மிக அரிது. அன்றியே எந்தத் தேசத்திற்குப் போயினும் ஸோதரனது ஸந்நிதானம் நேருவது ஸாத்யமன்று வீரா! பெரியோர்களில் தலைவனே! ஒருகால் அங்கதன் பிழைத்திருப்பானுயின், அவன் தாய் தாரையும் அவனை ஸம்ரக்ஷிப்பதற்காக ஜீவித்திருப்பாளன்றி, அவன் ஜீவித்திராத பக்ஷத்தில் ஜீவித்திருக்க மாட்டாளென்பதே நிச்சயம். இப்படிப்பட்ட மஹா பாபியாகிய நான், இனியாவது என் தமையனுேடும் என்புதல்வன் அங்கதனுேடும்ஸ்னேஹத்தை நிறைவேற்றுமவனுகி எரிகின்ற அக்னியில் ப்ரவேசிக்கின்றனன். இந்த வானரவீரர்கள் அனைவரும் உனது ஆஜ்ஞையின்படி நடப்பவராகி ஸீதாதேவியைத் தேடுவார்கள். ராஜகுமாரா! நான் இருக்கவேண்டிய

அவஶ்யமில்லை. நீ மிகுந்த சக்தியுடையோனாகையால், நான் மரணம் அடைந்து மறைந்தபின்னும், உன் கார்ய மெல்லாம் குறைவின்றி நிறைவேறக்கூடும். இப்படிப் பட்ட பாபத்தைச் செய்து குலத்தைப் பாழாக்கி ப்ராணனைவைத்துக்கொண்டிருப்பதற்குளள்ளளவும் தகாத என்னை, ராமா! அக்னிப்ரவேசஞ் செய்ய அனுமதிப்பாயாக' என்றனன். சத்ருவீரர்களை அடக்கும் திறமையுடைய அந்த ரகுகுலதிலகனாகிய ராமன், தன்னைப்பற்றினோருடைய விரோதிகளைப் போக்குவோனாகையால் ஸுக்ரீவனது வார்த்தையைக் கேட்டு, முன்பு வாலியைக்கொன்று அனந்தரம் வாலியின் தம்பி அந்த ஸுக்ரீவன் வருந்திச் சொன்ன வார்த்தையைக் கேட்டுக் கண்களில் நீர்பெருகத் தானும் வருத்தப்பட்டு ஏதுந்தோற்றாமல் விசாரத்தோடிருந்தனன். அனந்தரம் அந்த க்ஷணத்தில் பூமியைப்போல் பொறுமையுடையவனும் ஸமஸ்த லோகங்களையும் பாதுகாப்பவனுமாகிய ராமன், தாரை பலதடவை தன்னைப்பார்த்து வ்யஸனத்தில் மூழ்கி ரோதனஞ் செய்து மன இரக்கம் விளைத்துக்கொண்டிருக்கையில், அவளது வருத்தத்தைத் தீர்க்கும்பொருட்டு நல்வார்த்தை சொல்ல முயன்று அவளைப் பார்க்க வந்தனன். அப்பொழுது அகன்ற கண்களும் கம்பீரமான மதியும் பொருந்திய கபிவீரபத்னியாகிய தாரை, கபிஸிம்ஹங்களுக்குத் தலைவனாகிய பர்த்தாவான வாலியைத் தழுவி யணைத்துக்கொண்டு தரையில் படுத்திருக்கையில் ராமன் வருவதைக் கண்டு மந்த்ரி ஶ்ரேஷ்டர்களான வானரர்கள் அவளை எழுந்திருக்க எடுத்தனர். அந்தத் தாரை துக்கத்தின் மிகுதியால் பர்த்தாவை விட முடியாமல் துடித்துக்கணவனைக் கட்டிக்கொண்டு மந்த்ரிகளால் பலாத்காரஞ் செய்து பர்த்தாவிடமிருந்து

எடுத்து அப்புறம் கொண்டுவிடப்பட்டவளாகி, அப்பொழுது தனுஸ்ஸையும் பாணத்தையும் தரித்துத் தன் தேஜஸ்ஸினால் ஸூர்யன்போல் ஜ்வலிக்கின்ற ராமனைக் கண்டனள். மான் குட்டியின் கண்போன்ற கண்களையுடைய அந்தத் தாரை [1] ஸமஸ்த ராஜலக்ஷணங்களும் பொருந்தி அழகானகண்கள் அமைந்து இதுவரையில் என்றும் பார்க்கப்படாத புருஷோத்தமனாகிய ராமனைக் கண்டு இவனே அந்த ஸ்ரீராமனென்று தெரிந்துகொண்டனள். மேன்மைப்படுத்துகைக் குரிய அந்தப் பெண்மணி அங்ஙனம் வ்யஸனத்திலாழ்ந்து வருந்தி அடிக்கடி மூர்ச்சித்துக்கொண்டு, அனந்தரம் தேவேந்த்ரனைப் போன்றவனும் சத்ருக்களுக்கு எள்ளளவும் அணுக முடியாத மஹானுபாவனுமாகிய ராமனுடைய ஸமீபத்திற்கு மிக்க வேகத்துடன் போயினள். இங்ஙனமிருக்கின்ற அந்தத் தாரை சோகாதிஶயத்தினால் கோபித்து

---

1 இங்கு 'ஸுஸம்வ்ருதம் பார்யிவலக்ஷணைஶ்ச தம் சாருநேத்ரம் ம்ருகஶாவநேத்ரா। அத்ருஷ்ட பூர்வம் புருஷப்ரதானமயம் ஸ காகுத்ஸ்த இதி ப்ரஜஜ்ஞே' என்பது மூலம். (அயம் ஸ ராம இதி ப்ரதிஜ்ஞே) இவனே அந்த ராமனென்று தெரிந்துகொண்டனள். வாலியைக் கொன்ற ராமனிவனே யென்று தெரிந்துகொண்டனள். அல்லது— அங்கதன் முன்பு தன்னோடு எவனைக் குறித்துச் சொல்லினனோ அந்த ராமனை இவனென்று தெரிந்து கொண்டனள். அல்லது பெரியோர்கள் எவனைப் புண்டரீகாக்ஷத்வம் முதலிய குணங்களுடையவனாகச் சொல்லக்கேட்டிருந்தனளோ அந்த ராமன் இவனே யென்று தெரிந்துகொண்டனள். (அத்ருஷ்ட பூர்வம்) இது வரையில் என்றும் பார்க்கப்படாதவனை. யோகஸமாதியைத் தவிர மற்றவைகளால் பார்க்க முடியாதவனாகையால் சர்ம நேத்ரங்களால் பார்க்கக்கூடாதவனை. (ம்ருகஶாவநேத்ரா சாருநேத்ரம்) இளமான் கண் போன்ற கண்களையுடையவள் அழகிய கண்களையுடைய ராமனைக் கண்டனள். 'விதி வாநே வவிஜாநாதி விதி வஜ்ஜநபரிஶ்ரமம்' என்கிறபடியே தான் அழகிய கண்ணுடையவளாகையால் முதலில் ராமனது அழகிய கண்கள் மேலேயே த்ருஷ்டியை வைத்தாளென்று கருத்து.

மெய்ம்மறந்து ஒரேபாணத்தினல் குறிவைத்துத் தன் கணவனைக் கொன்று முடித்த அந்த ராமனைக் கிட்டித் தன்னால் ஆனமட்டும் பருஷங்களைப்பேச நிச்சயித்துக்கொண்டவளாயினும்ராமஸந்நிதானத்தின்மஹிமையால் மனக்கலக்கந்தீர்ந்து சுத்தஸத்வம் விளங்கப்பெற்று ராமனை இங்ஙனம் புகழத்தொடங்கினள். [1] நீ அப்ர

1 இங்கு 'த்வமப்ரமேயஶ்ச துராஸதஶ்ச ஜிதேந்த்ரியஶ் சோத்தமதார்மிகஶ்ச। அக்ஷய்யகீர்த்திஶ்ச விசக்ஷணஶ்ச க்ஷிதிக்ஷமாவாந் க்ஷதஜோபமாக்ஷ:' என்று மூலம். (த்வம்) மேற்சொல்லப்போகிற கல்யாண குணங்களுக்குத் தகுந்த தர்மிவைலக்ஷண்யத்தை யுடைய நீ. (அப்ரமேயஶ்ச) 'வேதாஹம்' என்று தொடங்கி 'மஹாந்தம்''க இத்யா வேத' என்ற வேதங்களுக்கும் அளவிடவொண்ணாதவன். (அப்ரமேய:) 'ஸோ அங்க வேத யதிவா ந வேத' என்கிறபடியே தனக்கும் தன் பெருமையை அளவிடமுடியாதிருப்பவன். (த்வம் அப்ரமேய:) ப்ரத்யக்ஷமாகக் கண்ணுக்குப் புலப்பட்டுக் கொண்டிருப்பினும் மனத்தினல் இப்படிப்பட்ட ஸ்வபாவமுடையவனென்று நிச்சயிப்பதற்கு முடியாதவன். (த்வம் அப்ரமேய:) நீ தனுஸ்ஸையும் பாணத்தையும் தரித்திருப்பினும் சங்கசக்ரங்களைத் தரித்த அப்ரமேயனே. (த்வமப்ரமேய:) இதோ புலப்படுகின்ற நீ. அதாவது—உன்னுடைய ஸௌலப்யதசையே அளவிடக்கூடாததாயிருக்கின்றது. (த்வமப்ரமேய:) இங்கு (த்வம்) என்னும் ஒருமையால் நீ பரிகரங்களின்றித் தனியனுயிருப்பினும் ப்ரதாபத்தின் மிகுதியால் அளவிறந்த பரிகரமுடையவன் போல் அணுகக்கூடாதிருக்கின்றனே. இங்ஙனம் அந்தக்கரணமான மனத்தினலும் அறியக்கூடாத நீ பாஹ்ய கரணங்களான நேத்ராதிகளால் அறியமுடியாதவனென்று சொல்லவேண்டுமோ? என்கிறுள்—(துராஸத:) அணுகமுடியாதவன். மனத்திற்கும கூட அணுகமுடியாதவன். இனி ப்ரகாராந்தரத்தால் எப்படி அணுகக்கூடுமென்று கருத்து. (துரஸத:) 'ஷத்ல் விஶரணகத்யவஸாதநேஷு' என்ற யாது பாடத்தில் ஷத்ல்தாதுவுக்குச் சொல்லப்பட்ட மூன்றர்த்தங்களையும் தந்த்ரத்தினல் இங்குச் சொல்லுகிறது. விஶரணமாவது—நாசம். நித்யனுகையால் நாசத்திற் கிணங்காதவன். ஸர்வவ்யாபகனுகையால் அசைக்கமுடியாதவன். நித்யாநந்தனுகையால் அவஸாதப்

மேயன், உன்னைப் பெறுவது எவர்க்கும் ஸாத்யமன்று. நீ

---

படுத்தமுடியாதவன். அவஸாதம்—வருத்தம். ஒருவராலும் வருத்தப் படுத்த முடியாதவன். (டிுராஸதஃ) 'மஹாஜநோ யேந ஊதஸ் ஸபந் யாஃ' என்கிற ஸன்மார்க்கந் தப்பினவர்களுக்குப் பெறமுடியாதவன். (டிுராஸதஶ்ச) வாலி வதத்தினல் கோபித்திருப்பவர்களுக்கு ப்ரதீ காரஞ் செய்ய அணுகவும் ஸாத்யப்படாதவன். (டிுராஸதஶ்ச) வேதபாஹ்யர்களுக்கும் குத்ருஷ்டிகளுக்கும் அணுகமுடியாத வைப வமுடையவன். இங்ஙனம் அப்ரமேயனும் துராஸதனுமாகிச் செருக் கடித்துத் திரிபவனுயினும் பரதாரங்களிலாவது பிறருடைய ராஜ்யங் களிலாவது ஆசையில்லாதவனென்கிருன்—(ஜிதேந்த்ரியஃ) ஜீஸ்ப்ரு ஹனுகி ஸுக்ரீவனுக்கு ராஜ்யங்கொடுத்தவன். (ஜிதேந்த்ரியஃ) எவனேனும் ஒருத்தியைப்பார்த்து வர்ணிக்கவாவது வர்ணிப்பான். நீயோ 'நராமஃ பரதாராந்வை சக்ஷுர்ப்யாமபி பஶ்யதி' (ராமன் பரஸ்த்ரீகளைக் கண்ணெடுத்தும் பாரான்) என்கிறபடியே தலையெடுத் தும் பாராய். (ஜிதேந்த்ரியஶ்ச) 'பஶ்யத்யசக்ஷுஃஸ ஶ்ருணோத் யகர்ணஃ' 'அபாணிபாதோ ஜவநோ க்ரஹீதா' (கண்ணில்லை, பார்க் கின்றனன். காதில்லை, கேட்கின்றனன்) (கால் கையில்லை, ஓடு கின்றனன் பிடிக்கின்றனன்) என்கிறபடியே ஸர்வேந்த்ரியங்களும் இல் லாமற்போயினும் ஸர்வத்தையும ஸர்வதேசத்திலும் ஸர்வகாலத்திலும் அறியுந்தன்மையனென்றபடி. (ஜிதேந்த்ரியஃ) 'டிுர்க்ரஹம் மநஸாப் யந்யைரிந்த்ரியைரபி டிுர்ஜயைஃ' என்கிறபடியே இந்த்ரியங்களை வென்றவன். வாக்குக்கும் மனத்திற்கும் உட்படாதவன். (த்வம் ஜிதேந்த்ரியஃ) 'ஸர்வம் வாக்யம் ஸாவதாரணம்' என்னும் ந்யாயத்தின் படி நீயே ஜிதேந்த்ரியன். 'அஹல்யாயை ஜாரஸ்ஸுரபதிரபூதாத்மஜாயாம் ப்ரஜாநாதோऽயாஸீதபஜத குரோரிந்துரபலாம்' இந்த் ரன் அஹல்யையோடு வ்யபசாரஞ்செய்தனன். ப்ரஹ்மா தன் பெண் ணைப் புணர்ந்தனன். சந்த்ரன் குருபார்யையிடம் போயினன்) என்று உன்னை யொழிந்தவரெல்லோரும் விஷய சபலர்களே. நீ யொருத்தனே ஜிதேந்த்ரியன். இப்படி இவன் விரக்தனுயினும் நம்மை ஹிம்ஸிக்கையால் அதார்மிகனென்று நினைத்திருந்தேன். ஆயி னும் அப்படி யன்றென்கிருன் — (உத்தமதார்மிகஶ்ச) தன்னைச் சார்ந்தவர்களை ரக்ஷிக்கும்பொருட்டு இப்படிப்பட்ட கார்யஞ் செய்கை யால் பரமதார்மிகன். தன்னைப்பற்றினுர் கார்யத்தை மாத்ரமே செய்

இந்த்ரியங்களை வென்றவன். தார்மிகர்கள் அனைவரி

பவன் அதம தார்மிகன். தனக்கும் பிறர்க்கும் உபயோகப்படுங் கார்யஞ்செய்பவன் நடுத்தரமான தார்மிகன். பிறர்க்காகவே கார்யஞ் செய்பவன் உத்தமதார்மிகன். அல்லது—வர்ணாஸ்ரம தர்மங்களால் ஆராதிக்கத்தகுந்தவன் தார்மிகன். பக்திமார்க்கத்தினால் பஜிக்கத் தகுந்தவன் உத்தமதார்மிகன். அல்லது—சரணாகதரக்ஷகன் உத்தம தார்மிகன். அல்லது—'உபாயோ ம்ருரேவ ஸ்யாத்தேநாநுஶ்ரு ஹீதோ ப்ரஹ்மலோகம் மச்ஹதி' என்கிறபடியே குருவசன பரிபாலனமென்னுந் தர்மமுடையவன் உத்தமதார்மிகன். அல்லது—வருந்தின ஸுக்ரீவனை ரக்ஷிக்கையால் தார்மிகன். அக்ருத்யத்தினால் நரகத்திற்காளாகிய வாலியை வதித்து அவனைப் பரிசுத்தனாகச் செய்கையால் உத்தமதார்மிகன். அன்றியே 'ஆந்ருஶம்ஸ்யமபரோ யர்மஃ' என்னுந் தர்மமுடையவன் தார்மிகன். தன்னை ஆஸ்ரயித்தவர்களுக்குத் தன் மார்பைக் கொடுப்பவன் உத்தம தார்மிகன். மறைந்திருந்து வதஞ்செய்தமையாலும் நிரபராதியைக் கொன்றமையாலும் இவனெப்படி தார்மிகனாவானென்னும் சங்கையைப் பரிஹரித்துக்கொண்டு சொல்லுகிறான். (அக்ஷய்ய கீர்த்திஸ் ச) வாலி உன்னை ஆஸ்ரயித்த ஸுக்ரீவனுக்கு அபராதஞ் செய்தவனாகையால் உனக்கும் அபராதியே. திர்யக்ஜந்துக்களில் வேட்டையாடும் க்ரமத்தில் எதிர் முகமாயில்லாதவற்றைக் கொல்வது பாபமன்று. பாபிஷ்டனுக்கு ப்ராயஸ்சித்தரூபமாகிய வதம் எதிர்நின்றே செய்யவேண்டுமென்பதில்லை. மறைந்திருந்தும் செய்யக்கூடும். மேலும் திர்யக்ஜந்துவோடு எதிர் முகமாயிருந்து யுத்தஞ்செய்வது ஸார்வபௌமனுக்குக் கலங்கத்தை விளைக்குமாகையால் அங்ஙனஞ் செய்யலாகாது. ஆகையால் மறைந்திருந்து வாலி வதஞ்செய்கையால் உன் கீர்த்தியைத் தூஷிக்கலாகாதென்று கருத்து. உன் கீர்த்திக்கு ஒரு குறையுமில்லை யென்றபடி (அக்ஷய்யகீர்த்திஸ் ச) 'தஸ்ய நாம மஹத்யஶஃ' என்கிறபடியே மிகுதியும் மேலான கீர்த்தியுடையவன். (விசக்ஷணஸ் ச) தூரத்ருஷ்டியுடையவனாகையால் யுக்தாயுக்தங்களை விசாரித்துக் கார்யஞ் செய்பவன். ஆனது பற்றியே நிரபராதியை வதிக்கலாகாதென்று ஒரு தடவை வாலியால் ஸுக்ரீவனுக்கு அவமானத்தை விளைவித்தனன். பிறகு குறிவைக்கும்பொழுது பேதந் தெரிவதற்காகக் கஜபுஷ்பலதையை ஸுக்ரீவன் கழுத்தில் கட்டினன். இங்ஙனம் சத்ருஸம்ஹாரஞ் செய்

லும் மேலானவன். எல்லையில்லாத புகழுடையவன்; மிகுந்த வல்லமையமைந்தவன்; பூமியைப்போல் மிகுந்த

---

பவனாயினும் 'ஸபுத்ரபௌத்ரம் ஸாமாத்யம் ஸமந்த்ரிஜ்ஞாதி வாந்ஷவம்। ஹத்வா' என்கிறபடியே அவனைப் பிள்ளைபேரன்களோடு சொல்லாமல் ஒருவனை மாத்ரமே அடித்து அங்கதாதிகளுக்கு எவ்விதத்திலும் பாதை செய்யாதிருக்கையால் பெரும் பொறுமையுடையவனென்கிறாள்—(க்ஷிதிக்ஷமாவாந்) நீ ஆஸ்ரிதர்களுக்கு அபராதிகளாயிருப்பவர்களை வம்சத்துடன் நாசஞ்செய்ய ப்ராப்தமாயிருப்பினும் அங்ஙனஞ்செய்யாமல் நீ பொறுமையைக் காட்டுவது மிகவும் புகழத் தக்கதென்று கருத்து. (க்ஷிதிக்ஷமாவாந்) 'க்ஷமயா ப்ருதிவீஸம:' என்கிறபடியே பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணமுடைய பூமிக்கு எவ்வளவு பொறுமையோ அவ்வளவும் உன்னொருவனுக்கு உண்டென்று கருத்து. இங்கு மதுப்ரத்யயம் நித்யயோகத்தைச் சொல்லுகிறது. ஆகையால் எப்பொழுதாயினும் பொறுமையில்லாமை இல்லையென்றபடி. (க்ஷதஜோபமாக்ஷ:) ரக்தத்தை நிகர்த்த கண்களுடையவன். வாலியிடத்திலுள்ள கோபத்தினால் இப்பொழுதும் உன் கண்கள் சிவந்திருக்கின்றன. அன்றியே 'ரக்தாஸ்யநேத்ரபாணி:' 'த்ரிதாம்ர:' (வாய் கண்கள் கைகள் என்னும் இம்மூன்றும் சிவந்திருக்கப்பெற்றவன்) என்று ஸாமுத்ரிகத்திற் சொல்லியபடி மஹா புருஷலக்ஷணமுடையவனாகையால் 'ராமோ ரக்தாந்தலோசந:' என்கிறபடியே சிவந்த கடையுடைய கண்கள் அமையப்பெற்றவன். இங்கு அப்ரமேயத்வாதி விசேஷணங்களில் ஒன்றொன்றே ராமனிடத்தில் பரத்வத்தை (மேன்மையை)த் தெரிவிக்கப் போதுமான அடையாளமென்று தெரிவிக்கும்பொருட்டு ஒவ்வொருபதத்தோடும் சகாரங்கூட்டப்பட்டது. (க்ஷிதிக்ஷமாவாந்) என்னுமிடத்தில் சகாரம் ஏனில்லையென்னில்-பொறுமை மற்றோரிடத்தில் ஸம்பவிக்கக்கூடுமென்பதைத் தோற்றுவிக்கும் பொருட்டே, (க்ஷதஜோபமாக்ஷ:) என்றவிடத்தில் சகாரம் ஏன் இல்லை யென்னில்-அந்தக் குணம் திருமேனியைச் சேர்ந்ததாகையால் கீழ்ச்சொன்ன குணங்களைக்காட்டிலும் வேறுபட்டமையைத் தோற்றுவிக்கும்பொருட்டே. அன்றியே—'க்ஷதஜோபமாக்ஷ' என்று ஸம்புத்தியாகவுங் கொள்ளக்கூடும். (அதாவது—அப்படி பாடாந்தரமென்று கருத்து.) அன்றியே (அப்ரமேயஸ் ச) ஆஸ்ரிதர்களாகாதவர்க்கு அறியக்கூடா

பொறுமையுடையவன்; சிவந்த கடையுடன் விளங்குங் கண்களுடையவன்; ஹஸ்தத்தில் தனுஸ்ஸையும் பாணத்தையும் தரித்தவன்; மஹா பலமுடையவன்; மஹாவீர்யத்தைத் தெரிவிக்கும்படி திடமும் லேசுமாக அமைந்த அவயவஸந்நிவேசங்களுடையவன். இப்படிப்பட்டலக்ஷணங்கள் ஸாதாரண சரீரத்தில் உண்டாகா. இப்பொழுது துஷ்டஸம்ஹாரத்திற்காக மனுஷ்யசரீரம் பெற்றிருக்கிறாயன்றி அதை) விட்டு, அப்ராக்ருதமான திவ்ய தேஹ ஸௌபாக்யத்தோடிருப்பவன். நீ எந்த ஒரு பாணத்தினால் என் பர்த்தாவைக் கொன்றனையோ, அந்தப் பாணத்தினாலேயே என்னையுங்கூட வதிப்பாயாக. நான் உன்னால் வதிக்கப்பட்டு என் ப்ரியனாகிய வாலியிடம் போகின்றனன். ராமா! நீ எல்லோரையும் ஸந்தோஷிக்கச் செய்பவன். இந்தக் கார்யஞ்செய்து வாலியையுங்கூட ஸந்தோஷப்படுத்துவாயாக. நானில்லாமல் வாலி எள்ளளவும் மனக்களிப்புறமாட்டான்.

---

தவனும் சகாரத்தினால் ஆஸ்ரிதர்களுக்கு மாத்ரம் அறியக்கூடியவனும். (துராஸதஸ் ச) தன்னைப் பற்றாதவர்களுக்கு அணுகமுடியாதவனும், சகாரத்தினால் தன்னைப்பற்றினார்க்கு ஸுலபனாயிருப்பவனும். (ஜிதேந்த்ரியஸ்ச) சகாரத்தினால் ஆஸ்ரிதர்விஷயத்தில் சாபலமுடையவனும். (உத்தமயார்மிகஸ் ச) சகாரத்தால் அதர்மத்தைத் தூரத்திலேயே தடுத்து நிற்பவனும். (அக்ஷய்யகீர்த்திஸ் ச) சகாரத்தினால் அந்தக் கீர்த்திக்குத்தகுந்த கார்யஞ் செய்பவனும். (விசக்ஷணஸ் ச) சகாரத்தால் 'மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயங்கதஞ்சந' மித்ரபாவத்தால் (வந்தவனை எவ்விதத்திலும் விடமாட்டேன்) என்கிறபடியே ஆஸ்ரிதர்களை விட ஸமர்த்தனாகாதவனும். (க்ஷிதிக்ஷமாவாந்) முன்சகாரம் இங்கும தேஹலீதீபந்யாயத்தால் ஸம்பந்திக்கிறது. இதனால் தயாதிகுணங்களும் சொல்லப்படுகின்றன. தேஹலீதீபந்யாயமாவது—நடையில் வைத்தவிளக்கு முன்னுக்கும் பின்னுக்கும் வெளிச்சம் கொடுக்குமென்பதுவே. அப்படியே இங்கு முன்புள்ள சகாரம் முன்னும் பின்னும் சேருமென்றபடி.

தாமரை யிதழ் போன்ற கண்களையுடைய வாலி ஸ்வர்க் கத்திலுங்கூட அப்ஸர ஸ்த்ரீகளோடுகூடி அவர்களைப் பார்த்து அவர்களில் என்னைக் காணுனயின், சித்ர விசித்ரமான சிவந்த புஷ்பங்களைச் சூடின கேசபாசங்க ளோடும் விசித்ரமான அலங்காரங்களோடும் விளங்கு கின்ற அந்த அப்ஸரஸ்த்ரீகளை அணுகாமலே இருப் பான். வீரனே! பர்வத ஸ்ரேஷ்டமாகிய ருஸ்யமூகத் தில் ரமணீயமான தாழ்வரைகளில் நீ ஸீதையைப் பிரி ந்து எப்படி பரிதபிப்பாயோ, அங்ஙனமே வாலி, ஸம ஸ்த போகங்களுக்கும் இடமாகிய ஸ்வர்க்கத்தை அடை ந்தும், நான் இல்லாதபக்ஷத்தில் என்னைப் பிரிந்தமை யால் பரிதபித்து வெலவெலத்திருப்பான். யெளவன முடைய புருஷனுக்குத் தன் பத்னியைப் பிரிந்தால் எவ் வளவு துக்கம் உண்டாகுமோ, அது உனக்கே தெரி யும். நீ அம்மஹா துக்கத்தைப் பட்டுக்கொண்டிருக் கிருயாகையால் என்னைச் சீக்ரம் கொல்வாயாக. கொல் வாயாயின், நான் வாலியிடம் போவேணுகையால் அவன் என்னைக் காணுமையாலுண்டாகுந் துக்கத்தைப் பெரு மலிருப்பான். ராஜகுமாரனே! மஹானுபாவனுகிய நீ 'நமக்கு ஸ்த்ரீயைக் கொல்வதாலுண்டாகுந் தோஷம் வரக்கூடாது' என்று நினைக்கிருயோ? அது யுக்த மன்று. 'வாலியின் ஆத்மாவே இந்தத் தாரை' என்று நினைத்து என்னை முடிப்பாயாக. அப்பொழுது உனக்கு ஸ்த்ரீவத தோஷம் வாராது. தர்மசாஸ்த்ர வசனங்க ளாலும் அனேகமான வேதவாக்யங்களாலும் பார்யை புருஷனுக்கு ஆத்மாவே யாகையால் அவனைக் காட்டி லும் வேறுபட்டவளல்லளென்று தெரிய வருகின்றதல் லவா? ஆகையால் என்னை வதிப்பதும் வாலி வதத்தி லேயே உட்படுமாதலால் உனக்கு ஸ்த்ரீவத தோஷம் உண்டாகாது. தோஷம் உண்டாகாமற் போவதுமாத்

ரமே அன்று. உலகத்தில் பார்யாதானத்தைக் காட்டி லும் மேலான தானம் எதையும் பண்டிதர்கள் கண்டவ ரல்லர். ஆகையால் என்னைக் கொன்று வாலியுடன் சேர்க்கையால் உனக்குப் புண்யமும்கூட நேரும். வீர னே! நாங்கள் ஸுகிப்பது மாத்ரமேயன்றி உத்தமதார் மிகனாகிய நீயும் தர்மத்தைப் பரிசீலனஞ்செய்து என்னை என் ப்ரியனாகிய வாலிக்குக் கொடுத்தவனாவாய். இங்ங னம் என்னை என் ப்ராண நாயகனுக்குக் கொடுக்கை யால் உனக்கு வாலி வதத்தாலுண்டான வீரஹத்யா தோஷ ஸம்பந்தமும்கூட நேராது. (என்னைக் கொல் வது உனக்கு வாலிவத ப்ராய்ச்சித்தமாகின்றது. இங்ங னம் என்னைக் கொல்வதனால் நீ வாலிக்குப் பார்யாதா னஞ் செய்தவனாவாயாகையால் என் வதத்தினால் உன க்கு எந்தப் பாபமும் ஸம்பந்திக்காது.) நான் மனவருத்த முற்றிருக்கின்றவள்; நாதனற்றவள்; என் பர்த்தாவும் என்னை வஞ்சித்துப் போகின்றனன். இங்ஙனம் மஹத் தான ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிற என்னை வதிக்கத்தகும். வதித்துப் புண்யங் கட்டிக்கொள்வா யாக. நரேந்த்ரா! மதித்த யானைபோல் விலாஸத் துடன் நடப்பவனும் மிகவும் சிறப்புற்றதாகிய திவ்ய காஞ்சனமாலை விளங்கப்பெற்றவனும் கபிகுல சூடா மணியும் புத்தியில் சிறந்தவனுமாகிய வாலியை விட்டு நான் என்னவோ வெகுகாலம் ஜீவித்திருக்க மாட் டேன். எப்படியாயினும் மரணம் அடைவது நிஜம். ஆகையால் நான் சாவதைக் காட்டிலும் நீயே என்னைக் கொன்று புண்யம் பெறுவது நலம்' என்றனள். இங்ங னம் தாரை சொல்லுகையில், ப்ரபுவும் மஹானுபாவனு மாகிய ராமன் கேட்டு அந்த வனிதையை ஆஶ்வாஸப் படுத்தி ஹிதவசனங்களைச் சொல்லத் தொடங்கி 'வீர பத்னீ! நீ வீரனுக்குப் பார்யையா யிருந்தும் பிழைக்க மாட்டேனென்றது முதலிய இப்படிப்பட்ட விபரீத

புத்தி உண்டாகப் பெற்றிருப்பது யுக்தமன்று. இப்படிப் பட்ட புத்திகூடாது. இந்த உலகமெல்லாம் ப்ரஹ்மா வால் நிருமிக்கப்பட்டதென்பது தெரிந்த விஷயமே யல் லவா? அங்ஙனம் நிருமிக்கும்பொழுது அந்த ப்ரஹ் மாவே ஜனங்களுக்கு ஸுகதுக்க யோகங்களையும் உண் டாக்கினனென்று பண்டிதரும் பாமரர்களுமாகிய உல கத்தவர் அனைவரும் சொல்வார்கள். ப்ரஹ்மா ஏற்படுத் தின விதி மூன்று லோகங்களுக்கும் கடக்க முடியாதது. ஸமஸ்தமும் அந்த விதிக்கு உட்பட்டதே. ஆகையால் துக்கப்பட வேண்டாம். வாலி இருக்கும்பொழுது போலவே மிகுந்த ஸந்தோஷத்தையும் வாலி ஸம்போ கத்தை நிகர்த்த ஸம்போகத்தையும் பெறுவாய். உன் புதல்வன் அங்கதன் யுவராஜனுகப் போகின்றனன். வாலி அங்ஙனம் ஹதனுகவேண்டுமென்று ப்ரஹ்மதேவனு டைய விதி அப்படியாயிருந்தது. அதை அதிக்ரமிக் கத் தரமன்று. எதிலும் உன்னைப்போன்ற சூரபத்னி கள் இங்ஙனம் வருந்தமாட்டார்கள்' என்றனன். இங் ஙனம் அங்கதனுக்கு யௌவ ராஜ்யத்தைக் கொடுக் குப் ப்ரபாவம் பொருந்தி, அதற்கு விரோதிகளாயிருப் பவரெல்லோரையும் முடிக்க வல்லவனுகிய ராகவன் ராமன் இங்ஙனம் ஆஶ்வாஸப்படுத்துகையில் அந்தத் தாரை வீரபத்னியாகையாலும், ராமன் அங்கதனுக்கு யௌவராஜ்யங் கொடுக்க வல்லவனென்றும், அவனது பகைவரைப் பறந்தோடச் செய்யுந் திறமையுடையவ னென்றும் நெஞ்சிற் பட்டமையாலும், அழகிய அலங் காரங்களால் மேனி விளங்கப்பெற்றுக் கொஞ்சம் மனஸ் ஸமாதானம் அடைந்து புலம்பிக்கொண்டிருந்தவள் புலம்புதலை நிறுத்தி வெறுமனே யிருந்தனள். இருபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ராமன் எல்லோர்க்கும் ஸமாதானஞ் சொல்லுதலும், வாலிக்கு ஸம்ஸ்காரஞ் செய்வித்தலும்.

அனந்தரம் ராமன், தானும் லக்ஷ்மணனும் ஸுக்ரீவாதிகளைப்போல் ஸமானமாகவே துக்கித்து ஸுக்ரீவனையும் அங்கதனையும் தாரையையும் ஆஶ்வாஸப்படுத்திக்கொண்டு 'துக்கத்தினால் எவ்வளவு பரிதாபமுற்றிருப்பினும், அதனால் மரணம் அடைந்தவனுக்கு எள்ளளவும் நன்மை உண்டாகாது. இப்பொழுது, மேல் நடத்தவேண்டிய ப்ரேதகார்யங்களைச் செய்வது நன்மையை விளக்கவற்று. அதை அவஶ்யம் செய்யவேண்டும். கண்ணீர்விடுவது லோகாசாரத்தைப் பற்றி வந்ததாகையால் அது எல்லோர்க்கும் அனுஷ்டிக்கத் தக்கது. நீங்களும் அப்படியே அதை அனுஷ்டித்தீர்கள். இனிப்போதும், இதைக் காட்டிலும் மேற்பட்டு ஏதும் உங்களால் செய்ய ஸாத்யப்படாது. ஈஶ்வரனே ஸமஸ்த லோகங்களுக்கும் காரணம். ஸமஸ்த பூதங்களையும் நியமிப்பவன் ஈஸ்வரனே. ஈஶ்வரனைக்கடந்தது உலகத்தில் எதுவுமே இல்லை. உலகமெல்லாம் ஈஶ்வரனுக்குப் பராதீனமாகிக் கார்யங்களைச் செய்கின்றதேயன்றி ஸ்வதந்த்ரமாயன்று. எவனும் எந்தக் கார்யத்தையும் ஸ்வதந்த்ரமாகச் செய்பவனல்லன். எவனும் எவனையாயினும் பேதிக்கவும் ஸமர்த்தனல்லன். ஏனென்னில் — உலகமெல்லாம் ஸ்வபாவத்திற்கு (அதாவது—ஈஶ்வரனுக்கு) உட்பட்டு வர்த்திக்கின்றது. ஆகையால் காலமே உலகத்திற்கெல்லாம் கதி. ஈஶ்வரன் ஸ்வதந்த்ரனே யாகையால் அவன் எதற்கும் உட்பட்டவனல்லன். ஈஶ்வரனுக்கு நாசமாவது மற்றை விகாரங்களாவது உண்டாகா. அவன் நிரங்குஶஸ்வதந்த்ரனே. தான் செய்த வ்யவஸ்தையைத் தான் அதிக்ரமிக்க மாட்டானென்பது சொல்லவேண்டுமோ? ஈஶ்வரனுக்குப் பந்துத்வம் இல்லாமையால்

பக்ஷபாதமும் உண்டாகாது. அவனை அவனருளாலேயே வசப்படுத்திக்கொள்ள வேண்டுமேயன்றிவசீகரிப்பதற்கு மற்றோருபாயம் இல்லை. அவனைவெல்லும்படியான பராக்ரமம் இல்லையாகையால் அவன் எவனுடைய பராக்ரமத்திற்கும் பயப்படமாட்டான். அவனுக்கு நண்பர்கள், ஜ்ஞாதிகள்என்னும் ஸம்பந்தம் இல்லை; ஆகையால் அபராதிகளிடத்தில்தண்டனை நடத்திக்கொண்டிருப்பான். ஆனதுபற்றி ஸமஸ்தத்திற்கும் காரணபூதனாகிய ஈஶ்வரன் ஜீவனுக்குப்பரதந்த்ரனல்லன். அவனவனுடைய கர்மத்திற்குத்தகுந்தபடி ஈஶ்வரன் ஸமஸ்தத்தையும் வர்த்திக்கச்செய்வான். ஈஶ்வரனாகாத ஜந்து செய்யவேண்டுங் கார்யம் இதுவே. சாஸ்த்ர நிஷ்கர்ஷத்தை நன்றாகத்தெரிந்துகொண்ட புத்திசாலி! அந்தந்தச்சேதனனுடைய கர்மத்திற்கு அனுகுணமாகவே ஈஶ்வரன் பரிணமித்து நடப்பானென்று தெரிந்துகொண்டு மனக்கவலையற்றிருக்கவேண்டும். ஆகையால் ஈஶ்வரன் எந்தக் கார்யஞ் செய்தபோதிலும் சோகம்பெறலாகாது. நமக்கு ஹிதமே செய்வானென்றிருக்கவேண்டும். தர்ம அர்த்த காமங்கள் ஈஶ்வரனுடைய மர்யாதையைக் கடக்காமல் விளைந்துவரும். அவற்றில் எது பெறக்கூடுமோ, அதையெல்லாம் ஈஶ்வரனே பெறுவிக்கின்றனன். வானரேஶ்வரனாகிய வாலி என்பாணத்தினால் அடிக்கப்பட்டு ப்ராயச்சித்தம் அடைந்தமையால் பாபந்தொலைந்து முன்புள்ள பாரிசுத்யத்தைப் பெற்றுத் தான் விஹிதகாலங்களில் அனுஷ்டித்த தர்ம அர்த்த காமங்களைப்பற்றி க்ரியைகளின் பலனாகிய ஸ்வர்க்கத்தை அனுபவிப்பதற்காக இங்கிருந்து போயினன். மஹானுபாவனாகிய வாலி 'விஹித தர்மங்களை அனுஷ்டிப்பதனாலும் ப்ராணன்களைப் பொருள்செய்யாமல் யுத்தஞ்செய்தமையாலும் பூர்வம் தான்

ஸம்பாதித்து வசஞ்செய்துகொண்டிருந்த ஸ்வர்க்கத்தை இப்பொழுது பெற்றனன். கபிகுலநாதனுகிய வாலி எந்த நியதியைப்பெற்றனனே, அது மிகவும் சிறந்தது. ஆகையால் அவனைப் பற்றிப் பரிதபிக்கவேண்டாம். போதும். ஸத்கதியடைந்தவனைக் குறித்துச் சோகிக்கலாகாது. இந்த ஸமயத்தில் எதைச் செய்யவேண்டுமோ, அதை ஏமாறுமல் நடத்துவாயாக' என்றனன். ராமன் சொல்லிமுடிக்கையில், சத்ருவீரர்களை அழிக்குந் திறமையுள்ள லக்ஷ்மணன் துக்கத்தின் மிகுதியால் ப்ரஜ்ஞை தப்பியிருக்கின்ற ஸுக்ரீவனைப்பார்த்து வணக்கத்துடன் 'ஸுக்ரீவா! இனி வாலிக்கு ப்ரேதகார்யங்களைச் செய்வாயாக. நீ தாரையோடும் அங்கதனேடுங் கூடி வாலிக்குத் தஹன ஸம்ஸ்காரத்தை நடத்தும்பொருட்டுச் சந்தனம் முதலிய சிறந்த உலர்ந்த காஷ்டங்கள் பலவற்றைக் கொண்டுவரும்படி வானரர்களுக்கு ஆஜ்ஞை செய்வாயாக. நீ துக்கித்திருக்கின்ற இவ்வங்கதனை ஆஶ்வாஸப்படுத்தி இவனை வாலிக்கு ஸம்ஸ்காரஞ் செய்ய முயலச் செய்வாயாக. இந்தப் பட்டணமெல்லாம் இனி உன்னதீனமாகையால் இனி நீ இந்தப்பட்டணத்தின் யோக க்ஷேமங்களைப் பார்க்கவேண்டும். இப்படி மூடன்போல் துக்கித்திருப்பது யுக்தமன்று. அங்கதன் புஷ்பமாலைகளையும் நானுவித வஸ்த்ரங்களையும் நெய்யையும் எண்ணெயையும் வாஸனுத்ரவ்யங்களையும் அன்றியே இப்பொழுதே ஸம்ஸ்காரஞ் செய்வதற்காக ஏதேது அவஶ்யமாகவேண்டுமோ அவை யெல்லாவற்றையும் தான் கொண்டுவருவானுக. தாரனே! நீ சீக்ரமாகச் சென்று பல்லக்கை யெடுப்பித்துக்கொண்டு வேகத்துடன் வருவாயாக. த்வரைப்படுகை எப்போதும் யுக்தமும் குணம் பொருந்தியதுமாகுமே யல்லாமல் ப்ரக்ருதத்தில் விசேஷித்து யுக்தமும் குணமுடையதுமாயிருக்

கின்றது. அவனை எடுப்பதற்கு ஸமர்த்தர்களும் பலிஷ்டர்களுமாயிருக்கும் வாஹகர்களான வானரர்களை ஸித்தப்படுத்துவாயாக' என்றனன். ஸௌமித்ரா தேவியின் வயிறு குளிரப் பிறந்து சத்ருவீரர்களை அடக்குந் திறமையுடைய லக்ஷ்மணன் இங்ஙனம் ஸுக்ரீவனுக்குச் சொல்லி அனந்தரம் தமையனது ஸமீபத்தில் நின்று கொண்டிருந்தனன். தாரன், லக்ஷ்மணன் சொன்ன வார்த்தையைக்கேட்டு மனம் பரபரக்கப்பெற்றுச் சிவிகையைக் கொண்டுவரும் பொருட்டுச் சீக்ரமாகக் கிஷ்கிந்தாபுரத்திற்குள் ப்ரவேசித்தனன். அந்தத் தாரன் சீக்ரமாகவேசிவிகையை எடுத்துக்கொண்டு திரும்பிவந்தனன். அந்தச் சிவிகையைத் தூக்கத் தகுந்த சூரர்களான வானரர்கள் தூக்கிக்கொண் டிருந்தனர். அது திவ்யமாகி அழகிய ஸிம்ஹாஸனம் இடப்பெற்று ரதம்போல் விளங்கிக்கொண் டிருந்தது. அதில் வேலை செய்யப்பட்ட பக்ஷிகள் நாற்புறங்களிலும் அற்புதமாக ப்ரகாசித்தன. செடியைப்போன்றசித்ரவேலைகள் அதன்அழகை மேன்மேலும் வளரச் செய்துகொண்டிருந்தன. அழகான ரேகைகளாலும் காலாட்களைப்போன்ற பொம்மைகளாலும் மேலான ஸந்நிவேசம் ஏற்படுத்தப் பெற்றிருந்தது; மேலும், அது ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் ஸித்தர்களுடைய விமானம்போன்று சிறிய சாளரங்களும் பெரிய சாளரங்களும் விளங்கவும் அந்தந்த ஸந்திபந்தங்கள் நன்றாய் அமைக்கவும் பெற்று விசாலமுமாகி ப்ரகாசித்துக் கொண்டிருந்தது. விஸ்வகர்மா தனது ஸாமர்த்ய மெல்லாம் விளங்கும்படி மிக்க ப்ரயத்னத்துடன் அதை அதிமனோஹரமாக நிர்மித்தனன். மரத்தால் செய்யப்பட்ட க்ரீடா பர்வதங்கள் அதில் விளங்கிக் கொண்டிருந்தன. மெருகிடப் பெற்றிருக்கையால் அது மிகவும் பளபள

வென்று விளக்கமுற்றிருந்தது. அதில் உத்தமமான ஆபரணங்களும் முத்துமாலைகளும் நானுவித புஷ்பஸரங்களும் அழகாகப் புலப்பட்டுக் கொண்டிருந்தன. அழகின் பொருட்டு ஏற்படுத்தப்பட்ட பொய்க்குஹைகளும் பொய்க் கானகங்களும் அதில் நிறைந்திருந்தன. அது முழுவதும் செஞ்சந்தனம் பூசப்பெற்று அழகாயிருந்தது; நாற்புறமும் விடுதி புஷ்பங்கள் இறைக்கப் பெற்றிருந்தது. மேலும், ஆங்காங்குப் பால ஸூர்யபிம்பம்போல் ப்ரகாசிக்கின்ற செந்தாமரைப் பூமாலைகளால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. ராமன் உத்தமமான இப்படிப்பட்ட சிவிகையைப் பார்த்து லக்ஷ்மணனைநோக்கி இனிச் சீக்ரம் வாலியைப் பல்லக்கில்வைத்து ப்ரேதகார்யத்தை நடத்துவாயாக என்று மொழிந்தனன். அனந்தரம் அந்த ஸமயத்தில் ஸுக்ரீவன் அழுதுகொண்டே அங்கதனுடன் கூட வாலியை எடுத்துப் பல்லக்கில் வைத்தனன். அப்பொழுது வானராதிபதியான ஸுக்ரீவன் மரணமடைந்த வாலியை நாநாவிதமான அலங்காரங்களாலும் புஷ்பமாலைகளாலும் வஸ்த்ரங்களாலும் அலங்கரித்துச் சிவிகையில் வைத்து வானரர்களைப் பார்த்து, 'தமையனுகிய வாலிக்கு உத்தரக்ரியைகளை அவர் பெருமைக்குத் தகுந்தபடி நடத்துவீர்களாக. வானரர்கள் பலவகைப்பட்ட ரத்னங்கள் பலவற்றையும் இறைத்துக்கொண்டு முன்னே நடப்பார்களாக. அவர்களுக்குப் பின்னே சிவிகையைக்கொண்டு போவீர்களாக' என்று ஆஜ்ஞாபித்தனன். ராஜாக்களுக்கு அவரவாது ஐஸ்வர்ய விஶேஷங்களுக்குத் தகுந்தபடி உத்தரக்ரியைகளை எவ்வண்ணம் நடத்துவார்களோ, அவ்வண்ணமே ஸுக்ரீவாதிகளும் வாலிக்கு ஸமீப பந்துக்களான தாரன் முதலிய வானரர்களெல்லோரும் அங்கதனைச் சுற்றி ரோதனஞ் செய்துகொண்டே சீக்ரமாகச் சென்றனர். அனந்தரம் அவ

னுக்கு மிகவும் வசப்பட்டிருப்பவர்களும் மிகவும் பந்துக்களுமாகிய வானர ஸ்த்ரீகள் அனைவரும் 'வீர! வீர!' என்று பேரைச்சொல்லி எல்லோரையும்விட அதிகமாக ரோதனஞ் செய்துகொண்டே சென்றனர். வானரபத்னிகளான தாரை முதலிய வானரமடந்தையர் அனைவரும் கேட்போர்களுக்கு மிகவும் மன இரக்கமுண்டாகும்படி ரோதனஞ் செய்துகொண்டு கணவனைப் பின்சென்றனர். அந்த வனமத்யத்தில் அங்ஙனம் கதறுகின்ற அந்த வானரஸ்த்ரீகளது ரோதனத்வனியால் அங்குள்ளவனங்களும் பர்வதங்களும் முழுவதும் ரோதனஞ் செய்பவைபோலிருந்தன. ஓர் பர்வதநதியின் ஸமீபத்தில் ஏகாந்தமா யிருப்பதும் ஜலம் நிரம்பியதுமாகிய மணற்குன்றில் பல வானரர்கள் மிக்க மன வருத்தத்துடன் சிதையேற்படுத்தினர். அனந்தரம் வாஹகர்கள் அவ்விடத்தில் தோள்களினின்று சிவிகையை இறக்கி அனைவரும் வருத்தத்துடன் ஏகாந்தமான இடத்தில் நின்றுகொண்டிருந்தனர். அனந்தரம் தாரை பல்லக்கில் படுத்திருக்கின்ற தன் கணவனைப்பார்த்து அவனது சிரஸைத் தன்மடியில் இட்டுக்கொண்டு மிக்க மனவருத்தத்துடன் 'ஐயோ! வானர மஹாராஜா! ஆ! நாதா! என் வத்ஸலனே! ஆ! அனைவர்க்கும் பூஜிக்கத் தகுந்தவனே! மஹாபாஹுவே! ஆ! என்னுடைய நாயகனே! என்னைக் காண்பாயாக. இங்ஙனம் சோகத்தினால் வருந்துகின்ற இந்த ஜனத்தைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டாய் என்? மானங்கொடுப்பதுங் கெடுப்பதுஞ் செய்பவனே! நீ மரணம் அடையினும் உன் முகம் பிழைத்திருக்கும்பொழுதைப்போலவே ஸாயங்காலத்து ஸூர்யனை நிகர்த்து ப்ரகாசிப்பதாகி ஸந்தோஷத்துடன் கூடினது போல் புலப்படுகின்றது. வாலீ! இப்பொழுது யமன் ராமரூபந்தரித்துவந்து இவ்வனத்தில் ஒரு பாணத்தினால்

எங்களெல்லோரையும் விதவைகளாகச் செய்து உன்னைக் கொண்டுபோகின்றனன். ராஜஸ்ரேஷ்டனாகிய வாலி! உனக்கு ஏன்தெரியவில்லை? சந்த்ரபிம்பம்போன்ற முகமுடைய இவ்வானரஸ்த்ரீகள் உனக்கு இஷ்டமான பார்யைகளல்லவா? இவர்கள் இங்ஙனம் கஷ்டப்பட்டுக் கால்நடையாக நடந்துவந்து துக்கித்துக்கொண்டிருக்கையில் வெறுமனே இருக்கின்றனையேன்? இவர்கள் என்றும் உனக்கு ப்ரீதிக்கிடமா யிருப்பவர்களல்லவா? வானரர் தலைவனாகிய ஸுக்ரீவனை இப்பொழுது ஏன் பாராதிருக்கின்றனை? தோஷமற்றவனே? வானராதிபதீ! தாரன் முதலான உன் மந்த்ரிகளும் கிஷ்கிந்தாபுரத்தில் வாஸஞ்செய்யும் மற்ற ஜனங்களும் உன்னைச் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள் காண்பாய். சத்ருக்களை யழிப்பவனே! இவ்வானரர்களனைவரையும் அவரவர்க்குத் தகுந்தபடி செலவுகொடுத்தனுப்புவாயாக. அனந்தரம் எல்லோரும் இஷ்டப்படி மன்மதக்ரீடைகளில் முயன்று விளையாடலாம்' என்று புலம்பினள். அப்பொழுது அங்ஙனம் பதியின் மரணத்திற்கு வருந்திப் புலம்புகின்ற தாரையை வானரஸ்த்ரீகள் துக்கத்தினால் பீடிக்கப்பட்டவராகி வாலியிடமிருந்து அப்புறம் கொண்டுபோயினர். அனந்தரம் அங்கதன் சோகத்தினால் இந்த்ரியங்கள் கலங்கப்பெற்று ரோதனஞ்செய்துகொண்டு ஸுக்ரீவனும் தானுமாகத் தந்தையைச் சிதையின்மேல் எடுத்துவிட்டனன். அனந்தரம் அங்கதன்இந்த்ரியங்களெல்லாம் தந்தம் நிலைமை தவிர்ந்திருக்கப்பெற்று மரணம் அடைந்த தந்தைக்குச் சாஸ்த்ரங்களிற் சொல்லியபடி அக்னிப்ரதானஞ் செய்து அப்ரதக்ஷிணஞ் செய்தனன். அவ்வானரர்கள் அங்ஙனம் சாஸ்த்ரப்படி வாலிக்குத் தஹனஸம்ஸ்காரஞ்செய்து ஜலதர்ப்பணஞ் செய்வதற்காகக் குளிர்ந்த

ஜலம்பொருந்திச் சுபமாயிருப்பதாகிய நதியின் அருகில் வந்தனர். அனந்தரம் அவ்விடத்தில் அவ்வானரர்கள் ஸுக்ரீவனோடும் தாரையோடுங்கூடி அங்கதனை முன்னிட்டுக்கொண்டு வாலிக்கு ஜலதர்ப்பணஞ்செய்தனர். மஹாபலனாகிய ராமன், தானும் ஸுக்ரீவாதிகளைப்போலவே வருத்தமுற்றவனாகி வருந்தியிருக்கின்ற ஸுக்ரீவன் மூலமாகவே வாலிக்கு ப்ரேதகார்யங்களை யெல்லாம் செய்வித்தனன். அப்பொழுது மஹா பௌருஷமுடையவனும் ஜகத் ப்ரஸித்தனும் ஜ்வலிக்கின்ற அக்னியைப் போல் ஒளிவிளங்கப் பெற்றவனும் ராமபாணத்தினால் அடிக்கப்பட்டவனுமாகிய வாலிக்குத் தஹனஸம்ஸ்காரஞ் செய்து அப்பொழுதே லக்ஷ்மணனோடு கூடின ராமன் ஸமீபத்திற்கு வந்தனன். இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஸுக்ரீவ பட்டாபிஷேகம்

அனந்தரம் வாலிக்கு உத்தரக்ரியைகளை நடத்தி ஸ்னானஞ்செய்து ஈரத்துணியோடு ஸுக்ரீவன் இருக்கையில், மந்த்ரிகளான வ்னரர்கள் அவனைச் சுற்றிக் கொண்டிருந்தனர். ஸுக்ரீவனும் அம்மந்திரிகளும் ஆகிய அனைவரும், எவர்க்கும் துக்கத்தை விளைவிக்காத மஹாபாஹுவாகிய ராமனிடஞ்சென்று ப்ரஹ்ம தேவனிடம்ரிஷிகள்போல் கைகளைக்குவித்துக்கொண்டு நின்றனர். அனந்தரம்,பொன்மலைபோன்ற மேனி விளங்கவும் பால ஸூர்யன்போல் முகம் ப்ரகாசிக்கவும் பெற்றுத்துலங்குகின்ற வாயுகுமாரனான ஹனுமான்கைகூப்பி வணக்கத்துடன் ராமனைப் பார்த்து 'ப்ரபூ! உனது அனுக்ரஹத்தினால் ஸுக்ரீவன் எப்படிப்பட்டவர்க்கும் பெறக்கூடாததும் தந்தை பாட்டன் க்ரமத்தில் வருவதுமாகி விளங்கும் பெரிதான வானர ராஜ்யத்தைப் பெற்ற

னன். ஸுக்ரீவன் இனி உன்னிடம் அநுமதிபெற்று மங்களாலங்காரஞ் செய்யப்பெற்ற நகரத்தில் ப்ரவேசித்து நண்பர்களோடுகூடி எல்லாக் கார்யங்களையும் செய்வான். ஸுக்ரீவன் நானாவித வாஸனைத்ரவ்யங்களாலும் ஓஷதிகளாலும் சாஸ்த்ரப்படி அபிஷேகஞ் செய்யப்பெற்று, அதன் பிறகு உன்னை விசேஷித்து ரத்னங்களாலும் புஷ்பங்களாலும் பூஜிப்பான். நீ இங்கிருந்து அழகான கிஷ்கிந்தா நகரத்திற்கு வந்து வானரர்கள் அனைவர்க்கும் ஸந்தோஷம் விளைவித்து ஸுக்ரீவனை வானரராஜனாகச் செய்வாய்' என்றனன். சத்ருவீரர்களை அழிப்பவனும் புத்தியிற் சிறந்தவனுமாகிய ராமன் பேசுவதில் ஸமர்த்தனாகையால், ஹனுமான் சொன்ன வார்த்தையைக் கேட்டு அவனுடன் 'நல்லியற்கையுடையவனே! நான் தந்தையின் ஆஜ்ஞையைப் பரிபாலனஞ் செய்கின்றவனாகையால் இந்தப் பதினான்கு ஸம்வத்ஸரங்களும் க்ராமத்திற்குள்ளாவது பட்டணத்திற்குள்ளாவது புகக்கூடாது. நீங்களெல்லோரும் வீரனாகிய வானராதிபனை ஸுக்ரீவனை ஸமஸ்த ஸம்பத்துக்களும் நிறைந்து ரமணீயமாயிருக்கின்ற கிஷ்கிந்தைக்குள் அழைத்துக் கொண்டுபோய்ச் சீக்ரம் சாஸ்த்ரப்படி, அவனுக்கு வானர ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் நடத்துவீர்களாக' என்றனன். ஸதாசாரங்களை ராமன் நன்றாக அறிந்தவன்; ஆகையால் அவன் இங்ஙனம் ஹனுமானுக்குச் சொல்லி, ஸதாசாரம் அமைந்தவனும் மஹாபல பராக்ரமசாலியுமாகிய ஸுக்ரீவனைப் பார்த்து 'வீரா! இவ்வங்கதனையுங்கூட யௌவராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்வாயாக. இவ்வங்கதன் உனக்குத் தமையனாகிய வாலிக்கு ஜ்யேஷ்ட குமாரன்; பராக்ரமத்தில் உனக்குச் சரியானவன்; மிகுந்த புத்தியுடையவன். ஆகையால் யௌவராஜ்யத்திற்குத் தகுந்தவன். நல்லியற்கை யுடையவனே! வர்ஷாகாலம் வந்தது.

அதில் இந்த ஶ்ராவணமாதம் முதலாவது. வர்ஷா கால மென்னப்படும் மாதங்கள்[1] நான்கும் ஆரம்பித்தன. ஸௌம்யா! இது யுத்த ப்ரயத்னத்திற்குத் தகுந்தகாலமன்று. நீ ரமணீயமான இந்தப் பட்டணத்திற்குப் போவாயாக. நானும் லக்ஷ்மணனும் இந்தப் பர்வதத்தில் இருக்கின்றனம். ஸௌம்யா! இந்தப் பர்வதத்தின் குஹை மிக்க ரமணீயமும் விசாலமும் வேண்டிய காற்றுடையதுமாகி விளங்குகின்றது. இதனருகில் ஜலங்களும் தாமரைப் புஷ்பங்களும், கருநெய்தல்களும் ஸம்ருத்தமா யிருக்கின்றன. ஆகையால் இது எனக்கு வாஸஞ் செய்யத் தகுந்ததே'[2] ஸௌம்யா! கார்த்திகை

1 வர்ஷாகாலம் இரண்டு மாதங்களே. ஆயினும் கீழ்ச்சென்ற ஆடிமாதத்தையும் மேல்வரும் அற்பிசிமாதத்தையும் கூட்டிக்கொண்டு இந்நான்கு மாதங்களும் யுத்தத்திற்குத் தகாதவையாகையால் நான் கென்று இங்குச் சொல்லப்பட்டன. அன்றியே—'பக்ஷாவை மாஸாঃ' என்கிறஸ்ருதியின்படி பக்ஷங்கள் மாஸங்களென்னப் படுகையால் நான்கு மாதங்கள் நான்கு பக்ஷங்களென்று சிலர் கருதுகின்றனர்.

2 இங்குக் 'கார்த்திகே ஸமநுப்ராப்தே' என்று கார்த்திகைமாதம் ஸமீபித்து வருகையைச் சொல்லுகையால் அற்பிசிமாதத்தின் கடைசியைச் சொல்லுகிறது. ராமனே 'வயமாஸ்வயுஜே மாஸி பிங்காக்ஷ ப்ரதிசோதிதாঃ'என்று இந்த ஏற்பாட்டை அற்பிசிமாதமீறுகச் சொல்லியிருக்கின்றனன். 'ப்ரதிசோதிதாঃ' என்கிறவிடத்தில் ப்ரசோதனமாவது ஸங்காஹம். புறப்படுவதைச் சொல்லுகிறதன்று; புறப்படுவது மார்கழிமாதத்தில். தான் ஏற்பாடுபண்ணின கார்த்திகைமாதத்தைக் கடக்கையால் ராமனுக்கு ஸுக்ரீவன்மேல் கோபமும் லக்ஷ்மணனை அனுப்பினதும். ஆகையால் கார்த்திகைமாதங் கடந்து மார்கழிமாதத்திலேயே வானரர்கள் புறப்பட்டிருக்கவேண்டும். அங்ஙனம் அவர்கள் ஸீதையைத் தேடச்சென்று ஸ்வயம்ப்ரபையின் பிலத்தில் வெகுகாலமிருந்து அதினின்று வெளிப்பட்டு வரும்பொழுது 'த்ரு மாந் வாஸந்திகாந் த்ருஷ்ட்வா' (வஸந்த ருதுவிலுள்ள வ்ருக்ஷங்களைப் பார்த்து) என்றது வஸந்தகாலத்தில் புஷ்பிப்பதற்குத் தொடக்கமான இலையுதிர்காலமாகிய பங்குனிமாதத்தைப் பற்றியாதல், பக்ஷாங்

மாஸம் ஸமீபித்து வரும்பொழுது நீ ராவணவதத்தின் பொருட்டு ப்ரயத்னஞ் செய்யவேண்டும். இனி நீ உனது வானர ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் பெற்று உனது நண்பர்களை ஸந்தோஷப்படுத்துவாயாக' என்றனன். இங்ஙனம் வானராதிபதி ஸுக்ரீவன் ராமனிடம் அனுமதிபெற்று, வாலி இதுவரையில் பரிபாலித்து வந்த ரமணீயமான கிஷ்கிந்தாபுரத்திற்குள் ப்ரவேசித்தனன். அனேகமாயிரம் வானரர்கள் அவ்வானரேஷ்வரன்

---

தரத்தில்-பங்குனியும் சித்திரையும் வஸந்தருது வென்றதைப் பற்றியாதல். இவ்விடத்தில் இங்ஙனம் க்ரமங்கொள்ளவேணும். அதெப்படியெனில் 'உத்தரஸ்யாதிநா பூர்வஸ்யாவயிம் ஜாநீயாத்' என்னும் ந்யாயத்தின்படி உத்தரோத்தரததை எடுத்துக்கூறுவதால் பூர்வ பூர்வத்தின் காலஸங்க்யையைத் தெரிவிப்பது வால்மீகியின்சைலி. சித்திரைமாதத்தில் ராமன் அயோத்யையினின்று புறப்பட்டனன். அகஸ்த்யாஸ்ரமத்திற்கு வருவதன் முன்னமே பத்து ஸம்வத்ஸரங்களாயினவென்று சொல்லப்பட்டது. பிறகு பஞ்சவடியில் மூன்று ஸம்வத்ஸரங்கள் கடந்த சித்திரைமாதம் வருகையில் சூர்ப்பணகையின் காது மூக்குகளையறுத்ததும் கராதிகளின்வதமும் நடந்ததாகத் தெரியவருகின்றது. ராவணன் மாரீசனுடைய போதனத்தினால் கொஞ்சம் தாமதித்து வந்தச் சைத்ரமாதத்திலேயே ஸீதையைக் கொண்டுபோயினன். ஸீதாவிரஹத்தினால் ராமன் வருந்தி வஸந்தருதுவை வர்ணிக்கும் க்ரமத்தில் சித்திரைமாதத்து மந்தமாருதத்தை வர்ணித்தானகையாலும் ஸீதை லங்கையில் ஸம்வத்ஸரம் இருந்ததாகச் சொல்லியிருக்கையாலும் சித்திரைமாதத்திலேயே ஸீதை அபஹரிக்கப்பட்டனள். மீளவும் பங்குனிமாதத்தில் ராவணவதம். சரத்ருதுவில் ஸேனையைக் கூட்டினது. மார்கழியில் வானரர்கள் புறப்படுதல். ஸ்வயம்ப்ரபையின் பிலத்தில் வெகுகாலம் கடந்தது. இதையே 'காலஸ்ச ஸோ மஹாந் யாத:' என்று கபிகள் சொல்லினர். பிலத்தினின்று வெளிப்பட்டபின்பு பங்குனிமாதத்தின் சுக்லபக்ஷ த்ரயோதசியினன்று ஹனுமான் ஸமுத்ரத்தைத் தாண்டுதல். சதுர்தசியினன்று மீளவும் தாண்டிவருதல். பூர்ணிமையினின்று யுத்தயாத்ரை. மற்றவை யுத்தகாண்டத்திற் சொல்லப்படும்.




1775. ஸுக்ரீவ பட்டாபிஷேகம்.

கிஷ்கிந்தையுள் ப்ரவேசிக்கையில், தாமும் ப்ரவேசித்து அவனுக்கு நமஸ்காரஞ் செய்து நாற்புறத்திலும் சூழ்ந்து பணிந்து நின்றனர். அனந்தரம் பட்டணத்திலுள்ள ப்ரஜைகள் அனைவரும் வானர கணாதிபதியான ஸுக்ரீவனைக் கண்டு அவனிடத்திலேயே மன நிலைமை கொண்டு பூமியில் படும்படி தலைவணங்கி அவனுக்கு நமஸ்காரஞ் செய்தனர். மிகுந்த வீர்யமுடையவனும் மஹா பலனுமாகிய ஸுக்ரீவன் தன் முன்பு அங்ஙனம் வணங்கின பட்டணத்து ஜனங்களை எழுந்திருக்க எடுத்து அவர்களோடு நல்வார்த்தைகளைப் பேசி, அனந்தரம் தாரையைக் கைவசஞ் செய்துகொள்ளும்பொருட்டு வாலியின் அந்தப்புரத்திற்குப் போயினன். அங்ஙனம் அவ்விடம் சென்று அவ்வானரேஸ்வரன் ஸுக்ரீவன் வெளிப்பட்டு வந்தவுடனே, அவனுக்கு, தேவதைகள் தேவேந்த்ரனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதுபோல், பந்துக்கள் பட்டாபிஷேகஞ் செய்தனர். அப்பொழுது வானரர்கள் ஸுக்ரீவனது பட்டாபிஷேகத்திற்காக ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட வெண் குடையையும் பொற்காம்புகளிடப் பெற்றவைகளும் புகழை வளரச்செய்பவைகளுமான இரண்டு வெண் சாமரங்களையும் ஸமஸ்த ரத்னங்களையும் ஸகலமான விதைகளையும் ஓஷதிகளையும் பாலோடுகூடின வ்ருக்ஷங்களின் தளிர்களையும் புஷ்பங்களையும் வெளுத்த வஸ்த்ரங்களையும் கற்பூரம் முதலிய வெளுத்த அங்கராகங்களையும் நல்ல மணமுடைய பூமாலைகளையும் நிலத்தாமரைகளையும் சிறந்த சந்தனங்களையும் நானாவித கந்த த்ரவ்யங்களையும் மஞ்சள் கலந்த அக்ஷதைகளையும் ஞாழல் புஷ்பங்களையும் தேனையும் நெய்யையும் தயிரையும் புலித்தோலையும் காட்டுப் பன்றித் தோலால் செய்யப்பட்ட பாதரக்ஷைகளையும் கொண்டு வந்தனர். அனந்தரம் அவ்விடத்

திற்குப் பதினறு கன்னிகைப் பெண்கள் மெய்க்கூண்டையும் மனச்சிலையாற் செய்யப்பட்ட திலகத்தையும் கோரோசனத்தையும் எடுத்துக்கொண்டு மனக்களிப்பு விளங்க வந்தனர். அனந்தரம் மந்த்ரங்களை யுணர்ந்த வானர புரோஹிதர்கள் யாஜனத்தின் பொருட்டு வரவழைக்கப்பட்ட ப்ராஹ்மணோத்தமர்களுக்கு ரத்னங்களையும் வஸ்த்ரங்களையும் நானுவித பக்ஷயங்களையும் கொடுத்து ஸந்தோஷப்படுத்தி அக்னியை ஜ்வலிக்கச் செய்து சுற்றிலும் தர்ப்பங்களைப் பரப்பிக் காலம் தவருமல் விதியின்படி மந்த்ரங்களைச் சொல்லி ஹவிஸ்ஸை ஹோமஞ் செய்தனர். பின்பு ஸ்வர்ணமயமான கால்கள் இடப்பெற்றதும் மேலான மெத்தை பரப்பப்பெற்றதுமாகிய சிறந்த ஆஸனத்தில், ரமணீயமும் பலவகைப்பட்ட புஷ்பமாலைகளால் அலங்கரிக்கப்பட்டதுமாகிவிளங்கும் உப்பரிகையின் மேல்பாகத்தில் ஸுக்ரீவனைக் கிழக்குமுகமாக நானுவித மந்த்ரங்களைச் சொல்லி உட்காரவைத்து, நதிகளினின்றும் நதங்களினின்றும், ஸமஸ்த தீர்த்தங்களினின்றும் ஸகல ஸமுத்ரங்களினின்றும் நிர்மலமான புண்ய ஜலங்களைக்கொண்டுவந்து ஒன்ருகக் கலந்து அந்த ஜலங்களைப் பொற்குடங்களில் வைத்து நல்ல முஹூர்த்தத்தில் சாஸ்த்ரத்திற் சொல்லிய க்ரமத்தின்படியும் கல்பஸூத்ர க்ரமந் தவருமலும் கஜன் கவாக்ஷன் கவயன் சரபன் கந்தமாதனன் மைந்தன் த்விவிதன் ஹநுமான் ஜாம்பவான் நலன் ஆகிய இவர்கள் மிகவும் தெளிவாயிருப்பதும் கமகமவென்று மணங்கமழப் பெற்றதுமாகிய அந்தப் புண்ய தீர்த்தங்களை மங்களகரமான [1] வ்ருஷபஶ்ருங்கங்களாலும் பொற்கலசங்களாலும் எடுத்து ஸுக்ரீவனுக்கு, வஸுக்கள் ஆயிரங் கண்ணனுகிய தேவேந்த்ரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வதுபோல், பட்டாபிஷேகஞ் செய்தனர். ஸுக்ரீவனுக்குப் பட்டா

1 எருதுகளின் கொம்புகள்.

பிஷேகம் நடந்தவுடனே மஹானுபாவர்களான வானரஸ்ரேஷ்டர்கள் அனைவரும் ஆயிரமாயிரமாகக் குவியல் கூடிப் பரமஸந்தோஷம் பெற்றுக் கிலகில வென்று சப்தஞ் செய்தனர். வானரர் தலைவனாகிய ஸுக்ரீவன் ராமனது ஆஜ்ஞையைச் சிரஸாவஹித்து அங்கதனை அணைத்து ஆலிங்கனஞ் செய்து, அவனுக்கு யௌவராஜ்யத்தில் பட்டங் கட்டினன். அங்கதன் பட்டாபிஷேகம் பெற்ற பின்பு தந்தையில்லாத குழந்தையென்று அவனிடத்தில் மன இரக்கமுற்றிருந்த மஹானுபாவரான வானரர்கள் ஸுக்ரீவனை நல்லது நல்லதென்று கொண்டாடினர். ஸுக்ரீவ அங்கதர்களுடைய பட்டாபிஷேக மென்னும் அம்மஹோத்ஸவம் நடக்கும் பொழுது கிஷ்கிந்தா புரத்திலுள்ள ஸமஸ்த வானரர்களும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து மஹானுபாவனாகிய ராமனையும் லக்ஷ்மணனையும் அடிக்கடி புகழ்ந்தனர். அம்மஹோத்ஸவத்தில் பர்வதகுஹையிலிருக்கும் கிஷ்கிந்தா நகரம், ஜனங்கள் ஸந்தோஷத்தினால் பருத்த மேனியுடன் விளங்கவும், ராஜசிஹ்னங்களையுடைய டக்கயங்களும் ஸாதாரண டக்கயங்களும் ப்ரகாசிக்கவும் பெற்று மிகவும் அழகுற்று விளங்கிற்று. அப்பொழுது வீர்யசாலியாகிய வானரேஸ்வரன் ஸுக்ரீவன் மஹானுபாவனாகிய ராமனிடம் சென்று பட்டாபிஷேகம் நடந்த வ்ருத்தாந்தத்தை விண்ணப்பஞ் செய்துதன் பார்யையாகிய ருமையுடன் கூடித் தேவேந்த்ரன் தேவராஜ்யம் பெறுவதுபோல் வானர ராஜ்யத்தைப் பெற்றனன்.
இருபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஸீதா விரஹத்தால் சோகித்தலும்,
லக்ஷ்மணன் ஸமாதானப் படுத்தலும்.

ஸுக்ரீவன் பட்டாபிஷேகம் பெற்றுக் குஹாரூபமாயிருக்கும் கிஷ்கிந்தையில் ப்ரவேசித்த பின்பு ராமன் தம்

பியோடுகூட ப்ரஸ்ரவண பர்வதத்திற்குப் போயினன். அதில் பெரும் புலிகளின் கர்ஜனைகளும் மான்களின் கூச்சல்களும் நாற்புறமும் நிறைந்திருந்தன. மேலும், அதில் பலவகைப்பட்ட புதர்களும் கொடிகளும் சூழ்ந்திருந்தன. வ்ருக்ஷங்கள் பலவும் அங்கு நிறைந்து நெக்கரித்திருந்தன. கரடிகளும், குரங்குகளும், கொண்டைமுயல்களும், பூனைகளும் அங்கு உலாவிக்கொண்டிருந்தன. மேலும் அது மேகஸமூஹம்போல் கறுத்துக் கல்மயமாகி எப்பொழுதும் நிர்மலஜலங்கள் நிரம்பியதுமாகி விளங்கிற்று. அந்த ப்ரஸ்ரவண பர்வதத்தின் சிகரத்தில் அகலமும் நீளமுடைய ஓர் குஹையை ராமன் தானும் லக்ஷ்மணனும் வாஸஞ்செய்வதற்காக ஏற்படுத்திக்கொண்டனன். பாபமற்றவனும் நல்லியற்கை யுடையவனுமாகிய அந்த ரகுநந்தனன், ஸுக்ரீவனோடு அங்ஙனம் ஸமயம் ஏற்படுத்திக்கொண்டு அனந்தரம் வணக்கமுடையவனும் கைங்கர்ய சோபையைவளர்த்துக்கொள்பவனுமாகிய தம்பி லக்ஷ்மணனைப் பார்த்து அப்பொழுதைக்குத் தகுந்த பெரிய வாக்யத்துடன் 'சத்ருக்களை யழிப்பவனே! இந்தப் பர்வதத்தின் குஹை ரமணீயமும் விசாலமுமா யிருக்கின்றது. இதில் வேண்டிய காற்று மாத்ரமே வீசுகின்றது. ஆகையால் வர்ஷாகாலராத்ரிகள் முழுமையும் இந்தக் குஹையில் வஸித்திருப்போம். ராஜகுமாரா! இந்தப் பர்வத சிகரம் ரமணீயமாகி உந்நதமுமா யிருக்கின்றது. இதில் வெளுப்புக் கற்களும், கறுப்புக் கற்களும், சிவப்புக் கற்களும் மனக்களிப்பை விளைவிக்கின்றன. மேலும் ஆங்காங்குக் கைரிகதாதுக்களும் நிறைந்திருக்கின்றன. குஹைகளும் மலை யருவிகளும் இதில் விளங்குகின்றன. நானாவித வ்ருக்ஷ ஸமூஹங்களும் சூழ்ந்திருக்கின்றன. பலவகைப் பக்ஷிகளும் கலகலவென்று கூவிக்கொண்டிருக்கின்றன. மயில்கள்

கே காவென்று சப்தஞ் செய்கின்றன. புஷ்பித்த ஜாதிச் செடிகளும் குந்தச் செடிகளும் நொச்சிலிச்செடிகளும், பொன்மருதாணி மரங்களும், கடப்பமரங்களும், அர்ஜுன வ்ருக்ஷங்களும், ஸாலவ்ருக்ஷங்களும் விளங்குகின்றன. ராஜகுமாரா! மலர்ந்த தாமரைகளால் அலங்கரிக்கப்பட்டு விளங்குகின்ற இந்தத் தாமரையோடையும் வர்ஷாகாலத்தில் நன்ருக நிறைந்து நமது குஹைக்கு நிரம்பவும் தூரமாகாமல் ஸமீபித்திருக்கும். ஸௌம்யனே! வடகிழக்கு மூலையில் பள்ளமாயிருக்கும் ப்ரதேசத்தில் இந்தக்குஹை ஏற்பட்டு நிருதிதிக்கில் வாசற்படி விளங்கப்பெற்றிருக்கையால் வடகிழக்கினின்று வரும் மழை உள்ளேபடாது. ஆகையால் இது நன்ருயிருக்கும். மேலும் இது மேலண்டை பக்கத்தில் உயர்ந்திருக்கையால் மேல்காற்றும் உள்ளே வரப்பெருமல் ஸுகமாயிருக்கும். லக்ஷ்மணு! மேலும் இந்தக் குஹையின் வாசலிலிருக்கும் இந்தக்கல் மேடுபள்ளமின்றிச் சதுரமாகி மிக்க அழகுற்று விஸ்தாரம் பொருந்தி மழமழத்து உரைத்த மைக்குவியல்போல் கறுத்திருக்கின்றது. என்னப்பனே! இதன் வடபாகத்தில் அழகு விளங்கப்பெற்ற இந்தப் பர்வதசிகரத்தைக் காண்பாயாக. இது உரைத்த மைக்குவியல்போல் கறுத்து ஆகாயத்தில் கிளம்பின மேகம் போலிருக்கின்றது. தென் திசையில் வெள்ளிபோல் விளங்குவதும் கைலாஸ சிகரம்போல் புலப்படுவதும் பலவகைப்பட்ட கைரிகதாதுக்களால் அலங்கரிக்கப்பட்டதுமாயிருக்கும் மற்ருெரு சிகரத்தைக் காண்பாயாக. மேலும் இந்தக் குஹையின் கிழ்பாகத்தில், த்ரிகூட பர்வதத்திலுள்ள கங்காநதிபோல் கிழக்குமுகமாகப் பெருகி வருகின்ற நதியைக் காண்பாயாக. இந்நதி சிறிதும் சேறில்லாதிருக்கின்றது. இது சண்பகம் திலகம் பனை பச்சிலை குருக்கத்தி பத்மகம்ஸரளம் அசோகம் நீர்

வஞ்சி தினிசி மகிழ் தாழை தவம் கூந்தல் பனை வெள்ளலத்தி நீர்க்கடம்பு பரம்புச்செடி ஸுரபுன்னை இவைகளாலும் மற்றும் பலமரங்களாலும் அழகாய் விளங்குகின்றது. இந்நதி கரையில் முளைத்தநானாவித வ்ருக்ஷங்களோடு கூடியிருக்கையால், ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட மடந்தைபோல் ப்ரகாசிக்கின்றது. பறவைகள் பலவும் குவியல்கூடிப் பலவாறு கூவப்பெற்றதும் ஒன்றுக்கொன்று மிகுந்த ப்ரீதியுடைய சக்ரவாகப்பறவைகள் விளங்கப்பெற்றதும் ஹம்ஸங்களும் ஸாரஸங்களும் திரியப்பெற்று மிகவும் அழகாயிருக்கின்ற மணற்குன்றுகள் அமைந்திருப்பதுமாகிய இந்நதி, சிலம்பு தண்டை முதலிய ஆபரணங்களை யணிந்து பருத்த இடையின் பின்புறமுடையவளாகி மதுர த்வனி யெழும்பும்படி நகைக்கின்ற ஓர் யுவதியைப்போல் ப்ரகாசிக்கிறது. மேலும் இது ஓரிடத்தில் கருநெய்தல்களாலும் மற்றோரிடத்தில் செங்கழுநீர்களாலும் மற்றோரிடத்தில் வெளுத்த ஆம்பல் மொட்டுகளாலும் நிரம்பியதாகி மிகவும் விளங்குகின்றது. ஸௌம்யனே! பல நீர்ப்பறவைகளுடன்கூடி மயில்களும் க்ரௌஞ்சப் பறவைகளும் மதுர த்வனிகள் செய்யப்பெற்று ரிஷிகள் கூட்டங்கூட்டமாக வந்திறங்கி ஸ்னானஞ் செய்வதுபற்றி இந்நதி அதிரமணியமா யிருக்கின்றது. இந்தச் சந்தனமரங்களின் சாலையைக் காண்பாயாக. ஸரங்கோத்தாற்போல் அமைந்திருக்கின்றது. அப்படியே மருதமரங்களின் வரிசையும் மனத்தினால் ஸங்கல்பித்து ஒரேகாலத்தில் உண்டாக்கப்பட்டதுபோல் புலப்படுகின்றது. சத்ருக்களையழிப்பவனே! இந்த ப்ரதேசம், ஆ! எவ்வளவு அழகாயிருக்கின்றது. ஸௌமித்ரீ! இங்கு நாம் நன்றாக ஸந்தோஷத்துடன் விளையாடிக்கொண்டிருக்கலாம். ஆகையால் இங்கேயே வஸித்திருப்போம். ராஜகுமார! அற்புத

மான வனங்கள் அமையப்பெற்று ரமணீயமாயிருக்கும் ஸுக்ரீவனது ராஜதானியாகிய கிஷ்கிந்தை இவ்விடத்திற்கு ஸமீபமே. சூரர்களில் தலைவனே! கிஷ்கிந்தையில் நடக்கும் கீதவாத்யங்களின் கோஷங்களும் ம்ருதங்க ஆடம்பரங்களோடு இறைச்சலிடுகின்ற வானரர்களின் கோஷங்களும் இங்குச் செவிப்படுகின்றன. ஆகையால் கிஷ்கிந்தை இவ்விடத்திற்கு ஸமீபமாகவே யிருக்கின்றது. வானரஸ்ரேஷ்டனாகிய ஸுக்ரீவன்; தன்பார்யையாகிய ருமையையும் வானர ராஜ்யத்தையும் பெரிய ஸம்பத்தையும் பெற்றுப் பந்துக்களால் சூழப்பட்டு மிகவும் ஸந்தோஷமுறுகின்றனன். இது நிஜம்' என்றனன். ராமன் இங்ஙனம் லக்ஷ்மணனைப் பார்த்துச் சொல்லிப் பார்க்கத் தகுந்த பல குஹைகளோடும் புதர்களோடும் கூடிய ப்ரஸ்ரவண பர்வதத்தில் அந்தக் குஹையில் லக்ஷ்மணனும் தானுமாக வஸித்திருந்தனன். அந்த ப்ரஸ்ரவண பர்வதம் புஷ்பம் பழம் முதலிய பலவஸ்துக்கள் நிறைந்து எப்படிப்பட்டவர்க்கும் மிகவும் ஸுகத்தை விளைவித்துக்கொண்டிருக்கும். ராமன் அந்தப் பர்வதத்தில் வாஸஞ்செய்பவனாயினும் தனக்கு ப்ராணன்களைக் காட்டிலும் மேலானவளும் ராவணனால் அபஹரிக்கப் பட்டவளுமாகிய தன் ப்ராணநாயகியையே எப்பொழுதும் சிந்தித்துக்கொண் டிருந்தமையால் அவனுக்குச் சிறிதாயினும் மனக்களிப்பு உண்டாகவில்லை. பகலில் விரஹத்தை நினைவுமூட்டும் வஸ்துக்களைப் பார்த்துப் பரிதபிக்கை மாத்ரமே யன்றி, அவன், விசேஷித்து, ராத்ரிகளில் படுக்கும்பொழுது உதய பர்வதத்தினின்று கிளம்பின சந்த்ரனைக்கண்டு விரஹதாபத்தின் மிகுதியால் எள்ளளவும் நித்ரைபெறாமல் வருத்தமுற்றிருந்தனன். ஸீதையை நினைத்துக் கொள்கையாலுண்டான சோகத்தினால் கண்ணீர் ததும்பப் பெற்று மனங்கலங்

கிச் சோகித்துக்கொண்டு சோகமே கதியாயிருக்கின்ற ராமனைப் பார்த்துத் தம்பி லக்ஷ்மணன் தானும் அவனோடொக்க வருந்தி அவனை நல்வார்த்தை சொல்லிக்கொண்டே 'வீரர்களில் தலைவனே! துக்கப்பட்டது போதும். நீ இங்ஙனம் வ்யஸனப்படுவது யுக்தமன்று! துக்கப்பட்டுக் கொண்டிருப்பவனுக்கு ஸமஸ்த கார்யங்களும் கெட்டுப்போம். இது உனக்குத் தெரிந்த விஷயமேயல்லவா? உலகத்தில் எல்லாரைக் காட்டிலும் நீ புருஷப்ரயத்னத்தை அவலம்பித்துக் கார்யஞ் செய்பவன்; கார்யஸித்திக்குக் காரணமான தெய்வத்தினிடத்திலும் நிஷ்டையுடையவன்; தெய்வமுளதென்னும் நினைவு என்றும் மாறுதிருக்கப்பெற்றவன்; தர்மங்களை உணர்ந்து ஆசரிக்குந் தன்மையன்; இடைவீடில்லாத ப்ரயத்னமுடையவன். அப்படிப்பட்ட நீ இப்படி சோகத்தினால் மனங் குதிரப்பெறுமல் முயற்சியற்றிருப்பாயாயின், எந்தப் பகைவனையும் வெல்ல வல்லவனாக மாட்டாய். அதிலும் விசேஷித்துக் கபடோபாயங்களைச் செய்யும் ராக்ஷஸனை ராவணனை யுத்தத்தில் கொல்வதற்கு எவ்விதத்திலும் வல்லவனாகமாட்டாய். சோகத்தைவிட்டுத் தொலைப்பாயாக. முயற்சியை ஸ்திரமாகக் கைப்பற்றுவாயாக. இங்ஙனஞ்செய்து அந்த ராக்ஷஸனை ராவணனைப் புத்ரமித்ராதிகள் ஒருவரும் மிகாதபடி வதிப்பாயாக. ராமா! ஸமுத்ரங்களோடும் வனங்களோடும் பர்வதங்களோடும்கூடின பூமண்டலத்தையெல்லாம் தலைகீழாகச் செய்யவல்லவனுவாய். இனி ராவணனைக் கொல்வது உனக்கு எவ்வளவு? இப்பொழுது வர்ஷாகாலம் வந்துவிட்டது. ஆகையால் சரத்காலம் வரையில் காத்திருப்பாயாக. அதன் பிறகு ராவணனையும் அவனுடைய ஸைன்யத்தையும் பந்துக்களையுங்கூட வதிப்பாய். நான் நீறுபூத்த நெருப்பை எரியச்செய்

கின்ற ஆஹுதிகளால் எரியச் செய்வதுபோல் நித்ரைபோகின்ற உன் பராக்ரமத்தைக் கிளப்பும்படியான வார்த்தைகளால் மேலெழச் செய்கிறேனன்றி உனக்கில்லாத பராக்ரமத்தை உபதேசிக்கிறேனல்லேன்' என்றனன். லக்ஷ்மணன் சுபகரமாகவும் ஹிதமாகவும் சொன்ன அந்த வார்த்தையை மிக்க ஆதரத்துடன் அங்கிகரித்துத் தன்னிடத்தில் மேன்மையை விரும்பும் மனமும் மிகுந்த ஸ்னேஹமுமுடைய தம்பி லக்ஷ்மணனைப்பார்த்து 'லக்ஷ்மண! அனுராகமுடையவனும் ஸ்னேஹம் மிகப்பெற்றவனும் ஹிதத்தை விரும்புவோனும் உண்மையான பராக்ரமமுடையவனும் சொல்லவேண்டிய வார்த்தைகளை யெல்லாம் சொல்லினை. ஸமஸ்த கார்யங்களையும் கெடுக்கும்படியான இந்தச் சோகத்தை இதோ துறந்துவிட்டனன். பராக்ரம ஸமயங்களில் எதிரின்றி விளங்கும் தேஜஸ்ஸை ஏற்றுக்கொள்கின்றனன். உன் வார்த்தையின்படி சரத்காலம் வந்து நதிகள் தெளிந்து ஸுக்ரீவனும் அருள் புரியும் வரையில் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். வீரனாயிருப்பவன் தனக்கு உபகாரஞ் செய்தவர்களுக்குத் தவறாமல் ப்ரத்யுபகாரஞ் செய்வான். அங்ஙனம் தனக்குச் செய்த உபகாரத்தை மறந்து ப்ரத்யுபகாரஞ் செய்யானாயின், ஸாத்விகர்களுக்கு மனம் நோகும். ஆகையால் அவர்கள் நிந்திப்பார்கள். நம்மைப்பற்றி யில்லாமற் போயினும் ஸஜ்ஜனாபவாதத்திற்குப் பயப்படுவோனாகையால் அதைப்பற்றியாவது நமக்குத் தவறாமல் ப்ரத்யுபகாரஞ் செய்வான்' என்றனன். அனந்தரம் லக்ஷ்மணன் இங்ஙனம் ராமன் சொன்னது கேட்டுக் கைகூப்பி ராமனது வசனத்தைக் கௌரவித்து முன்பு செய்யவேண்டிய கார்யத்தைக் குறித்து ஆலோசித்துச் சுபமான தனது அபிப்ராயத்தைத் தெளிவாக இனிய காட்சியுடைய ராம

னைப்பார்த்துச் சொல்லத் தொடங்கி 'நரேந்த்ரனே! வானரர் தலைவனாகிய ஸுக்ரீவன் உன் விருப்பத்தை யெல்லாம் தான் செய்வதாகச் சொன்ன வார்த்தை யைத் தவறாமல் சீக்ரமாகவே ஈடேற்றுவான். ஆகை யால் நீ பகைவனை அடக்கும்பொருட்டுத் தைர்யத்தை யேற்றுக்கொண்டு சரத்ருது வரும்வரையில் இந்த வர்ஷாகாலத்தில் விளையும் விரஹதாபத்தைப் பாராட் டாமல் பொறுத்திருப்பாயாக. கோபத்தை அடக்கிக் கொண்டு சரத்காலம் வரையில் காத்திருப்பாயாக. இனிநான்கு மாதங்கள் எப்படியாவது என்னோடுகூடப் பொறுத்திருப்பாயாக. இதற்குள் சரத்ருதுவும் வரும். ஸிம்ஹங்களால் விளங்குகின்ற இந்தப் பர்வதத்தில் இத்தனை காலம் சத்ருவதத்தில் உத்ஸாஹத்தை மேன் மேலும் பெருகச் செய்துகொண்டு வஸித்திருப்பா யாக. இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் வர்ஷருதுவை வர்ணித்தல்.

ராமன் அங்ஙனம் வாலியைக் கொன்று ஸுக்ரீவனு க்கு வானர ராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ் செய்வித்து மால்யவானென்னும் ப்ரஸ்ரவணபர்வதத்தில் வாஸஞ் செய்துகொண்டு லக்ஷ்மணனைப்பார்த்து 'இப்பொழுது ஸுக்ரீவன் கிஷ்கிந்தையிலிருக்கும்படிக்கும் நாம் இங் கிருக்கும்படிக்கும் ஸங்கேதம் பண்ணிக்கொண்ட காலமாகிய வர்ஷருது இதோ வந்தது. ஆகாயம் முழுவதும் பர்வதம்போன்ற உருவமுடைய மேகங்கள் நிறைந்திருக்கின்றன காண்பாயாக. ஆகாயம் ஸூர்ய கிரணங்களின் மூலமாய் ஸமுத்ரஜலத்தைப் பருகிக் கார்த்திகைமாதம் முதல் ஆடிமாதம் வரையிலுள்ள ஒன்பது மாதங்கள் கர்ப்பம் தரித்து, இப்பொழுது ஸமஸ்த ரஸங்களுக்கும் காரணமான ஜலத்தை ப்ரஸ

விக்கின்றன. பர்வதத்தில் படிந்து மேகங்கள் மேன் மேலும் படர்ந்திருக்கின்றன. ஆகையால் இந்த மேகங்களாகிற படிகளின் வழியால் ஏறி ஆகாயஞ் சென்று குடமல்லிப் புஷ்பங்களின் மாலைகளாலும் மருதப் பூமாலைகளாலும் ஸூர்யனை (ஸூர்யமண்டலமத்யத்தில் எப்பொழுதும் த்யானிக்கத் தகுந்த நாராயணனை) அலங்கரிக்கக் கூடும். மழை பெய்து வெளுத்துக் கொஞ்சம் ஜலத்தோடுகூடின மேகங்கள் ஸந்த்யா ராகம்பட்டு நடுவில் சிவந்தும் ஓரங்களில் வெளுத்தும் கொஞ்சம் ஜலத்தினால் நனைந்தும் விளங்கி ஆகாயத்தில் பரந்திருக்கையால், ரக்தம்பட்டு நடுவில் சிவந்த வெளுப்புத்துணிகளால் ஆகாயத்தின் வ்ரணங்களுக்கு மருந்துச் சீலையிட்டாற்போ லிருக்கின்றன. ஆகாயம் இளங்காற்றாகிற இடைவிடாத பெருமூச்சுக்களும் ஸந்த்யாகாலத்துச்சிவப்பாகிற குளிர்ச்சியின் பொருட்டான ஸந்தனப்பூச்சும், முழுமையும் பரந்திருக்கிற வெளுத்த மேகங்களாகிற விரஹத்தால் விளையக்கூடிய வெண்மையும் (விளங்கப்பெற்றுத் தனது ஆசைநாயகியைப் பிரிந்து அந்தப் பிரிவினால் பீடிக்கப்பட்டதுபோல் புலப்படுகின்றது. வெயிலில் மிகவும் காய்ந்து புதிய மழை ஜலங்களால் நனைந்திருக்கின்ற இந்தப்பூமி விரஹதாபத்தினால் பரிதபித்துக் கண்ணீர்களால் நனைந்திருக்கின்ற ஸீதை பாஷ்பங்களை விடுவதுபோல், தானும் பாஷ்பங்களை (ஆவிகளை) விடுகின்றது. மேகங்களினிடையினின்று புறப்பட்டு மெதுவாயிருப்பவைகளும் செங்கழுநீர் மலர்களில் படிந்து ஸுகமான குளிர்ச்சி உண்டாகப் பெற்றவைகளும் தாழைமடல்களைச் சார்ந்து நன்மணம் அமைந்தவைகளுமான காற்றுக்கள் குவித்த கைகளால் வாரியெடுத்துப் பருகலாம்போல் நிறைந்து வீசுகின்றன. முழுவதும் மருதமரங்கள் மலர்ந்திருக்கப்பெற்றதும் தாழைமடல்களால் மணங்கமழ்வதும்

தாபம்தீரப் பெற்றதுமாகிய இந்தப் பர்வதம், பூமாலை களால் அலங்கரிக்கப்பட்டு நல்ல மணமுள்ள சந்தனங் களைப் பூசி, சத்ருக்கள் தொலையப்பெற்றுப் பட்டாபி ஷேகம் நடத்திக்கொள்ளும் ஸுக்ரீவன் ஜலதாரைக ளால் அபிஷேகம் செய்யப் பெறுவதுபோல், தானும் வர்ஷதாரைகளால் அபிஷேகம் செய்யப்பெற்றிருக்கின் றது. பர்வதங்கள் கறுத்த மேகங்களால் மறைக்கப் பட்டுத் தாரை தாரையாகவிழும் வெளுத்த ஜலப்ரவா ஹங்களும் பொருந்திக் காற்றுநிறைந்த குஹைகளால் சப்தித்துக் கொண்டிருப்பது கண்டால் க்ருஷ்ணாஜினங் களை உடுத்து யஜ்ஞோப வீதங்களைத் தரித்துக் காற்று நிறைந்த கண்டத்துடன் வேதாத்யயனம் பண்ணத்தொ டங்கினாற் போலிருக்கின்றன. ஆகாயம் மின்னல்களால் மின்மினிப்புற்று மேககர்ஜனங்கள் உண்டாகப் பெற்றி ருக்கையால் பொன்மயமான சாட்டைகளால் அடிக்கப் பட்டு உரக்க அத்யயனஞ் செய்துகொண்டு உள்ளே நோவுபடுகின்ற மாணுக்கரைப்போல் புலப்படுகின்றது. கறுத்த மேகத்தினிடையில் புலப்படுகின்ற மின்னற் கொடி. ராவணனதுமடியில் தடுமாற்றமுற்று மன இரக் கத்திற்கிடமான ஸீதைபோல் எனக்குத் தோற்றுகின் றது. மேகங்கள் பூச்சுப்பூசினாற்போல் கனமாக மூடிக் கொண்டிருக்கையில் நக்ஷத்ரங்களும் சந்த்ரனும் தெரி யாமையால் 'இது கிழக்கு இது மேற்கு' என்று ஏற்படா திருக்கும்படி திசைகள் மறைந்திருத்தல்,மடந்தையரோ டுகூடின காமுகர்களுக்கு மிகவும் ஸுகமாயிருக்கின் றது; ஆனால் மடந்தையரைப் பிரிந்த விரஹிஜனங்களு க்கு வருத்தத்தையே விளைவிக்கும். லக்ஷ்மணா! ஓரிடத் தில் மலைச்சாரல்களில் குடமல்லிகள் வர்ஷருது வந்தமை யால் ஸந்தோஷ முற்றனவாகிப் புதிய ஜலத்துளிகள்

படுதலாலுண்டாகும் ஆவியால் மூடப்பட்டுப் புஷ்பங்கள் நிறைந்து, காதலிகளைச் சேர்ந்து ஆநந்தபாஷ்பம் பெருகப்பெற்றுப் புன்னகையுடன் விளங்கும் முகமுடைய காமுகர்போல் தோற்றி எனக்குக் காமவிகாரத்தை மேன்மேலும் வளர்க்கின்றன காண்பாயாக. இப்பொழுது பூமியில் தூசி அடங்கிவிட்டது. காற்று பனியோடுகூடிக் குளிர்ந்து வீசுகின்றது. வெயிலாலுண்டாகும் வெப்பம் முதலிய தோஷங்களெல்லாம் தொலைந்தன. ராஜாக்களின் யுத்தப்ரயாணங்களும் நின்றிருக்கின்றன. தேசாந்தரத்திற்குப் போனவர் தந்தமது தேசங்களைச் சேருகின்றனர். இப்பொழுது ஹம்ஸங்கள் மானஸஸரஸ்ஸின் வாஸத்தை நினைத்துக்கொண்டு மிக விருப்பமுற்றுப் புறப்பட்டன. இப்பொழுது சக்ரவாகப் பறவைகள் காமவிகாரம் மீறப்பெற்றுப் பேடுகளோடு கலந்திருக்கின்றன. மிகவும் மழைஜலங்களால் வழிகள் கல்லப்பட்டுக் கெட்டிருக்கையால் வண்டி முதலியவை அவற்றில் செல்லமாட்டாதிருக்கின்றன. ஆகாயத்தில் ஆங்காங்கு மேகங்கள் சூழ்ந்திருக்கையால், அது சில விடங்களில் கண்ணுக்குப் புலப்படுவதும் சிலவிடங்களில் புலப்படாததுமாயிருக்கின்றது; ஆகையால் சிலவிடங்களில் பர்வதங்களால் மறைக்கப்பட்டுத் தோற்றாததும் மற்ற இடங்களில் தோற்றுவதும் அலைகளின்றி ஓய்ந்திருப்பதுமாகிய மஹாஸமுத்ரம்போல் ப்ரகாசிக்கின்றது மராமரப் புஷ்பங்களும் கடம்பப் புஷ்பங்களும் கலந்து நிறைந்திருப்பவைகளும், கைரிகதாதுக்களால் சிவந்த புதிய ஜலப்ரவாஹங்களோடு கூடியவைகளும், மயில்களின் கேகா சப்தங்கள் ஓயாது விளங்கப் பெற்றவைகளுமாகிய மலையாறுகள் மிக்கவேகத்துடன் பெருகிவருகின்றன. மிகுந்த ருசியுடையதும் வண்டுபோல் கறுத்திருப்பதுமாகிய நாவற்பழங்களை ஜனங்கள் ஏராளமா

கப் புசிக்கின்றனர். மாம்பழங்கள் சிவப்பு மஞ்சள் முதலிய பலவர்ணங்களமைந்து நன்றாகப் பழுத்துக் காற்றால் அடிக்கப்பட்டுத் தரையில் வீழ்கின்றன. மின்னல்களோடுகூடிக் குவியல் குவியலாகக் கொக்குகளும் சூழப்பெற்றுப் பர்வத சிகரம்போன்ற உருவமுடைய மேகங்கள், டக்கயங்களோடுகூடி நக்ஷத்ரமாலைகளால் விளக்கமுற்றுப் பெரிய சிகரங்கள்போல் உயர்வுற்று ஒன்றோடொன்று யுத்தஞ் செய்கின்ற சிறந்த மத்தகஜங்கள்போல் பெருக் த்வனியெழும்படி கர்ஜிக்கின்றன. வனங்கள் மழை ஜலங்களில் நன்றாகப் புற்கள் படர்ந்து வளர்ந்த இடமுடையனவாகி மயில்கள் வேடிக்கையாக நர்த்தனஞ் செய்யப்பெற்று மேகங்கள் மழை பெய்துகொண்டிருக்கையில் (அல்லது மேகங்கள் நன்றாகப் பெய்து நிற்கையில்) ஸாயங்காலங்களில் மிகவும் ரமணீயமாயிருக்கின்றன காண்பாயாக. மேகங்கள், கொக்குகள் சூழப்பெற்று மிகுந்த ஜலபாரம் நிறைந்திருக்கையால் கர்ப்பிணிகள்போல் பர்வதங்களின்மேல் ஏறும்பொழுது இளைப்பின் மிகுதியால் ஊங்கொட்டுவது போல் கர்ஜனஞ் செய்துகொண்டு பெரிய சிகரங்களில் நின்று நின்று இளைப்பை யாற்றிக்கொண்டு போகின்றன. கர்ப்பந் தரிக்கும்பொருட்டு மேகங்களை எதிர் பார்ப்பவைகளும் ஆனதுபற்றியே மேகத்தை அணுகும் பொருட்டு வருமவைகளுமாகி ஸந்தோஷத்தினால் பறந்து வருகின்ற கொக்குகளின் குவியல், ஆகாயத்தில் தொங்கும்படி இடப்பட்டுக் காற்றால் அசைகின்ற, மேலான வெண் தாமரைப் பூமாலைபோல் விளங்குகின்றது. பூமி, புதிய பசும்புல் முழுவதும் உண்டாகப்பெற்று அவைகளின் இடையிடையில் சிவந்திருக்கும் சிறிய பட்டுப் பூச்சிகள் உலாவப் பெற்றுச் சித்ரவர்ணமாயிருப்பது பற்றி அரக்குக் குழம்பினால் நடுநடுவில் பொட்டுகளிடப்

பெற்றுச் சித்ரமெழுதினதும் கிளியின்மேனி வர்ணம் பொருந்தியதுமாகிய பச்சைப்பட்டுடுத்தின அங்க னைபோல் ப்ரகாசிக்கின்றது. இப்பொழுது யோக நித்ரை மெல்ல மெல்ல விஷ்ணுவைத் தொடருகின்றது. நதி வேகத்துடன் ஸமுத்ரத்தைச் சேருகின்றது. கொக் குகள் ஸந்தோஷத்துடன் மேகத்தை அணுகுகின்றன. மடந்தையர்களும் காமவிகாரங்கொண்டு தமது காத லருடன் புணருகின்றனர். வனங்களில் மயில்கள் நர்த் தனஞ் செய்யத்தொடங்கின. கடம்ப வ்ருக்ஷங்கள் கிளைகள் முழுமையும் நன்ருகப் புஷ்பித்திருக்கின்றன. எருதுகள் பசுக்களிடத்தில் மிகவும் காமவெறி மீறப் பெற்றிருக்கின்றன. பூமி, பயிர்களும் காடுகளும் செழித்திருக்கப்பெற்று ரமணீயமா யிருக்கின்றது. இப் பொழுது நதிகள் பெருகுகின்றன. மேகங்கள் மழை பெய்கின்றன. மதித்தயானைகள் கர்ஜிக்கின்றன. அடவி கள் செழிப்புற்று ப்ரகாசிக்கின்றன. காதலிகளைப் பிரிந்த காமுகர் வ்யஸனத்தில் ஆழ்ந்து சிந்தையுற் றிருக்கின்றனர். மயில்கள் நர்த்தனஞ் செய்கின்றன. வானரர்கள் ஓரிடத்திலேயே வேண்டிய உணவுகள் அகப்படுகையால்மனக்கவலையற்றிருக்கின்றனர். (ஸுக்ரீ வனது பக்ஷத்தைச் சேர்ந்த வானரர்கள் ஸுக்ரீவன் ராஜ்யம் பெற்றுனகையால் ஸந்தோஷமுற் றிருக்கின் றனர்.) மழைக்கு முன்னமே ஸந்தோஷமுற்றிருந்த மத் தகஜங்கள் தாமரைமலர்களின் மணத்தை மோந்து மேன்மேலும் ஸந்தோஷமுற்றவையாகி அடவியில் பாயும் மலையருவிகளில், ஜலம் மேலிருந்து கீழ்விழுகை யாலுண்டாகுஞ் சப்தத்தைக் கேட்டு மருண்டு மயில்க ளோடுகூடக் கூச்சலிடுகின்றன. வண்டுகள் கடம்பப்பூக் களில் மிகுந்திருக்கும் தேனைப் பருகி உடனே மதம் உண்டாகப் பெற்று, அவை மழைஜலங்கள் பட்டு நனைந்

திருக்கையால் அந்தப் புஷ்பங்களை விட்டு அதன் கிளைகளில் தொங்கியிருந்து அந்த மதத்தை மெல்லமெல்ல விடுகின்றன. நெருப்பில் பற்றிக் கருகிப் பொடியாயிருக்கும் உமிக்குவியல்போல் கறுத்து மிகவும் ரஸம் நிரம்பிய பழங்களால் நிறைந்திருக்கும் நாவற்கிளைகள் வண்டுகளால் சூழப்பட்டவைபோல் ப்ரகாசிக்கின்றன. மேகங்கள்மின்னல்களால் அலங்கரிக்கப்பட்டு மிகவும் கம்பீரமான பெருந்த்வனியுடன் கர்ஜிப்பதனால் டக்கயங்களோடுகூடி மிகவும் பெருங்கர்ஜனை செய்கின்றவைகளும் யுத்தத்தில் முயன்றவைகளுமாகிய மத்தகஜம்போல் ப்ரகாசிக்கின்றன. மலையைச் சார்ந்த அடவிக்குப்போவதாகப் புறப்பட்டு வழியைப்பற்றி நடந்து செல்கின்ற மத்தகஜம் மேகத்தின் கர்ஜனையைக்கேட்டு மற்றொரு யானையின் த்வனியாக ப்ரமித்து யுத்தஞ் செய்ய விரும்பிப் பின்னே திரும்பியது. வனப்ரதேசங்கள் ஓரிடத்தில் வண்டுக் கூட்டங்களால் சிறந்த ஸங்கித முடையனபோலவும், ஓரிடத்தில் மயில்களால் மனோஹரமாக நர்த்தனஞ் செய்வன போலவும், ஓரிடத்தில் மேலான யானைகளால் மதம் பெருகப் பெற்று மதித்தவை போலவுந்தோற்றி இங்ஙனம் பல விஷயங்களுக்கிடமாகி விளங்குகின்றன. வனபூமி, கடம்பப்பூக்களும், மராமரப் பூக்களும், மருதம்பூக்களும். வாழைப் பூக்களும் நிறைந்து சிவந்த புதிய ஜலமுடையனவாகி மதித்த மயில்களின் கேகா சப்தங்களாலும், நர்த்தனங்களாலும் அழகாயிருக்கையால், அலங்காரத்தின் பொருட்டுப் புஷ்பங்கள் இறைக்கப் பெற்றுப் பானபாத்ரத்தின் பொருட்டான வாழைப் பூக்களின் மேலிதழ்கள் நிரம்பியதும் மதம்பிடித்து இறைச்சலிட்டுக் கொண்டு நர்த்தனஞ் செய்யும் புருஷர்களோடு கூடியதும் மத்யம்நிறைந்ததுமாகிய பானபூமிபோல்(கள்கடைபோல்)இருக்கின்றது. விசித்ர வர்ணங்கள் பொருந்தின

இறகுகளுடைய சாதகபக்ஷிகள், இதுவரையில் தாஹ முற்றிருந்து, இப்பொழுது, வர்ஷாதிதேவதையாகிய தேவேந்த்ரன் கொடுக்கையில் ஆகாயத்தினின்று விழுந்து இலைகளின் இடையில் பற்றி மிகவும் நிர்மல மாகி முத்துப்போல் விளங்கும் ஜலத்தை ஸந்தோஷத் துடன் தாஹந்தீரப் பருகுகின்றன. வண்டுகளின் ஜங்காரமே தந்த்ரிகளின் த்வனியாகவும், தவளைகளின் த்வனியே கண்டதாளமாகவும் மேககர்ஜனங்களே ம்ருதங்க வாத்யத்வனியாகவும் பெற்று விளங்குகின்ற அரண்யங்களின் ஸங்கிதம் நடக்கிறதுப்போலிருக்கின்றது. தொங்குகின்ற தோகைகளால் ஆபரணம் அணிந்தாற்போல் விளங்குகின்ற மயில்கள் ஓரிடத்தில் சில நர்த்தனஞ் செய்துகொண்டும், ஓரிடத்தில் சில கேகா சப்தங்களைச் செய்துகொண்டும், மற்றுஞ் சில மற்றோரிடத்தில் வ்ருக்ஷங்களின் நுனிகளில் சரீரத்தை இட்டு ஒன்றுஞ் செய்யாமல் மத்யஸ்தமாக வெறுமனேயும் இருப்பதைக்கண்டால், சிலர் நர்த்தனஞ் செய்பவரும் சிலர் பாடுவோர்களும் சிலர் கேட்போர்களுமாகப் புலப்படுகையால் அடவிகளில் ஸங்கீதஸபை நடப்பதுபோ லிருக்கின்றது. பலவகைப்பட்ட உருவங்களும் வர்ணங்களும் த்வனிகளுமுடைய தவளைகள், மேகங்களின் கர்ஜனங்களைக் கேட்டு, வெகுகாலம் ஸமஸ்த வ்யாபாரங்களையும் அடக்கிக்கொண்டிருந்த நித்ரையைத் துறந்து விழித்துக் கொண்டு புதிய மழையின் தாரைகளால் அடிக்கப்பட்டு இரைச்சலிடுகின்றன. மன்மதவிகாரம் மிகுந்திருக்கப் பெற்ற யுவதிகள் யௌவன மதத்தினால் பெரியோர்களையும் பரிஜனங்களையும் பொருள் செய்யாமல் கர்வமுற்றுத் தமது உயர்வுற்ற கொங்கைகள் மேன்மேலும் உயர்ந்து விளங்கப் பெற்றுப் புதிய மணப்பெண்களுக்

குரியதாகிய லஜ்ஜையையுங்கூடக் கடந்து நல்ல பழம் முதலிய உபஹாரங்களையும் சந்தன கற்பூர குஸும தாம்பூலம் முதலிய போக த்ரவ்யங்களையும் கொண்டு தமது காதலரிடம் போவதுபோல் நதிகளும் ஜலப்ரவாஹம் மிகவும் நிரம்பிவருகையில் அதனால் மேற்கிளம்பின சக்ரவாகங்களோடுகூடி, வெள்ளத்தின் வேகத்தினால் உடைந்த கரைகளைக் கடந்து மிக்க உத்ஸாஹமுற்று வெள்ளத்தில் அடித்துக் கொண்டுவரும் பழம் முதலிய உபஹாரங்களும் புஷ்பம் முதலிய போக த்ரவ்யங்களும் விளங்கப் பெற்றுத் தமது பர்த்தாவாகிய ஸமுத்ரத்தைக் கிட்டுகின்றன. காட்டுத்தீயால் கொளுத்தப்பட்டுக் கறுத்திருக்கின்ற பர்வதங்களின் அடிபாகத்தில் ஒன்றோடொன்று கலந்து காட்டுத்தீயால் கொளுத்தப்பட்டுக் கறுத்த வேறு சில பர்வதங்கள் விளங்குவது போல், கறுத்த மேகங்களில் படிந்து புதிய ஜலம் நிரம்பின கறுத்த மேகங்கள் ப்ரகாசிக்கின்றன. மயில்கள் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து கே கா என்று உரக்கக் குலாவப்பெற்றவைகளும் பட்டுப் பூச்சிகள் உலாவப் பெற்றவைகளும் கடம்பப் பூக்களின் வாஸனையும் மருதம் பூக்களின் மணமும் அமைந்து ரமணீயங்களுமாயிருக்கின்ற வனாந்தரங்களில் யானைகள் ஸஞ்சரிக்கின்றன. தாமரைகளில் புதிய ஜலதாரைகள் விழுதலால் தாதுக்கள் உதிர்ந்திருக்கையில் வண்டுகள் அவைகளை வேகமாகத் துறந்து வர்ஷாகாலத்தில் கடம்பப்பூக்கள் புதிதாகப் புஷ்பித்துத் தாதுக்களோடு விளக்கமுற்றிருக்கையால் ஸந்தோஷத்துடன் அவைகளை அடைகின்றன. யானைகள் மதங்கொண்டன. எருதுகள் ஸந்தோஷமுற்று விளையாடுகின்றன. அரண்யங்களில் ஸிம்ஹங்கள் மிகவும் இளைப்புற்று விளங்காதிருக்கின்றன. சிறந்த பர்வதங்கள் தளிர் புஷ்பம் முதலிய வற்றால் மனோ

ஹாமாயிருக்கின்றன. ராஜாக்கள் யுத்த யாத்ரையைத் தவிர்ந்து அசையாதிருக்கின்றனர். தேவேந்த்ரன் மேகங்களோடு விளையாடுகின்றனன். மேகங்கள் ஆகாயத்திற் சேர்ந்து, ஸமுத்ரகோஷம் தோல்வியடையும்படி மிகக் கம்பீரமான கர்ஜனங்களுடன் பெரிய ஜலப்ரவாஹம் உண்டாகும்படி மழைகளைப்பெய்து, நதிகளும், தடாகங்களும், தாமரை யோடைகளும் நடைவாவிகளும் பூமிமுழுவதும் ஜலம் நிறைந்து கோடிபெருகும்படிக்குச்செய்தன. மழை இடைவீடின்றி மிக்க வேகத்துடன் பெய்கின்றது. காற்று, பெருங் கோஷத்துடன் வீசுகின்றது. நதிகள் ஜலப்ரவாஹம் பூர்ணமாயிருக்கப்பெற்றுக் கரைகளை உடைத்துக்கொண்டு வழிகளைத்தவறிப் பெரிய வேகத்துடன் பாய்கின்றன. மனிதர்கள் நீர் நிறைந்த குடங்களைக் கொண்டு அபிஷேகஞ் செய்கையில் ராஜாக்கள் தமது ராஜ்ய லக்ஷ்மியைக் காண்பிப்பதுபோல் பர்வத ஸ்ரேஷ்டங்கள், தேவேந்த்ரன் தூண்டுகையில் காற்றினால் ஏவுண்டு விளங்கும் மேகங்களென்கிற ஜலகும்பங்களால் அபிஷேகஞ் செய்யப்பட்டுத் தமது நிர்மலமான உருவத்தைக் காட்டுகின்றன. ஆகாயம் மேகங்களால் சூழப்பட்டிருக்கின்றது. ஆகையால் இரவில் நக்ஷத்ரங்களும் பகலில் ஸூர்யனும் புலப்படவில்லை. பூமி முழுவதும் புதிய ஜலப்ரவாஹங்கள் நிறைந்திருக்கின்றன. இருட்டு, பூச்சுப் பூசினாற்போல் மூடிக்கொண்டிருக்கையால் திசைகள் தோற்றாதிருக்கின்றன. மிகவும் பெரியனவாகிய பர்வத சிகரங்கள் வர்ஷதாரைகளால் சுத்தஞ் செய்யப்பட்டு மிகவும் பருத்து அகன்று வெளுத்த மலையருவிகள் கீழ்விழப்பெற்று, முத்துமாலைகள் தொங்கப் பெற்றவைபோல் ப்ரகாசிக்கின்றன. மேலான பர்வதங்களில் பெரிய அருவிகள் அப்பர்வதங்களிலுள்ள பெருங் கற்களில் தடைபட்டுத் தமது

வேகம் குறையப்பெற்று மயில்கள் மதுரமாகக் கூவு கின்ற குஹைகளில் சிதறி விழும்பொழுது முத்துமாலை கள் அறுந்து இறைந்தாற்போல் இருக்கின்றன. பர்வ தங்களில் மிக்க வேகத்துடன் பெருகிவருகின்ற அகன்ற அருவிகள் சிகரங்களின் ஸமீப ப்ரதேசங்களில் பாவி அவைகளைச் சுத்தஞ் செய்துகொண்டு முக்தாஹாரங் கள்போல் புலப்பட்டுக் கீழ்விழுபவையாகி அங்குள்ள பெரிய குஹைகளின் நடுப்ரதேசங்களில் நிலைநின்றிருக் கின்றன. ஆகாயத்தினின்று திசைகளில் சிதறும்படி முழுவதும் விழ்கின்ற ஜலதாரைகள் ஸுரத ஸமயங் களில் வேகத்தினால் அறுந்து சிதறின தேவதா ஸ்த்ரீ களின் ஹாரங்களினின்று நழுவின முத்துக்களோ என் னும்படி விளங்குகின்றன. பக்ஷிகள் கூடுகளில் சேருகை யாலும் தாமரைகள் மூடிக்கொள்கையாலும் ஜாதிப்பூ மலர்தலாலும் ஸூர்யன் அஸ்தமித்தானென்று தெரி கின்றதேயன்றி மேகம் சூழ்ந்திருக்கையால் ஸூர்யன் அஸ்தமிப்பதை நேரே பார்க்க முடியாதிருக்கின்றது. ராஜாக்களின் யுத்தயாத்ரைகள் நின்றிருக்கின்றன. யுத் தத்திற்காகப் புறப்பட்டு முன்னே நடந்த ஸேனையும் திரும்பிவிட்டது. ஜலப்ரவாஹம் தடுக்கையால் யுத்தஞ் செய்ய வழியில்லாமையைப் பற்றி வைரங்கள் சாந்தமா யிருக்கின்றன. முழுவதும் ஜலம் நிறைந்திருக்கையால் இதுவழி என்றும் இது வழி அன்றென்றும் தெரியாமல் எல்லாம் ஸமமாகவே இருக்கின்றன. புரட்டாசிமாதத் தில் வேதமோத விரும்பும் ஸாமவேதிப்ராஹ்மணர் களின் ஹஸ்தநக்ஷத்ரங்கூடிய அத்யயனாரம்ப ஸமயம் இதோ வந்திருக்கின்றது. கோஸல தேசாதிபதியாகிய பரதன், வர்ஷா காலமாகிய நான்கு மாஸங்களி லும் வீட்டிற்கு வேண்டிய ஸாமக்ரிகளும் மற்ற வஸ் துக்களும் ஸம்பாதிப்பது கஷ்டமாகையால் ஆடிமா

தத்துப் பூர்ணிமைக்கு முன்னமே வீட்டிற்கு வேண்டிய ஸாமக்ரிக ளெல்லாவற்றையும் சேர்த்துக்கொள்ள வேண்டிய கார்யங்களை யெல்லாம் தீர்த்து மற்ற வஸ்துக்களையும் தனஸமூஹத்தையும் ஸித்தப்படுத்திக் கொண்டு அந்த ஆடிமாதத்துப் பூர்ணிமையை வ்ரதத்திற்கு அங்கமாகக் கொண்டிருப்பான். 'இது நிச்சயம். நான் எங்கேனும் போய்வரும்பொழுது என்னைப் பார்த்து அயோத்யாபுரத்தில் வஸிக்கும் ஜனங்கள் ஆநந்தத்தினுல் செய்யும் கோலாஹலம்போல், இப்பொழுது மழையினுல் முழுவதும் ஜலம் நிறைந்த ஸரயூநதி ப்ரவாஹத்தின் வேகம் மேன்மேலென வளர்ந்து வரும். இது நிச்சயம். ஸுக்ரீவன் பகைவனை வென்று பார்யையைப் பெற்றுப் பெரிய ராஜ்யத்தைக் கைப்பற்றினுனுகையால் உபயோகத்திற்கு மிகவும் உரியதாகிய இந்த வர்ஷாகாலத்தில் ஸகலஸுகங்களையும் அனுபவிக்கின்றனன். லக்ஷ்மணு! நானே, பார்யையைப் பறிகொடுத்துப் பெரிய ராஜ்யத்தையும் போக்கடித்துக்கொண்டு இன்னம் சத்ருவை ஜயிக்காதிருக்கிறேனுகையால் ஜலத்தில் நனைந்த ஆற்றின் கரைபோல் அலைகின்றனன். என்சோகமோ மிகவும் விஸ்தீர்ணமா யிருக்கின்றது. வர்ஷாகாலம் மிகவும் கடக்க முடியாதிருக்கின்றது. ராவணனே பெரிய பகைவன். இம்மூன்றையும் கடப்பது மிகவும் அஸாத்யமென்று எனக்குத் தோற்றுகின்றது. இந்தக்காலத்தில் ராஜாக்களுக்கு யுத்தயாத்ரை செய்யாமையே உரியது. ஏனென்னில் வழிகள் நடக்க மிகவும் அஸாத்யமாயிருக்கின்றன. இவ்விரண்டையும் பார்த்தே, நான். ஸுக்ரீவன் இப்பொழுதே ராவணனைக் கொன்று ஸீதையைக் கொண்டுவரும் பொருட்டு ப்ரயத்னஞ் செய்யவேண்டுமென்று எவ்வளவு வணங்கி ப்ரார்த்தித்தபோதிலும் கொஞ்சமாயினும் ஸரியன்றென்று ஒன்றுஞ் சொல்லா

மலே இருந்தனன். இவ்வளவேயன்றி ஸுக்ரீவன் இது வரையில் மிகவும் கஷ்டப்பட்டு வெகுகாலத்திற்குப் பின்பு இப்பொழுது பார்யையைப் பெற்றனன். நம் கார்யமோ மிகவும் பெரியது. ஸ்வல்ப ப்ரயத்னத்தினுலாவது ஸ்வல்பகாலத்தினுலாவது ஸாதிக்கக்கூடியதன்று. ஆகையால், 'அவனை முன்னம் நம்கார்யம் செய்வாயாக' என்று மொழிய விரும்பவில்லை. ஸுக்ரீவன் வர்ஷாகால மெல்லாம் இளைப்பாறி, சரத்காலம் வருவதைக் கண்டு தானே நான்செய்த உபகாரத்தைத் தெரிந்துகொண்டு நன்றியுடன் நடப்பான். இதற்கு ஸந்தேஹம் இல்லை. சுபலக்ஷண முடையவனே! அந்தக் காரணத்தைப் பற்றி நான் சரத்காலம் வருவதை எதிர்பார்த்துக் கொண்டு, நதிகளும் தெளிந்து ஸுக்ரீவனும் அருள்புரியும் வரையில் காத்திருக்கின்றனன். வீரனுயிருக்கும் புருஷன் தனக்கு உபகாரஞ் செய்தவர்க்கு ப்ரத்யுபகாரஞ் செய்யாமல் தவறமாட்டான். அங்ஙனம் தனக்கு நடத்தின உபகாரத்தை மறந்து ப்ரத்யுபகாரஞ் செய்யானுயின் ஸாத்விகராகிய ஸத்புருஷர்கள் மனம் நோகப் பெறுவார்கள். ஆகையால் நம்மைப்பற்றிச் செய்யாமற் போயினும் ஸத்புருஷர் மனம் நோகுமே யென்ருயினும் நமக்குத் தவருமல் ப்ரத்யுபகாரம் செய்வான்' என்றனன். அனந்தரம் லக்ஷமணன் ராமன் சொன்னது கேட்டு அஞ்சலி செய்து அவனது வார்த்தைகளைக் கௌரவித்து முன்னம் செய்யவேண்டிய கார்யங்களைக் குறித்து ஆலோசித்துச் சுபமாகிய தனது அபிப்ராயத்தைத் தெளிவாயிருக்கும்படி இனிய காட்சியுடைய ராமனைப் பார்த்துச் சொல்லத் தொடங்கி 'நரேந்த்ரனே! வானரேந்த்ரனுகிய ஸுக்ரீவன் சொன்ன ப்ரகாரம் தவருமல் உன் விருப்பத்தை யெல்லாம் சீக்ரமாகவே செய்து

முடிப்பான். ஆகையால் பகைவரை அடக்கி அழிப்ப தற்கு வேண்டிய தைர்யத்தை யேற்றுக்கொண்டு சரத் காலம் வரும்வரையில் இந்த வர்ஷாகாலத்தைக் கொஞ் சம் பொறுத்திருப்பாயாக' என்றனன். இருபத் தெட் டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஹநுமான் ராமகார்யத்தை மறந்த ஸுக்ரீ வனுக்குத் தெரிவித்தலும், ஸுக்ரீவன் நவ னைக்கொண்டு ஸகல ஸைன்யங்களையும் வர வழைக்கும்படி ஆஜ்ஞாபித்தலும்.

ஆகாயம் மேகங்களும் மின்னல்களும் தொலையப் பெற்று நிர்மலமாகி ஸாரஸபக்ஷிகள் த்வனி செய்யவும் நிலவு பூச்சுப் பூசினாற்போல் அழகாயிருக்கவும் பெற்று மிகவும் ப்ரகாசித்தது. ஸுக்ரீவன் தன் சத்ருவாகிய வாலியைக் கொல்லுங் கார்யத்தை முடித்துக்கொண்டு ராஜ்யஸித்தியைப்பெற்று ரத்னவஸ்த்ராபரணாதிகளான ஸமஸ்த போகவஸ்துக்களும் ஸம்ருத்தமா யிருக்க வும் பெற்று, ராஜ்யம் பெற்றபின்பு இங்ஙனமிங்ஙனம் செய்ய வேண்டுமென்று தான் ஸங்கல்பித்துக் கொண் டிருந்த மனோரதங்க ளெல்லாவற்றையும் தன் ப்ராண நாயகியாகிய ருமையையும் தான் மனத்தில் மிகவும் ஆசைப்பட்டுக் கொண்டிருந்த தாரையையும் பெற்றுக் காமுகர் வழியில் இழிந்து எல்லாவற்றையும்விட்டுக்காம புருஷார்த்தத்திலேயே மனத்தை மிகவும் நிலைநிறுத் திக்கொண்டு, தர்மத்தையாவது அர்த்தத்தையாவது ஸம்பாதிப்பதில் விருப்பம் உண்டாகப் பெறாமல் மனத் தெளிவின்றி எப்பொழுதும் ஸ்த்ரீகளிடத்தில் கால் தாழப்பெற்றிருந்தனன். இங்ஙனம் தனங்களைக் கைப் பற்றிக்கொண்டு மனத்தில் கவலையேதுமில்லாமல் தே வேந்த்ரன் நந்தவனத்தில் அப்ஸரஸ்த்ரீகளின் கூட்டங் களோடு விளையாடுவதுபோல் இரவும் பகலும் ஸ்த்ரீ

லோலனாகி விளையாடிக்கொண்டு ராஜகார்யங்களை மந்த்ரிகள் வசம்செய்து மந்த்ரிகள் செய்ததைச் சிறிதும் விசாரியாமல், தான் ரக்ஷியாதிருக்கிற ராஜ்யம் நன்றாயிருக்குமோ இராதோ என்னும் சங்கையும் உண்டாகப் பெறாதிருந்தனன். ஹநுமான், அங்ஙனம் ஆகாயமெங்கும் மேகங்களின்றி நிர்மலமாயிருப்பதையும் ஆனது பற்றியே ஸேனைகளைக் கூட்டவேண்டுங் காலமென்பதையும் கண்டு, ஸுக்ரீவன் அவ்வண்ணம் காம வ்யாபாரத்தில் மனந்தாழப்பெற்று ஸ்வாமி கார்யத்தை மறந்திருப்பதையுங் கண்டனன். அவன் அந்தந்தக் கார்யங்களின் ஸ்வரூபத்தை நன்றாக அறிந்தவன்; எந்தக் காலத்தில் எந்தத் தர்மத்தைத் தவறாமல் செய்ய வேண்டுமோ அந்த விசேஷங்களையெல்லாம் நன்குணர்ந்தவன்; அவைகளுக்குரிய வ்யவஹாரங்களில் வேண்டிய ஸாமர்த்ய முடையவன்; ஆகையால், அப்பொழுது செய்யவேண்டியது இன்னதென்று நிச்சயித்துக்கொண்டு வாக்யஸ்வரூபமுணர்ந்த வானரர் தலைவனாகிய ஸுக்ரீவனிடஞ் சென்று மதுரங்களும் யுக்தி அமைந்தவைகளும் மனக்களிப்பைக் கொடுப்பவைகளுமாகிய வாக்யங்களால் அவனை மனந்தெளியச் செய்துகொண்டு, அவனுக்குத் தன்னிடத்தில் ஸ்னேஹமும் ப்ரீதியும் உண்டென்கிற நம்பிக்கையால் தன்னை ஆப்தனாக நினைத்துத்தன் வார்த்தையில் நம்பிக்கை வைப்பானென்னும் நிச்சயத்தினால் அவனுக்கு ஸுகத்தை விளைப்பதும் யதார்த்தமும் நீதி அமைந்ததும் நல்வார்த்தை பொருந்தியதும் தர்மார்த்தங்கள் நிறைந்ததும் ந்யாயம் ஸம்ருத்தமாயிருக்கப்பெற்றதுமாகிய வாக்யத்தைச் சொல்லத் தொடங்கி 'ராஜ்யம் பெற்றனை. கீர்த்தியையும் அடைந்தனை. குலக்ரமத்தில் வந்த ராஜ்யஸம்பத்தை எதிரில்

லாமற்செய்து வளர்த்துக்கொண்டனை. இனி நண்பர்களைப்பாராட்டி அவர்களதுகார்யங்களைச்செய்துமுடிப்பது மிகுந்திருக்கின்றது. அதை நீ தப்பாமல் செய்யவேண்டும். எவன் மித்ரர்களைக் கைப்பற்றவேண்டுங் காலத்தைக் குறிப்பறிந்து மித்ரர்களிடத்தில் அவர்க்கு நம்பிக்கை உண்டாகும்படி பரதந்த்ரனுகி எப்பொழுதும் நன்ருக நடந்துகொள்வானே, அவனுடைய ராஜ்யமும் கீர்த்தியும் ப்ரதாபமும் வ்ருத்தியடையும். ராஜனே! எவனுக்குப் பொக்கசமும் ஸைன்யமும் நண்பர்களும் தன் ப்ரபுத்வமும் ஒன்றுக்கொன்று அனுகூலங்களாகி ஒன்றுங் குறையாமல் கூடியிருக்குமோ, அவன் மஹாராஜ்யத்திற்கு அதிபதியாவான். அந்தக் காரணத்தைப் பற்றியும், நீ ஸதாசாரமுடையவனும் ஸன்மார்க்கத்தில் நடப்பவனுமாயிருப்பது பற்றியும் ப்ரதிஜ்ஞை செய்தப்ரகாரம் உனது மித்ரன் கார்யத்தை நடத்துவாயாக. எவன் தனக்குப் போக ஸாதனங்களாகிய கார்யங்களையெல்லாம் விட்டு உத்ஸாஹத்துடன் ஆதரம் விளங்குமாறு மித்ரகார்யங்களையே இடைவிடாமல் செய்துகொண் டிருப்பானே, அப்படிப்பட்டவன் தன் கார்யங்களை உபேக்ஷித்திருப்பினும் அவனுக்குஅனர்த்தங்கள் ஸம்பவியா. எவன் மித்ரகார்யங்களை அதனதனுக்குத் தகுந்த காலங்களிற் செய்யாமல் காலம் கடந்தபின்பு செய்வானே, அவன் எவ்வளவு பெரிய கார்யங்களைச் செய்யினும் மித்ரர்களின் ப்ரயோஜனம் நிறைவேருதாகையால் செய்யாதவனே யாவான். சத்ருக்களை யழிப்பவனே! வீரா! நாம் இப்பொழுது மித்ரனுகிய ராமனது கார்யத்தைச் செய்யவேண்டும். அது ஸீதையைத் தேடவேண்டியதே யாகையால் இப்பொழுது ஸீதையைத் தேடுவிக்கவேண்டும். வீரனே? சத்ருக்களை யழிப்பவனே! அவஶ்யம் செய்யவேண்டிய

தாகிய இந்த மித்ரகார்யம் இப்பொழுது காலங் கடந்த தாயிற்று. ராஜனே! ப்ராஜ்ஞனாகிய ராமன் ப்ரதிஜ்ஞை செய்தகாலம் தெரிந்தவனாயினும் ஸீதையைத் தேடிக் கொண்டு வருவதற்கு மிகவும் த்வரைப்படுமவனாயினும் உன்மனத்தையே அநுஸரித்துப்போவானன்றிக் காலம் கடந்ததென்று உனக்குச் சொல்லமாட்டான். ராமன் கேவலனன்று; பெரிய குலத்திற் பிறந்து அதை வளரச்செய்யுங் குலதீபகன்; நமக்கு எப்போதும் ஆப்தனாயிருப்பவன்; மேலும் அளவிறந்த மஹிமை யுடையவன். நீயும் குணங்களில் நிகரற்றவன். வானரர் தலைவனே! நீ அந்த ராமனது கார்யத்தை இப்பொழுது தவறாமல் செய்யவேண்டும். அவன் முன்னம் உன் கார்யத்தைச் செய்தனன். ஆகையால் வானர வீரர்களைக் குறித்து ஸீதையைத்தேடும்படி ஆஜ்ஞைசெய்வாயாக. 'இப்பொழுதே காலங் கடந்துபோயிற்றே' என்கிறாயோ? ராமன் தூண்டுவதற்கு முன்னமே நாம் கார்யஞ்செய்வோமாயின் காலாதிக்ரமதோஷம் அவ்வளவாக நமக்கு விளையாது. அவன் தூண்டினபின்பு கார்யஞ் செய்தோமாயின் காலங் கடந்தவராவோம். வானரேந்த்ரனே! நீ உனக்கு உபகாரஞ் செய்யாதவனுடைய கார்யத்தையுஞ் செய்பவன். இனி உனக்கு ராஜ்யத்தையும் தனத்தையும் கொடுத்து மஹோபகாரஞ் செய்த ராமனது கார்யத்தைச் செய்வாயென்பது சொல்லவேண்டுமோ? குரங்குகளும் கரடிகளும் திரள்திரளாகப் பணிந்திருக்கப் பெற்று அவர்களுக்குத் தலைவனாயிருப்பவனே! நீ ராம கார்யத்தை நிறைவேற்றுவதற்கு வல்லவனும் பராக்ரம முடையவனுமாயிருந்தும், அவனுக்கு ப்ரீதியை விளைக்கும்பொருட்டு ஸீதையைத் தேடும்படி வானரஸைன்யங்களுக்கு ஆஜ்ஞை செய்யாமல் ஏன் வெறுமனேயிருக்கின்றனை? ராமன் தேவாஸுரர்களையும் மஹோர

ரகர்களையும் பாணங்களால் தனக்கு உட்படும்படி செய்ய வல்லவ னல்லவா? ஆனுல் நீ செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றுவா யென்று எதிர்பார்துக் கொண்டிருக் கிரு னிவ்வளவேயன்றி வேறில்லை. ராமன் தன் ப்ரா ணன்களை விடுவதற்கும் பின்வாங்காமல் சங்கையே யின்றி வாலியை வதித்து உனக்கு ப்ரியஞ் செய்தனன். அப்படிப்பட்ட ராமனது பத்னியாகிய ஸீதையைப் பூமி யிலும் ஆகாயத்திலுங்கூடத் தேடவேண்டும். தேவதை களாயினும் கந்தர்வர்களாயினும் யக்ஷர்களாயினும் ராமனுக்குப் பயத்தை விளைவிக்கவல்லரல்லர். இனி இந்த அற்பராக்ஷஸர்கள் அவனுக்கு எவ்வளவு? வா னரநாதனே! அந்தக் காரணத்தைப் பற்றி அங்ஙனம் அளவிட வொண்ணுத சக்தியுடையோனும் முன்பு உனக்கு ப்ரியஞ் செய்தவனுமாகிய ராமனுக்கு நீ எல் லாவிதத்திலும் ஸந்தோஷம் விளைப்பது யுக்தமா யிருக் கின்றது. கபிராஜனே! நீ ஆஜ்ஞை செய்வாயாயின், எங்களில் எவனுயினும் பாதாளத்திலாவது பூமியிலா வது ஜலத்திலாவது மேல் ஆகாயத்திலாவது எதிரின் றித்திரியவல்லவனே. எப்படிப்பட்டவர்க்கும் எதிரிடக் கூடாதவராகி உனக்கு மிகவும் சொன்னபடி கேட்பவ ராகையால் பாபமற்றவருமான வானரர்கள் கோடிகோ டியாக உன் வசத்தில் இருக்கின்றனர். உனக்காக எவன் என் செய்யவேண்டுமோ, எங்கெந்தக் கார்யத் தில் முயற்சி செய்யவேண்டுமோ, அதை ஆஜ்ஞை செய் வாயாக' என்றனன். அங்ஙனம் ஹனுமான் காலத்தை யறிந்து நன்ருகச் சொன்ன ஹிதவசனத்தைக் கேட்டு பலம் மிகுந்திருக்கப் பெற்ற ஸுக்ரீவன் மித்ரகார்யம் செய்யவேண்டு மென்னுஞ் சிறந்த நினைவுடையவனு யினன். அவன், தன் மனத்திற்கு மிகவும் ப்ரியமாயி ருப்பவனும் எப்பொழுதும் தன்ஸேனை முதலியவற்றின்

விஷயமாகவேண்டிய ப்ரயத்னங்களைச் செய்துகொண்டிருப்பவனுமாகிய நலனைப்பார்த்து ஸமஸ்த திசைகளினின்றும் ஸைன்யங்க ளெல்லாவற்றையும் வரவழைத்துச் சேர்க்கும்படி ஆஜ்ஞாபிப்பவனாகி 'ஸேனாபதி! உன் கீழிருக்கும் ஸேனாநாயகர்களுக்கு என் ஸேனையெல்லாவற்றையும் யூதபாலர்களான வானர வீரர்களனைவரையும் இவ்விடத்திற்குச் சீக்ரம் வந்து சேரும்படி ஆஜ்ஞையிடுவாயாக. ப்ரயத்னஞ் செய்பவராகிச் சீக்ரமாக நடப்பவர்களும் ஸேனையின் நுனியைப் பாதுகாப்பவர்களுமான வானர வீரர்களும் ஆங்காங்குள்ள ஸேனைகளையும் என் கட்டளையின்படி சீக்ரத்தில் வரவழைப்பார்களாக. ஸமீபப்ரதேசங்களிலுள்ள ஸேனையை நீயே பார்த்து வரவழைப்பாயாக. எந்த வானரன் இது முதலாகப் பதினைந்து ராத்ரிகளுக்குள் இவ்விடம் வந்து சேராதிருப்பானோ, அவனுக்கு மாணாந்தமான தண்டனை விதிக்கப்படும். இதற்கு ஸந்தேஹம் இல்லை. என் கட்டளைக்கு மாறுபாடில்லை. ஆகையால் நீ அந்த ஆஜ்ஞையை நிறைவேற்ற முயன்று அங்கதனோடுகூட மற்ற வானரர்களுக்கும் வயது சென்றவனாகிய ஜாம்பவான் முதலியவர்க்கும் அவரவரிடஞ் சென்று நான் ஆஜ்ஞாபித்த ப்ரகாரந் தெரிவிப்பாயாக' என்று இங்ஙனம் வீர்யம் மிகுந்திருக்கப் பெற்றவனாகிய ஸுக்ரீவன் வ்யவஸ்தை ஏற்படுத்தி மீளவும் அந்தப்புரத்திற்குப் போயினன். இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## சரத்ருது வருவதும், ஸுக்ரீவன் ப்ரயத்னஞ் செய்யாமைக்கு ராமன் கோபித்தலும்.

ஸுக்ரீவன் கிஷ்கிந்தையுள் ப்ரவேசித்தனன். ராமன் வர்ஷகாலம் முழுவதும் மிகவும் மன்மத பாதையால்

பீடிக்கப்பட்டவனுகக் கடத்தி, அனந்தரம் மேகங்களும் மெல்லமெல்லத் தொலைந்து போகையில் நிர்மலமான ஆகாயத்தையும், மேகத்தின் மறைவின்றி ஸ்வச்சமாக விளங்கும் சந்த்ர மண்டலத்தையும், சாத்ருதுவைப் பற்றி நிலவென்னும் பூச்சுப்பூசிக்கொண்டாற்போல் ப்ர காசிக்கின்ற ராத்ரியையும் கண்டு, ஸீதை காணுதிருப் பதையும் ஸுக்ரீவன் மன்மத க்ரீடைகளில் கால் தாழ்ந் திருப்பதையும் ஸங்கேதம் பண்ணிக்கொண்ட காலம் கடந்து போனதையும் நினைத்து முன்பைவிட மிகவும் துக்கமுற்றவனுகி மூர்ச்சையடைந்தனன். புத்திமானு கிய ராமன் பிறகு சில நேரங்கழிந்து ப்ரஜ்ஞை தெளி யப்பெற்று ஸீதை மனத்திலேயே இருப்பினும் அப் பொழுது அவளைக்குறித்து இவ்வண்ணம் சிந்திக்கத் தொடங்கினன். ராமன் பொன்மயமான கைரிகதாதுக் களால் விளங்குகின்ற பர்வத சிகரத்தில் உட்கார்ந்து, சரத்காலத்தில் நிர்மலமாயிருக்கின்ற ஆகாயத்தைக் கண்டு மனத்தில் ப்ராணநாயகியை நினைத்துக் கொண்டனன். ஆகாயம் மேகங்களும் மின்னல்களும் தொலையப்பெற்று நிர்மலமாகி ஸாரஸப்பறவைகளின் சப்தங்களால் மிகவும் அழகாயிருக்கக்கண்ட ராமன் மனவருத்தம் மேலெழுந்த உரைகளுடன் புலம்பத் தொடங்கி முன்னம் ஆச்ரமத்தில்ஸாரஸப்பறவைபோல் இனிய ஸ்வரமுடையவளாயிருக்கும் என்ப்ராணநாயகி மனோஹரமான ஸாரஸப் பறவைகளின் த்வனிகளைக் கேட்டு மனக்களிப்புற்றிருந்து, இப்பொழுது ராக்ஷஸர் களின் கொடிய சப்தங்களில் அகப்பட்டு எங்ஙனம் க்ரீ டித்திருப்பாள்? என்னன்பு நாயகி அந்த இளம்பருவ முடையவள், பொன் புஷ்பங்கள்போல் புஷ்பித்திருக் கும் நிர்மலமான வேங்கையின் புஷ்பங்களைப் பார்த்து மன்மத விகாரங்கொண்டு என்னை நாற்புறமும் பார்த் தும் காணுமல் எங்ஙனம் மனக்களிப்புறுவாள்? எந்த

அவயவத்திலும் தோஷஞ் சிறிதுமில்லாத அந்த ஸுந்தரி அந்த இன்மொழியாள் முன்பு கலஹம்ஸங்களின் ஸ்வரத்தைக் கேட்டுக் கண்விழித்துக்கொள்வாளே! அவள் இப்பொழுது எப்படிவிழித்துக்கொள்கிருளோ? தன்னருகில்கூடத் திரிகின்ற சக்ரவாகப் பறவைகளின் கலகல சப்தத்தைக் கேட்டு அதனுல் மனவிகாரமுற்றுப் பொறுக்கமுடியாமல் வெண்தாமரைபோன்ற தன் விசால நேத்ரங்களை விழித்து விலாஸத்துடன் நான் வரும் வழிகளையெல்லாம் பார்த்துக்கொண்டிருப்பாளே! அவள் இப்பொழுது எங்ஙனம் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருப்பாள்? இப்பொழுது இளமான் கண்போன்ற கண்களையுடைய அந்த ஸீதையில்லாமையால் தாமரையோடைகளிலும் நதிகளிலும் நடைவாவிகளிலும் பெருங்கானகங்களிலும் சிறிய வனங்களிலும் திரிந்துகொண்டிருப்பினும் எனக்கு மனக்களிப்புண்டாகவில்லை. சரத்ருதுவில் காமவிகாரத்தை வளரச்செய்கின்ற உபகரணங்களால் காமுகர்களுக்கு மனமயக்கத்தை விளைக்கும் கருவிகளெல்லாம் பரிபூர்ணமாயிருக்கப்பெற்ற மன்மதன், ஸீதை என்னைப் பிரிந்திருக்கிருளென்றும் மிகவும் மெல்லியற்கையுடையவளென்றும் தயை செய்து அம்மடந்தையர் மணியை வெகுதூரம் பாணங்கள் புகுமளவும் நாட்டிப் பாதியாதிருப்பானே? ஏது? பாதித்தே தீருவான்' என்று புலம்பினன். சாதகபக்ஷி ஜலத்திற்காகத் தேவேந்த்ரனைக் குறித்துப் புலம்புவதுபோல், புருஷதிலகனுகிய அந்த ராஜகுமாரன் இங்ஙனம் பலவாருக ஸீதையைக் குறித்துப் புலம்பினன். அனந்தரம் கைங்கர்ய லக்ஷ்மீ விலாஸம் பொருந்திய லக்ஷ்மணன் பழங்களைக்கொண்டு வரும்பொருட்டு ரமணீயங்களான மலைச்சாரல்களில் சென்று குறுக்கு வழிகளில் ஸந்து பொந்துகளெல்லாந்

திரிந்து திரிந்து திரும்பி வந்து தன் அண்ணனாகிய ராமனைக் கண்டனன். லக்ஷ்மணன் நன்மனமுடையவனாகையால் அங்ஙனம் ஜனஸஞ்சார மில்லாத வனப்ரதேசத்தில் தனியனாகிப் பொறுக்க முடியாத சிந்தை மேலெழப்பெற்று மெய்ம்மறந்திருக்கின்ற ராமனைப்பார்த்து அண்ணனது வருத்தத்திற்குத் தானும் பரிதபித்தவனாகித் தைர்யத்துடன் அந்த ராமனை நோக்கிப் 'பெரியோனே! மனதைக் காமவிகாரத்திற்குட்படுத்துவதனால் என்ன ப்ரயோஜனம்? பௌருஷத்தை இழந்து வருந்துவதால் என்ன உபயோகம்? மனோதைர்யத்தை இங்ஙனம் அடிக்கடி அழித்துக் கொள்கின்றனையே! உத்ஸாஹத்துடனிருக்கவேண்டுங் காலத்தில் உத்ஸாஹத்தை இழந்திருப்பதனால் என்ன பயன் விளையும்? மனவூக்கத்துடன் உத்ஸாஹத்தை யேற்றுக்கொண்டு நடத்தவேண்டிய கார்யத்தை ஆராய்ந்து நிச்சயிக்கவேண்டுங் காலத்தில் இங்ஙனம் காமவிகாரத்திற்காளாவதும் தன் பௌருஷத்தை இழந்து வருந்துவதும் யுக்தமன்று. கம்பீரமான ப்ரதாபமுடையவனே! கார்யத்தில் முயற்சியையும் கலக்கமில்லாத மனத்தையும் தைர்யமும் உபாயமும் அமைந்த காலத்தையும் ஸஹாயஞ்செய்யும் ஸுக்ரீவாதிகளின் ஸாமர்த்யத்தையும் தேவதோபஸனம் முதலிய தன்வ்யாபாரத்தையும் கார்யஸித்திக்கு ஸாதனமாகக்கொண்டு கார்யத்தை ஈடேற்றிக் கொள்வாயாக. வீரனே! மனுவின் வம்சத்திற்கு நாதனே! ராமா! உன்னை நாதனாகப் பெற்ற ஸீதை மற்றொருவனால் எவ்விதத்திலும் பெறக்கூடியவளல்லள். சிறந்த வீரர்களால் பூஜிக்கத் தகுந்தவனே! எவனாயினும் அக்னிஜ்வாலையைக் கையால் பிடித்துக் கொளுத்தப்படாமற் போவானோ!' என்றனன். அங்ஙனம், ப்ரதியுரைக்கமுடியாததும் இயற்கையாகவே ஸித்

தமாயிருப்பதும் வருங்காலத்திலும் நிகழ்காலத்திலும் ஸுகத்தை விளைப்பதும் ராஜநீதி அமைந்ததும் நல் வார்த்தை பொருந்தியதும் தர்மார்த்தங்கள் நிறைந் ததுமாகிய வார்த்தையைச் சொல்லின சுபலக்ஷணங்க ளுடையவனுகிய லக்ஷ்மணனைப் பார்த்து ராமன் 'குமா ரா! நீ சொன்னபடி உத்தேசித்த கார்யத்தை, அதற் குத் தகுந்த தைர்யத்தை யேற்றுக்கொண்டு ஸந்தேஹ மில்லாமல் நடத்தப் பார்க்கவேண்டியதே. அதற்கு மே லும் வேண்டிய உத்ஸாஹம் முதலிய க்ரியாவிஶேஷங் களை அவலம்பிக்க வேண்டுவது அவஶ்யமே. இப்பொ ழுது நாம் முயன்றிருக்கிற துர்க்கடமான (முடிக்கநே ராத) கார்யம் ஸீதாப்ராப்தியை விளைவித்துப் பலிக்கு மா என்று ஆலோசிப்பதும் அவஶ்யமே' என்றனன். ராமன் மீளவும் தாமரையிதழ்போன்ற அகன்ற கண் களையுடைய ஸீதையை நினைத்துக்கொண்டு துக்காவே சத்தினுல் முகம்வாடி வதங்கப்பெற்று லக்ஷ்மணனைப் பார்த்து, தேவேந்த்ரன் பூமிக்கு வேண்டிய மழையைப் பெய்து தணியச்செய்து பயிர்களையும் பலிக்கப்பண்ணித் தான் செய்யவேண்டுங் கார்யங்கள் முடியப்பெற்று நிஶ்சிந்தனு யிருக்கின்றனன். ராஜகுமாரனே! மேகங் கள் செவிக்கினியதும் கம்பீரமுமாகிய த்வனியைச்செய் துகொண்டு பர்வதங்களிலுள்ள வ்ருக்ஷங்களின்மேல் ஸஞ்சரிப்பவையாகி ஜலங்களை வர்ஷித்து இளைப்புற்ற வைபோல் வெறுமனே இருக்கின்றன. கருநெய்தல் களின் இதழ்போல் கறுத்த மேகங்கள் பத்துத்திசை களையும் கறுப்பாகச்செய்து முழுவதும் வ்யாபித்து இப் பொழுது மதம்வாங்கின யானைகள்போல் சாந்தமா யிருக்கின்றன. நல்லியற்கை யுடையவனே! மழையைப் பெய்விக்கும் காற்றுகள் மிகவும் குளிர்ந்தவையாகிக் குட

மல்லிகளுடையவும் மருதம் பூக்களுடையவும் வாஸனை களால் மனோஹரங்களாகி மிக்க வேகத்துடன் வீசி இப்பொழுது நின்றிருக்கின்றன. தோஷமற்றவனே! லக்ஷ்மணா! மேகங்களின் கர்ஜனைகளும் யானைகளின் கிங்காரங்களும் மயில்களின் கேகா என்னும் சப்தங் களும் மலையருவிகள் விழுதலாலுண்டாகும் கோஷங் களும் இப்பொழுது திடீலென்று நின்றுவிட்டன. பர்வ தங்கள், பெரிய மேகங்கள் நாற்புறமும் பெய்த மழை ஜலங்களால் நன்றாக அலம்பப்பட்டு நிர்மலங்களாகி நானாவர்ணங்களையுடைய தாழ்வரைகளுடையனவாகிக் கைரிகதாதுக்களாலுண்டான நானாவித காந்திகள் அமைந்து குங்குமம் முதலிய பலவகைப்பட்ட வாஸனாத் ரவ்யங்களைப் பூசிக்கொண்டாற்போல் ப்ரகாசிக்கின்றன. புதிய புணர்ச்சிகாலங்களில் யுவதிகள் வெட்கத்தினால் மெல்லமெல்ல இடையின் முன்புறங்களை வெளியிடுவது போல், சரத்ருதுவில் நதிகள் மெல்லமெல்ல மணற் குன்றுகளை வெளியிடுகின்றன. சரத்ருது தன் ஸம்ருத்தி யை ஏழிலைப்பாலை மரங்களின் கிளைகளிலும் ஸூர்யன் சந்த்ரன் நக்ஷத்ரங்கள் ஆகிய இவற்றின் காந்திகளிலும் மேலான யானைகளின் விலாஸங்களிலும் இங்ஙனம் மூன்று இடங்களில் பங்கிட்டுப்பார்த்திருக்கின்றது. ஸூர் யனுடைய முதல் கிரணங்கள்பட்டு மலர்ந்திருக்குந் தாம ரையோடைகளில் சரத்கால குணத்தினால் மேன்மையுற் றிருக்கின்ற லக்ஷ்மி கறுத்தும் சிவந்தும் வெளுத்தும் பலவர்ணங்கள் பொருந்தின தாமரைப்பூக்கள் நிறைந் திருக்கையால் சித்ரவிசித்ரமான காந்திகள் விளங்கப் பெற்று மேன்மேலும் ப்ரகாசிக்கின்றது. அரண்யங் களில் காற்று, ஏழிலைப்பாலைப் பூக்களின் வாஸனை அமையப்பெற்று, அந்த வாஸனைக்கு வண்டினங்கள் ஜம்மென்று கானஞ் செய்துகொண்டு பின்றொடர்ந்து

வரப்பெற்று இடைவிடின்றி வீசிக்கொண்டிருக்கையால் மதித்த யானைகளுக்கு மேன்மேலும் மதம் வளர்ந்து வருகின்றது. மிதுனங்களா யிருக்கையால் ஒன்றுக் கொன்று எதிர்முகமாகக்கூடி மனிக்களிப்புற்று அகன்றழகிய இறகுகளை விரித்துக்கொண்டுதாமரைத்தாதுக் களின்தூள் மேனிமுழுவதும் படியப்பெற்று விளங்கும் ஹம்ஸங்களும் சக்ரவாகங்களும் தாமரையோடைகளில் மிகவும் விருப்பமுடையவை யாகையால்பெரியநதிகளின் மணற்குன்றுகளில் விளையாடுகின்றன. மிகுந்தமதமுள்ள யானைகளிடத்திலும் கர்வமுற்றிருக்கின்ற எருதுக்கூட்டங்களிலும் தெளிந்த ஜலமுடைய நதிகளிலும் சரத்காலசோபை அனேகவிதமாகப் பிரிக்கப்பட்டு விளங்குகின்றது. ஆகாயத்தில் மேகங்கள் தொலைந்துபோனதைக் கண்டு அரண்யங்களில் மயில்கள் தமக்கு அலங்காரமானதோகைகளைத் துறந்து ப்ரீதிக்கிடமான பேடைகளிடத்தில் ஆஸக்தியில்லாமல் காந்தி குன்றப்பெற்று மனக்களிப்பையும் இழந்து கேகா சப்தங்களையும் மறந்து சிந்தையுற்றவையாகி என்னவோ த்யானஞ்செய்வனபோலிருக்கின்றன. வேங்கைமரங்கள், மனத்திற்கினிய வாஸனைகளை வீசிக்கொண்டு மிகுதியும் உயர்ந்து புஷ்பங்களின் மிகுந்தபாரங்களால் கிளைகளின் நுனிகள் வணங்கப்பெற்றுப் பொன்வர்ணமும் பொருந்தி, கண்ணுக்கு மிக இனிமையா யிருக்கையால் தீபங்களிட்டாற்போல் வனாந்தரங்களை விளங்கச் செய்கின்றன. இப்பொழுது மேலானயானைகள் எழிலைப்பாலை மரங்களின் புஷ்பவாஸனையை மோந்து மதம் மேலெழப் பெற்று மதஜலம் பெருகுகின்ற கண்ட ஸ்தலமுடையவையாகி அந்த மதத்தினால் காமவிகாரங்கொண்டு ப்ரீதிக்கிடமான பேடைகளுடன்கூடித் தாமரையோடை

களிலும் அரண்யங்களிலும் விளையாட விருப்பமுற்று நடை மேன்மேலும் மெதுவாகப் பெற்று ஸஞ்சரிக்கின்றன. ஆகாயம் மேகங்களின்றிச் சாணைபிடிக்கப்பட்டு அழுக்கில்லாத ஆயுதம்போல் நிர்மலமாயிருக்கின்றது. நதிஜலங்கள் ப்ரவாஹஞ் சிறுகப்பெற் றிருக்கின்றன. காற்றுக்கள் கருநெய்தல்களில்பட்டு வருகையால் குளிர்ந்து வீசுகின்றன. திசைகள் மேகங்கள் சூழ்ந்திருக்கையற்றிருக்கையால் இருள்மூடப்பெற்றிருத்தல் தவிர்ந்து வெளிச்சமுற்று ப்ரகாசிக்கின்றன. பூமி, வெயில் காய்கையால் சேறெல்லாம் உலர்ந்து கொஞ்சம் கனமாகத் தூள்கிளம்பப் பெற்றிருக்கின்றது. ஒருவர்க்கொருவர் மிகுந்த வைரமும் அஸூயையும் உண்டாகப்பெற்றிருக்கும் ராஜாக்கள் ஒருவர்மேல் ஒருவர் எடுத்துவிட்டுப் போவதற்கு இது தகுந்தகாலமா யிருக்கின்றது. இப்பொழுது எருதுகள் சரத்ருது வந்திருக்கையால் அதன் குணத்தைப்பற்றிச் சரீரபுஷ்டியும் காந்தியும் வளர்ந்துவரப்பெற்று மிகவும் மதங்கொண்டு மேனிமுழுமையும் தூளாக்கிக்கொண்டு ஒன்றோடொன்று போர் புரிய விரும்பிப் பசுமந்தையின் நடுவில் ஸந்தோஷமுற்று எக்காரமிடுகின்றன. அரண்யங்களில் பெண்யானைகள் அனுராகம் தீவ்ரமாக மேலெழப்பெற்றிருக்கையால் தந்தமது கூட்டங்களோடுகூட மன்மத விகாரங்கொண்டு மதித்து மந்தகமனத்துடன் நடந்து செல்கின்ற தம் பர்த்தாவாகிய ஆண்யானைச் சுற்றிக்கொண்டு போகின்றன. முன்னம் தனவான்களாயிருந்து பிறகு காலதோஷத்தினால் தரித்ரர்களாயிருப்பவர் புதிய தனவான்கள் செய்யும் அவமானத்திற்கு ஏதுஞ் செய்யமுடியாமல் தீனர்களாயிருப்பதுபோல், மயில்கள் தமக்கு ஆபரணமான தோகைகளை இழந்து நதிதீரங்களுக்குப் போகை

யில், சரத்காலசோபையால் கர்வித்திருக்கின்ற ஹம்ஸங்கள் அவைகளை மிரட்டுபவைபோல் கூவுவதைக்கேட்டு அம்மயில்கள் மதமின்றி மனக்களிப்பற்றுச் செல்கின்றன. சிறந்த யானைகள் கண்ட ஸ்தலத்தைப் பிளந்து கொண்டு மதஜலம் பெருகப்பெற்றுப் பெருங் கோஷங்களால் கீர்க்காகங்களையும் சக்ரவாகங்களையும் பயமுறுத்தி மலர்ந்த தாமரைகளால் விளங்குகின்ற தாமரையோடைகளைக்கலக்கிக்கலக்கி ஜலம்பருகுகின்றன. சேறில்லாமல் தெளிந்த ஜலமுடையனவைகளும் மணற்குன்றுகளால் அழகாயிருப்பவைகளும் பசுக்கூட்டங்கள் விளங்கப்பெற்றவைகளும் தமது சப்தங்களால் சப்திக்கின்றவைகளுமாகி விளங்கும் நதிகளில் ஹம்ஸங்களும் ஸாரஸப்பறவைகளும் ஸந்தோஷத்துடன் திரிகின்றன. இப்பொழுது நதிப்ரவாஹங்களின் த்வனிகளும் சலசலவென்ற பெரிய மலையருவிகளின் சப்தங்களும் பெருங்காற்றுகள்வீசுங் கோஷங்களும் மயில்களின் கேகாரவங்களும் ஓய்ந்திருக்கின்றன. தவளைகளின் கூச்சல்களும் சீக்ரத்தில் நின்றுவிட்டன. அவைகள் வர்ஷாகாலம் போகையால் உத்ஸாஹங் குறைந்திருக்கப்பெற்றன. மேகங்கள் புலப்பட்டு வர்ஷாகாலம் வருகையில் அக்காலம் முழுவதும் வெளியில்திரிய நேராமல் பிலங்களில் மறைந்திருந்து ஆஹாரமில்லாமையால் பசியினால் பீடிக்கப்பட்டு உடல் மிகவும் இளைக்கப்பெற்றுக் கொடிய விஷங்களையும் பலவித வர்ணங்களையுமுடைய ஸர்ப்பங்கள் இப்பொழுது பிலங்களினின்று புறப்பட்டு நாற்புறமும் திரிகின்றன. ப்ரகாசிக்கின்ற சந்த்ரகிரணங்கள் படுவதால் நிர்மலமாக நக்ஷத்ரங்கள் புலப்படுகையில், ஸந்த்யாராகம் தானே ஆகாயத்தினின்று கழன்றுபோகின்றது. ராத்ரி, உதிக்கின்ற சந்த்ரபிம்பமே முகமாகவும் பளபளவென்று விளங்கும் பரந்த நக்ஷத்ரங்களே கண்களாகவும் பெற்று நில

வாகிற உத்தரீயத்தைப் போர்த்துக்கொண்டு, சந்த்ரபிம்பம்போன்ற முகமும் அழகிய கண்களும் விளங்கப்பெற்று வெளுத்த வஸ்த்ரம் போர்த்துக்கொண்ட மடந்தை போல் விளங்குகின்றது. குவியல்கூடி ரமணீயமாகப் புலப்படும் ஸாரஸப்பறவைகள் நன்கு பக்வமாயிருக்கின்ற சம்பாப்பயிர்களின் கதிர்களை வாயிற் கவ்விக்கொண்டு ஸந்தோஷமுற்றுக் கோக்கப்பட்ட பூமாலை காற்றுவேகத்தினல் உயரக் கிளம்பிப் போவதுபோல், மிக்க வேகத்துடன் ஆகாயத்தில் கிளம்பிச் செல்லுகின்றன. நித்ரைபோகின்ற வெளுத்த ஓர் ஹம்ஸத்தையுடையதும் ஆம்பற்பூக்கள் பலவும் மலர்ந்திருக்கப் பெற்றதுமாகிய ஆழ்ந்த பெரிய மடுவின்ஜலம், ராத்ரியில் மேகங்களில்லாமையால் நிர்மலமான பூர்ணசந்த்ரனேடும் நக்ஷத்ராங்களோடும்கூடி விளங்கும் ஆகாயம்போல் ப்ரகாசிக்கின்றது. ஆங்காங்கு வரிசையாகத் தோற்றும் ஹம்ஸங்களே அரைநூல் மாலையாகவும் மலர்ந்த தாமரைகளும் கருநெய்தல்களும் மாலையாகவும் பெற்று விளங்கும் நடைவாவிகள், பூஷணங்களாலும் பூமாலைகளாலும் அலங்காரஞ் செய்துகொண்ட உத்தம வனிதைகள்போல் மிகுந்த சோபையுடன் ப்ரகாசிக்கின்றன. விடியற்காலத்தில் இடைப்பெண்கள் கடையும் தயிர்ப்பானைகளின் ஓசையும் கன்றுகளை நினைத்துக்கூவும் பசுக்களின் கதறலும் காளையெருதுகள் காமவிகாரங்கொண்டு செய்யும் முக்காரங்களும் ஆகிய பல சப்தங்கள் இடையர்வாசிக்கும் புல்லாங்குழல்களின் இனிய ஓசையுடன் கலந்த வாத்யகோஷத்துடன்கூடிக் காலைவேளையில் வீசுங்காற்றினல் அதிகமாகி முழுவதும் பரந்து ஒன்றோடொன்று கலந்து வளர்ந்துவருகின்றன. நதீதீரங்கள் மந்தமாருதத்தினல் அசைக்கப்பட்டவைகளும் வெளுத்த புஷ்பங்களால்

விளக்கமுற்றவைகளும் அழுக்கெடுக்கப்பட்டு நிர்மலமான வெண்பட்டு வஸ்த்ரம்போல் ப்ரகாசிப்பவைகளுமாகிய புதிய நாணற்புற்களால் சூழப்பட்டு, வெண்பட்டுடுத்த வனிதையின் ஜகனம்போல் சோபையுற்றிருக்கின்றன. அரண்யங்களில் எதிரின்றித் திரிபவைகளும் தேன்களைப் பருகி மதித்துப் பேடைகளுடன்கூடி மனக்களிப்புற்றுத் தாமரைப் பூக்களிலும் வேங்கைப் பூக்களிலும் திரிகையால் அவைகளின் தூள்பட்டுப் பொன்வர்ணம் பொருந்தி விளங்கும் வண்டுகள் காற்றிலுள்ள கமகமவென்ற வாஸனையின் பொருட்டு அதைப்பின்றொடர்ந்து போகின்றன. தெளிந்த ஜலங்களும் மலர்ந்த ஆம்பலும் க்ரௌஞ்சப்பறவைகளின் கலகல சப்தமும் முதிர்ந்த சம்பாப் பயிர் நிலமும் மந்தமாருதமும் நிர்மலமான சந்த்ரமண்டலமும் வர்ஷாகாலம் கடந்து இப்பொழுது சரத்காலம் வந்ததென்று தெரிவிக்கின்றன. இப்பொழுது மீன்கள் அரைநூல்மாலைபோல் விளங்கப்பெற்ற நதிகள் ராத்ரிமுழுவதும் காதலருடன் ஸம்போகித்து இளைப்புற்றிருக்கின்ற காமினிகள் விடியற்காலத்தில் மெல்லமெல்ல நடப்பதுபோல், மெதுவாகப் பாய்கின்றன. சக்ரவாகப் பறவைகளோடுகூடிப் பாசிகள் அமைந்து நாணற்புற்களால் சூழப்பட்டிருக்கின்ற நதிக்கரைகள் கோரோசனைகளாலும் மகரிகாதி பத்ரங்களாலும் அலங்காரஞ் செய்யப்பெற்று வெண்பட்டால் மூடப்பட்டு விளங்கும் மடந்தையர் முகங்கள்போல் ப்ரகாசிக்கின்றன. இப்பொழுது மலர்ந்த கருங்குறிஞ்சிப் புஷ்பங்களாலும் வேங்கைப்புஷ்பங்களாலும் பலவர்ணங்கள் பொருந்தி விசித்ரமாயிருப்பவைகளும் மிகவும் மதங்கொண்ட வண்டுகளின் ஜங்காரங்களால் விளக்கமுற்றவைகளுமாகிய வனங்களில் மன்மதன் வில்லையும் கொடியபாணங்களையும் எடுத்துக்கொண்டு காதலிகளைப் பிரிந்த

காமுகர்களுக்குப் பயம் விளைவிப்பவனுகிப் பெருமிடுக்குடன் விளையாடுகின்றனன். மேகங்கள் நன்கு மழைபெய்தமையால் ஜனங்களை ஸந்தோஷப்படுத்தி நதிகளையும் தடாகங்களையும் நிறைத்துப் பூமியில் பயிர்களைப் பலிக்கச்செய்து ஆகாயத்தை விட்டு மறைந்தன. ஸௌம்யனே! ஏரிகள் தெளிந்த ஜலமுடையனவாகிச் சிறிது பறவைகளின் கலகல சப்தங்களோடுகூடிச் சக்ரவாக ஸமூஹங்கள் நிறையப்பெற்று விளங்குகின்றன. மலைச்சாரல்களில் வேங்கைமரங்களும் ஏழிலைப் பாலைமரங்களும் மலையத்திமரங்களும் உச்சித் திலகமரங்களும் ஞாழல்களும் கருஞ்சிவந்தைகளும் நன்கு புஷ்பித்துப் புலப்படுகின்றன. லக்ஷ்மணு! நதிகளின் மணற் குன்றுகளில் ஹம்ஸங்களும் ஸாரஸங்களும் சக்ரவாகங்களும் க்ரௌஞ்சப்பறவைகளும் விளையாடுகின்றன பார். ராஜகுமாரனே! ஸௌம்யா! ஒருவர்மேல் ஒருவர் வைரமுற்றிருந்து ஒருவரையொருவர் வெல்ல விரும்பும் மன்னவர்கள் யுத்தத்தின்பொருட்டு முயற்சி செய்யும் ஸமயம் வந்தது. ராஜகுமாரா! ராஜாக்கள் யுத்தத்திற்காக முதலில் ப்ரயாணஞ்செய்யும் ஸமயம் இது. ஸுக்ரீவனே அகப்படவில்லை. அங்ஙனம் ப்ரயத்னஞ் செய்வதாகவும் தெரியவில்லை. ஸௌம்யனே! ஸீதையைப் பாராமல் துக்கத்திலாழ்ந்து பரிதபிக்கின்ற எனக்கு வார்ஷிகமாதங்கள் நான்கும் நூறுண்டுகள் கடந்தாற்போல் எப்படியோ கடந்தன. அந்த ஸீதை, பெண் சக்ரவாகம் தன் பர்த்தாவாகிய ஆண் சக்ரவாகத்தை விடமாட்டாமல் பின்றொடர்வதுபோல், தன் பர்த்தாவைப் பின்றொடர்ந்து அரண்யத்திற்கு வந்தனள். அதிலும் உத்யானவனத்திற்குப் போகும் விதமாகவே சிறிதும் மனவருந்தமுறுமல் மிக்க ஸந்தோஷத்துடன் மிகவும் கஷ்டமான இந்தத் தண்டகாரண்யத்திற்கு வந்தனள். லக்ஷ்மணு!

ராஜ்யத்தைப் போக்கடித்துக்கொண்டு ஊரினின்றும் துரத்தப்பட்டு ப்ராணநாயகியைப் பிரிந்து வருத்தமுற்றிருக்கின்ற என்னிடத்தில் ராஜனாகிய ஸுக்ரீவனுக்குத் தயை பிறவாதிருக்கின்றதே. ஸௌம்யா! பரந்தபனே! துர்ப்புத்தியாகிய கபீஸ்வரன் ஸுக்ரீவன் தனக்குள் 'இந்த ராமன் திக்கற்றவன்; ராஜ்யங்கைசோரப்பெற்றவன், வெகுதூரத்தினின்று வீட்டைத் துறந்து வந்திருப்பவன், காமவெறி கொண்டவன், ராவணன், பார்யையை அபஹரித்து அவமானஞ் செய்கையில் தீனனாகி என்னையே சரணம் அடைந்தான்' என்று இந்தக் காரணங்களைப்பற்றி அலக்ஷ்யபுத்தியால் என்னை ஆதரியாமல் அவமானஞ் செய்தனன். ஸுக்ரீவன் சரத்காலம் வந்தவுடனே ஸீதையைத்தேட ஆரம்பிக்க வேண்டுமென்று ஸமயத்தை ஸங்கேதம் பண்ணிக்கொண்டு அங்ஙனம் ப்ரதிஜ்ஞை செய்து, துர்ப்புத்தியாகையால் தன்கார்யம் தீர்ந்தவுடனே 'என்கார்யம் ஆயிற்று, இனி என்' என்று உபேக்ஷை செய்துகொண்டு தன்னை அறியாதிருக்கின்றனன். நீ கிஷ்கிந்தைக்குப்போவாயாக. போய், காமஸுகங்களில் கால்தாழப் பெற்றிருக்கும் மூர்க்கனாகிய அந்த வானரர் தலைவனை ஸுக்ரீவனைப் பார்த்து நான் சொன்னதாக இங்ஙனஞ் சொல்வாயாக. 'எவன் தனக்கு முன்னம் உபகாரஞ் செய்தவர்களும் தன்னைச் சரணம் அடைந்தவர்களும் தன்னால் ஒருகார்யம் நிறைவேற்றிக்கொள்ள விருப்பமுற்றவர்களுமாகிய சிலர்க்கு 'கார்யஞ் செய்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞை செய்து ஆசையை உண்டாக்கிப்பின்பு தவறுகின்றானோ, அவன் உலகமனைத்திலும் புருஷாதமனெனப்படுவான். எவன் நல்லதாயினும் கெட்டதாயினும் தான் சொன்ன வார்த்தையைத் தவறாமல் ஸத்யமாக்குவானோ, அப்படிப்பட்ட வீரன் புரு

ஷோத்தமனெனப்படுவான். எவர்தாம் ஸ்னேஹிதரிட மிருந்து உபகாரம்பெற்றுத் தமது கார்யத்தை முடித்துக்கொண்டு, அந்த ஸ்னேஹிதர்கள் தமது கார்யம் கைகூடப்பெருமல் துக்கித்திருக்கும்பொழுது அவர்க்கு ப்ரத்யுபகாரஞ் செய்யாதிருப்பார்களோ, அப்படிப் பட்டவர்கள் பிழைத்திருக்கும்பொழுது அவர்களை ஸத்புருஷர்கள் எவரும் கண்ணெடுத்துப் பார்க்கவுமாட்டார்களல்லவா? அவர்கள் மரணம் அடைந்த பின்புங் கூட அவரது சரீரங்களை, மாம்ஸந் தின்னும் ஜந்துக்களும் பக்ஷிக்கமாட்டா' என்றுரைப்பாயாக. நான் யுத்தத்தில் ஸ்வர்ணத்தினல் விளங்கும் பிடியுடைய என் பெரிய வில்லை இழுத்து நாணேற்றுகையில், மின்னற் குவியல்போல் தகதகவென்று விளங்குகின்ற அதன் பயங்கரமான உருவத்தை ஸுக்ரீவன் பார்க்க விரும்புகின்றனன். இது நிச்சயம். நான் யுத்தத்தில் கோபித்தவனுசி வில்லை இழுக்கையில் என் கையில் நாண் உறையும் பயங்கரமான சப்தத்தைப் பயங்கரமான வஜ்ராயுதத்தின் கோஷத்தைப்போல் அவன் மீளவும் ஒரு தடவை கேட்க விரும்புகின்றனன். வீரனே! ராஜகுமார! ஸாலவ்ருக்ஷத்தை முறித்ததனுலும் வாலியைக் கொன்றதனுலும் என் பராக்ரமத்தை நன்ருக அறிந்திருந்தும் நீ ஸஹாயமாயிருப்பது தெரிந்தும் இந்த ஸுக்ரீவனுக்கு, இங்ஙனம் காலம் கடந்துபோமாயின் நம்மையும் கொன்றுவிடுவானென்று விசாரமும் உண்டாகாதிருக்கின்றதே. சத்ரு பட்டணங்களை யழிக்குந் திறமையுடையவனே! ஸ்னேஹஞ்செய்தல் வாலியைவதித்தல் என்னும் இந்த ப்ரயத்னம் ஏதுக்காகச் செய்யப்பட்டதோ, அதை இப்பொழுது ஸுக்ரீவன் தன் கார்யம் தீர்ந்தபின்பு தெரிந்துகொள்ளா திருக்கின்றனன். வானரர் தலைவன் ஸுக்ரீவன் வர்ஷாகாலம் போன

வுடனே வருகிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்து இன்னம் காமினிகளோடு விளையாடிக்கொண்டு நான்குமாதங்கள் கடந்த பின்பும் அறியாதிருக்கின்றனன். ஸுக்ரீவன், தானும் தன் மந்த்ரிகளும் பந்துக்களுமாகக்கூடி எப்பொழுதும் விளையாடிக்கொண்டு மத்யபானஞ்செய்துகொண்டு மெய்ம்மறந்திருக்கின்றனன் றித்துக்கத்தினால் தீனர்களாயிருக்கும் நம்மிடத்தில் தயை செய்யாதிருக்கின்றனன். அப்பா! நீ மிகுந்த பலமுடையவன்; ஆகையால் கிஷ்கிந்தைக்குப் போவாயாக. போய், ஸுக்ரீவனுக்கு என் கோபமிருக்கும் விதத்தைத் தெரியச்சொல்வாயாக. மேலும் இந்த வார்த்தையையுங்கூடச் சொல்வாயாக. 'ஸுக்ரீவா! வாலி அடிக்கப்பட்டு எந்தமார்க்கத்தில் போயினனோ, அம்மார்க்கம் இப்பொழுதும் மறைந்து போகவில்லை. அது உனக்கும் இருக்கவே இருக்கின்றது. ஆகையால் செய்த ப்ரதிஜ்ஞையைத் தவறவேண்டாம். தவறிவாலிபோனவழியில் விழவேண்டாம். நான் முன்பு யுத்தத்தில் பாணத்தைநாட்டி வாலியொருவனை மாத்ரமே வதித்தனன். சொன்னவார்த்தை தவறின உன்னையோ பந்துக்களோடு வதித்துவிடுவேன்' என்று கூறுவாயாக. புருஷதிலகனே! கார்ய ஸ்திதி இப்படி இருக்கின்றதாகையால் இப்பொழுது ஏதேது ஹிதமோ அதெல்லாவற்றையுஞ் சொல்வாயாக. காலதாமதஞ் செய்யவேண்டாம். ஆகையால் த்வரைப்படுவாயாக. போய் ஸுக்ரீவனைப் பார்த்து 'வானரேஸ்வரனே! நீ எனக்குச் செய்கிறேனென்று ப்ரதிஜ்ஞைசெய்த கார்யத்தையும் ப்ரதிஜ்ஞையையும் தவறாமல் செய்து முடிப்பது அவஸ்யமான தர்மமென்றுணர்ந்து ஸத்யமாக நிறைவேற்றுவாயாக. அங்ஙனம் செய்ய மாட்டாயாயின், நான் தொடுக்கும் பாணங்களால் ப்ராணன்களைத் துறந்து யமலோகத்தை அடைந்து அங்கு

வாலியை இப்பொழுதே காண்பாய்; அப்படிப்பட்ட கதியை வரவழைத்துக்கொள்ள வேண்டாம் என்பாயாக' என்று மொழிந்தனன். அங்ஙனம் அண்ணனாகிய ராமன் கோபம் தீவ்ரமாக வளர்ந்து வரப்பெற்றுத் தீனனாகிப் புலம்பிக்கொண்டிருப்பதை நன்றாகக்கண்டு கொடிய தேஜஸ்வியும் மனுவம்ச திலகனுமாகிய லக்ஷ்மணன் வானரநாதனாகிய ஸுக்ரீவன்மேல் மிகவும் க்ரூரமான புத்தியை ஏற்றுக்கொண்டனன். முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அங்கதன் ஸுக்ரீவனோடு லக்ஷ்மணன் கோபித்து வருவதைக் கூறுதல்.

ராஜகுமாரனாகிய ராமன் அங்ஙனம் மிகுந்த காமாதிசயத்தினால் பாதிக்கப்பட்டிருக்கையால் தீனனாகித் துக்கத்தி லாழ்ந்திருப்பினும் ஸத்வம் குறையாமல், ஸுக்ரீவன் ப்ரதிஜ்ஞை தவறினதற்குக் கோபம் மேலெழப் பெற்றிருப்பதைக் கண்டு தசரதகுமாரனும் ராமனுக்குப்பின் பிறந்தவனுமாகிய லக்ஷ்மணன் தனது அண்ணனைப் பார்த்து 'நண்பர்களோடொத்த ஸுக துக்கங்களுடையனா யிருக்கையே ஸத்புருஷர்களின் ஆசாரம். அதில் அந்த வானரன் நிற்கமாட்டான். ராமனோடு ஸ்னேஹம் நேர்ந்தமையாலன்றோ வானரராஜ்யத்தையும் பார்யா ஸமாகமத்தையும் மற்றுமுள்ள நன்மைகளையும் பெற்றேனென்னும் நினைவு அவனுக்கு உண்டாகாது. நம் விஷயத்தில் அனுகூலித்து நடக்க வேண்டுமென்று அவனுக்குப் புத்தியில்லை. ஆகையால் இனி வானர ராஜ்ய லக்ஷ்மி அவனுக்கு நிலை நிற்காது. வீரனே! ஸுக்ரீவன் புத்தி மயங்கிக் காம ஸுகங்களில் கால் தாழ்ந்து, நீ ராஜ்யம் ஸம்பாதித்துக் கொடுத்தது முதலிய உபகாரத்திற்கு ப்ரத்யுபகாரஞ் செய்யவேண்டு

மென்னும் எண்ணமும் இல்லாதிருக்கிருனுகையால் இப்பொழுது என்னுல் அடிக்கப்பட்டவனுகித் தனது அண்ணனுகிய வாலியைக் காண்பானுக. இப்படிப்பட்ட துர்க்குணனுக்கு ராஜ்யம் கொடுக்கலாகாது. இப்பொழுது தீவ்ரமாக மேலெழும்புகின்ற என் கோபவேகத்தை எனக்கு அடக்கத்தரமன்று. ஆகையால் ஸத்யந் தவறின அந்த ஸுக்ரீவனை இப்பொழுதே வதித்துவிடுகிறேன். வாலி குமாரனுகிய அங்கதன், வானரவீரர்களோடுகூட ராஜகுமாரத்தியாகிய ஸீதா தேவியைத் தேடிக் கண்டுபிடிப்பானுக' என்றனன். ராமன் சத்ரு வீரர்களைக் கொல்பவனே யன்றி ஆஸ்ரிதர்களை வதிப்பவனல்லன். லக்ஷ்மணன் அங்ஙனம் யுத்தத்தில்கொடிய கோபங்கொண்டவனுகி இங்ஙனம் தான் செய்யப்போகிற ஸங்கதியைச்சொல்லி வில்லைக் கையிலேந்திப் போய்க்கொண்டிருக்கையில் ராமன் கண்டு நன்கு நிரூபிக்கப் பட்டவைகளும் நல்வார்த்தை அமைந்தவைகளுமான உரைகளைச் சொல்லத் தொடங்கி 'உலகத்தில் உன்னைப் போன்றவன் எவனுயினும் இங்ஙனம் மித்ரவதமென்னும் பாபத்தைச் செய்வானே? எவன் தனக்குக் கோபத்தினுல் மித்ரனைக் கொல்லவேண்டும் பாபத்திற்கு முயலும்படி நேரும்பொழுது, அதை விவேகத்தினுல் பரிஹரித்துக்கொள்கிருனே, அப்படிப்பட்ட வீரன் புருஷர்களனைவரிலும் உத்தமனெனப்படுவான். லக்ஷ்மணு! ஸதாசாரம் பொருந்திய நீ இப்படிப்பட்ட மித்ரனைக் கொல்ல நிச்சயிக்கும்படியான கொடூரமாகிய பாபத்திற்கு உட்படலாகாது. பூர்வம் நாம் ஸுக்ரீவனேடு செய்துகொண்ட ஸ்னேஹத்தை அனுஸரித்து முன்னம் நீ அவனிடத்தில் வைத்திருந்த ப்ரீதியையே இப்பொழுதும் வைப்பாயாக. ஸுக்ரீவன் க்ரமமாகக் காலத்

தில் வரவில்லையேயன்றி மற்றேதும் அவ்வளவாக அபராதஞ் செய்தவனல்லன். ஆகையால் அவனோடு பருஷமாகப் பேசுவதைத் தவிர்ந்து நல்ல குளிர்ந்த வார்த்தையைக் கூறுவாயாக' என்றனன். சத்ருவீரர்களையடக்குந் திறமையுடைய அந்தப் புருஷதிலகன் லக்ஷ்மணன், தன் தமையன் தர்மத்தின்படி செய்ய வேண்டிய கார்யம் இன்னதென்று நியமிக்கத் தெரிந்துகொண்டு கிஷ்கிந்தாபுரத்திற்குப் போயினன். அனந்தரம் அழகிய மதியுடையவனும் ப்ராஜ்ஞனும் தனது அண்ணனுக்கு ஹிதஞ்செய்வதில் கண்வைத்தவனும் சத்ருக்களுக்குக் காலன்போன்றவனுமாகிய லக்ஷ்மணன் ஸுக்ரீவனைக்கொல்ல வேண்டுமென்னும் நினைவின் வேகத்தை அடக்கிக்கொண்டு ஸுக்ரீவனுடைய வீட்டிற்குப் போயினன். ப்ரளயகாலத்து யமன்போன்ற அந்த லக்ஷ்மணன், இந்த்ரதனுஸ்ஸுபோல் புலப்படுவதும் பர்வதசிகரம் போன்றதுமாகிய வில்லைக் கையிற் பிடித்துக்கொண்டு தாழ்வரையோடுகூடின மந்தர பர்வதம்போல் ப்ரகாசித்தனன். அங்ஙனம் புத்தியில் ப்ருஹஸ்பதியோடொத்த ராமன் தம்பி லக்ஷ்மணன், ராமன் ஆஜ்ஞாபித்ததைச் சிறிதும் மீறாமல் நடத்துபவனாகித் தான் ஸுக்ரீவனோடு சொல்லவேண்டிய ராமனது வார்த்தையையும் ஸுக்ரீவன் அதற்குப் பதிலுரைப்பதையும் தான் அதற்குப் பதிலான விஷயங்களைச் சொல்லவேண்டிய மறுமொழியையும் ஆலோசித்துக் கொண்டு போயினன். அப்பொழுது லக்ஷ்மணன், ராமனுக்குக் காமக்ரோதங்களால் மேலெழுந்த கோபமென்னும் நெருப்பு தன்னைச் சூழ்ந்திருக்கையில் அக்னியோடுகூடிய வாயுதேவன்போல் கோபித்தவனாகி மிக்கவேகத்துடன் போயினன். அவன் வழியில் குறுக்கேயிருக்கின்ற மராமரங்களையும் பனைமரங்களையும் அச்வகர்ண

வ்ருக்ஷங்களையும் மற்றும் பல மரங்களையும் தன் பாஹு பலத்தினால் விழத் தள்ளிக்கொண்டும் துடைகளின் வேகத்தினால் பர்வதசிகரங்களையும் இதரமான வ்ருக்ஷங்களையும் பறக்கடித்துக்கொண்டும் அடிகளிடும் வேகத்தினால் கற்களைப் பொடிபொடியாகச் செய்துகொண்டும் வேகத்துடன் நடந்த யானைபோல் முன்னடியைத் தூரமாக வைத்துக் கார்யவசத்தினால் மிக்க விரைவாகப் போயினன். அந்த இக்ஷ்வாகு குலஸிம்ஹன் இடைவெளியின்றி நெருக்கமாயிருக்கின்ற பர்வதங்களின் நடுவில் வானரஸேனைகளால் சூழப்பட்டு எப்படிப்பட்டவர்க்கும் புகக்கூடாத வானரேஸ்வரனான ஸுக்ரீவனுடைய ராஜதானியாகிய கிஷ்கிந்தையைக் கண்டனன். லக்ஷ்மணன் ஸுக்ரீவனிடத்திலுள்ள கோபவேகத்தினால் உதடு துடிக்கப்பெற்றுக் கிஷ்கிந்தைக்கு வெளியில் திரிகின்ற பயங்கர உருவமுடைய வானரர்களைக் கண்டனன். பட்டணத்திற்கு வெளியில் திரிபவர்களும் யானைகள்போல் புலப்படுபவர்களுமாகிய அவ்வானரர்கள் புருஷதிலகனாகிய லக்ஷ்மணன் வருவதைக் கண்டு அனைவரும் எவனோ சத்ரு வந்தானென்று பர்வதங்களிடையில் நூறு நூறாகச் சிகரங்களையும் மிகவும் பெரிய வ்ருக்ஷங்களையும் எதிரிட்டுச் சண்டைசெய்யும் பொருட்டுக் கையிற் கொண்டனர். லக்ஷ்மணன் அங்ஙனம் அவர்கள் ஆயுதங்களைக் கையிலேந்துவதைக் கண்டு கோபம் இருமடங்காகப்பெற்று மிகவும் கட்டைகளிடப்பெற்ற அக்னிபோல் ஜ்வலித்தனன். அந்த வானரர்கள், அங்ஙனம் கோபித்து ப்ரளயகாலத்து மிருத்யுவைப்போல் பயங்கரனாகப் புலப்படுகின்ற லக்ஷ்மணனைக் கண்டு பயத்தினால் அவயவங்கள் விலவிலக்கப்பெற்றுக் கிடுகிடுவென்று நடுக்கமுற்றுக் குவியல்குவியலாக நாற்புறமும் பறந்தோடிப்போயினர். அனந்தரம் அந்த வான

ரோத்தமர்கள் ஸுக்ரீவனது க்ருஹத்திற்குப் போய் லக்ஷ்மணன் கோபமுற்றிருப்பதையும் கிஷ்கிந்தைக்கு வருவதையும் அவனுக்குத் தெரிவித்தனர். அப்பொழுது ஸுக்ரீவன் காம மோஹங்கொண்டு ஏகாந்தத்தில் தாரையுடன்கூடிக்ரீடித்துக்கொண்டிருந்தானுகையால் அந்த வானரவீரர்கள் சொன்ன வார்த்தையைச் செவியுற்றிலன். அனந்தரம் அப்பொழுது மக்த்ரிகள் ஸங்கதியைத் தெரிந்துகொண்டு வருவீர்களென்று அனுப்புகையில் மலைபோலும் யானைபோலும் மேகங்கள்போலும் புலப்படுவோர்களும் பார்த்தமாத்ரத்தில் மயிர்க்கூச்சலை விளைப்பவர்களுமாகிய வானரர்கள் பட்டணத்தினின்று புறப்பட்டனர். அவர்கள் அனைவர்க்கும் நகங்களும் தந்தங்களுமே ஆயுதங்கள்; அனைவரும் பயங்கரமான உருவமுடையவர்கள்; எல்லோரும் விகாரமாகப் புலப்படுவார்கள்; எல்லோரும் பெரும் புலிகள்போல் பலத்தினுல் கொழுத்தவர்கள்; எல்லோரும் விகாரமான முகமுடையவர்கள். அவர்களில் சிலர் பத்துயானை பலமுடையவர்களும் சிலர் நூறுயானை பலமுடையவர்களும், சிலர் ஆயிரம்யானை பலமுடையவர்களுமாயிருந்தனர். கோபமுற்றிருக்கும் லக்ஷ்மணன், முழுவதும் மஹா பலிஷ்டர்களும் வ்ருக்ஷங்களைக் கையிலேந்தினவர்களுமாகிய வானரவீரர்கள் நிறைந்திருக்கப்பெற்று எப்படிப்பட்டவர்க்கும் அணுகமுடியாதிருக்கின்ற கிஷ்கிந்தா புரத்தைக் கண்டனன். அனந்தரம் கொடிய பலமுடைய அவ்வானரர்களெல்லோரும் கோட்டைவாசற்படிக்கு வைத்திருக்கும் இரும்புத் தடியின் அடியாகப் புறப்பட்டு வெளியேவந்து லக்ஷ்மணனுக்குத் தோற்றும்படி நின்றனர். புத்தியிற் சிறந்த அவ்வீரனுகிய லக்ஷ்மணன், ஸுக்ரீவன் மனவூக்கமற் றிருப்பதையும் அண்ணனுகிய ராமன் துக்கித்திருப்பதையும் நினைத்து

மீளவும் கோபத்தினுல் மெய்ம்மறந்தவனுயினன். அந்தப் புருஷ லலாமன் கோபத்தினுல் நீண்டு உஷ்ணமாயிருக்கும் பெருமூச்சுக்களை எறிந்துகொண்டு கண்கள் சிவக்கப்பெற்றுப் புகையுடன்கூடின நெருப்புப்போல் ப்ரகாசித்தனன். அவன் பாணங்களின் ஆணிகளே அசையும் நாக்குகளாகவும் வில்லே படமாகவும் தன் தேஜஸ்ஸே விஷப்பெருக்காகவும் விளங்கப்பெற்று ஐந்து தலைகளுடைய ஸர்ப்பம்போல் பயங்கரனுயிருந்தனன். அங்ஙனம் ஜ்வலிக்கின்ற ப்ரளய காலாக்னிபோலும் கோபமுற்ற ஆதிசேஷன்போலும் புலப்படுகின்ற அந்த லக்ஷ்மணனிடத்திற்கு அங்கதன் சென்று பயத்தினுல் மிகவும் வருத்தமுற்றனன். பெரும் புகழோனுகிய அந்த லக்ஷ்மணன் ரோஷத்தினுல் கண்கள் சிவக்கப்பெற்று அங்கதனேடு 'பயலே! ராமன் தம்பி, பகைவரைப் பறந்தோடச் செய்யும் பராக்ரமசாலியாகிய லக்ஷ்மணன், இதோ உன்னிடம் வந்திருக்கின்ருன்' என்று என் வரவை ஸுக்ரீவனுக்குத் தெரிவிப்பாயாக. அண்ணனுக்கு நேரிட்ட வ்யஸனத்தினுல் மிகவும் பரிதபித்து அந்த லக்ஷ்மணன் வாசலில் நின்றுகொண் டிருக்கின்றனன். ஸுக்ரீவா! அவனது வார்த்தையைக் கேட்க உனக்கிஷ்டமுளதாயின், அவனிடம் நீ போவதோ, உன்னிடம் அவனை வரவழைத்துக் கொள்வதோ, எது யுக்தமோ நடத்துவாயாக' என்று இந்த வாக்யத்தைச் சொல்லி, 'அப்பா ! சத்ருக்களை யழிப்பவனே ! சீக்ரம் வருவாயாக' என்றனன். அங்கதன் லக்ஷ்மணனது வார்த்தையைக் கேட்டுச் சோகம் மேலெழப் பெற்றுச் சிற்றப்பனுகிய ஸுக்ரீவனிடஞ் சென்று 'இதோ லக்ஷ்மணன் வந்திருக்கிருன்' என்று மொழிந்தனன். அனந்தரம் பலிஷ்டனுகிய அங்கத குமாரன், லக்ஷ்மணன் வார்த்தையைக் கேட்டு மனந் தத்தளிக்கவும் துக்கத்

திஞல் முகம் விலவிலக்கவும் பெற்றுச் சீக்ரம் ராஜஞ கிய ஸுக்ரீவனது சரணங்களுக்கு நமஸ்காரஞ் செய்தனன், கொடுந் தேஜஸ்வியாகிய அந்த அங்கதன் தந்தையின் பாதங்களைப் பிடித்துக் கொண்டு வணங்கி அனந்தரம் தாயாகிய தாரையின் பாதங்களில் வந்தனஞ் செய்து சிறியதாயாகிய ருமையின் பாதங்களிலும் நமஸ்காரஞ் செய்து அதன் பிறகு லக்ஷ்மணன் சொன்ன ஸமாசாரத்தையெல்லாம் தெரிவித்தனன். அந்த ஸுக்ரீவன் அப்பொழுது நித்ரையின் மயக்கம்வந்து கண்மூடிக்கொள்கையாலும் மத்யபானத்திஞல் விளையும் மதத்திஞல் மெய்ம்மறந்திருக்கையாலும் மன்மதவிகாரத்திஞல் மதிதப்பி யிருக்கையாலும் விழித்துக்கொள்ளவில்லை. அனந்தரம் வானரர்கள் லக்ஷ்மணனைப் பார்த்துப் பயத்திஞல் மனம் தழதழக்கப்பெற்றுக் கோபித்திருக்கின்ற அந்த லக்ஷ்மணனைத் தெளியச் செய்யும்பொருட்டுக் கிலகிலவென்று சப்தஞ் செய்தனர். மஹா ப்ரவாஹம்பொங்கிக் கரைபுரண்டு வருவதுபோல் எதிரின்றி வேகத்துடன் வந்த லக்ஷ்மணனைப் பார்த்து அவ்வானரர்கள் அனைவரும் ஒன்றுகூடி ஓரே தடவையில் வஜ்ராயுதம்போலும் இடிபோலும் பெரும் த்வனி உண்டாகும்படி லக்ஷ்மணனுக்கருகில் ஸிம்ஹநாதஞ் செய்தனர்; அந்தப் பெரும் த்வனிக்கு ஸுக்ரீவன் மதத்திஞல் கண்கள் சிவந்து ஸுகமாகத் திறக்க முடியாமல் திடந்தப்பி யிருக்கவும் பூமாலைகளும் பூஷணங்களும் தாறுமாருகப் புலப்படவும் பெற்றுக் கண்விழித்துக்கொண்டனன். அனந்தரம் சிறந்த மந்த்ராலோசன சக்தியுடையோர்களாகையால் ஸுக்ரீவன் மனத்திற்கு மிக இனியவர்களும் அந்தப்புரத்திற்குள் ப்ரவேசிக்கத் தகுந்தவர்களுமாகிய ப்லக்ஷனென்னும ப்ரபாஸனென்னும் மந்த்ரிகளிருவர் அங்கதன் வசனத்தைக்

கேட்டு அவன் அழைக்கையில் அவனுடன் சென்று 'லக்ஷ்மணன் தர்மார்த்தங்கள் விஷயமாகப் பலவித உரைகளைக்கூற வந்திருக்கிறான்' என்று ஸுக்ரீவனுக்குச் சொல்லினர். அவ்விருவரும் தேவர்களுக்குத் தலைவனாகிய இந்த்ரன்போல் ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்திருக்கின்ற ஸுக்ரீவனைத் திடமான ஸாமவசனங்களால் தெளிவுறச்செய்து அவனைச் சுற்றிச் சூழ்ந்து உட்கார்ந்து 'ராமலக்ஷ்மணர்கள் ஸத்யஸந்தர்; மஹானுபாவர்; அண்ணன் தம்பிகளிருவரும் ராஜ்யபரிபாலனஞ் செய்யத் தகுந்தவர்கள்; உன்னுடன் ஸ்னேஹம் பண்ணிக்கொண்டு உனக்கு ராஜ்யங்கொடுத்தவர்களல்லவா? அவ்விருவர்களில் ஒருவன் லக்ஷ்மணன் வில்லைக் கையிலேந்தி வாசலில் வந்திருக்கின்றனன். அவனைப்பார்த்து வானரர்கள் பயந்து கிடுகிடுவென்று நடுங்கிக் கூச்சலிடுகின்றனர். அந்த ராமன் தம்பியாகிய இந்த லக்ஷ்மணன், இது புகக்கூடாத துர்க்கமாயினும் தான் தனியனேயாயினும் ராமனது ஆஜ்ஞையைப்பற்றி ராமவாக்யமே ஸாரதியாகவும் பகைவரை அடக்கவேண்டுமென்னும் முயற்சியே ரதமாகவும் பெற்று இவ்விடம் வந்திருக்கின்றனன். நிர்த்தோஷனே! தாரையின் அருமைக் குமாரனாகிய அங்கதனையுங்கூடச் சீக்ரம்போவாயாக வென்று லக்ஷ்மணன் உன்னிடம் அனுப்பினன். வானரேந்த்ரனே! மஹாவீர்யசாலியாகிய அந்த லக்ஷ்மணன் கண்களில் தீவ்ரகோபம் தோற்றப் பார்வையால் வானரர்களைக் கொளுத்திவிடுபவன்போல் வாசலில் காத்துக்கொண்டிருக்கின்றனன். ஸுக்ரீவா! நீயும் உன் புதல்வனும் சீக்ரம் லக்ஷ்மணனிடம்போய் அவனைத் தலைசாய்த்துவணங்கி எப்படியாவது அவன் கோபத்தைப் போக்குவாயாக. ராஜனே! தர்மாத்மாவாகிய ராமன் யாதுகூறுவானோ, அந்தக் கார்யத்தை

ஜாக்ரதையுடன் தவருமல் நடத்தவேண்டும். நீ மர்யாதையைவிடாமல் காப்பாற்றிக்கொள்வாயாக. நீ செய்த ப்ரதிஜ்ஞையைத் தவருமல் நிறைவேற்றிக் கொள்வாயாக' என்று மொழிந்தனர். முப்பத்தொன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஹனுமான் ஸுக்ரீவனுக்கு ஹிதோபதேசஞ் செய்தல்.

புத்தியிற் சிறந்த ஸுக்ரீவன், அங்கதன் முதலான மந்த்ரிகள் சொன்ன வார்த்தையைக்கேட்டு, லக்ஷ்மணன் கோபித்து வந்திருக்கிருனென்று தெரிந்து ஸிம்ஹாஸனத்தினின்று இழிந்தனன். ஸுக்ரீவன் கார்யாலோசனைகளில் ஸமர்த்தனுகையால் ஏற்றக்குறைகளை நிச்சயித்து ஆலோசனை செய்யத் தெரிந்தவராகி எப்பொழுதும் ஆலோசனை செய்வதிலே யிருப்பவர்களுமாகிய மந்த்ரிகளைப்பார்த்து 'நான் சிறிதும் பொய்யுரைத்ததில்லை. தப்புக்கார்யமும் செய்ததில்லை. இப்படியிருக்க ராமன் தம்பி லக்ஷ்மணனுக்குக் கோபம் எதனுல் உண்டாயிற்றென்று ஆலோசிக்கின்றனன். எப்பொழுதும் என்னிடத்தில் ரந்த்ரங்களையே தேடுந் துராத்மாக்களாகிய என் சத்ருக்கள் என்மேல் இல்லாத தோஷங்களை லக்ஷ்மணனுக்குச் சொல்லி யிருப்பார்கள். இவ்விஷயத்தை முந்துறமுன்னம் நீங்கள் எல்லோரும் உங்கள் புத்திஸாமர்த்யத்தைக்கொண்டு க்ரமப்படி லக்ஷ்மணனுக்குக் கோபம் உண்டானதற்குக் காரணம் யாதோ, நாம் இப்பொழுது என்செய்யவேண்டுமோ, அதெல்லாவற்றையும் நிபுணமாக நிச்சயித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். (பயத்தினுல் ஆஸனத்தினின்று இழிந்தவனல்லேன்.) லக்ஷ்மணனிடத்திலாவது ராமனிடத்திலாவது எனக்கு

எள்ளளவும் பயமில்லை. ஆனால் ஸ்னேஹிதனை யிருப்ப வன் காரணமின்றித் தகாத இடத்தில்கோபமுறுவானா யின், எப்படிப்பட்டவனுக்கும் தத்தளிப்பு உண்டாகுமே யன்றி மாறாது. மித்ரனை ஸம்பாதிப்பது எல்லாவிதத் திலும் ஸுலபமே. அந்த ஸ்னேஹத்தைக் காப்பாற்று வதுமாத்ரம் கஷ்டம். மனம் ஒருநிலைப்படாமல் சபலமா யிருக்குமாகையால் துளி வைஷம்யம் உண்டாயினும் ஸ்னேஹம் கெடுதியடைகின்றது. மஹானுபாவனாகிய ராமன் எனக்குச் செய்த உபகாரத்திற்குச் சரியான ப்ரத்யுபகாரஞ் செய்வதற்கு எனக்கு எவ்விதத்திலும் ஸாத்யமன்று. இந்தக் காரணத்தைப்பற்றியே நான் பயப்படுகிறேனன்றி மற்றேதுக்கு மன்று' என்றனன். ஸுக்ரீவன் இங்ஙனஞ் சொல்லுகையில், வானரஸ்ரேஷ் டனாகிய ஹனுமான் வானரமந்த்ரிகளின் இடையில் தனது ஊஹம் விளங்கும்படி 'வானராதிபதீ! மிகுந்த ஸ்னேஹம் உண்டாகப்பெற்று நற்குணங்களோடுகூடின உபகாரகனை உன்னைப்போன்றவன் மறவாதிருப்பது ஓர் ஆச்சர்யம் அன்று. உனக்கு இது ஸஹஜமே. வீரனா கிய ராமன் உனக்கு ப்ரீதியை விளைக்கும் பொருட்டுப் பயத்தைத் தூரத்தில்துறந்து தேவேந்த்ரனைப்போன்ற பராக்ரமசாலியாகிய வாலியைக் கொன்றுவிட்டனன். எல்லாவிதத்திலும் ராமன் உன்மேல் ப்ரணயகோபங் கொண்டு தன் தம்பியாகிய லக்ஷ்மியை வளரச்செய்யும் லக்ஷ்மணனை உன்னிடம் அனுப்பி யிருப்பானேயன்றி வேறில்லை. இவ்விஷயத்தில் எள்ளளவும் ஸந்தேஹம் இல்லை. ஸுக்ரீவா! நீ காலமறிந்தவர்களில் மேலான வன்; ஆயினும் நீ ஏமாறியிருக்கையால் உனக்குக்காலம் தெரியாதிருக்கின்றது. நன்கு விகஸித்த ஏழிலைப்பாலை யின் புஷ்பங்களால் கறுத்தழகிய சரத்ருதுவுங்கூட வந் துவிட்டது. ஆகாயத்தில் மேகங்கள் மறைந்து க்ரஹங்

களும் நக்ஷத்ரங்களும் நிர்மலமா யிருக்கின்றன. திசைகளும் நதிகளும் குளங்களும் எல்லாம் தெளிந்திருக்கின்றன. வானரர் தலைவனே! யுத்தத்திற்கு ப்ரயத்னஞ் செய்யும் ஸமயம் வந்துவிட்டது. வந்ததையும் நீ அறியாதிருக்கிறா யாகையால் மதிமயக்கமுற் றிருக்கிறானென்று லக்ஷ்மணன் இவ்விடம் வந்தனன். இது ஸ்பஷ்டம். ராமனோ! பார்வையை இழந்திருப்பவன். அதனால் மன வருத்தமுற்றிருக்கின்றனன்; மேலும் மஹானுபாவன். ஆகையால் அவன் மற்றொருவர் மூலமாகச் சொல்லியனுப்பின வார்த்தை பருஷமாயிருப்பினும் நீ ஸஹித்துக்கொள்ளவேண்டும். அபராதஞ் செய்ய ஆரம்பித்த மாத்ரத்திலேயே இருப்பாயாயின அநுதாபப்பட்டு ஏதோ ஒருவிதமாக ப்ராயச்சித்தம் செய்துகொள்ளலாம். இப்படி இல்லை. நீ ஸங்கேதந் தவறி அபராதஞ் செய்து முடித்தனை. ஆகையால் அஞ்சலி செய்து லக்ஷ்மணனை நல்வார்த்தை சொல்லி அருள்புரியச் செய்வதையொழிய மற்றொரு தகுந்த ப்ராயச்சித்தம் இதற்குண்டென்று எனக்குத் தோற்றவில்லை. 'ஹீன வ்யாபாரஞ் செய்யச்சொல்லுகிறாய்' என்கிறாயோ? ராஜனுடைய தகுந்தமந்த்ரிகள் ராஜனுக்கு அவஶ்யம் ஹிதத்தைப் போதிக்கவேண்டுமாகையால் நான் இப்பொழுது ராஜபயத்தை விட்டு எனக்குத்தோற்றும் ஹிதத்தை நிச்சயமாகச் சொல்லுகின்றனன். ராமன் கையில் வில்லையேந்திக் கோபமுறுவானாயின், தேவாஸுர கந்தர்வரோடுகூடின ப்ரபஞ்சத்தையெல்லாம் தன்வசத்தில் நிறுத்திக்கொள்ள வல்லவன். எவன் கோபித்திருப்பானாயின், அருள்புரியச் செய்துகொள்ளவேண்டுமோ அப்படிப்பட்ட பலவந்தனைக் கோபமுறச் செய்யலாகாது. அதிலும் விசேஷித்து அவனால் முதலில் உபகாரம் பெற்று அதை மறவாதிருக்கும் க்ருதஜ்ஞன் எள்ளளவும்

அங்ஙனஞ் செய்யலாகாது. ராஜனே! நீ இப்பொழுது உன் புதல்வனேடும் பந்து ஜனங்களோடுங்கூடி அவனுக்குத் தலைசாய்த்து நமஸ்காரஞ்செய்து பர்த்தாவின் வசத்தில் பார்யை இருப்பதுபோல், நீ அவன் வசத்திலேயே நின்று உன் ப்ரதிஜ்ஞையைத் தப்பாமல் நிறைவேற்ற வேண்டும். கபிகுலநாதனே! நீ ராமன் வார்த்தையையாவது லக்ஷ்மணன் வார்த்தையையாவது மனத்தினலும் எள்ளளவும் அதிக்ரமிப்பது யுக்தமன்று. தேவேந்த்ரனைப்போன்ற மஹா தேஜஸ்வியாகிய ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் உள்ள திவ்யாஸ்த்ர பலம் மாத்ரமேயன்றி மனுஷ்யர்களுக்கு ஸ்வபாவஸித்தமான தேஹபலமுங்கூட உன் மனத்திற்கே தெரிந்திருக்கின்றதல்லவா' என்றனன். முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அந்தப்புரத்திற்கு வந்த லக்ஷ்மணனைத் தாரை அருள்புரியச் செய்தல்.

அனந்தரம், ராமனது ஆஜ்ஞையால், சத்ருவீரர்களையழிக்குந் திறமையுடைய லக்ஷ்மணன், தன்னை அங்கதன் ஸுக்ரீவனிடம்போய்த் திரும்பிவந்து அழைக்க, பயங்கரமாகிக் குஹைபோன்றிருக்கும் கிஷ்கிந்தையுள் ப்ரவேசித்தனன். மஹா சரீரர்களும் மஹாபலிஷ்டர்களுமாகிய வானரர்கள் அந்தப் பட்டணத்துவாசலில் காத்துக்கொண்டிருந்தனர். அவர்கள் லக்ஷ்மணனைப் பார்த்து, எல்லோரும் கையைக் கூப்பிக்கொண்டு நின்றிருந்தனர். அந்த வானரர்கள், கோபித்துப் பெருமூச்சுவிடுகின்ற தசரதகுமாரனுகிய லக்ஷ்மணனைப்பார்த்துப் பயந்து அவனருகிற்போக வல்லமையற்றிருந்தனர். ஸ்ரீமானுகிய அந்த லக்ஷ்மணன் ரத்னங்களால் நிர்மிக்கப்பட்டுத் திவ்யமாகிக் கடைகளில் ரத்னங்கள் பரப்பப்பெற்று

அதிரமணீயமாகிப் பெரிய குஹைபோல் விளங்கும் அந்தக் கிஷ்கிந்தையைக் கண்டனன். அங்குத் தனிகர்களின் உப்பரிகைகளும் தேவாலயங்களும் நிறைந்திருந்தன. பலவகைப்பட்ட கடைகளும் விளக்கமுற்றிருந்தன. விரும்பின பலன்களெல்லாம் கொடுக்கும் பல வ்ருக்ஷங்களும் புஷ்பித்திருக்கும் பல புஷ்ப வ்ருக்ஷங்களும் சோபித்திருந்தன. மேலும், தேவதைகளுக்கும் கந்தர்வர்களுக்கும் பிறந்தவராகையால் நினைத்தபடி வடிவங்கொள்ள வல்லவர்களும் திவ்ய மாலைகளையும் திவ்யாம்பரங்களையும் தரித்திருப்பவர்களும் கண்ணுக்கு வியப்பாகப் புலப்படுவோர்களுமாகிய வானரர்கள் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனர். சந்தனம் அகரு பத்மம் என்னும் நல்ல வாஸனையுடைய பூச்சுத்ரவ்யங்களின் வாஸனையாலும் மைரேயமென்னும் மத்யங்களுடையவும் ஸாதாரண மத்யங்களுடையவும் வாஸனையாலும் அந்தப் பட்டணத்து ராஜமார்க்கங்களெல்லாம் மணங்கமழப் பெற்றிருந்தது. அந்தப் பட்டணத்தில் லக்ஷ்மணன், தெளிந்த நீர்பொருந்தி விளங்கும் பர்வத நதிகளையுங் கண்டனன். லக்ஷ்மணன் ரமணீயமான அங்கதன் வீட்டையும், மைந்தனது மந்திரத்தையும், த்விதனுடைய பவனத்தையும், கவயனுடைய கேஹத்தையும், கவாக்ஷனுடைய வாஸஸ்தானத்தையும், கஜனுடைய க்ருஹத்தையும், சரபனது பவனத்தையும், வித்யுன்மாலியின் ஸதனத்தையும், ஸம்பாதியின் நிகேதனத்தையும், ஸூர்யாக்ஷனுடைய ஸதனத்தையும், ஹனுமந்தனுடைய நிசாந்தத்தையும், அப்படியே வீரபாஹு ஸுபாஹு மஹாப்ரபாவனாகிய நலன் குமுதன் ஸுஷேணன் தாரன் ஜாம்பவான் ததிவக்த்ரன் நீலன் ஸுபாடலன் ஸுநேத்ரன் ஆகிய இவர்களுடைய இருப்பிடத்தையுங்

கண்டனன். மஹானுபாவர்களான அந்த வானரஸ்ரேஷ்டர்களுக்கு ராஜமார்க்கத்தில் மிகவும் திடமாக ஏற்படுத்தப்பட்டமேலான இருப்பிடங்களை லக்ஷ்மணன் கண்ணுற்றனன். அந்த க்ருஹங்கள் வெளுத்த மேகங்கள் போல் ப்ரகாசித்துக்கொண்டு திவ்யமாலைகளால் அலங்காரஞ் செய்யப்பெற்று மிகுந்த தனதான்யங்கள் நிறைந்து உத்தமஸ்த்ரீகளுடன் விளக்கமுற்றிருந்தன. அனந்தரம் மஹா பலனுகிய லக்ஷ்மணன், அதிரமணீயமாகித் தேவேந்த்ர பவனம்போன்றிருக்கும் வானரேந்த்ரனுகிய ஸுக்ரீவனது பவனத்தைக்கண்டனன். சுற்றிலும் சுண்ணும்படிக்கப்பெற்று வெளுத்த அரணுடன் கூடி எப்படிப்பட்டவர்க்கும் புகக்கூடாததாயிருந்தது. அதில் கைலாஸ சிகரம்போன்று வெளுத்த உப்பரிகையின் நுனி விளங்கிக்கொண்டிருந்தது. விரும்பும் பலன்களை யெல்லாம் கொடுக்கும் பல வ்ருக்ஷங்களும் புஷ்பித்திருக்கும் பல புஷ்ப வ்ருக்ஷங்களும் ப்ரகாசித்தன. இந்த ஸாமான்ய வ்ருக்ஷங்களேயன்றித் தேவேந்த்ரன் கொடுத்த வ்ருக்ஷங்களும் விளக்கமுற்றிருந்தன. அந்தத் திவ்ய வ்ருக்ஷங்கள் சோபைவிளங்கப்பெற்றுக் கறுத்த மேகங்கள்போல் புலப்பட்டுக்கொண்டு திவ்யமான புஷ்பங்களும் பழங்களும் நிறைந்து குளிர்ந்த நிழலைக்கொடுப்பவையாகி மனோஹரமாக ப்ரகாசித்தன. பலிஷ்டர்களான வானரர்கள் ஆயுதங்களைக் கையில் பிடித்து அதன்வாசலில் காத்துக்கொண்டிருந்தனர். மேலும் அது திவ்ய மாலைகளால் விளங்குவதாகி வெளுத்திருந்தது. அதன் தலைவாசற்படி மேலான பொன்மயமாயிருந்தது. மஹாபலனுகிய லக்ஷ்மணன் எவராகிலும் தடுக்கப்படாமல் ஸூர்யன் மஹா மேகத்தை அடைவதுபோல், ரமணீயமாகிய ஸுக்ரீவனது பவனத்தில் ப்ரவேசித்தனன். தர்மாத்மாவாகிய

லக்ஷ்மணன் பலவகை ஜனங்கள் பலரும் நிறைந்திருக்கின்ற ஏழுகட்டுகளைத் தாண்டிப்போய் அப்புறத்தில் மிகவும் ஸுரக்ஷிதமான பெரிய அந்தப்புரத்தைக் கண்டனன். அதில் ஆங்காங்குப் பொன்னுற் செய்யப்பட்ட மஞ்சங்களும் வெள்ளி மஞ்சங்களும் மேலான படுக்கை பரப்பப்பெற்ற உத்தம ஆஸனங்களும் பற்பல விளக்கமுற்றிருந்தன. அவன் அந்தப்புரத்தில் நுழைந்துகொண்டே வீணை முதலிய வாத்யங்களின் சப்தங்களைச் செவியுற்றனன். மனோஹரமான ஸ்ருதியுடன் கூடித்தந்திகளில் ஒலிக்கும் நானுவித கீதங்கள் கலந்து, அந்த த்வனிகளை நிகர்த்து ஏற்றக்குறையில்லாதிருக்குமாறு பதங்களும் அக்ஷரங்களும் விளங்கும்படி கண்டத்தினுல் பாடும் கீதங்களால் அது மிகவும் இனிப்பை விளைத்துக்கொண்டிருந்தது. அந்த மஹாபலன், ஸுக்ரீவனது அந்தப்புரத்தில் நானுவித வேஷங்களும் ஆபரணங்களும் அமைந்து ஸௌந்தர்யத்தினுலும் யௌவனப் பருவத்தினுலும் மிடுக்குற்றிக்கும் பல ஸ்த்ரீகளைக் கண்டனன். அந்த லக்ஷ்மணன் ஸத்குலத்தில் பிறந்து பலவகைப் பூமாலைகளை அணிந்து மேலான பூஷணங்களைத் தரித்து, மேலும் பழங்கொண்டு வருவதிலும் பூமாலை தொடுப்பதிலும் மிகுந்த ஸாமர்த்யம் அமைந்திருக்கும் நாரீமணிகளைக் கண்டனன். தனதான்ய ரத்னுதிகளால் த்ருப்தியடைந்து தமக்கு நியமித்தகார்யங்களில் மனவூக்கமுடையவராகி உயர்ந்த ஆடையாபரணங்களை அணிந்து விளங்கும் ஸுக்ரீவனது பரிஜனங்களைக் கண்டனன். அனந்தரம் ஸ்ரீமானுகிய அந்த லக்ஷ்மணன் சிலம்புத்தண்டைகளின் த்வனியையும் ஸ்த்ரீகளது அரைநூல் மாலையிற் சதங்கைகளின் ஓசையையும் செவியுற்று (அவை உபரி ஸுரதத்தை அறிவிக்கின்றன வாகையால்) வெட்கினன். அவ்வீரன் ஸ்த்ரீ

களின் ஆபரணத்வனியைக்கேட்டு அப்பொழுதுங்கூட ஸுக்ரீவன் ஸ்த்ரீலோலனு யிருக்கிருனென்று தெரிகின் றமையால் கோபம் மேன்மேலும் பெருகப் பெற்றுத் திசைகளை யெல்லாம் சப்தத்தினுல் நிரம்பச் செய்து கொண்டு நாணை இழுத்து ஒலிக்கச் செய்தனன். மஹா பாஹுவாகிய லக்ஷ்மணன் ராமனுக்கு ஸுக்ரீவன்மேல் உண்டான கோபம் தன்னையும் சூழ்ந்திருக்கையால், வேகத்துடன் அந்தப்புரத்தில் ஸுக்ரீவனிடம் போக த்வரைப்பட்டவனுயினும் ஸதாசாரத்தினுல் அங்ஙனம் போகாதிருக்கும்படி தடுக்கப்பட்டானுகையால் ஸ்த்ரீ களிருக்கும் ப்ரதேசத்தை விட்டு ஏகாந்தத்தில் நின் றிருந்தனன். பிறகு வானராதிபதியாகிய ஸுக்ரீவன் அந்தத் தனுஷ்டங்கார த்வனியால் லக்ஷ்மணன் வந் தானென்று தெரிந்துகொண்டு பயந்து தனது உயர்ந்த ஆஸனத்தினின்று சலித்தனன். அனந்தரம் தனக்குள் 'பூர்வம் எனக்கு அங்கதன் சொன்ன ப்ரகாரம் அண்ண னிடத்தில் மிகுந்த ப்ரீதியுடைய லக்ஷ்மணன் இதோ வந் தனன். இது வெளிச்சமே' என்று சொல்லிக்கொண்ட னன். ஸுக்ரீவன் லக்ஷ்மணன் வந்தானென்று அங்க தன் சொல்லத் தெரிந்துகொண்டது மாத்ரமேயன்றி நாணெலியினுலுங்கூடத் தெரிந்துகொண்டனன். அனந் தரம் பயத்தினுல் அவன் வாய் ஈரமில்லாமல் உலரப் பெற்றிருந்தனன். பிறகு வானரஸ்ரேஷ்டனுகிய அந்த ஸுக்ரீவன் பராக்கின்றி மனவூக்கங்கொண்டு பயத்தி னுல் மனம் தத்தளிக்கப் பெற்று, இனிய காட்சியுடைய ளாகிய தாரையைப் பார்த்து, ஹிதமாயிருக்கும்படி 'அழகிய புருவமுடையவளே! ராமன் தம்பியாகிய லக்ஷ் மணனுடைய ஹ்ருதயம் இயற்கையாகவே மெதுவாயி ருப்பது. அப்படிப்பட்டவன் இப்பொழுது கோபித்துக் கொண்டு வந்திருக்கிருப்போலிருக்கிறதே! அந்தக்கோ

பத்திற்குக் காரணம் எதுவாயிருக்கும்? நிந்தைக்கிட மாகாதிருப்பவளே! அந்தக் குமாரனுகிய லக்ஷ்மணனுக் குக் கோபம் உண்டான காரணம் என்னவென்று உனக் குத் தோற்றுகின்றது. லக்ஷ்மணன் கேவலனன்று; புரு ஷர்களிற் சிறந்தவன். அப்படிப்பட்டவன் காரணமில் லாமல் கோபஞ் செய்யமாட்டான். நான் ஏதேனும் இந்த லக்ஷ்மணனுக்கு அப்ரியஞ் செய்ததாக உனக்கு ஞாபகம் வருகின்றதா? இதை நீ வேகமாகப் புத்தி யால் ஆலோசித்து எனக்குச் சொல்லவேண்டும். அதை விட நீயே லக்ஷ்மணனிடம்போய் அவனைக் காண்பது யுக்தமாயிருக்கின்றது. அவனைப் பார்த்து நல்லவார்த் தைகளால் தெளிவுறச் செய்வாயாக. பெரியோர்கள் எப் பொழுதும் ஸ்த்ரீகளிடம் கொடிதாக நடக்கமாட்டார் கள். ஆகையால் லக்ஷ்மணன் உன்னைப் பார்த்தவுடனே மனந் தெளியப்பெற்றுச் சினத்தைக் காட்டமாட்டான். முதலில் நீபோய் லக்ஷ்மணனிடம் நல்வார்த்தைகள் பேச வேண்டும். இவ்வண்ணம் தொடங்குகையால் கோபத் தினுல் நிலைதப்பியிருக்கும் அவனது இந்த்ரியங்களும் மனமும் கலக்கந் தீர்ந்து தெளிவு பெற்றவையாகும். அதன்மேல் தாமரை யிதழ்போன்ற கண்களையுடைய அந்த அரிந்தமனுகிய லக்ஷ்மணனை நான் பார்ப்பேன்' என்றனன். அந்தத் தாரை ஸம்போகத்தில் மெய்ம்மறந் திருப்பவளாகையால் அடிகள் தழதழக்கப்பெற்று மத் யபான மதத்தினுல் கண்கள் திடம்தப்பிச் சோர்ந்தி ருக்கவும் ரதிகேளியால் பட்டுத்துணி சிறிது அவிழ்ந்து விழுகையில் அரைநூல் மாலையும் அதனுடன் அணி ந்த பொற்சரடும் கலைந்து தொங்கவும் ஸம்போக சின் னங்கள் விளங்கவும் வணக்கத்தினுல் தடிபோல் நுண் ணியதான மேனி வணங்கவும் பெற்று லக்ஷ்மணனது அருகிற் சென்றனள். அந்த ராஜகுமாரன் பரமதார்மிக

னுகையால் அங்ஙனம் ஸம்போக சின்னங்களோடுவரும் வானரராஜனது பார்யையாகிய தாரையைப் பார்த்த வுடனே, அவளது காந்தியையும் ஸம்போகத்துவட்சி யால் விளையும் மடப்பம் முதலியவற்றையும் பாராட்டா மல் உதாஸீனனுகி ஸ்த்ரீஸந்நிதான மாகையால் கோ பத்தை அடக்கித் தலைவணங்கிக்கொண் டிருந்தனன். அந்தத் தாரை ஸம்போக சின்னங்களோடு வந்தவளா யினும் பானமதத்தினுல் அவற்றில் வெட்கமில்லாமல், தான் வந்தவுடனே லக்ஷ்மணன் பார்வை தெளிந்திருப் பது பற்றியும் ஸ்னேஹ பலத்தினுலும் தைர்யம் மிகப், பெற்றவளாகி அவனை நல்வார்த்தைகளால் முன்னம் உபலாலனஞ் செய்துகொண்டு மிகவும் பொருள் அமைந் திருக்கும்படி, 'ராஜகுமாரனே! உனக்குக் கோபம் வருவதற்குக் காரணம் யாது? உன் வாய் வார்த்தையில் நிற்காமல் எவன் அதிக்ரமித்தனன்? எவன் முன்பின் பாராமல் உலர்ந்த அடவியில் பற்றி யெரிகின்ற காட்டுத் தீயினருகே போக வல்லவன்?' என்றனள். தாரை அங் ஙனம் நல்வார்த்தைகளோடு முந்துறமுன்னம் பேசி, மிகுந்த நீதியினுல் ப்ரயோஜனத்தைக் காட்டிக்கொண்டு கபடமின்றி ஸ்னேஹம் விளங்கும்படி உரைத்த வார்த் தையைக்கேட்டு, லக்ஷ்மணன் தாரே! நீ பர்த்தாவின் நன்மையில் மன ஆக்கமுடையவ ளாகையால் விஷயம் இன்னது இனியதென்று அறியமாட்டாய். உன் பர்த் தாவாகிய அந்த ஸுக்ரீவன் காம வ்யாபாரங்களில் கால் தாழப்பெற்றுத் தர்மார்த்தங்களை ஸங்க்ரஹிக்கா மல் அவை அழிந்துபோகும்படி நடக்கின்றனன். இது உனக்குத் தெரியாதோ? தாரே! ஸுக்ரீவன் ராஜகார் யங்களைப் பாரான்; துக்கத்தில் ஆழ்ந்திருக்கின்ற எங் களைப் பாரான்; மந்த்ரிகளும் தானுமாக எப்பொழுதும்



1834. அந்தப்புரத்திற்கு வந்த லக்ஷ்மணனைத் தாரை ஸமா
தானப் படுத்துதல்.

மத்யத்தையே பானஞ் செய்துகொண்டிருக்கின்றனன். வானரேஶ்வரன் யுத்தஸங்க்ரஹத்திற்கு நான்கு மாதங்கள் கெடு வைத்துக்கொண்டு வந்து இப்பொழுது மத்யபானத்தினல் மதித்து விளையாடிக்கொண்டு அந்த நான்குமாதங் கடந்தும் தெரியப் பெருதிருக்கின்றனன். தர்மார்த்தங்கள் ஸித்திக்கவேண்டுமென்னும் விருப்பம் உளதாயின் இங்ஙனம் மத்யபானத்தில் மனவூக்கமுற்றிருப்பது எள்ளளவும் கொண்டாடத் தகுந்ததன்று. மத்யபானத்தினல் அர்த்தமும் தர்மமும் நசித்துப்போனமாத்ரமே யன்றிப் பிறகு காமவேட்கையும் நசித்துப்போம். உபகாரஞ் செய்ததற்கு ப்ரத்யுபகாரஞ் செய்யாதபக்ஷத்தில் மிகவும் தர்மலோபம் உண்டாகும். அங்ஙனம் ப்ரத்யுபகாரஞ் செய்யாமையால் நற்குணங்கள் பொருந்திய நண்பன் நசிக்கும்பொழுது அதிகமாக அர்த்தமும் காமமும் பாழடையும். ஸத்யத்திலும் தர்மத்திலும் ஸ்திரமாக நிலைநின்றிருக்கும் மித்ரன் அர்த்தகாமங்களுக்கு விளைநிலமாகையால் அவைகளைக் காட்டிலும் மேலானவன். அப்படிப்பட்ட மித்ரனைக் கைவிடுகிறுனுகையால் ஸுக்ரீவனுக்கு அர்த்தகாமங் களிரண்டும் பாழாகைமாத்ரமேயன்றித் தர்மமுங்கூடப் பாழாய்விடும். நீ கார்யங்களின் ஸ்வரூபத்தை உணர்ந்தவளாகையால் ஸுக்ரீவன் இங்ஙனம் தர்மார்த்த காமங்கள் பாழாகும்படி மித்ரர்களாகிய எம்மைக் கைவிடும்பொழுது, அதன்மேல் நாங்கள் என் செய்யவேண்டுமோ, அதை நீயே சொல்லவல்லவள். ஆகையால் அதை மொழிவாயாக' என்றனன். அந்தத் தாரை, தர்மார்த்தங்கள் பொருந்தியதும் இயற்கையாகவே மதுரமாயிருப்பதுமாகிய லக்ஷ்மணன் வார்த்தையைக் கேட்டு, ராமன் லக்ஷ்மணனை அனுப்பின கார்யத்திற்கு ப்ரயோஜனம் இன்னதென்று தெரிந்துகொண்டவளாகி மீள

வும் லக்ஷ்மணனைப் பார்த்து நம்பிக்கை உண்டாகும்படி 'ராஜகுமாரனே! வீரர்களில் தலைவனே! ஸுக்ரீவன் காம பரவசனாகியிருக்கின்றமையால் அவன்மேல் கோபித்துக்கொள்வதற்கு இது ஸமயமன்று. மேலும் உங்களுக்குப் பந்துவாயிருக்கின்ற அவன்மேல் இப்படி மிகுந்த கோபம் வைப்பது யுக்தமன்று. இவ்வளவு மாத்ரமேயன்றி இவன் உங்கள் கார்யத்தை நிறைவேற்றுவதிலேயே ஊக்கமுடையவனாயிருக்கின்றனன். இத்தனை காரணங்களைப் பற்றி இப்பொழுது இவன் காமவிகாரத்தினால் மதிமயங்கி உங்கள் கார்யத்தில் கொஞ்சம் பராக்காயிருப்பினும் நீ பொறுக்கவேண்டியதே. குமாரனே! வீர்யம் முதலிய குணங்களில் மேலாயிருப்பவன் தன்னைக்காட்டிலும் குறைந்த பலமுடைய அற்பன்மேல் எவ்வண்ணம் கோபமுறலாகும்? முயற்சியுடையவனும் சாந்தியென்னும் பெருந்தவத்திற் கிருப்பிடமுமாகிய உன்னைப்போன்ற மஹாபுருஷன் எவன் கோபத்திற்குட்படுவான்? 'என் கோபத்தையே அறிந்தாயன்றி அதன் காரணத்தை அறியவில்லையே' என்னவேண்டாம். ஸுக்ரீவனுக்குப் பரமஆப்தனாகிய ராமனுக்குக் கோபம் உண்டாவதையும் அந்தக் கோபம் இப்படிப்பட்டதென்பதையும் நான் அறிவேன். அதற்குக் காரணம் ஸுக்ரீவன் ஸீதையைத்தேட முயற்சி செய்யாமல் காலவிளம்பம் செய்கையே யென்றறிவேன். நீ எமக்கு எதைச்செய்தனையோ அம்மஹோபகாரத்தையுங்கூட அறிவேன். அதற்குப் பதில் நாங்கள் என் செய்யவேண்டுமோ, அதையும் நான் அறிவேன், புருஷதிலகனே! மேனியிற் பிறக்கும் காமத்திற்குள்ள வலிவு ஸஹிக்க முடியாதென்பது தெரிந்த விஷயமே. இப்பொழுது ஸுக்ரீவன் காமத்தினால் இடைவீடின்றி எவரிடத்தில் மனஞ் செல்லப் பெற்றிருக்கின்றானோ, அந்த ஸ்த்ரீகளையுங்

கூட அறிவேன், நீ இங்ஙனம் கோபத்தின்வசம் அகப்பட்டுக் கொண்டிருப்பது கண்டால் உனக்கு எம்மைப்போல் காமதந்த்ரமாகிய ரதிக்ரீடாதிகளில் அவ்வளவு ஜ்ஞானம் இல்லையென்று தோற்றுகிறது. காமதந்த்ரங்களை அறிந்திருப்பாயாயின், நீ அங்ஙனம் காமத்தில் கால்தாழப் பெற்றிருக்கின்ற ஸுக்ரீவனிடத்தில் த்வேஷஞ் செய்திருக்கமாட்டாய். காமலோலனாகிய மனிதன் தேசகாலங்களையாவது தர்மார்த்தங்களையாவது பார்க்கமாட்டானல்லவா? லக்ஷ்மணா! நீ சத்ருக்களை அடக்குந் தன்மையன். ஆயினும் என் அருகிலிருப்பவனும் ஆனது பற்றியே காமவ்யாபாரங்களில் கால் தாழ்ந்து காமாவேசத்தில் வெட்கமின்றியிருக்கும் உன்னுடன் பிறந்தவன் போன்ற வானரவம்ச நாதனாகிய ஸுக்ரீவனை இவ்வளவில் பொறுக்கவேண்டும். தர்மத்தையும் தவத்தையுமே விரும்புகின்ற மஹர்ஷிகளுங்கூடக் காமத்தைப் பின்றொடர்ந்து காமினிகளிடத்தில் இடைவீடின்றி மனமயக்கமுற்றிருப்பார்கள். இனி இயற்கையாகவே சபலனாகிய வானரன், அதிலும் வானரராஜனாயிருப்பவன் காமஸுகங்களில் கால் தாழப்பெறாமல் எப்படி இருப்பான்?" என்றனள். அந்தத்தாரை, இங்ஙனம் அளவிடக்கூடாத மஹிமையுடைய லக்ஷ்மணனுடன் மிகவும் பொருளடக்கமுடைய மொழிகளைக்கூறி மீளவும் லக்ஷ்மணனைப்பார்த்து லீலை யமைந்திருக்குமாறும் மத்யபான மதத்தினால் தழதழப்புற்றிருக்குமாறும் தன்பர்த்தாவுக்கு நன்மையை விளைக்கும் வார்த்தைகளைச் சொல்லத்தொடங்கிப் 'புருஷதிலகனே! ஸுக்ரீவன் மன்மதவ்யாபாரங்களில் மனவூக்கமுற்றிருப்பினும் வெறுமனே இருக்கிறானல்லன். உங்கள் கார்யத்தை நிறைவேற்றும் பொருட்டு ப்ரயத்னஞ் செய்வதற்காகமாத்ரம் வெகு

நாளைக்கு முன்னமே வானரர்களுக்கு ஆஜ்ஞைசெய்திரு க்கின்றனன். மஹா பராக்ரமசாலிகளும் காமரூபிகளு மாகிய வானரவீரர்கள் தமது வாஸஸ்தானமாகிய நாநு பர்வதங்களினின்று லக்ஷங்கோடிக் கணக்குடையவர் வந்திருக்கின்றனர். ஆகையால் மஹா பாஹுவே! உள் ளேவருவாயாக. அந்தப்புர ஸ்த்ரீகளிருக்கு மிடத் திற்கு வரலாகாதென்று இங்கேயே நிற்கும் ஸதாசா ரத்தை அநுஷ்டித்துப் பாதுகாத்துக்கொண்டவனு யினை. ஸ்னேஹத்தைப் பற்றித் தனது மித்ரர்களின் பார்யைகளைப் பார்ப்பது தோஷமன்று' என்றனள். சத்ருக்களை யழிப்பவனும் மஹா பாஹுவுமாகிய அந்த லக்ஷ்மணன் தாரையும் உள்ளே வருவாயென்றழைக் கையாலும் ராமகார்யத்திலுள்ள விரைவினாலும் அந் தப்புரத்திற்கே போயினன். அனந்தரம் லக்ஷ்மணன் அங்ஙனம் உள்ளேபுகுந்து மிகுந்த விலையுள்ள படுக்கை கள் பரப்பப்பெற்றுப் பொன்மயமான பரமாஸனத்தில் ஸூர்யன்போல் உட்கார்ந்திருக்கின்ற ஸுக்ரீவனைக் கண்டனன்; அந்த ஸுக்ரீவன் உத்தமங்களான நாநு வித ஆபரணங்களின் காந்திகளால் சரீரம் முழுவதும் விசித்ரமாக விளங்கப்பெற்றுத் திவ்ய ரூபத்துடன் ப்ர காசித்துக்கொண் டிருந்தனன். பெரும்புகழோனாகிய அந்த ஸுக்ரீவன் திவ்யங்களான பூமாலைகளையும் ஆடை களையும் தரித்து மஹேந்த்ரன்போல் ஜயிக்கமுடியாத வனுகித் திவ்யாபரணங்களையும் திவ்ய மாலைகளையும் தரித்திருக்கும் அழகிய மடந்தையர்கள் சூழப்பெற்று விளக்கமுற்றிருந்தனன். லக்ஷ்மணன் அங்ஙனம் ஸ்த்ரீ ஜனமத்யத்தில் பேரோலக்கத்துடன் காமபரவசனுயிரு க்கின்ற ஸுக்ரீவனைக் கண்டு மிகுந்த கோபாவேசங் கொண்டு கண்கள் சிவக்கப்பெற்று யமனைப்போல் பயங் கரனுயிருந்தனன். அங்ஙனம் மேலான பொன்வர்ணமும்

மிகவும் அகன்ற கண்களும் உடைய அவ்வீரன், ருமையை அழுந்த அணைத்துக்கொண்டு சிறந்த பொன்னாற் செய்யப்பட்ட பரமாஸனத்தில் உட்கார்ந்திருக்கும் ஸுக்ரீவன், மேலும் விசாலமான கண்களையுடைய மஹாபலனாகிய லக்ஷ்மணனைக் கண்டனன். முப்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுக்ரீவனோடு லக்ஷ்மணன் ராமன்சொன்ன ஸங்கதியைச் சொல்லுதல்.

அங்ஙனம் அந்தப்புரத்தில் நுழைந்து கோபாவேசங்கொண்டு எதிரின்றி வந்திருக்கும் புருஷதிலகனாகிய லக்ஷ்மணனைக்கண்டு ஸுக்ரீவன் பயமுற்றனன். அண்ணனாகிய ராமனுக்கு வ்யஸனம் உண்டானதைப் பற்றிப் பரிதபிக்கின்றவனும் கோபாவேசத்தினால் பெருமூச்செறிந்துகொண்டு தேஜோவிசேஷத்தினால் ஜ்வலிக்கின்றவனுமாகிய தசரதகுமாரனான லக்ஷ்மணனைக் கண்டு ஸுக்ரீவன் உயர்ந்த ஸ்வர்ண ஸிம்ஹாஸனத்தினின்று கீழேகுதித்து அலங்காரஞ் செய்யப்பெற்றதும் உத்ஸவத்தின் பொருட்டு மேல் எடுக்கப்படுவதுமாகிய இந்த்ர த்வஜம்போல் எழுந்து நின்றனன். ஆகாயத்தில் பூர்ணசந்த்ரன் உதித்தவுடனே பின்னே நக்ஷத்ரங்கள் உதிக்குமாபோல், ஸுக்ரீவன் எழுந்தவுடனே அவன் பின்னே ருமைமுதலிய ஸ்த்ரீகள் அனைவரும் எழுந்தனர். மத்யபான மதத்தினாலும் மன்மதாவேசத்தினாலும் கண்கள் மிகவும் சிவக்கவும் ஒளிவிளங்கவும் பெற்ற ஸுக்ரீவன், கைகூப்பி லக்ஷ்மணனை எதிர்கொண்டு பெரிய கல்பவ்ருக்ஷம்போல் நின்றிருந்தனன். நக்ஷத்ரங்களினிடையில் சந்த்ரன்போல் ஸ்த்ரீகளின் இடையில் ருமையுடன் நிற்கின்ற ஸுக்ரீவனைக் கண்டு லக்ஷ்மணன் கோபமுற்றவனாகிப் ‘பலம் மிகுந்திருக்கப்

பெற்றவனும் நற்குலத்தில் பிறந்தவனும் வருத்தமுற்றவரிடம் தயையுடையவனும் இந்த்ரியங்களை வென்றவனும் செய்த உபகாரங்களைமறவாதவனும் உண்மையேபேசுந் தன்மையனுமாகிய மன்னவன் உலகத்தில் புகழ்பெறுவான். எந்த மன்னவன் அதர்மத்தில் மனவூக்கங்கொண்டு தனக்கு முன்னம் உபகாரஞ்செய்த மித்ரனுக்கு அஸத்யமாகப்ரதிஜ்ஞை செய்வானே; அவனைக்காட்டிலும் பாபிஷ்டன் ப்ரபஞ்சத்தில் ஒருவனும் இல்லை. புருஷன் ஒரு குதிரை விஷயமாக அஸத்யஞ் சொல்வானயின் நூறுகுதிரைகளைக் கொன்ற பாபத்தைப் பெறுவான். ஒரு பசுவின் விஷயமாக அஸத்யம் பேசுவானாயின், ஆயிரம் பசுக்களைக்கொன்ற பாபத்தைப் பெறுவான். அங்ஙனம் புருஷன் விஷயமாக அஸத்யங்கூறுவானயின் ஆத்மஹத்யையும் ஸ்வஜனஹத்யையும் செய்தபாபத்தைப்பெறுவான். இனி மஹாபுருஷனாகியராமன் விஷயத்தில் அஸத்யம் பேசினல் சொல்லவேண்டுமோ? கபீஸ்வரனே! முன்னம் மித்ரர்களால்தன்கார்யத்தைச் செய்வித்துக்கொண்டு எவன் வார்த்தையின்படி மீளவும் அவரது கார்யத்தைச் செய்யமாட்டானே, அவன் க்ருதக்னனாவான். ஸமஸ்த ப்ராணிகளும்அவனைவதிக்கலாகும். வானரனே! பூர்வம் ஸ்வாயம்புவமனு க்ருதக்னனைப் பார்த்துக் கோபாவேசங்கொண்டு ஸமஸ்த லோகங்களாலும் கொண்டாடப்பட்ட இந்த ஶ்லோகத்தை மொழிந்தனன். அதைப் படிக்கிறேன் கேட்பாயாக. 'ப்ரஹ்மஹத்யை செய்தவனுக்கும் மத்யபானஞ் செய்தவனுக்கும் பொன் திருடினவனுக்கும் வ்ரதங்கெட்டவனுக்கும்(அதாவது—குருபக்தி குருசுஶ்ரூஷை முதலிய ப்ரஹ்மசர்ய வ்ரதங்கெட்டவனுக்கும்) குரு பார்யையிடம் போனவனுக்கும் ப்ராயஶ்சித்தம் பெரியோர்களால் விதிக்கப்பட்டிருக்கின்றதேயன்றி க்ருதக்னனுக்கு

மாத்ரம் ப்ராயச்சித்தமே இல்லை' என்பதுவே. வானரா! நீ முன்னம் ராமனால் உன் கார்யத்தைச் செய்வித்துக் கொண்டு க்ருதக்ருத்யனாகி (ப்ரயோஜனங் கைகூடப் பெற்றுப்) பிறகு நீ அவன் கார்யஞ் செய்யாதிருக்கின் றனை. ஆகையால் நீ பூஜிக்கத் தகாதவனும் க்ருதக்ன னும் அபத்தஞ் சொல்பவனுமாகின்றனை. வானரா! க்ரு தக்னனாகாமல் ராமன் செய்த உபகாரத்தை மறவாதவ னாகவே யிருப்பாயாயின், ராமனால் உன்கார்யத்தை நிறை வேற்றிக்கொண்டதற்குப் பதிலாக ஸீதையைத் தேடும் பொருட்டுத் தகுந்த ப்ரயத்னஞ் செய்யவேண்டுமல்லவா? ஸர்ப்பம், தவளைகளைத் தன்னருகில் வரவழைத்து விழுங் கும்பொருட்டு அவைகளைப்போல் தானுங் கூச்சலிடும். நீயும் முதலில் கார்யத்தின் பொருட்டு ஸத்யஸந்தன் போல் அபிநயஞ்செய்து, இப்பொழுது க்ராம்யங்களான விஷயபோகங்களில் மனந்தாழப்பெற்று ப்ரதிஜ்ஞை யைப் பொய்யாக்கிவிட்டனை. ராமன், தவளைபோல் கூச்ச லிடும் ஸர்ப்பம்போன்றவ னிவனென்று உன்னை அறியா மல் அகப்பட்டுக்கொண்டனன். மஹா பாக்யமுடைய வனும் தயைக்கிருப்பிடமும் மஹானுபாவனுமாகிய ராமன், நீ பாபாத்மாவும் துர்ப்புத்தியுமாயிருப்பவனென் றறியாமல் வானர ராஜ்யத்தை உனக்கு ஸம்பாதித் துக்கொடுத்தனன். ராமன் எப்படிப்பட்ட கார்யத்தை யாயினும் அவலீலையாகவே செய்துமுடிக்க வல்லவன். அப்படிப்பட்ட ராமன் உனக்குச் செய்த உபகாரத்தை நினையாமல் மறப்பாயாயின், இதோ இப்பொழுதே கூரா னபாணங்களால் அடிக்கப்பட்டவனாகி வாலியைப் பார்க் கப்போவாய். ஸுக்ரீவா! வாலி ஹதனாகி எந்த மார்க் கத்தினால் போயினனோ, அந்த மார்க்கம் இப்பொழுது மூடப்படவில்லை. ஆகையால் செய்த ப்ரதிஜ்ஞையைத்

தவறவேண்டாம். வாலி போனவழியே போகவேண்டாம். நீ இக்ஷ்வாகு வம்சத்திற்கு அலங்காரனாகிய ராமனது வில்லினின்று கிளம்பின வஜ்ரம்போன்ற பாணங்களை நீ இனிப் பார்க்கப்போகின்றனை. ஆனால் இதுவரையில் நீ அந்தப் பாணங்களின் கொடுமையை அனுபவித்ததில்லை, இது நிச்சயம். ஆனதுபற்றியே நீ விஷயஸுகங்களை அனுபவிக்கின்றனை. இங்ஙனம் ஸுகங்களில் மனந்தாழப்பெற்று ராமனது கார்யத்தை மனத்தினாலுங்கூட நினையாதிருக்கின்றனை' என்றனன். முப்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தாரை மீளவும் லக்ஷ்மணனை நல்வார்த்தைகளால் ஸமாதானப் படுத்துதல்.

ஸுமித்ரா புத்ரனாகிய லக்ஷ்மணன் தேஜோவிசேஷத்தினால் ஜ்வலிப்பவன்போல் புலப்பட்டுப் பருஷமாகப் பேசிக்கொண்டிருக்கையில், சந்த்ரபிம்பம்போன்ற முகமுடைய தாரை அவனைப் பார்த்து 'லக்ஷ்மணா! நீ இங்ஙனஞ் சொல்லலாகாது. வானரேஶ்வரனாகிய ஸுக்ரீவன் எவர்க்கும் பருஷமாகப் பேசத்தகுந்தவனல்லன். அதிலும் விசேஷித்து ப்ரியமித்ரனாகிய உனக்கு இங்ஙனம் பருஷமாகப்பேசுவது யுக்தமன்று. கபீஶ்வரனாகிய ஸுக்ரீவன் க்ருதக்னனன்று; வஞ்சகனுமன்று ; மறைவாக அனிஷ்டஞ்செய்பவனுமன்று;கொடுந்தன்மையனல்லன். அபத்தங் கூறுவோனுமல்லன்; எள்ளளவுங் கபடமுடையவனல்லன். வீரா! வீரனாகிய இந்த வானரன், ராமன் தனக்குப் பிறரால் செய்யமுடியாத மஹோபகாரம் யுத்தத்தில் செய்ததை எள்ளளவும் மறந்தவனல்லன். பரந்தப! ராமனது அனுக்ரஹத்தினாலேயே ஸுக்ரீவன் இப்பொழுது கீர்த்தியையும் ஶாஶ்வதமான கபிராஜ்யத்

தையும் பார்யையாகிய ருமையையும் என்னையும் பெற்ற னன். இவன் முன்பு வெகுகாலம் மிகவும் பெருங்கஷ்டங்களில் படுத்திருந்தானுகையால் இப்பொழுது இம்மஹாஸுகத் தைப்பெற்று மேனகையைப் பெற்ற விஸ்வாமித்ரமுனி வரைப்போல் காலம்வந்த ஸங்கதியைத் தெரிந்துகொள் ளாதிருக்கின்றனன். லக்ஷ்மணு! முன்னம் தர்மாத்மா வாகிய விஸ்வாமித்ரமஹர்ஷி மேனகையுடன் மன்மத ஸுகங்களில் கால் தாழப்பெற்றுக் காலம் ப்ராப்தமா யிருப்பதை அறியாதிருந்தாரல்லவா? இனிப்பிறருடைய ஸங்கதியைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? லக்ஷ்மணு! வெகுகாலம் கஷ்டப்பட்டு இளைப்புற்றிருந்து இப்பொ ழுது சரீர ஸ்வபாவமாகிய மன்மத வ்யாபாரத்தில் அகப் பட்டுக் காம ஸுகங்களில் த்ருப்தி உண்டாகப்பெருமல் சபலனுயிருப்பவனுகையால் இவன் காமபரவசனுயிருக் குந் தப்பை இப்பொழுது பொறுக்கவேண்டும். அப் பனே! லக்ஷ்மணு! நீ ஸுக்ரீவனது நிச்சயமான அபிப்ராயம் இன்னதென்று தெரிந்துகொள்ளாமலும் முன்பின் பாராமலும் அற்பன்போல் திடீலென்றுகோ பத்திற்காளாவது யுக்தமன்று. புருஷஸ்ரேஷ்டனே! விவேகமுடையோராகிய உன்னைப்போன்ற மஹாபுரு ஷர்கள் யுக்தாயுக்தங்களை ஆலோசியாமல் திடீலென்று கோபமுறமாட்டார்கள். லக்ஷ்மணு! நீ ஸமஸ்த தர்மங் களையும் அறிந்தவன். ஸுக்ரீவன் விஷயமாக நான் முயற்சிகொண்டு உன்னைத்தெளிவுறச் செய்யப் பார்க் கின்றனன். மஹா ரோஷத்தினுல் மிதமின்றி உண்டா யிருக்கின்ற இந்தத்தொந்தரவைத் துறப்பாயாக. அருள் புரிவாயாக. ராமனுக்கு ப்ரீதி உண்டாகும்பொருட்டு ஸுக்ரீவன் தன்பத்னியாகிய ருமையையும் என்னையும் வானர ராஜ்யத்தையும் ரதகஜதுரகாதி தனங்களையும் தான்யங்களையும் ரத்னங்களையும் மற்றுமுள்ள எல்லா

வற்றையும் கைவிடுவானென்று எனக்குத் தோற்றுகின்றது. ஸுக்ரீவன் யுத்தத்தில் ராவணனைக்கொன்று ரோஹிணியோடுகூடிய சந்த்ரனைப்போல் ஸீதையுடன் ராமனைச் சேர்ப்பிக்கப் போகின்றனன். லங்கையில், ராக்ஷஸர்கள் லக்ஷங்கோடியே மூன்றுலக்ஷத்து அறுபதினாயிரம்பேர் இருப்பதுமாத்ரமேயன்றி மேலும் பல லக்ஷக்கணக்குடைய ராக்ஷஸர்களும் இருக்கின்றனர். அவர்கள் எல்லோரும் நினைத்தபடி வடிவங்கொள்ள வல்லவர். அவர்களை எதிர்ப்பது எப்படிப்பட்டவர்க்கும் ஸாத்யமன்று. அப்படிப்பட்ட ராக்ஷஸர்களெல்லோரையும் கொல்லாமல், ஸீதையைக் கொண்டுபோன ராவணனைக் கொல்வது ஸாத்யமன்று. லக்ஷ்மணா! அந்த ராக்ஷஸர்களை யுத்தத்தில் கொல்லுவது ஸாத்யமன்று. அதிலும் விசேஷித்துக் கொடுஞ்செயலுடைய ராவணனை, ஸுக்ரீவனுடைய ஸஹாய ஸம்பத்தியில்லாமல் கொல்லுவது எவ்விதத்திலும் ஸாத்யமன்று. ராவண வ்ருத்தாந்தமெல்லாம் எனக்குத் தெரியாது; வானரர் தலைவனாகிய வாலி இந்த ஸங்கதியெல்லாந் தெரிந்தவனாகையால் இப்படியென்று எனக்குச் சொல்லினன். இது எனக்குள் நான் தெரிந்துகொண்டதன்று. அவனிடங் கேட்டேனாகையால் சொல்லுகின்றனன். உனக்கு ஸஹாயஞ் செய்வதற்காகவே யுத்தத்தின் நிமித்தம் பல வானரர்களையும் வானரயூத நாதர்களையும் அழைத்துக் கொண்டு வரும்பொருட்டு வானரவீரர்களை அனுப்பியிருக்கின்றனன். இந்தக் கபீஸ்வரனாகிய ஸுக்ரீவன், மிகுந்த பராக்ரமமுடையவர்களும் மஹாபல ஸம்பன்னர்களுமாகிய வானரர்கள் வருவதை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனன். அந்தக் காரணத்தைப்பற்றி ராமனுக்குக் கார்யஸித்தியாகும் பொருட்டு இங்கிருந்து இன்னம் வெளிப்புறப்படாதிருக்கின்றனன். லக்ஷ்மணா!

நீவருவதற்குமுன்னமே ஸுக்ரீவன் ஸீதையைத்தேடும் விஷயமாக வானர ஸைன்யங்களையெல்லாம் பதினேழு தினங்களுக்குள் வரவேண்டுமென்றும் வராதவனுக்கு மரணமே தண்டனையென்றும் ஏற்பாடு செய்திருக்கின்றனன். ஆகையால் அந்தப்ரகாரம் மஹாபலிஷ்டர்களான வானரர்கள் அனைவரும் இன்றைக்கு இவ்விடம் வந்துசேரவேண்டும். சத்ருக்களை யழிப்பவனே! காகுத்ஸ்தா! ஆயிரங்கோடி கரடிகளும் ஆயிரங் கொண்டைமுயல்களும் தேஜஸ்ஸுஜ்வலிக்கப்பெற்ற பலகோடி வானரர்களும் இப்பொழுது வந்து உன்னைப் பணிவார்கள். கோபத்தை விடுவாயாக. வானரேஸ்வரனுகிய ஸுக்ரீவனதுவனிதைகள் அனைவரும் உன்முகத்தைப்பார்த்து முன்பு வாலி வதத்தினுல் பயம் அனுபவித்தவர்களாகையால் அப்படிப்பட்டது இப்பொழுது ஏதேனும் விளையுமோவென்று ஸந்தேஹப்பட்டுக் கோபத்தினுல் ரக்தம்போல் சிவந்திருக்கின்ற உன் கண்களைக்கண்டு சிறிதும் மனக்களிப்பு நேரப்பெறுதிருக்கின்றனர். ஆகையால் கோபத்தை விட்டு அருள்புரிவாயாக' என்றனள், முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

—

## லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் ஸ்னேஹத்துடன் ஸம்பாஷித்தல்.

தாரை இங்ஙனம் வணக்கமும் தர்மமும் அமைந்திருக்கும்படி உரைத்த வார்த்தையைக் கேட்டு லக்ஷ்மணன் ம்ருதுஸ்வபாவனுகையால் அந்த வார்த்தையை அங்கீகரித்துக் கோபத்தைத் துறந்து மனந்தெளியப்பெற்றனன். தாரையின் வார்த்தையை லக்ஷ்மணன் அங்கீகரித்தவுடனே ஸுக்ரீவன், ஸ்னனஞ் செய்தவுடன் ஈரத்துணியை விடுவதுபோல், லக்ஷ்மணனிடத்தில் உண்டான பயத்தைத்துறந்து மனம் தெளியப்பெற்றனன்.

அனந்தரம் வானரேஸ்வரனாகிய ஸுக்ரீவன் தன் கண்டத்தில் விசித்ரமாகிப் பலவித போகங்களைக் கொடுக்கும் திவ்யமான பூமாலையை அறுத்துப் பொகட்டு மதமயக்கம் தெளியப்பெற்றனன். ஸமஸ்தவானரர்களுக்கும் பதியாகிய அந்த ஸுக்ரீவன் பயங்கரனான லக்ஷ்மணனுக்கு ஸந்தோஷத்தை விளைத்துக்கொண்டு வணக்கத்துடன் 'ஸுமித்ராபுத்ரனே! என்னை விட்டிருந்த ஸம்பத்தும் கீர்த்தியும் ஶாஸ்வதமான வானரராஜ்யமும் மற்றுமுள்ள இவையெல்லாம் எனக்கு ராமனது அனுக்ரஹத்தினாலேயே மீளவும் நேர்ந்தனவேயன்றி வேறில்லை. வீரா! அரிந்தமனே! தான் செய்த வீரகார்யத்தினால் ப்ரக்யாதியடைந்த அம்மஹா புருஷன் ராமன் எனக்காக வாலியின்மேல் அங்ஙனம் பராக்ரமத்தை உபயோகப்படுத்தினதற்குத் தகுந்த ப்ரத்யுபகாரம் எவனாற் செய்யமுடியும்? மஹாவ்ருக்ஷங்களேழையும் பர்வதத்iயும் பூமியையும் ஒரே பாணத்தினால் பிளக்கும்படியான மஹாவீரனுக்கு மற்றொருவன் ஸஹாயத்தால் என்னாகவேண்டும்? லக்ஷ்மணா! ராமன் வில்லின் நாணை இழுத்து ஒலிப்பிக்கையில் அந்த த்வனியால் பூமியும் பர்வதங்களும் நடுங்கினவே! அப்படிப்பட்ட மஹா வீரனுக்குப் பிறர் உதவியால் பணியாதிருக்கின்றது. புருஷதிலகனே! சத்ருவாகிய ராவணனையும் அவனது ஸைன்யத்தையும் வதிக்க ராமன் முன்னே நடக்கையில் நான் அவனைப் பின்றொடர்ந்து வரவேண்டியவனேயன்றி அவனுக்கு ஸஹாயஞ்செய்ய நான் எவ்வளவு? நான் 'ராமன் என்னை ஒன்றுஞ்செய்யமாட்டான்' என்கிற நம்பிக்கையாலும் நட்பின் மிகுதியாலும் ஏதேனுஞ்சிறிது மிதமிஞ்சி நடந்தேனாயினும் உங்கள்வேலைக்காரனாகையால் அந்த அபராதத்தைப் பொறுக்கவேண்டும். உலகத்தில் தப்பு செய்யாதவன் எவனும்

இல்லை' என்றனன். மஹானுபாவனாகிய ஸுக்ரீவன் இவ்வண்ணம் சொல்லிக்கொண்டிருக்கையில், லக்ஷ்மணன் ஸந்தோஷமுற்றவனாகி ப்ரேமத்துடன் அந்தக் கபிவரனைப்பார்த்து 'வானரர்தலைவனே! நீ நாதனாகி, அதிலும் விசேஷித்து ராமனிடத்தில் வணக்கமுற்றிருக்கிறுயாகையால் என தண்ணன்ராமன் எல்லாவிதத்திலும் ஸநாதனேயாயினன். ஸுக்ரீவா! உன் ப்ரபாவமும் உன் தூய்மையும் இவ்விரண்டையும் பார்க்கையில் எல்லாவற்றிலும் சிறப்புற்ற இந்த வானர ராஜ்யலக்ஷ்மியை அனுபவிப்பதற்கு நீயே உரியனாயிருக்கின்றனை. ஸுக்ரீவா! நீ ஸஹாயமாயிருக்கையில் ப்ரதாபம் மிகுந்திருக்கப்பெற்ற ஸ்ரீராமன் சீக்ரமாகவே யுத்தத்தில் சத்ருக்களையெல்லாம் வதித்துவிடுவான். ஸுக்ரீவா! நீ சொன்ன வார்த்தை, தர்மங்களெல்லாந் தெரிந்தவனும் செய்த உபகாரத்தை மறவாதவனும் யுத்தங்களில் பின்வாங்காதவனுமாகிய மஹானுபாவன் சொல்லத்தகுந்ததும் யுக்திகள் அமைந்ததுமாயிருக்கின்றது. கபிஶ்ரேஷ்டனே! என் தமையன் ராமனும் நீயும் தவிர, நிக்ரஹானுக்ரஹஸாமர்த்யங்கள் உண்டாயிருந்தும் தமது தோஷங்களை அறிந்து நாம் செய்தது தப்பென்று ஒப்புக்கொள்பவனாக மற்றெவனைச் சொல்லலாம்? கபிகுலாலங்காரனே! மேலும் நீ பராக்ரமத்திலும் பலத்திலும் ராமனோடொத்தவன்; இத்தனை காலங்கழித்து உன்னை ஸஹாயமாக எமக்குத் தேவதைகள் கொடுத்தார்களேயன்றி வேறுவிதமாக உன்னைப் போன்றவனைப் பெறுவது ஸாத்யமன்று. வீரா! இப்பொழுது மேல்செய்யவேண்டுவதென்னவெனில், நீ இங்கிருந்து சீக்ரமாக என்பின்னே புறப்பட்டுவந்து, பார்யையைப் பறிகொடுத்துப் பரிதபிக்கின்ற உன் மித்ரனாகிய ராமனை ஸமாதானப் படுத்துவாயாக. ராமன் துக்கத்தினால் வருந்திப்புலம்பும் வார்த்

தைகளைக் கேட்பதனுல் நான் உன்னைப் பருஷவசனங்கள் பேசினன். நீ அதைமனத்தில் வைக்காமல். பொறுக்கத்தகும்’ என்றனன். முப்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுக்ரீவன் ஸமஸ்த வானரர்களையும் வரவழைத்தல்.

மஹானுபாவனுகிய லக்ஷ்மணன் இங்ஙனம் சொல்லுகையில் ஸுக்ரீவன் தன் பக்கத்தில் நின்றிருக்கின்ற மந்த்ரியாகிய ஹனுமானைப் பார்த்து ‘மஹேந்த்ரபர்வதத்திலும் ஹிமவத்பர்வதத்திலும் விந்த்யபர்வதத்திலும் கைலாஸசிகரத்திலும் வெளுத்த சிகரங்களையுடைய மந்தரபர்வதத்திலும் ஆக இவ்வைந்து பர்வதங்களிலிருப்பவர்களையும், மேல் திசையில் ஸமுத்ரதீரத்தில் பாலஸூர்யன்போல் ப்ரகாசிக்கும் பர்வதங்களிலிருப்பவர்களையும், ஸந்த்யாகால மேகம்போல் சிவந்து ஸூர்யன் உதிக்குமிடமாகிய உதயபர்வதத்தில் பயங்கரமான பத்மதாளவனத்தில் வஸிக்கும் வானரோத்தமர்களையும், மைபோலும் மேகம்போலும்கறுத்து யானைபோல் விளங்குந்தன்மையுடன் அஞ்சனபர்வதத்தில்வஸிக்கும் வானரர்களையும், மேருபர்வதத்தின் சாரல்களில் மனச்சிலாமயமான குகைகளில் பொன்வர்ணமுடையவராகி வஸிக்கும் வானரர்களையும், தூம்ரபர்வதத்திலிருப்பவர்களையும், பாலஸூர்யன்போன்ற மேனியின் வர்ணமுடையவர்களும் மைரேயமென்னும் மத்யத்தைப் பானஞ்செய்பவர்களும் பயங்கரமான வேகமுடையவர்களுமாகி மஹாருணபர்வதத்தில் வஸிக்கும் வானரர்களையும், மேலும் மிகவும் அழகாகி மேலான மணங்கள் கமழப்பெற்ற பெரிய வனங்களி லிருப்பவர்களையும், அழகிய தாபஸாஶ்ரமங்களி லிருப்பவர்களையும், இவ்வளவேயன்றிப் பூமண்டலத்தில் அவ்வவ்விடங்களி

விருக்கும் அந்தந்த வானரர்களேயும் மற்றுமுள்ள அனே வரையும் நீ இப்பொழுது சீக்ரத்தில் வரவழைப்பாயாக. ஸாமதானுத்யுபாயங்களேப் பரக்கச்செய்து அவர்களெல் லோரையும் அழைத்துக்கொண்டு வரும்பொருட்டு வா னரர்களே ஆங்காங்கு அனுப்புவாயாக. நான் முதலில் மஹாவேகமுள்ள தூதர்களே அனுப்பினேனே! சீக்ரத் தில் ஸமஸ்தவானரர்களேயும் கொண்டுவரும்படி அவர் களே த்வரைப்படுத்துவதற்காக, நீ வேறுசில வானரர் களே அவரிடம் அனுப்புவாயாக. காமஸுகங்களில் கால் தாழ்ந்து சோம்பேறிகளாய்ச் சீக்ரமாகக் கார் யஞ் செய்யாத வானரர்கள் எவரெவர் இருக்கின்ருர் களோ அவர்களெல்லோரையும் பார்த்துச் சீக்ரமாக ஒரேகாலத்தில் என்னிடம் அழைத்துக்கொண்டு வரு வாயாக. என் கட்டளேயின்படி எவர் பத்துத் தினங் களுக்குள் இங்கு வந்து சேரார்களோ அந்தத் துர்ப் புத்திகளே ராஜாஜ்ஞையை மீறினதற்காக வதிக்க வேண்டும். இனி இதில் என் ஆஜ்ஞையின்படியே நடக் கும் வானரஸிம்ஹர்கள் நூருயிரங்கோடிப்பேர் புறப் பட்டு வானரர்களே அழைத்துக்கொண்டு வருவதற்காக நாற்றிசைகளுக்கும் போவார்களாக.மேகங்கள்போலும் பர்வதங்கள்போலும் பயங்கரமான உருவம் பொருந் திய வானரதிலகர்கள் என் ஆஜ்ஞையின்படி இங் கிருந்து ஆகாயத்தை மறைப்பவர்போல் புலப்பட்டுக் கொண்டு எல்லாத்திசைகளுக்கும் போவார்களாக. அந்த வானரர்களெல்லோரும் பூமியிலுள்ள வானரர் களின் வாஸஸ்தானங்களே யெல்லாம் அறிந்தவர்களா கையால் என் ஆஜ்ஞையால் அவ்வவ்விடங்களுக்குச் சென்று பூமியிலுள்ள ஸமஸ்தவானரர்களேயும் அழைத் துக்கொண்டு வருவார்களாக' என்றனன். வாயுகு மாரனுகிய ஹனுமான் வானரர் தலேவனுன ஸுக்ரீவனு டைய வார்த்தையைக்கேட்டு எல்லாததிசைகளுக்கும்

பராக்ரமமுடைய வானரர்களை அனுப்பினன். அவர்களும் ராஜாவான ஸுக்ரீவனது கட்டளையின்படி அந்த க்ஷணத்தில் பக்ஷிகளும் நக்ஷத்ரங்களும் திரியும் மார்க்கமாகிய ஆகாயத்து வழியாகப்போயினர். அந்தவானரர்கள் ராமகார்யத்திற்காக ஸமுத்ரத்திலுள்ள தீவுகளிலும் பர்வதங்களிலும் வனங்களிலும் தாமரையோடைகளிலும் இருக்கும் ஸமஸ்த வானரர்களையும் ராஜாஜ்ஞையைத் தெரிவித்து வந்து சேரும்படி தூண்டினர். ராஜாதிராஜனுகிய ஸுக்ரீவன் ப்ரளயகாலத்து ம்ருத்யுவைப் போனறவனுகையால் அவனது ஆஜ்ஞையைக்கேட்டவுடனே வானரர்கள் அவன் கடோரமாகத் தண்டிப்பானென்னும் பயத்தினுல் எல்லோரும் புறப்பட்டுவந்தனர். அனந்தரம் ராமன் எந்தக் காரணத்தினுல் வந்திருக்கின்றுனே, அதைப்பற்றி அஞ்சன பர்வதத்தினின்று மையைப்போல் கறுத்தமேனியுடையவர்களும் மஹா வேகமுடையவர்களுமாகி விளங்கும் மூன்றுகோடி வானரர்கள் புறப்பட்டுவந்தனர். ஸூர்யன் அஸ்தமிக்குமிடமாகிய அஸ்தபர்வதத்தினின்று அதில் மேலான பொன் வர்ணம்போன்ற மேனியின் காந்தியுடையவராகி வஸித்திருந்த வானரர்கள் பத்துக்கோடிப்பேர் புறப்பட்டனர். பிறகு கைலாஸபர்வத சிகரத்தினின்று ஸிம்ஹத்தின் சடைகள்போன்ற வர்ணம் பொருந்திய ஆயிரங்கோடி வானரர்கள் வந்தனர். காய் கிழங்கு வேர்களைத்தின்று ஜீவிப்பவராகி ஹிமவத்பர்வதத்தில் வஸித்திருக்கும் பத்துலக்ஷங்கோடி வானரர்கள் வந்தனர். விந்த்ய பர்வதத்தினின்று அங்காரகன் போல் சிவந்து விளங்கும் பயங்கரமான உருவமும் செயலுமுடைய பலவாயிரங்கோடி வானரர்கள் சீக்ரம் புறப்பட்டனர். க்ஷீரஸமுத்ரதீரத்தில் வஸிக்கும் வானரர்களும் கமலவனத்தில் வஸிப்பவர்களும் நாரிகேளவனத்

தில் [1]நாரிகேளங்களையே ஆஹாரமாகக்கொண்டு வஸிப்பவர்களும் பலர் வேகமாகப்புறப்பட்டு வந்தனர். அவர்களைக் கணக்கிடமுடியாது. அடவிகளினின்றும் நதீதீரங்களினின்றும் பெருவேகத்துடன் வானரஸைன்யம் மிக விஸ்தீர்ணமுடையதாகையால் ஸூர்யனை விழுங்குவதுபோல் புலப்பட்டுக்கொண்டு வந்தது. ஸமஸ்தவானரர்களையும் த்வரைப்படுத்தி அழைத்துக் கொண்டு வரும்பொருட்டு நலனால் முதலில் அனுப்பப்பட்டுப்போன வானரவீரர்கள் ஹிமவத் பர்வதத்தில் மிகவும் ப்ரஸித்தமாகிய ஓர் மஹாவ்ருக்ஷத்தை (அல்லது பெருப்பெருத்த பல வ்ருக்ஷங்கள் நிறைந்து ப்ரஸித்தமாகிய ஹிமவத் பர்வதத்தை)க் கண்டனர். முன்பு ரமணீயமாகிய அந்த ஹிமவத்பர்வதத்தில், ஸமஸ்த தேவதைகளுக்கும் ஸந்தோஷத்தை விளைவிப்பதும் திவ்யமும் மனோஹரமுமாகிய மஹேஶ்வரயாகம் ஒன்று நடத்தப்பட்டது. அந்த வானரர்கள் அந்த யாகம் நடந்த இடத்தில் ஹோமஞ் செய்யும்பொழுது நழுவிக் கீழேவிழுந்த நெய் முதலிய ஹவிஸ்ஸுக்களால் முளைத்தவைகளும் அம்ருதம்போன்ற ருசியுடையவைகளுமாகிய பழங்களையும் வேர்களையும் கண்டனர். அந்த ஹவிஸ்ஸுக்களாலுண்டாகித் திவ்யங்களும் மனோஹரங்களுமாகிய பல மூலங்களை ஒருகால் தின்பவன் மற்றொருமாதம் வரையிலும் பசியுண்டாகப் பெறுமல் த்ருப்தியடைந்திருப்பான். அந்த வானரக்கூட்டத் தலைவர்கள் காய்கிழங்குகளை ஆஹாரமாகக்கொள்ளுந் தன்மையராகையால் திவ்யங்களான அந்தக் காய்கிழங்குகளை எடுத்துக்கொண்டது மாத்ரமேயன்றி அங்குள்ள திவ்ய ஓஷதிகளையுங்கூட எடுத்துக்கொண்டனர். அந்த வானரர்கள் ஸுக்ரீவனுக்கு ப்ரீதியை விளைக்கும்பொருட்டு அந்த யாகபூமியிலுள்ள பல மூலங்களையும் நல்ல வாஸனையுடைய அந்

1 தேங்காய்.

குள்ள புஷ்பங்களையுங்கூட எடுத்துக்கொண்டு வந்தனர். அந்த வானரோத்தமர்கள் அனைவரும் பூமியிலுள்ள ஸமஸ்த வானரர்களையும் அழைத்து, உடனே அந்த வானரர்கூட்டம் வருவதற்கு முன்னமே கிஷ்கிந்தைக்கு வந்தனர். அந்த வானரயூதநாதர்கள் சீக்ரமாக நடக்குந் தன்மையராகையால் ஸுக்ரீவனிருக்குங் கிஷ்கிந்தைக்கு லக்ஷ்மணனிருக்கும் முஹூர்த்தத்திலேயே வந்துசேர்ந்தனர். அவர்கள் ஸமஸ்த ஓஷதிகளையும் திவ்யங்களான காய்கிழங்குகளையும் எடுத்துக்கொண்டு வந்து ஸுக்ரீவனுக்குக் காணிக்கையாகக் கொடுத்து, இங்ஙனம் அவனுடன் 'ஸமஸ்த பர்வதங்களுக்கும் ஸமுத்ரங்களுக்கும் வனங்களுக்கும் போயினம். ஆங்காங்குள்ள வானரர்களெல்லோரையும் அழைத்தனம். உன் ஆஜ்ஞையின்படி பூமியிலுள்ள ஸமஸ்த வானரர்களும் வருகின்றார்கள்' என்றனர். வானரர் தலைவனாகிய ஸுக்ரீவன் அவர்கள் இங்ஙனம் சொன்னது கேட்டு ஸந்தோஷமுற்றவனாகி அவரிடத்திலுள்ள ப்ரீதியால் அவர்கள் கொடுத்த காணிக்கைகளை யெல்லாம் அங்கீகரித்தனன். முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஸுக்ரீவனும் லக்ஷ்மணனும் ராமனிடம் போதல்.

ஸுக்ரீவன் அந்த வானரர்கள் கொடுத்த காணிக்கைகளை யெல்லாம் அங்கீகரித்து அவர்களை நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்தி எல்லோரையும் விடை கொடுத்தனுப்பினன். ஸுக்ரீவன் இங்ஙனம் தான் சொன்ன கார்யஞ் செய்துவந்த சூரர்களாகிய அந்த வானரவீரர்களுக்குச் செலவுகொடுத்து அனந்தரம் தன்னையும் மஹாபலனாகிய ராமனையும் க்ருதார்த்தர்களாகநினைத்தனன். கொடிய பலமுடையவனும் ஸமஸ்த

வானரசிகாமணியுமாகிய ஸுக்ரீவனைப் பார்த்து, லக்ஷ்மணன் அவனை வணக்கத்துடன் ஸந்தோஷப்படுத்திக் கொண்டு 'ஸௌம்யா! உனக்கு இஷ்டமாயிருக்குமாயின், இப்பொழுது கிஷ்கிந்தையினின்று புறப்படுவாயாக. ராமனிடம் போவோம்' என்றனன். ஸுக்ரீவன் லக்ஷ்மணன் சொன்ன வார்த்தையைக் கேட்டுப் பரம ஸந்தோஷம் அடைந்து அவனுடன் 'அப்படியே ஆகட்டும், ராமனிடம் போவோம். நான் உன் ஆஜ்ஞையின்படி நடக்கவேண்டியவனேயன்றி வேறில்லை' என்றனன். ஸுக்ரீவன் சுபலக்ஷணங்கள் பொருந்திய லக்ஷ்மணனுக்கு இங்ஙனஞ் சொல்லி உடனே தாரை முதலிய ஸ்த்ரீகளெல்லோரையும் போங்களென்று விடைகொடுத்தனுப்பினன். அனந்தரம் ஸுக்ரீவன் 'இங்கு வாருங்கள்' என்று வானரவீரர்களை உரக்க அழைத்தனன். அவன் அங்ஙனம் அழைத்ததைக் கேட்டவுடனே அந்தப்புர ஸ்த்ரீகளைப் பார்க்க உரியராகிய வானரர்கள் வேகத்துடன் வந்து எல்லோரும், கைகூப்பி நின்றனர். பிறகு ஸூர்யன்போல் ப்ரகாசிக்கின்ற ராஜனாகிய ஸுக்ரீவன் தன்னெதிரில் வந்திருக்கிற அந்த வானரர்களைப் பார்த்து 'வானரர்களே! சீக்ரமாக என் பல்லக்கைக் கொண்டுவருவீர்களாக' என்றனன். அந்த வானரர்கள் சீக்ரமாக வரவும் போகவும் வல்லவராகையால் ஸுக்ரீவனது ஆஜ்ஞையைக் கேட்டவுடனே பார்க்க இனிதாகிய ஓர் பல்லக்கைக் கொண்டுவந்தனர். வானரநாதன் ஸுக்ரீவன் பல்லக்கு வருவதைக்கண்டு லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! நீ சீக்ரம் பல்லக்கில் ஏறுவாயாக' என்றனன். இங்ஙனம் சொல்லி ஸுக்ரீவன் பொன்மயமாகி ஸூர்யன்போல் ப்ரகாசிப்பதும் பெரிய வானரர்களால் வஹிக்கப்பட்டதுமாகிய பல்லக்கில் லக்ஷ்மணனும் தானுமாக ஏறிக்கொண்டனன். சிரஸ்ஸின்மேல்

வெண்கொற்றக்குடை விளங்கவும் நாற்புறங்களிலும் வானரர்கள் வெளுத்த சாமரங்களை வீசவும் சங்கத்வனிகளும் பேரிவாத்யங்களும் முழங்கவும் வானரர்கள் மங்களஸ்துதி பாடங்களைச் செய்து புகழவும்பெற்று இங்ஙனம் நிகரில்லாத ராஜ்யலக்ஷ்மியால் விளக்கமுற்றவனாகி ஸுக்ரீவன் புறப்பட்டனன். அவன், கொடிய தேஜஸ்ஸுடையவர்களும் ஆயுதங்களைக் கையிலேந்தினவர்களுமாகிய வானரர்கள் அனேகமாயிரம்பேர் தன்னைச் சூழ்ந்திருக்கப்பெற்று ராமனிருக்குமிடத்திற்குப் போயினன். மஹா தேஜஸ்வியாகிய அந்த ஸுக்ரீவன், ராமன் வஸிக்குந் தேசமாகையால் மேன்மையுற்று விளங்கும் அந்த ப்ரஸ்ரவண பர்வதத்திற்கருகே சென்று பிறகு லக்ஷ்மணனும் தானுமாகப் பல்லக்கினின்று கிழிழிந்தனன். ஸுக்ரீவன் ராமனிடம் போனவுடனே கைகூப்பிக்கொண்டு நின்றனன். அங்ஙனம் ஸுக்ரீவன் கைகூப்பி நிற்கையில் வானரர்களும் கைகுவித்து நின்றனர். (அந்த வானரர்கள் தாமரைபோன்ற அஞ்சலிகளுடன் கைகளை மேலெடுத்து ஸுக்ரீவனைச் சுற்றிக்கொண்டு நின்றனர்.) ராமன், வானரர்கள் அனைவரும் கூப்பின கைகளை மேலெடுத்து நின்றிருக்கையால், தாமரை மொக்குகளோடுகூடின தாடகம்போன்ற அந்தப் பெரிய வானரசேனையைப் பார்த்து ஸுக்ரீவனிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனாயினன். அந்த வானரேஸ்வரன் ஸாஷ்டாங்கமாகத் தனது சரணங்களில் வீழ்கையில், ராமன் அவனை எழுந்திருக்க எடுத்து ப்ரீதியாலும் பஹுமானத்தாலும் ஆலிங்கனஞ் செய்தனன். தர்மாத்மாவாகிய அந்த ஸ்ரீராமன் அங்ஙனம் அணைத்து உடனே 'உட்காருவாய்' என்று மொழிந்தனன். பிறகு ஸுக்ரீவன் தரைமேல் உட்காருகையில், ராமன் அவனைப்பார்த்து 'வானரர்தலைவனே! எந்தவீரன் தர்

மத்தையும் அர்த்தத்தையும் காமத்தையும் பிரித்து அவற்றை அந்தந்தக் காலங்களில் எப்பொழுதும் தவருமல் அனுபவிப்பானே, அவனே ராஜனெனத்தகும். எவன் தர்மார்த்தங்களைத் துறந்து காமத்தைமாத்ரமே எப்பொழுதும் பின்றொடர்ந்திருப்பானே, அவன் மரத்தின் நுனியில் நித்ரைசெய்பவன்போல் கீழே விழுந்த பின்பே கண் விழித்துக்கொள்வான். சத்ருக்களை வதிப்பதில் முயற்சியுடையவனும் நண்பர்களைச் சேர்ப்பதில் மனவூக்கமுடையவனும் தர்மார்த்தகாமங்களை அந்தந்தக் காலங்களில் பிரித்து வேறு வேருக அறிந்து அவற்றின் பலன்களை அனுபவிப்பவனுமாகிய மன்னவன் மாத்ரமே ராஜதர்மங்களை நன்கு நிறைவேற்றுவோனுவான். சத்ருக்களை அழிப்பவனே! இது யுத்தப்ரயத்னத்திற்குத் தகுந்தகாலம். சரத்ருது வந்தது. இப்பொழுது செய்யவேண்டிய கார்யத்தைக் குறித்து உன் மந்த்ரிகளாகிய வானரர்களோடு ஆலோசிப்பாயாக' என்றனன். ஸுக்ரீவன் ராமன் சொன்ன வார்த்தையைக் கேட்டு அவனுடன் 'ஜயசீலர்களில் தலைவனே! முன்பு நான் போக்கடித்துக்கொண்ட ஸம்பத்தும் யசஸ்ஸும் ஶாஸ்வதமான வானரராஜ்யமும் இவையெல்லாம், தேவா! உனது அனுக்ரஹத்தினுலும் உன் தம்பியின் அனுக்ரஹத்தினுலும் எனக்கு மீளவும் ப்ராப்தமாயின. (கிடைத்தன). எவன் தனக்குப் பிறர்செய்த உபகாரத்திற்கு ப்ரத்யுபகாரஞ் செய்யமாட்டானே, அவன் புருஷர்கள் அனைவரிலும் அதமன். சத்ருக்களை அழிப்பவனே! இந்த வானரஸ்ரேஷ்டர்கள் நூறுபேர்கள் போய் பூமியில் பலிஷ்டர்களான ஸமஸ்த வானரர்களையும் அழைத்துவந்தனர். ராமா! பெரிய அரண்யங்களையும் சிறிய வனங்களையும் எவர்க்கும் புகக்கூடாத மற்ற இடங்களையும் சந்து பொந்துகளையும் நன்கறிந்தவர்

களும் சூரர்களுமாகிய சிறந்த கரடிகளையும் கொண்டை முயல்களையும் அழைத்துவந்தனர். ராமா! தேவதைகளுக்கும் கந்தர்வர்களுக்கும் பிறந்தவர்களும் காமரூபிகளும் வீரர்களுமாகிய வானரர்கள் தமது ஸேனைகளோடுகூடி வருகின்றனர். பரந்தபனே! வீரர்களான வானர முக்யர்கள் சிலர் நூறு வானரர்களோடும், சிலர் லக்ஷம் வானரர்களோடும் சிலர் கோடி வானரர்களோடும், சிலர் பதினாயிரம் பேர்களோடும் சூழ்ந்து வருகின்றனர். சில வானரயூதநாதர்கள் அற்புதக் கணக்குள்ள வானரர்களோடும் சிலர் கர்வஸங்க்யையுள்ள வானரர்களோடும், சிலர் மத்யஸங்க்யர்களான வானரர்களோடும், சிலர் அந்த ஸங்க்யர்களோடும், சிலர் ஸமுத்ரஸங்க்யர்களோடும், சிலர் பரார்த்த ஸங்க்யர்களோடும் வருகின்றனர். ராஜனே! மஹேந்த்ரனைப்போன்ற பராக்ரமம்பொருந்தி மேருபர்வதம்போலும் மந்தர பர்வதம்போலும் புலப்படுவோர்களுமாகி விந்த்யபர்வதத்திலும் மேருபர்வதத்திலும் வஸித்திருக்கும் வானரர்கள் உன் கார்யநிமித்தமாக வருகின்றனர், ராவணனைப் பந்துக்களோடுகூட யுத்தத்தில்கொன்று ஸீதையைக்கொண்டு வந்து உனக்கு ஸமர்ப்பிக்கவல்ல மஹாதீரர்களான வானரர்களும் உன் ஸந்நிதானத்திற்கு வருகின்றார்கள்' என்றனன். அனந்தரம் மிகுந்த மதியுடைய ராமன் அங்ஙனம் தனது ஆஜ்ஞையின்படி தவறாமல் தன் கார்யத்தின் பொருட்டு வானரர் தலைவனாகிய ஸுக்ரீவன் நடத்தின ப்ரயத்னத்தைக்கண்டு ஸந்தோஷம் மிகப்பெற்று அதனால் மலர்ந்த கருநெய்தல்போல் மேன்மேலும் பார்க்க இனிதான மேனியின் காந்தி வளரப்பெற்றுப் புலப்பட்டனன். முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸமஸ்த வானர ஸைன்யங்களும் வந்து கூடுதல்.

தார்மிக சிரோமணியாகிய ராமன், இங்ஙனம் கைகூப்பிக் கொண்டிருக்கிற ஸுக்ரீவனை அழுந்தக் கட்டியணைத்து 'இந்த்ரன் மழை பெய்யினும், ஸூர்யன் ப்ரபஞ்சத்திற்கெல்லாம் ப்ரகாசத்தை விளைவிக்கினும், அவை அவர்களுக்கு ஸஹஜதர்மமாகையால் எப்பொழுதும் ஆச்சர்யமன்று. பரந்தபா! சந்த்ரன் தன் கிரணங்களால் பூமி முழுமையும் நிர்மலமாகச் செய்கின்றனன். அதுவும் அவனுக்கு ஸஹஜமாகையால் ஓர் அற்புதமன்று. அப்படியே உன்னைப் போன்றவர் மித்ரர்களுக்கு ப்ரத்யுபகாரஞ் செய்யினும் அது உங்களுக்கு ஸஹஜமாகையால் சிறிதேனும் ஆச்சர்யமன்று. ஸௌம்யனே! இங்ஙனம் மித்ரர்களுக்கு ப்ரத்யுபகாரஞ் செய்வது உன்னிடத்தில் எள்ளளவும் ஆச்சர்யமன்று. நீ எப்பொழுதும் மித்ரர்களுக்கு ஸந்தோஷத்தை விளைக்குங் கார்யங்களைச்செய்து அந்த ப்ரியவார்த்தையைச் சொல்ல வருபவனென்று நான் அறிவேன். நண்பனே! நீ நாதனுயிருக்கையில், நான் இனி ஸமஸ்த சத்ருக்களையும் யுத்தத்தில் வெல்லவல்லேன். நன்மனமும் நட்பும் பொருந்திய நீயே எனக்கு ஸஹாயஞ் செய்யவேண்டும். முன்பு இந்த்ரனை வஞ்சித்துப் புலோமனது புத்ரியாகிய சசீதேவியைப் புலோமனது அனுமதியால் அனுஹ்லாதனென்பவன் அபஹரித்தாற்போல், ராக்ஷஸாதமனுகிய ராவணன் என்னை மோசஞ்செய்து ஸீதையைக் கொண்டுபோயினன். பூர்வம் சசீதேவியை அனுஹ்லாதன் அபஹரித்ததற்கு அனுமதிசெய்திருந்த அவன் தந்தையாகிய புலோமனை இந்த்ரன் வதித்தாற்போல் சீக்ரத்திலேயே யுத்தத்தில் கூரான பாணங்களால் அந்த ராவணனை வதிக்கின்றேன்' என்றனன். இதன் நடுவில் ஆகாயத்தில் தீவ்ரமான ஸூர்யகாந்தியை மறைத்துக்

கொண்டு பெருந்தூள் கிளம்பிற்று. அந்தத் தூள் நிரம்புகையால் திசைகள் தெரியாதிருந்தன. பூமியெல்லாம் பர்வதங்களோடும் வனங்களோடும் நடுக்கமுற்றது. அனந்தரம் பர்வதம்போன்ற உருவமுடையவரும் கூரான கோரைப் பற்களுடையவரும் மஹா பலிஷ்டர்களுமாகிய வானரர்கள் கணக்கின்றி வந்து பூமிமுழுவதும் மறைத்து நின்றனர். அனந்தரம் ஓர் இமைப்பொழுதில் ஒவ்வொருவரும் நூறுகோடி பரிவாரத்துடன் காமரூபிகளும் மஹாபலிஷ்டர்களும் மேகம்போல் பெருங்கோஷமுண்டாகும்படி கர்ஜனை செய்பவர்களுமாகிய வானர யூதநாதர்களும் நதீதீரத்தில் பிறந்தவர்களும் பர்வதத்தில் வஸிப்பவர்களும் ஸமுத்ரதீரத்தி லிருப்பவர்களும் மற்றுமுள்ளவர்களுமாகிய வானரர்களும் பலர் பூமிமுழுமையும் மறைத்துக்கொண்டு வந்தனர். அப்பொழுது பராக்ரமம் மிகுந்தவனும் செல்வப் பெருக்குடையவனுமாகிய சதபலியென்பானொரு வானரவீரன் மேருபர்வதத்தில் வஸிக்கும் பதினாயிரங்கோடி வானரர்களால் சூழப்பட்டு வந்து புலப்பட்டனன். அவ்வானரர்களில் சிலர் பாலஸூர்யன்போல் சிவந்த மேனியுடன் ப்ரகாசித்தனர். சிலர் சந்த்ரன்போல் வெளுத்த வர்ணம் விளங்கப் பெற்றிருந்தனர். சிலர் தாமரைத் தாதுபோன்றவர்ணத்துடன் விளங்கினர். சிலர் வெளுத்திருந்தனர். அனந்தரம் மேருபர்வதம்போன்ற பெருஞ்சரீரமுடையவனும் மஹாவீரனும் தாரையின் தந்தையுமாகிய ஸுஷேணன் பதினாயிரங்கோடி வானர ஸைன்யங்களுடன் வந்து புலப்பட்டனன். அங்ஙனம் ஸுக்ரீவனது மாமனும் பல வானரர்கூட்டங்களுக்குத் தலைவனும் ருமைக்குத் தந்தையுமாகிய தாரன் ஆயிரங்கோடி வானரர்களுடன் வந்துசேர்ந்தனன். அனந்தரம் தாமரைத்தாதுபோன்ற மேனியின் வர்ணமும் பால ஸூர்

யன்போன்ற முகமும் பொருந்தி மிகுந்த மதியுடைய வனும் ஸமஸ்தவானரர்களில் சிறந்தவனும் செல்வப்பெருக்குடையோனுமாகிய ஹநுமானுடைய தந்தை கேஸரியென்னும் வானரோத்தமன் அனேகமாயிரம் வானர ஸைன்யங்களோடு வந்து தோற்றினன். பயங்கரமான பராக்ரமமுடையவனும் கொண்டைமுயல்களுக்கு மஹாராஜனுமாகிய கவாக்ஷன் ஆயிரங்கோடி வானரர்களுடன் வந்துசேர்ந்தனன். அனந்தரம் பகைவரை உருமாய்க்க வல்ல தூம்ரனென்பவன் பயங்கரவேகமுடைய சிறந்த இரண்டாயிரங் கரடிகளுடன் வந்தனன். மஹாவீர்யமுடைய பனஸனென்னும் வானரயூதநாதன், பெருமலைபோன்றவர்களும் பயங்கரமான உருவமுடையவர்களுமாகிய மூன்றுகோடி வானரவீரர்களோடு வந்தனன். அனந்தரம் மைக்குவியல்போல் கறுத்திருக்கிற நீலனென்னும் வானரர்கூட்டத் தலைவன் பத்துக்கோடி வானர வீரர்களோடு புலப்பட்டனன். அதன் பிறகு மஹாபராக்ரமசாலியும் மேருபர்வதம்போன்ற மேனியுடையவனுமாகிய கவயனென்னும் வானரவீரன் பத்துக்கோடி வானரர்களுடன் வந்து சேர்ந்தனன். மஹாபலனாகிய தரீமுகனென்னும் வானரயூதபதி ஆயிரங்கோடி வானரர்கள் சூழப்பெற்று வந்து ஸுக்ரீவனுக்கு முன்னே நின்றனன். அனந்தரம் அஶ்வி தேவதைகளின் புதல்வர்களும் மஹாபலிஷ்டர்களுமாகிய மைந்த த்விவிதர்கள் இருவரும் ஆயிரங்கோடி கோடிவானர ஸைன்யங்களோடுகூடத் தோற்றினர். மஹாபலிஷ்டனும் மஹாவீரனும் மஹா தேஜஸ்வியுமாகிய கஜனென்பவன் மூன்றுகோடி வானரர்களுடன ஸுக்ரீவனுக்கருகே வந்தனன். மஹாதேஜஸ்வியும் கரடிகளுக்குத் தலைவனுமான ஜாம்பவான் பத்துக்கோடி கரடிகளுடன் வந்து ஸுக்ரீவனைச் சூழ்ந்து நின்றனன். பல பராக்ர

மங்கள் மிகுந்திருக்கப்பெற்ற ருமண்வானென்னும் வான
ரன் நூறுகோடி ஸைன்யங்கள் சூழப்பெற்று ஸுக்ரீ
வனிடம் வந்தனன். அனந்தரம் பத்துலக்ஷங்கோடி
வானரர்களும் லக்ஷங்கோடி வானரர்களும் பின்றொடர்
ந்துவரப்பெற்ற கந்தமாதனனென்பவன் வந்து சேர்ந்
தனன். அனந்தரம் பராக்ரமத்தில் தந்தையைப்போன்ற
யுவராஜனுகிய அங்கதன் ஆயிரம் பத்மக் கணக்குடைய
வைகளும் நூறு சங்கக் கணக்குடையவைகளுமாகிய
வானர ஸைன்யங்களோடுகூடி ஸுக்ரீவனிடம் வந்த
னன். அனந்தரம் நக்ஷத்ரம்போல் ப்ரகாசிப்பவனும்
பயங்கரமான பராக்ரம முடையவனுமாகிய தாரனென்
னும் வானரன் ஐந்துகோடி வானரர்களுடன் வந்து
தூரத்தில் புலப்பட்டனன். வீரனும் வானரயூத நாதனு
மாகிய இந்த்ரஜானுவென்பவன் பதினொன்று கோடி
வானரர்களுக்கு ப்ரபுவாயிருப்பவன் அத்தனை வானரர்
களும் சூழப்பெற்று வந்து புலப்பட்டனன். அனந்தரம்
பாலஸூர்யன்போல் சிவந்த மேனியின் வர்ணமுடைய
ரம்பனென்பவன பதினுயிரம் பதினுயிரமாகவும் ஆயிர
மாயிரமாகவும் நூறு நூருகவும் வானரர்களால் சூழப்
பட்டு வந்தனன். வீரனும் மிகுந்த பலமுடையவனுமா
கிய துர்முகனென்னும் வானரயூதபதி இரண்டுகோடி
வானரவீரர்களோடு ஸுக்ரீவனுக்கு முன்னே வந்து
நின்றனன். கைலாஸ சிகரம்போன்றவர்களும் பயங்கர
மான பல பராக்ரமசாலிகளுமாகிய ஆயிரங்கோடி வான
ரர்கள் சூழப்பெற்று ஹனுமான் தோற்றினன். மஹா
வீர்யம் பொருந்திய நலன் நூறுகோடிக் கணக்கிலும்
ஆயிரங் கணக்கிலும் நூறுநூருகவும் வகைவகையாகப்
பிரிந்து வருகின்ற வானரர்களால் சூழப்பட்டு வந்தனன்.
அனந்தரம் மஹானுபாவனுகிய அந்த ஸுக்ரீவனுக்கு

மிகவும் ப்ரியமாயிருப்பவனும் செல்வம் மிகுந்தவனுமாகிய ததிமுகன் பத்துக்கோடி வானரர்களுடன் வந்து சேர்ந்தனன். சரபன் குமுதன் வஹ்னி ரம்ஹன் வீரன் ஆகிய இவர்களும் மற்றுங் காமரூபர்களான வானர யூதபதிகள் பலரும் வந்து பூமி முழுமையும் பர்வதங்களையும் வனங்களையுஞ் சூழ்ந்து நின்றனர். அவர்களைக் கணக்கிடமுடியாது. பூலோகத்தில் தேவயோனிகளாகப் பிறந்த அப்ராக்ருதரான வானரர்களும் கேவல வானரர்களும் எல்லோரும் வந்தனர். அந்த வானரர்கள் உத்ஸாஹத்தின் மிகுதியால் தாண்டியும் கர்ஜனை செய்தும் மேகங்கள் ஸூர்யனைச் சுற்றிக்கொள்வது போல் ஸுக்ரீவனைச் சுற்றிக்கொண்டு நின்றனர். மிகுந்த புஜபலமுடைய அவ்வானரர்கள் மஹா ஸந்தோஷத்துடன் பலவிதமான ஸிம்ஹநாதங்களைச் செய்து தம் தலைகளை மேலெடுத்துக் காட்டி ஸுக்ரீவனுக்குத் தமது வரவைத் தெரிவித்தனர். அப்பொழுது ஸுக்ரீவனிடம் போகத்தகுந்த மற்றுஞ் சில வானரஸ்ரேஷ்டர்கள் வணக்கம் விளங்குமாறு ஆடைமுதலியவற்றைச் சுருட்டி யடக்கிக்கொண்டு ஸுக்ரீவனருகிற் சென்று கைகூப்பி நின்றனர். ஸுக்ரீவன் ஸமஸ்த தர்மங்களையும் அறிந்தவனுகையால் கைகூப்பிக்கொண்டு த்வரையுடன் அந்த வானரதிலகர்களனைவரையும் ராமனுக்கு ஸமர்ப்பித்துப் பின்பு அவர்களெல்லோரையும் பார்த்து 'வானரோத்தமர்களே? யூதபதியாயிருப்பவன், தன் ஸைன்யத்தையெல்லாம் மலையருவிகளின் ஓரங்களிலும் ஸமஸ்த வனங்களிலும் விதிப்படி இறக்கினுல், தன் பலத்தின் அளவைத் தெரிந்துகொள்ள முடியுமாகையால், நீங்கள் அங்ஙனஞ் செய்வீர்களாக' என்றனன்.

முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஸீதையைத் தேடும்பொருட்டு விநதனைக் கீழ்த்திசைக் கனுப்புதல்.

அனந்தரம் ஸமஸ்த ஸாதனங்களும் ஸம்ருத்தமாயிருக்கப்பெற்ற வானர நாதனாகிய ஸுக்ரீவன் சத்ரு ஸைன்யங்களின் மிடுக்கை யடக்கும் புருஷஶார்தூலனாகிய ராமனைப் பார்த்து 'எனக்குத் தெரிந்த தேசங்களினின்று வந்தவர்களும் என் ராஜ்யத்தில் வாஸஞ்செய்பவர்களும் மஹா பலிஷ்டர்களும் காமரூபிகளும் மேலான யானைகள்போல் புலப்படுவோர்களுமாகிய வானரர்களனைவரும் வந்திழிந்திருக்கின்றனர். பயங்கரமான உருவமுடையவர்களும் தைத்யதானவர்களைப் போன்றவர்களுமாகிய இந்த வானர யூதபதிகளனைவரும் மஹா பராக்ரமசாலிகளும் விரைவாக நடக்குந் தன்மையர்களுமாகிய அநேக வானரர்களோடு வந்திருக்கின்றனர். இவர்கள் முன்பு செய்த கார்யங்கள் ஒவ்வொன்றும் புகழ்பெற் றிருக்கின்றன. இவர்களெல்லோரும் வெகு தூரம் தாண்டுவது பாய்வது முதலிய அஸாத்ய கார்யங்களில் பேர்பெற்றவர்; மிகுந்த பலமுடையவர்; இளைப்பற்றவர்; பல பராக்ரம கார்யங்களைச் செய்து ப்ரஸித்தி பெற்றவர்; பெரும் ப்ரயத்னங்கள் செய்வதில் மேன்மையுற்றவர். ராமா! பலவித பர்வதங்களில் வஸிப்பவரும் பூமியிலும் ஜலத்திலும் ஸஞ்சரிக்க வல்லவருமாகிய அனேகங் கோடி வானரவீரர்கள் வந்திருக்கின்றனர். இவர்களெல்லோரும் உன் வேலைக்காரர்களே! சத்ருக்களை யழிப்பவனே! இவர்களெல்லோரும் உனது ஆஜ்ஞையைச் சிறிதுங் கடக்கமாட்டார்கள். எல்லோரும் ஸ்வாமியின் ஹிதத்தில் மனவூக்கமுடையவர். உன் அபிப்ராயத்தை நிறைவேற்றவல்லவர். இதோ பார் இந்த வானர யூதபதிகள் ஒவ்வொருவரும் பயங்கர பராக்ரமர்களான பலவாயிரம் ஸைன்யங்களோடு கூடியிருக்கின்ற

னர். புருஷ ஸ்ரேஷ்டனே! இந்தக் காலத்தில் எது உசிதமென்று உனக்குத் தோற்றுகின்றதோ, அதைச் சொல்வாயாக. இதெல்லாம் உன் ஸைன்யமே. மேலும் உன்னதீனத்திலிருக்க ஸித்தமாயிருக்கின்றது. ஆகையால் உன் இஷ்டப்படி ஆஜ்ஞை செய்வாயாக. இந்த வானரர்கள் செய்யவேண்டிய கார்யமின்னதென்று உள்ளபடி எனக்குத் தெரிந்தேயிருக்கின்றது. ஆயினும் நீயே உள்ளபடி இவர்களுக்கு ஆஜ்ஞை செய்யத்தகும்' என்றனன். இவ்வண்ணம் ஸுக்ரீவன் விண்ணப்பஞ் செய்கையில் தசரத குமாரன் ராமன் கைகளைநீட்டி அந்த ஸுக்ரீவனை அழுந்தக் கட்டி யணைத்து 'மஹா ப்ராஜ்ஞனே! என் ப்ராணநாயகி ஸீதை பிழைத்திருப்பதும் இல்லாததும் ராவணன் வஸிக்குமிடமும் தெரியவேண்டும். ஸீதை பிழைத்திருக்கும் ஸமாசாரத்தையும் ராவணனிருக்குமிடத்தையும் தெரிந்துகொண்டு, பிறகு அப்பொழுது எது செய்யத்தகுந்ததோ அதை நீயும்நானும் ஆலோசித்து ஏற்படுத்துவோம். வானரர் தலைவனே! இந்தக் கார்ய விஷயமாக நானாவது லக்ஷ்மணனாவது நியமிப்பவரல்லோம். இந்தக் கார்யம் ஸாதிப்பவனும் நியாமகனும் நீயே. ப்ரபூ! இந்தக் கார்ய விஷயமாக எனக்குள்ள நிச்சயத்தையும் இவர்களுக்கு ஆஜ்ஞாபிப்பாயாக. என் கார்யம் எப்படிப்பட்டதோ, அவ்விஷயமெல்லாம் உனக்கே தெரியும். ஸந்தேஹம் இல்லை. நீ எனக்கு லக்ஷ்மணன்போல் இரண்டாவது நண்பன்; ஸ்னேஹிதன்; வணக்கமுடையவன்; பராக்ரமம் அமைந்தவன்; எல்லாமறிந்தவன்; தேசகால விசேஷங்களையுணர்ந்தவன்; எனது ஹிதத்தை விரும்புமவன்; கார்யஸ்வரூபங்களை யறிந்தவர்களனைவரிலும் மேலாயிருப்பவன்; கார்யங்களை நன்கு ஸாதித்துக் கைதேர்ந்தவன்; கார்யங்களின் உண்மையை நன்கறிந்தவன்' என்றனன்.

ராமன் இங்ஙனம் சொல்லுகையில், வானரர் தலைவன் ஸுக்ரீவன் அந்த ராமனும் புத்தியிற் சிறந்த லக்ஷ்மணனும் கேட்டுக்கொண்டிருக்கையில், பர்வதம் போன்ற உருவமுடையவனும் மேகம்போல் கர்ஜிப்பவனும் திடமான சரீரமுடையவனுமாகிய விநதனென்னும் வானர யூதபதியைப் பார்த்து 'வானரோத்தமா! நீ அந்தந்தத் தேசங்களுக்கும் அந்தந்தக் காலங்களுக்கும் தகுந்த நீதியை அநுஸரித்துக் கார்யாகார்யங்களை நிச்சயித்து, மஹாபலிஷ்டர்களான லக்ஷம் வானரர்கள் சூழ்ந்து வரப்பெற்றுச் சந்த்ர ஸூர்ய புத்ரர்களாகிய வானரர்களுடன்கூடிப் பர்வதங்களும் வனங்களும் அரண்யங்களும் சூழ்ந்து விளங்குங் கீழ்த்திசையைக் குறித்துச் செல்வாயாக. அந்தக் கிழக்குத் திசையில் பர்வதசிகரங்களிலும் வனங்களிலும் நதிகளிலும் ஸீதா தேவியைத் தேடிப் பார்ப்பாயாக. நீங்கள் ரமணீயமான கங்காநதிக்கும் ஸரயூநதிக்கும் கௌசிகீ நதிக்கும் யமுனா நதிக்கும் யமுனையைச் சேர்ந்த பர்வதத்திற்கும் ஸரஸ்வதீ நதிக்கும், ரத்னம்போல் நிர்மலமான ஜலமுடைய சோணநதத்திற்கும் மஹீ தேசத்திற்கும் பர்வதாரண்யங்களோடு விளங்கும் காலமஹீ தேசத்திற்கும் ப்ரஹ்ம மால விதேஹ மாளவ காசி கோஸல தேசங்களுக்கும் பெரிய க்ராமங்கள் பலவும் நிறைந்த மகத் தேசத்திற்கும் புண்ட்ர வங்க தேசங்களுக்கும் கோசகாரர்களென்னும் ராஜாக்களின் ராஜதானிக்கும் வெள்ளிகள் விளையும் பூமிக்கும் போய் அந்த இடங்களிலெல்லாம், ராமனது ப்ரிய பார்யையாகிய ஸீதா தேவியைத் தேடுவாயாக. ஸமுத்ரத்தினிடையிலுள்ள பர்வதங்களையும் அகன்ற மந்தரபர்வதத்தின் சிகரத்தையும் பற்றிப் பயங்கரமான உருவமுடைய மனிதர்கள் வாஸஞ் செய்கின்றனர். அவர்களில் சிலர் காதில்லாதவர்களும், சிலர் உதட்டில்

காதுடையவர்களும், சிலர் பயங்கரமான இருப்புமுக முடையவர்களும், சிலர் ஒரே பாதம் உண்டாகப்பெற்று மிகுந்த வேகமுடையவர்களும், சிலர் மனிதர்களைப் பக்ஷித்துக்கொண்டு மரணத்தையே அறியாமல் மஹா பலிஷ்டர்களாயிருப்பவர்களும், மேலும் செவியில் சிகை உண்டாகப்பெற்றுப் பொன் வர்ணமுடைய மேனியுடன் இனிய காட்சியுமுடைய கிராதர்களும் பச்சை மத்ஸ்யங் களைத் தின்பவரும் தீவுகளில் வாஸஞ்செய்துகொண்டு ஜலத்திற்குள் ஸஞ்சரிக்க வல்லமையுற்றுப் பாதிமனுஷ்ய சரீரமும் பாதி புலியின் தேஹமும் பொருந்திப் பயங் கரர்களான ஓர்வகைப்பட்ட கிராதர்களும் இருப்பார் கள். அவர்கள் வஸிக்குமிடமெல்லாம் ஸீதையைத்தேடு வாயாக. பிறகு பர்வதங்களில் ஏறிப்போகத் தகுந்த தீவு களும் பாய்ந்து தாண்டிப்போய்ச் சேரவேண்டிய தீவு களும் தெப்பங்களால் போகக்கூடிய தீவுகளும் உண்டு. நீங்கள் அந்தத் தீவுகளுக்கெல்லாம் சென்று, அனந் தரம் ரத்னங்கள் விளையும் பூமிகள் பொருந்தி ஏழுகண் டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கும் யவத்வீபத்திற்குப் போவீர்களாக. அங்கிருந்து பொன்விளையும் பூமிகள் விளங்கப்பெற்ற ஸுவர்ண ரூப்யகமென்னும் தீவுக்கும் போவீர்களாக. அனந்தரம் யவத்வீபத்தைக் கடந்து போகையில் தேவதானவர்கள் உலாவப்பெற்றுக் கொடி முடிகளால் ஆகாயத்தை அளாவியிருக்கும் சிசிரபர் வதம் தோற்றும்; அதற்குப் போவீர்களாக. இங்ஙனம் இந்த த்வீபாதிகளில் பர்வத குஹைகளிலும் எல்லோ ருங்கூடிப் பெரும்புகழுடைய ஸீதா தேவியைத் தேடிப் பார்ப்பீர்களாக. அனந்தரம் நீங்கள் லவணஸமுத்ரத் தின் அக்கரைக்குச்சென்று அங்கு ஸித்தசாரணர்கள் திரியப்பெற்றதும் சிவந்த ஜலமுடையதும் ஆழமாயிருப் பதும் வேகமாகப் பெருகிவருவதுமாகிய சோணநதத்

தைச்சேர்ந்து அங்கு அழகான துறைகளிலும் நானுவித வனங்களிலும் ஆங்காங்கு ராவணனையும் ஸீதாதேவியையும் தேடிப்பார்க்கவேண்டும். அனந்தரம் ப்லக்ஷத்வீபத்தில் மனோஹரமான உத்யானங்கள் பல விளங்கப்பெற்றுப் பர்வதங்களினின்று பெருகிவருகின்ற நதிதீரங்களிலும் குஹைகளையுடைய பர்வதங்களிலும் வனங்களிலும் ஸீதாதேவியையும் ராவணனையும் தேடவேண்டும். அனந்தரம் மிகவும் பயங்கரமான இக்ஷுஸமுத்ரத்தின் தீவுகளையும் காற்றினால் கலக்கப்பட்டுப் பெருங்கோஷத்துடன் கர்ஜிக்கின்ற இக்ஷு ஸமுத்ரத்தையும் பார்ப்பீர்கள். அந்த இக்ஷு ஸமுத்ரத்தில் பெருஞ் சரீரமுடையவரும் வெகு காலமாகப் பசித்திருப்பவருமாகிய அஸுரர்கள் ப்ரஹ்மதேவனது வரத்தினால் எப்பொழுதும் நிழலைப்பிடித்து இழுத்து மனிதர்களையும் விழுங்குவார்கள். நீங்கள் ப்ரளயகால மேகங்கள்போல் மஹா பயங்கரமாகிப் பெரும்பெரிய ஸர்ப்பங்கள் நிறைந்திருக்கப்பெற்றுப் பெருந்த்வனியுடன் கர்ஜிக்கின்ற அந்த இக்ஷுஸமுத்ரத்தை, அந்த அஸுரர்கள் கையில் அகப்படாமல் உபாயமாகத்தாண்டி அப்புறம் சிவந்த ஜலமுடையதும் பயங்கரமாயிருப்பதுமாகிய மதுஸமுத்ரத்தையுங் காண்பீர்கள். அங்கு விசாலமாகி மிகவும புகழ்பெற்ற ஸால்மலிவ்ருக்ஷம (முள்ளிலவமரம்) புலப்படும். அந்தச் சால்மலித்வீபத்தில் விஸ்வகர்மாவால் நிர்மிக்கப்பட்டதும் கைலாஸ பர்வ்தம்போல் வெளுத்தவர்ணமுடையதும் உயர்ந்திருப்பதும் நானுவித ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டதுமாகிய கருத்மானுடைய க்ருஹத்தைக் காண்பீர்கள். அந்தச் சால்மலித்வீபத்தில் நானுவித ரூபமுடையவர்களும் பர்வதம்போல் பயங்கரமான உருவம்பொருந்தியவர்களுமாகிய மந்தேஹரென்னும் ராக்ஷஸர்கள் பர்வதசிகரங்களில் இருப்பார்கள். அந்த மந்தே

ஹர் எப்பொழுதும் ப்ரதிதினமும் ஸூர்யோதய காலத்தில் ப்ராஹ்மணர்கள் ஜபிக்கும் காயத்ரீ மந்த்ரப்ரபாவத்தினால் அடிக்கப்பட்டவரும் ஸூர்யனால் கொளுத்தப்பட்டவருமாகி ஜலத்தில் விழுவார்கள்; மீளவும் மீளவும் எழுந்து பர்வதசிகரங்களில் வர்த்திப்பார்கள். நீங்கள் ஒருவராலும் தடுக்கமுடியாதவராகையால் அனந்தரம் (வழியில் க்ருதஸமுத்ரத்தையும் குசத்வீபத்தையும் ததிஸமுத்ரத்தையும் க்ரௌஞ்சத்வீபத்தையும் கடந்தவராகி) வெளுத்தமேகம்போல் விளங்குவதும், அலைகளால் முக்தாஹாரங்கள் அமையப்பெற்றாற்போல் ப்ரகாசிப்பதுமாகிய க்ஷீரஸமுத்ரத்தைக் காண்பீர்கள். அதன் நடுவில் திவ்யமான வாஸனைகள் வீசப்பெற்ற புஷ்பங்கள் நிறைந்த வெள்ளி வ்ருக்ஷங்கள் நாற்புறத்திலும் மலர்ந்து வெளுத்து விளங்கும் ருஷபமென்னும் மஹாபர்வதம் ஒன்றுளது. மேலும் அதில் பொன் தாதுக்களுடன் தளதளவென்று விளங்கும் வெள்ளித்தாமரைகள் விளங்கவும் ராஜஹம்ஸங்கள் ப்ரகாசிக்கவும் பெற்று ஸுதர்சனமென்னும் பேருடைய ஓர் ஸரஸ்ஸு உளது. தேவதைகளும் சாரணர்களும் யக்ஷர்களும் கின்னரர்களும் அப்ஸரஸ்த்ரீகளும்கூடி ஸந்தோஷத்துடன் விளையாடும்பொருட்டு அந்த ஸரஸ்ஸுக்கு வருவார்கள். வானரர்களே! நீங்கள் க்ஷீரஸமுத்ரத்தைக் கடந்தபின்பு ஸர்வபூதங்களுக்கும் பயத்தை விளைவிப்பதும் ஸமுத்ரங்களனைத்திலும மேலாயிருப்பதுமாகிய தூய்நீர் ஸமுத்ரத்தைக்காண்பீர்கள். ஔர்வமஹர்ஷியின் கோபத்தினாலுண்டாகிக் குதிரைமுகமுடையதும் படபாக்னியென்று ப்ரஸித்திபெற்றதுமாகிய அம்மஹா தேஜஸ்ஸு அந்த ஸமுத்ரஜலத்தில் வைக்கப்பட்டிருக்கின்றது. அந்தத் தேஜஸ்ஸுக்கு ப்ரளயகாலத்தில் ஜங்கமஸ்தாவரங்கள் அடங்கிய மஹாவேகமுள்ள அந்த ஜல

மெல்லாம் எரிகருவியாமென்று கூறுகின்றனர். அங்கு அந்த ஜலஸமுத்ரத்தில் வாஸஞ்செய்யும் ப்ராணிகள் பல பராக்ரமங்கள் மிகுந்திருக்கப் பெற்றவராயினும் அந்தப் படபாக்னியைப் பார்த்துப் பொறுக்கமுடியாமல் உரக்க இரைச்சலிடுவது செவிப்பட்டுக் கொண்டிருக்கும். அந்தச் சுத்த ஜலஸமுத்ரத்திற்கு அக்கரையில் பதின்மூன்று யோஜனை தூரத்தில் ஜாதரூபசில மென்னும் பேருடைய பெரிய பொன்பர்வதம் ஒன்றிருக்கின்றது. வானரர்களே! அனந்தரம் அந்தப் பர்வதசிகரத்தில் சந்த்ரன்போல் வெளுத்து ப்ரகாசிப்பவனும் தாமரையிதழ்போல் அகன்ற கண்களுடையவனும் கறுத்த வஸ்த்ரந்தரித்து ஆயிரம் சிரஸ்ஸுகளுடன் விளக்கமுற்றவனும் ஸமஸ்த பூதங்களாலும் வணங்கப்படுமவனும் பூமண்டலத்தை தரிப்பவனும் தேவனும் ஸர்ப்பமூர்த்தியுமாகிய ஆதிசேஷனைக் காண்பீர்கள். அம்மஹானுபாவனது த்வஜம் பொன் பனைமரம். அது மூன்று சிகரமுடையதும் வேதிகையோடுகூடி அந்தப்பர்வதத்தின் சிகரத்தில் ஸ்தாபிக்கப்பட்டதுமாகி மிகவும் ப்ரகாசித்துக்கொண்டிருக்கும். தேவதைகளுக்கு ப்ரபுக்களாகிய த்ரிமூர்த்திகள் அந்தத் தாலத்வஜத்தைக் கீழ்த்திசைக்கு எல்லையாக ஏற்படுத்தினர். அதன் பிறகு பொன்மயமான உதயபர்வதம் பளபளவென்று விளக்க முற்றுப் புலப்படும். ஸ்வர்ணமயமும் திவ்யமுமாகிய இந்தப் பர்வதத்தின் நுனி நூறுயோஜனை தூரம் உயர்ந்து வேதிகையுடன்கூடி ஸ்வர்க்கலோகத்துடன் உறைந்துகொண்டு ப்ரகாசிக்கும். அது, ஸூர்யன்போல் தகதகவென்று விளங்கும் ஸ்வர்ணமயமான திவ்ய ஸாலவ்ருக்ஷங்களும் பனைமரங்களும் தமாலவ்ருக்ஷங்களும் புஷ்பித்த கர்ணிகார வ்ருக்ஷங்களும் நிறைந்து அழகாயிருக்கும். அந்தப் பர்வதத்தின் நுனியில் ஒருயோஜனை விஸ்தார

முடையதும் பத்துயோஜனை உயரமுடையதும் ஸ்வர்ண மயமாயிருப்பதும் திடமுமாகிய ஸௌமனஸமென்னும் சிகரமொன்றுளது. பூர்வம் புருஷோத்தமனாகிய விஷ்ணு தேவன் பலிசக்ரவர்த்தியிடம் மூன்றடிகள் இரந்து வாங்கி அளக்கும்பொழுது முதலடி கிழக்குத்திசைக்கு எல்லையாகிய இந்த உதயபர்வதத்தின் ஸௌமனஸமென்கிற சிகரத்திலும் இரண்டாவது அடி மேல்திசைக்கு எல்லையாகிய ஸாவர்ணிமேருபர்வதத்தின் சிகரத்திலும் இட்டனன். ஸூர்யன் அஸ்தமித்தபின்பு ஜம்பூத்வீபத்தின் வடபாகத்தில் ப்ரதக்ஷிணமாகச் சுற்றிவந்து மிகவும் உயர்ந்திருக்கிற இந்த ஸௌமனஸ சிகரத்திற் சேர்ந்தபின்பு மேருவின் தென்பக்கத்திலிருப்பவர்களுக்கு (நம்மெல்லோர்க்கும்) நன்கு புலப்படுவான். அந்த ஸௌமனஸ சிகரத்தில் பெருந்தவப் பெருக்குடையவரும் ஸூர்யன்போல் ஒளியுடன் ப்ரகாசிப்பவருமாகிய வைகானஸரென்றும் வாலகில்யரென்றும் மஹர்ஷிகள் பளபளவென்று விளக்கமுற்றுப் புலப்படுவார்கள். எதனுடைய ஸந்நிதானத்தில் ஸமஸ்த ப்ராணிகளுடைய கண்களும் விஷயங்களை க்ரஹிக்கும் ப்ரகாசத்தைப்பெறுமோ, அந்த ஸூர்யனென்னும் தேஜஸ்ஸு ப்ரகாசித்துக்கொண்டிருக்கும் த்வீபம் ஸுதர்சன மென்னும் யதார்த்தநாமத்துடன் உதயபர்வதத்தினருகில் விளக்கமுற்றிருக்கும். அந்த உதயபர்வதத்திலுள்ள சிகரங்களிலும் குஹைகளிலும் வனங்களிலும் திரிந்து ஆங்காங்கு ஸீதா தேவியையும் ராவணனையும் தேடிப்பார்ப்பீர்களாக. பொன்மயமான உதய பர்வதத்தின் தேஜஸ்ஸும், மஹா தேஜஸ்வியாகிய ஸூர்யனுடைய தேஜஸ்ஸும் ஒன்றோடொன்று கலந்து ப்ரகாசிப்பதுபற்றி விடியற்காலத்து ஸந்த்யை ரக்த வர்ணத்துடன் ப்ரகாசிக்கின்றது. இந்தக் கிழக்குத் திக்கு பூமிக்கும் லோகத்

திற்கும் முதல் த்வாரமாகவும் ஸூர்யனுக்கு உதயஸ்தானமாகவும் ஸ்ருஷ்டியாதியில் ப்ரஹ்மதேவனால் நிர்மிக்கப்பட்டதாகையால் இது பூர்வ திக்கெனப்படும். அந்த உதய பர்வதத்தின் பின்பாகங்களிலும் மலையருவிகளிலும் குஹைகளிலும் ஆங்காங்கு ஸீதா தேவியையும் ராவணனையும் தேடவேண்டும். அவ்வுதயாசலத்திற்கப்புறம் கிழ்த்திசையில் சந்த்ர ஸூர்யர்களின் ஸஞ்சார மில்லாமையால் அந்தகாரஞ் சூழப்பெற்றுக் கண் தெரியாமையைப்பற்றித் தேவதைகள் மாத்ரம் உலாவிக்கொண்டிருப்பார்கள். ஆகையால் பிறர்க்குப புக அரிதாயிருக்கும். மேலும் நான் சொன்ன இடங்கள் மாத்ர மன்றிக்கே கிழக்குத் திக்கில் நான் சொல்லாத இதர பர்வதங்களிலும் குஹைகளிலும் வனங்களிலும் தேசங்களிலும் எல்லாவற்றிலும் ஸீதாதேவியைத் தேடிப் பார்க்கவேண்டும். வானரோத்தமர்களே! இது வரைக்குமே வானரர்க்குப் புகஸாத்யமாகும். அதன் மேல் ப்ரதேசம் ஸூர்யஸஞ்சாரமில்லாமல் க்ராமம் நகரம் பர்வதம் அரண்யம் முதலிய பிரிவினையில்லாமையால் எப்படியிருக்குமோ எமக்குத் தெரியாது. நீங்கள் உதய பர்வதம் வரையில் சென்று ஸீதாதேவியும் ராவணனும் இருக்கும் வாஸ ஸ்தானத்தைக் கண்டுபிடித்து ஒரு மாதம் நிரம்புவதற்கு முன்னமே திரும்பி வரவேண்டும். ஒரு மாதத்திற்கு மேல்பட்டகாலம் வெளியில் வஸிக்கலாகாது. அங்ஙனம் வாராதிருப்பவன் என்னால் விதிக்கப்படும் மரணதண்டனைக்குப் பாத்ரனாவான். ஸீதாதேவியைப் பார்த்து எல்லாவித்திலும் கார்ய ஸித்தியைப்பெற்றுத் திரும்பவேண்டும். வானரர்களே! நீங்கள் நானாவித வனஸமூஹங்களால் அழகாயிருப்பதும் இந்த்ரனுக்கு ப்ரியமுமாகிய கிழக்குத்திக்கில் வல்லமையுடன் திரிந்து தேடிப்பார்த்து ரகுவம்சத்திற் பிறந்த

ராமனது பார்யையாகிய ஸீதாதேவியைக் கண்டுபிடிப்பீர்களாயின் அவ்விடமிருந்து வந்து ஸுகமாயிருப்பீர்கள்' என்றனன். நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுக்ரீவன் தென் திசைக்கு ஹனுமான் முதலானவர்களை அனுப்புதல்.

ஸுக்ரீவன் அங்ஙனம் அந்தப்பெரிய வானரஸைன்யத்தைக் கிழ்த்திசைக்கனுப்பி, அனந்தரம் அனேக யுத்தங்களில் பராக்ரமத்தைச் செலுத்திக் கைதேர்ந்தவரென்று தெரிந்த வானரர்களைத் தென் திசைக்கு அனுப்பினன். வானரர் தலைவனும் வீரனுமாகிய ஸுக்ரீவன் வானரர்களின் தாரதம்யத்தை நன் கறிந்தவனாகையால் அக்னியின் குமாரனாகிய நீலனையும் ஹனுமானையும் மஹாபலிஷ்டனும் ப்ரஹ்மபுத்ரனுமாகிய ஜாம்பவானையும் ஸுஹோத்ரனையும் சராரியையும் சரகுல்மனையும் கஜனையும் கவாக்ஷனையும் கவயனையும் ஸுஷேணனையும் ருஷபனையும் மைந்தனையும் த்விதனையும் விஜயனையும் கந்தமாதனனையும் அக்னி புத்ரர்களாகிய உல்காமுகன் அனங்கன் என்னுமிருவரையும் மேலும் வேகத்திலும் பராக்ரமத்திலும் மேலாகிய அங்கதன் முதலான வீரர்களையும் தென்திசைக்கும்போக ஆஜ்ஞாபித்தனன். ஸுக்ரீவன் எங்குந்தடையின்றி வேகமாகச் செல்லும் வல்லமையுடைய பெரிய வானரஸைன்யத்தை அந்த வீரர்களுக்கு முன்னே ஸஹாயமாகப் போகும்படி நியமித்து அவர்களைத் தென்திசைக்குப் போக ஆஜ்ஞாபித்தனன். வானரர் தலைவனாகிய அந்த ஸுக்ரீவன் அவ்வானர வீரர்களுக்கு அந்தத் தென்திசையில் மிகவும் தெரியக்கூடாத சிலதேசங்களைத் தெரியச் சொல்லினன். நீங்கள் ஆயிரஞ் சிகரங்களோடு கூடி நானாவித வ்ருக்ஷங்களும் கொடிகளும் விளங்கப்பெற்ற

விந்த்ய பர்வதத்தையும் பெரிய ஸர்ப்பங்களுக் கிருப்பிட மாகித் தாண்டமுடியாத நர்மதாநதியையும் விந்த்யபர் வதத்தி னருகிலுள்ள ரமணீயமான கோதாவரீ நதியின் ஓர் பாகத்தையும் மஹாநதியாகிய க்ருஷ்ணையையும் மிகவும் பூஜிக்கத் தக்கதும் மஹா ஸர்ப்பங்கள் ஸஞ் சரிக்கப்பெற்றதுமாகிய வரதா நதியையும் மேகலா நதி யையும் உத்கலா நதியையும் தசார்ணதேசத்திலுள்ள நகரங்களையும் அச்வவந்த நகரத்தையும் குதிரைகள் நிறைந்த அவந்தி பட்டணத்தையும் இவையெல்லாவற் றையும் சென்று தேடிப்பார்க்கவேண்டும். விதர்ப்பதே சத்திலும் ரிஷிகதேசத்திலும் ரமணீயமான மாஹிஷக தேசத்திலும் வங்ககலிங்க தேசங்களிலும் காசிகதேசத் திலும் பர்வதங்களும் குஹைகளும் நதிகளும் பொருந்தி விளங்கும் தண்டகாரண்யத்திலும் அந்தத் தண்டகா ரண்யத்திலுள்ள கோதாவரி நதியிலும் ஆந்த்ரதேசத் திலும் புண்ட்ர சோளபாண்ட்ய தேசங்களிலும் கேரள தேசத்திலும் தேடிப்பார்ப்பீர்களாக. அனந்தரம் கை ரிகதாதுக்களால் விளங்கும ஸஹ்யபர்வதத்திற்கும் போவீர்களாக. அந்தப் பர்வதம் விசித்ரங்களான சிக ரங்கள் அமையப்பெற்றுப் புஷ்பித்திருக்கையால் நானு வர்ணங்கள் பொருந்திய வனங்களுடன் கூடி ஆங்காங் குச் சந்தன வனங்களால் விளக்கமுற்றிருக்கும். அம் மஹா பர்வதம் முழுவதிலும் ஸீதாதேவியைத் தேட வேண்டும். அனந்தரம் அங்குத் தெளிந்த ஜலமுடைய தும் மங்களத்தை விளைப்பதும் அப்ஸரஸ்த்ரீகளால் புகழப்பட்டதுமாகி விளங்குந் திவ்யநதியாகிய காவேரி யைக் காண்பீர்கள். அனந்தரம் ப்ரஸித்தமாயிருக் கின்ற அந்த மலயபர்வதத்தின் சிகரத்தில், உட்கார்ந்து ஸூர்யன்போல் மஹா தேஜஸ்ஸுடன் விளங்குகின்ற ரிஷிதிலகராகிய அகஸ்த்யரைக் காணலாம். அனந்தரம்

மஹானுபாவராகிய அந்த அகஸ்த்யமாமுனியின் அனுக்ரஹம் பெற்று அவரால் அனுமதிக்கப் பட்டவராகி முதலைகள் நிறைந்த மஹா நதியாகிய தாம்ரபர்ணியைக் கடப்பீர்களாக. மேனி முழுவதும் சந்தனம் பூசிக்கொண்டு உயர்ந்த கொங்கைகளுடன் அழகாய்விளங்கும் ஓர் பெண்மணி தன் காதலனிடம் போவதுபோல், திவ்ய சந்தன வ்ருக்ஷங்களால் மறைக்கப்பட்ட பலதீவுகளுடன் ப்ரகாசிக்கின்ற அந்தத் தாம்ரபர்ணீநதி ஸமுத்ரத்தை அடைகின்றது. வானரர்களே! அங்கிருந்து நடப்பீர்களாயின் பாண்ட்யநகர த்வாரத்தில் ஸ்வர்ணமயமாகி முத்துக்களால் அலங்காரஞ் செய்யப்பெற்று நன்கு நிர்மிக்கப்பட்ட பொற்கவாடத்தைக் காண்பீர்கள். அங்கிருந்து ஸமுத்ரதீரஞ் சென்று ஸீதையைத் தேடும் பொருட்டு ஸமுத்ரத்தைத் தாண்டும் விஷயத்தை ஆலோசித்து நிச்சயித்துக் கொள்வீர்களாக. அங்கு ஸமுத்ரத்தினிடையில் அகஸ்த்யரால் வைக்கப்பட்ட மஹேந்த்ரமென்னும் பர்வதம் இருக்கின்றது. அது நானாவர்ணங்கள் பொருந்தின பலவித வ்ருக்ஷங்கள் நிறைந்து பூவும்காயும் நிரம்பி ஸம்ருத்தமா யிருக்கப்பெற்றுப் பொன்மயமாகி மிக்க ஒளியுடன் மஹா ஸமுத்ரத்தில் ஆழ்ந்திருக்கின்றது. மேலும் அது பலவித ஸகல வ்ருக்ஷங்களாலும் கொடிகளாலும் விளக்கமுற்றுத் தேவதைகளும் சிறந்த யக்ஷர்களும் அப்ஸரஸ்த்ரீகளும் பணியவும், ஸித்தர்களும் சாரணர்களும் குவியல் குவியலாக நிறைந்து நெக்கரிக்கவும் பெற்று மிகவும் மனோஹரமாயிருக்கும். அவ்விடத்திற்குத் தேவேந்த்ரன் பர்வந்தோறும் இடைவீடின்றி ஸமுத்ர ஸ்னானத்தின் பொருட்டு வருவான். அந்தஸமுத்ர மத்யத்தில் இக்கரையில் நூறு யோஜனை விஸ்தீர்ணமுடையதும் மனிதர்களுக்குப் போகமுடியாமல் மிக்க விளக்க முற்றதுமாகிய ஓர்

த்வீபம் (தீவு) இருக்கின்றது. அந்த த்வீபம் முழுமையும் ஸீதாதேவியைத் தேடவேண்டும். அந்த த்வீபத்தில் மற்ற இடங்களைக் காட்டிலும் விசேஷித்து ஸீதாதேவியை எல்லா ப்ரயத்னங்களோடும் தேடிப்பார்க்கவேண்டும். ஏனென்னில்:—அந்தப்ரதேசமே துர்ப்புத்தியும் தேவேந்த்ரனை நிகர்த்த தேஜஸ்ஸுடையவனும் ராக்ஷஸர்களுக்கு ப்ரபுவும் நம்மால் வதிக்கத்தகுந்தவனுமாகிய ராவணனுக்கு வாஸஸ்தானம். அந்த த்வீபத்திற்கு வடபாகத்தில் அந்தத் தெற்கு ஸமுத்ரத்தினிடையில் அங்காரகையென்னும் ராக்ஷஸி ஒருத்தி இருக்கின்றனள். அவள் ஜந்துக்களின் நிழலைப்பிடித்து இழுத்து அவைகளைப் பக்ஷித்துக்கொண்டிருப்பாள். வானரர்களே! நீங்கள், ராவணன் எந்த இடத்தில் ஸீதையை வைத்திருப்பானென்று ஸந்தேஹம் உண்டாகுமோ, அந்த ப்ரதேசங்களெல்லாவற்றிலும் ஸீதை இருப்பதும் இல்லாததும் நிச்சயமாகத் தேடிப்பார்த்து நிஸ்ஸம்சயமாக ஏற்படுத்திக்கொண்டு, மஹா தேஜஸ்வியும் ராஜனுமாகிய ராமனது பத்னியான ஸீதாதேவியைத் தேடவேண்டும். அந்த லங்கா த்வீபத்தைத் தாண்டி நூறு யோஜனை தூரத்தில் ஸமுத்ரத்தில் ஸித்தசாரணர்கள் திரியப்பெற்று மிகவும் அழகான புஷ்பிதகமென்னும் பர்வதம் இருக்கின்றது. அந்தப் பர்வதம் ஒருபக்கத்தில் சந்த்ரன்போல் வெளுத்தும் மற்றொருபக்கத்தில் ஸூர்யன்போல் சிவந்தும் ஸமுத்ரஜலம் சூழ்ந்து உயர்ந்த சிகரங்களால் ஆகாயத்தை உறைவதுபோல் ப்ரகாசித்துக்கொண்டிருக்கும். தக்ஷிணாயனத்தில் அந்தப் பர்வதத்தின ஸ்வர்ணமயமான சிகரத்தில் ஸூர்யன் தங்குவான்; சந்த்ரன் வெள்ளிமயமாகி வெளுத்திருக்கும் மற்றொரு சிகரத்தில் தங்குவான். வானரர்களே! க்ருதக்னர்களுக்கும் க்ரூரர்களுக்கும் நாஸ்திகர்களுக்கும் அந்தப் பர்வ

தம் புலப்படாது. நீங்கள் அந்தப் பர்வதத்திற்குத் தலை வணக்கி நமஸ்காரஞ் செய்து அங்கு ஸீதாதேவியைத் தேடிப் பார்ப்பீர்களாக. வானரர்களே! உங்களை எதிரிட எவர்க்கும் ஸாத்யமன்றாகையால் நீங்கள் தடையின்றி அந்தப் பர்வதத்தைக் கடந்த பின்பு ஸூர்யவந்தமென்னும் பர்வதம் இருக்கின்றது. அதற்குப் புகக்கூடாத வழியில் போகவேண்டும். புஷ்பிதக பர்வதத்தினின்று பதினான்கு 'யோஜனைதூரம் இருக்கும். அனந்தரம் அந்த ஸூர்யவந்தமென்னும் பர்வதத்திற் கருகில் வைத்யுதமென்னும் பர்வதம் இருக்கின்றது. அதிலுள்ள வ்ருக்ஷங்கள் விரும்பின பழங்களையெல்லாங் கொடுப்பனவாகி ஸமஸ்த காலங்களிலும் மனோஹரமா யிருக்கும். வானரர்களே! அந்தப் பர்வதத்தில் பெரியோர்களுக்கே அனுபவிக்கத்தகுந்த பழங்களையும் வேர்களையும் பக்ஷித்து மிகவும் மேன்மையுள்ள தேன்களையும் பருகி அவ்வருகுள்ள தேசத்திற்குப் போவீர்களாக. அங்குக் கண்களுக்கும் மனத்திற்கும் இனிமையைக் கொடுக்குங் குஞ்சரமென்னும் பர்வதம் இருக்கின்றது. அந்தப் பர்வதத்திலேயே விஸ்வகர்மா அகஸ்த்யர்க்கு க்ருஹம் நிர்மித்துக் கொடுத்தனன். அந்தப் பர்வதத்தில் அகஸ்த்ய முனியின் க்ருஹம் ஒருயோஜனை விசாலமும் பத்துயோஜனை நீளமும் பொருந்திப் பொன்வர்ணமுடையதாகி நானாவித ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டுத திவ்யமாக விளங்கும். அங்கு ஸர்ப்பங்களுக்கு வாஸஸ்தானமாகிய போகவதி யென்னும் பட்டணம் இருக்கின்றது. அது அகன்ற கட்டுகள் நிறைந்து நாற்புறத்திலும் காக்கப்பட்டிருக்கையால் எப்படிப்பட்டவர்க்கும் எதிரிடமுடியாததாயிருக்கும். கூரான கோரைப்பற்களும் அமைந்து மஹாவிஷமுடையவைகளும்பயங்கரமானஉருவத்துடன் புலப்படுமவைகளுமாகிய ஸர்ப்பங்கள் அதைக் காத்துக்

கொண்டிருக்கும். அங்கு மஹா ப்ராஜ்ஞனுகிய ஸர்ப்ப ராஜன் வாஸுகி வாஸஞ்செய்கின்றனன். நீங்கள் அகஸ்த்ய க்ருஹத்தினின்று புறப்பட்டு அந்தப் போகவதீபுரம்போய்த் தேடவேண்டும். மேலும், அதன் ஸமீபத்தில் மிகவும் ரஹஸ்யமா யிருக்கும் ப்ரதேசங்களெல்லாவற்றிலுங்கூடத் தேடிப் பார்க்கவேண்டும். அந்தப் போகவதீபுரத்திற்கப்புறம் ருஷபமென்னும் ஓர் பர்வதம் உளது. அது வ்ருஷபத்தின் உருவம்போல் அமைந்து ஸமஸ்த ரத்னங்களும் நிரம்பப்பெற்றுச் சோபையுற்றிருக்கும். அந்தப் பர்வதத்தில் திவ்யமான சந்தனமரங்கள் விளையும். அவற்றில் சில கோரோசனு வர்ணமுடையவைகளும் சில தாமரையிதழின் வர்ணமுடையவைகளும் சில தமால வ்ருக்ஷத்தின் வர்ணமுடையவைகளும் சில அக்னிபோல் சிவப்பு வர்ணமுடையவைகளுமாயிருக்கும். நீங்கள் அந்தச் சந்தனமரங்களைப் பார்த்து ஒருக்காலும் தொட்டுப்பார்க்கவேண்டாம். ஏனென்னில் பயங்கரமான உருவமுடைய ரோஹிதரென்னுங் கந்தர்வர்கள் அந்தச் சந்தன மரங்களுக்குக் காவலிருக்கின்றனர். அந்த ருஷபபர்வதத்தில் சைலூஷனென்றும் க்ராமணியென்றும் சிக்ருவென்றும் தப்ரனென்றும் பப்ருவென்றும் ஏழு கந்தர்வராஜர்கள் ஸூர்யனை நிகர்த்த ஒளியுடன் ப்ரகாசித்துக்கொண்டிருப்பார்கள். புண்யகர்மம் செய்தவர் சிலர் ஸூர்யன் போன்ற ஒளியுடையவர்களும், சிலர் சந்த்ரனைப்போல் விளக்கமுற்றவர்களும், சிலர் அக்னியைப்போல் ப்ரகாசிப்பவருமாகி அந்தப் பர்வதத்தில் வாஸஞ் செய்வார்கள். பூமியின் கடைசிபாகமாகிய அவ்விடத்தில் தமது புண்யகர்மங்களால் ஸ்வர்க்காதி புண்யலோகங்களை வென்ற மஹா புருஷர்கள் பிறர்க்குக் கண்கொண்டு காணமுடியாத மஹாதேஜஸ்ஸுடன் ப்ரகாசித்துக்கொண்டிருப்பார்கள். அதற்கு

மேல் மிகவும் பயங்கரமான பித்ருலோகம் உளது. அது யமனுடைய ராஜதானி. அது புகக்கூடாத பேரிருள் மூடப்பெற் றிருக்குமாகையால் உங்களுக்குப் புக ஸாத்யமன்று. வானரோத்தமர்களே! நீங்கள் வீரர்களாயினும் இவ்வளவு மாத்ரமே உங்களுக்குப் போகவும் போய்த்தேடவும் ஸாத்யமாகும். இதற்குமேல் எப்படிப்பட்ட கமனசக்தி யுடையோர்களுக்கும் போகமுடியாது. இப்பொழுது நான் சொன்ன இடங்கள் முழுவதிலும், நான சொல்லாமற் போயினும் உங்களுக்குப் புலப்படும் மற்ற இடங்களிலும் முழுமையும் நன்கு தேடிப்பார்த்து ஸீதாதேவியின் போக்கிடந் தெரிந்துகொண்டு திரும்பி வரவேண்டும். எவன் மாதத்திற்குள்ளாகவே 'புலப்பட்டாள் ஸீதை' என்று மொழிவானே, அவன் என்னோடு ஸமானமான வைபவத்தைப் பெற்று ஸமஸ்த போகங்களையும் அனுபவித்து ஸுகமாக விளையாடிக்கொண்டிருப்பான். அவனைக்காட்டிலும் ப்ரியனுயிருப்பவன் எனக்கு மற்றெவனும் இல்லை. அவன் என் ப்ராணன்களைக் காட்டிலும் விசேஷித்து மேற்பட்டவனுவான். அவன் எவ்வளவு அபராதங்கள் அடிக்கடி செய்யினும் எனக்குப் பந்துவைப்போல் இஷ்டனேயாவான். நீங்கள் மிதமில்லாத பலபராக்ரமங்களையுடையவர்; சௌர்ய தைர்யாதி ஸமஸ்த ஸத்குணங்களும் அமைந்த நற்குலங்களில் ஜனித்தவர். ராஜகுமாரத்தியாகிய ஸீதாதேவியைப் பெறும்படி அதற்குத் தகுந்த பௌருஷங்களையெல்லாம் நடத்துவீர்களாக' என்று மொழிந்தனன்.

நாற்பத்தொன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுக்ரீவன் மேற்றிசைக்கு ஸுஷேணன் முதலிய வானரர்களை அனுப்புதல்.

ஸுக்ரீவன் அங்ஙனம் ஹநுமான் முதலிய வானரர்களைத் தென்திசைக்குப் போகும்படி அனுப்பி, அனந்தரம் மேகங்கள்போல் கறுத்து உயர்ந்த உருவங்களையுடைய வானர யூதபதியும் தாரைக்குத் தந்தையாகையால் தனக்கு மாமனும் பயங்கரமான பராக்ரமமுடையவனுமாகிய ஸுஷேணனைப் பார்த்து அவனை எதிர்கொண்டு நமஸ்கரித்துக் கைகளைக் குவித்து, மேலும் மிகுந்த காந்தியுடையவனும் சூரர்களாகிய கபிஸ்ரேஷ்டர்களால் சூழப்பட்டவனும் மஹேந்த்ரன்போல் ஒளிவிளங்கப்பெற்றவனும் புத்தியும் பராக்ரமமும் மிகுந்திருக்கப் பெற்றவனும் கருத்மந்தனைப்போல் மிகுந்த காந்தியுடையவனும் மரீசி மாமுனியின் மூத்தகுமாரனுமாகிய மாரீசனென்னும் மஹா கபியையும், மேலும் மிகுந்த காந்தியுடையவர்களும் மஹா பலிஷ்டர்களும் அவனுக்குத் தம்பிகளுமாகிய மாரீசர்க ளென்பவர்களையும் இங்ஙனம் மரீசி குமாரர்களனைவரையும் மேற்கு திக்குக்கு அனுப்ப முயன்று 'வானரோத்தமர்களே! நீங்கள் ஸுஷேணனை முன்னிட்டுக்கொண்டு இரண்டுலக்ஷம் வானரர்களோடு ஸீதாதேவியைத் தேடிப் பார்ப்பீர்களாக. வானரமுக்யர்களே! ஸுராஷ்ட்ர தேசத்திலும் பாஹ்லிக தேசத்திலும் பயங்கரமான சூலதேசத்திலும் பயிர் முதலிய ஸம்ருத்திகள் அமைந்து ரமணீயங்களான மற்ற தேசங்களிலும், விசாலங்களான பல நகரங்களிலும் புந்நாகவனத்திலும் மகிழமரங்களும் நறுவிலிமரங்களும் நிறைந்த குக்ஷிதேசத்திலும் அங்ஙனம் தாழைவனங்களிலும் சென்று ஸீதாதேவியைத் தேடிப்பார்க்க வேண்டும். மேற்குமுகமாகப் பெருகுவதும் குளிர்ந்த ஜலமுடையதும் பரிசுத்தமுமாகிய நதிகளிலும் ரிஷ-

யாஶ்ரமங்களிலும் அரண்யங்களிலும் புகக்கூடாத மார்க்கங்களிலும் பர்வதங்களிலும் மற்றுமுள்ள எல்லா இடங்களிலும் தேடுவீர்களாக. வானரர்களே! அனந்தரம் நீங்கள் ஜலமில்லாத பூமிகளிலும் மிகவும் உயர்ந்த சிகரங்களை யுடைய மலைகளிலும் அங்ஙனம் பல பர்வதங்கள் குவியலா யிருக்கப்பெற்று ஸஞ்சரிக்கமுடியாத மேற்குத்திக்கு முழுவதிலும் தேடிப்பார்த்து அனந்தரம் அங்கிருந்து மேற்கு ஸமுத்ரத்திற்குச் சென்று ஜலங்களில் நூறுயோஜனை நீளமுடைய திமிகளென்னும் மீன்களோடும் முதலைகளோடும் கூடிக் கலக்கமுடியாமல் கம்பீரமாகி விளங்குகின்ற அந்த ஸமுத்ரத்தைக் காண்பீர்கள். அந்த ஸமுத்ரத்தின் கரையில் நீங்களும் உங்கள் பரிஜனங்களாகிய வானரர்களும், தாழைப்புதர்களிலும் தமாலவனங்களிலும் தென்னந்தோப்புகளிலும் வேடிக்கையாக விளையாடுவீர்கள். அங்கு ஸமுத்ரக்கரையோரத்திலிருக்கும் பர்வதங்களிலும் வனங்களிலும் ராவணனது வாஸஸ்தானத்தையும் ஸீதாதேவியையும் நன்கு தேடிப்பார்க்கவேண்டும். முரசீபட்டணத்திலும் அழகியதான ஜடீபுரத்திலும் அனந்தபுரத்திலும் அங்கலோபா நகரத்திலும் (ஜனங்கள் புகுவார்களாயின அது நெருக்கமா யிருக்கையால் புலப்படாதிருப்பது பற்றி) அலக்ஷிதமென்னும் பேருடைய அரண்யத்திலும் மேலும் விஸ்தீர்ணங்களான மற்ற தேசங்களிலும் பட்டணங்களிலும் ஆங்காங்கு ஸீதாதேவியையும் ராவணனையும் தேடிப்பார்க்கவேண்டும். ஸிந்துநதி ஸமுத்ரத்தில் கலக்குமிடத்தில் நூறு சிகரங்களுடையதாய் மிக்வும் உயர்ந்த பலபெரிய வ்ருக்ஷங்களோடுகூடிய ஹேமகிரியென்னும் மஹா பர்வதம் ஒன்றிருக்கின்றது. ரமணீயங்களான அந்த மலையின் சாரல்களில் இறகுடைய ஸிம்

ஹங்கள் விளங்கும். அவை ஸமுத்ரத்திலுள்ள திமி மத்ஸ்யங்களையும் . கஜங்களையும் எடுத்துக்கொண்டுபோய், தமது வாஸஸ்தானமாகிய கூண்டுகளில் வைத்துக் கொண்டிருக்கும். சுற்றிலும் ஜலங்கள் நிறைந்த இந்த ப்ரதேசத்திலுள்ள யானைகளும் அந்த ஹேமகிரியின் சிகரத்திலுள்ள யானைகளும் மிகுந்த ஆஹாரங்களால் த்ருப்தி அடைந்து மதித்து மேக கர்ஜனைபோன்ற கீங்காரங்களைச் செய்துகொண்டு மதத்தினுல் கண்தெரியாமல் அந்த ஸிம்ஹங்களின் கூடுகளிருக்கும் ப்ரதேசங்களில் பயமின்றி ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும். அந்த ஹேமகிரியின் ஸ்வர்ணமயமான சிகரங்கள் மிகவும் உயர்ந்திருக்கையால் ஆகாயத்தை உறைந்துகொண்டு புஷ்பித்துச் சித்ரவர்ணங்களோடு விளக்கமுற்ற வ்ருக்ஷங்கள் அமைந்திருக்கும். காமரூபர்களாகிய நீங்கள் தாமதஞ்செய்யாமல் அந்தச் சிகரம் முழுவதிலும் நன்கு தேடிப்பார்ப்பீர்களாக. வானரர்களே! ஸமுத்ரத்தில் கொஞ்சதூரம் போகையில் அதன் நடுவில் பொன்மயமாகி நூறுயோஜனைதூரம் விஸ்தாரம் அமைந்து தேஜோவிசேஷத்தினுல் பார்க்க முடியாதிருக்கும் பாரியாத்ர மென்னும் பர்வதத்தினுடைய சிகரத்தைக் காண்பீர்கள். அந்தச் சிகரத்தில், பலிஷ்டர்களும் அக்னியைப்போல் தீக்ஷ்ணமாயிருப்பவர்களும் பயங்கரமான உருவமுடையவர்களும் காமரூபிகளுமாகிய கந்தர்வர்கள் இருபத்து நான்குகோடிக் கணக்குடையவர் வாஸஞ் செய்கின்றனர். அவர்கள் அக்னிஜ்வாலைபோல் விளக்கமுற்று ஆயிரமாயிரமாய்க் கும்புகூடியிருப்பார்களாகையால் பயங்கர பராக்ரமர்களான வானரர்களுங்கூட அவர்களருகிற்போக முடியாது. மேலும் அவ்விடத்திலிருக்கும் பழங்களையுங்கூட அணுமாத்ரமேனும் வானரர்கள் பறிக்கலாகாது. ஏனென்னில்:—அவர்கள் மஹா

வீரர்களும் மிகுந்த தைர்யமுடையவர்களும் மஹாபலிஷ்டர்களும் பயங்கர பராக்ரமர்களுமாகையால் எவர்க்கும் அணுகமுடியாதவராகி அங்குள்ள காய் கிழங்குகளையும் பழம்வேர் முதலியவற்றையும காத்திருப்பார்கள். அங்ஙனம் அங்குளள பல மூலங்களில் சாபலம் உண்டாகாதிருக்குமாறு யத்னப்பட்டு ஜாக்ரதையுடன் ஸீதாதேவியைத் தேடவேண்டும். ஸாதாரண வானரர்களைப்போல் திரிவீர்களாயின் அந்தக் கந்தர்வர்களால் சிறிதும் பயம் உண்டாகாது. ஆகையால் அங்ஙனம் தேடிப்பார்ப்பீர்களாக. அந்த ஸமுத்ரத்தில் மேலும் கொஞ்சதூரம் போவீர்களாயின், வைடூர்ய மணியின் காந்தியமைந்து வஜ்ரமணிபோல் கடினமாகி நானாவித வ்ருக்ஷங்களும் கொடிகளும் நிறைந்திருக்கும் வஜ்ர மென்னும் மஹா பர்வதம் புலப்படும். அழகியதான அந்த வஜ்ரகிரி நூறு யோஜனை தூரம் உயர்ந்திருக்கும். வானரர்களே! அதன் குஹைகளில் ப்ரயத்னப்பட்டு ஸீதாதேவியைத் தேட வேண்டும். அனந்தரம் லவண ஸமுத்ரத்தின் மூன்று பாகங்களைக் கடந்த பின்பு நான்காவது பாகத்தில் சக்ர வந்தமென்னும் ஓர் பர்வதம் உளது. அதில் முன்பு விஸ்வகர்மாவால் ஆயிரம் இலைகளையுடைய சக்ராயுதம் நிர்மிக்கப்பட்டிருக்கின்றது. அந்தச் சக்ரவந்த பர்வதத்திலேயே பூர்வம் விஷ்ணுதேவன் ஓர் தேவாஸுரயுத்தத்தில் புருஷோத்தம ரூபத்துடன் அவதாரஞ் செய்து சக்ராயுதத்தை ரக்ஷிக்கின்ற ஹயக்ரீவ னென்னும் தானவனை வதித்துச் சக்ராயுதத்தையும், பஞ்சஜனனென்னும் தானவனைக் கொன்று அவனது எலும்பாகிய பாஞ்சஜன்யமென்னும் சங்கத்தையும் கைப்பற்றினன். அந்தப் பர்வதத்தில் விசித்ரங்களான தாழ்வரைகளிலும் விசாலங்களான குஹைகளிலும் ராவணனையும் ஸீதையையும் தேடவேண்டும். அதன்பிறகு அறுபது

யோஜனைதூரத்தில் ஆழமாயிருக்கும் ஸமுத்ரத்தில் பொற்சிகரங்களை யுடையதும் மஹா தேஜஸ்ஸுடன் ப்ரகாசிப்பதுமாகிய வராஹமென்னும் பர்வதம் உளது. அந்தப் பர்வதத்தில் ஸ்வர்ணமயமான ப்ராக்ஜ்யோதிஷமென்னும் பட்டணம் உளது. அந்தப் பட்டணத்தில் துர்ப்புத்தியாகிய நரகாஸுரன் வாஸஞ் செய்வான். அந்தப் பர்வதத்தின் சித்ரங்களான தாழ்வரைகளிலும் விசாலங்களான குஹைகளிலும் ராவணனையும் ஸீதாதேவியையும் தேடவேண்டும். அந்தப் பர்வதராஜனைக் கடந்தபின்பு வேறொரு பர்வதம் புலப்படும். அதன் குஹைகள் உள்ளெல்லாம் பொன்மயமாயிருக்கும் வெளியிலும் அவை பொன்மயங்களே. இங்ஙனம முழுவதும் ஸ்வர்ணமயமாகி மலையருவிகளின் தாரைகளோடுகூடி அது அழகாயிருக்கும். அதில் யானைகளும் பன்றிகளும் ஸிம்ஹங்களும் தம் த்வனியாலுண்டாகும ப்ரதி த்வனியைக் கேட்டுக் கர்வித்து எப்பொழுதும் அதற்கு ப்ரதியாகக் கர்ஜித்துக்கொண்டேயிருக்கும். அந்தப் பர்வதத்தில் தான் பச்சைக் குதிரைகளையுடையவனும் செல்வப் பெருக்கமைந்தவனுமாகிய தேவேந்த்ரனுக்குத் தேவதைகள் தேவராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்தனர். அந்தப் பர்வதம் மேகவந்தமெனப்படும். நீங்கள் தேவேந்த்ரனால் பரிபாலிக்கப்படும் அந்தப் பர்வதத்தைக் கடந்து அதற்கப்புறம் பாலஸூர்யன் போன்ற வர்ணமுடையவைகளும் முழுமையும் ப்ரகாசிப்பவைகளும் நன்கு புஷ்பித்த பொன் வ்ருக்ஷங்களோடு கூடியவைகளுமாகிய அறுபதினாயிரம் பர்வதங்களைக் காண்பீர்கள். அந்தப் பர்வதங்களினிடையில் ராஜாவாகி எல்லாவற்றிலும் மேன்மையுற்று விளங்கும் ஸாவர்ணிமேருவென்னும் பர்வதம் இருக்கின்றது. முன்பு ஸூர்யன அருள்புரிந்து அந்தப் பர்வதத்திற்கு வரந்தந்தனன். அந்த ஸூர்யன்

அதைப்பார்த்து 'என் அனுக்ரஹத்தினுல் உன்னிடத்திலுள்ள வ்ருக்ஷங்கள் கற்கள் முதலியவையெல்லாம் இரவும் பகலும் ஸ்வர்ணமாயிருக்குமாக. மேலும் உன்னிடம் வாஸஞ் செய்யும் தேவதைகளும் கந்தர்வர்களும் தானவர்களும் எவரெவர் உளரோ அவர்களெல்லோரும் காந்தியின் மிகுதியால் ரக்த வர்ணமுடையவரும் ஸ்வர்ணத்தின் காந்தியுடையவர்களுமாயிருப்பார்களாக' என்று, இங்ஙனம் வரங் கொடுத்தனன். விஸ்வேதேவதைகளும் வாயுக்களும் அஷ்ட வஸுக்களும் தேவதைகளும் ஸாயங்கால ஸந்த்யையில் பர்வத ஸ்ரேஷ்டமாகிய ஸாவர்ணிமேருவைச் சேர்ந்து அங்கு ஸூர்யனுக்கு உபஸ்தானஞ் செய்வார்கள். ஸூர்யன் அவர்கள் செய்யும் பூஜையை அங்கீகரித்து அஸ்தமய பர்வதத்தை அடைந்து ஸமஸ்த பூதங்களுக்கும் புலப்படாதவனுவான். அந்த ஸாவர்ணி மேருவுக்கும் அஸ்தமய பர்வதத்திற்கும் பதினுயிரம்யோஜனை தூரம் இருக்கின்றது. ஸூர்யன் அந்தப் பதினுயிரம் யோஜனை தூரத்தை ஒரு நாழிகைக்குள் கடந்து சீக்ரத்தில் அந்த அஸ்தமய பர்வதத்திற்குப் போய்ச் சேருவான். அந்தப் பர்வத சிகரத்தில் விஸ்வகர்மாவால் நிர்மிக்கப்பட்ட பெரிய திவ்ய பவனம் ஒன்றுளது. அது ஸூர்யன்போல் தகதகவென்று விளக்கமுற்று மேடைகள் பற்பலவும் குவியல்குவியலாக நிரம்பப்பெற்றிருக்கும். மேலும், அதில் நானுவித பக்ஷிகள் நிறைந்து வியப்பை விளைக்கவல்ல அழகான வ்ருக்ஷங்கள் அமைந்து ரமணீயமாயிருக்கும். அது பாசாயுதத்தைக் கையிலேந்தினவனும் மஹானுபாவனுமாகிய வருணனது வாஸஸ்தானம். ஸாவர்ணிமேருபர்வதத்திற்கும் அஸ்தமய பர்வதத்திற்கும் நடுவில் பத்து சிகரங்களும் சித்ரவர்ணமுடைய வேதிகையும் அமைந்து பொன்மயமாகி அழகு விளங்கப்பெற்று ஓர் பனைமரம்

ப்ரகாசித்துக்கொண்டிருக்கும். தர்மங்களை உணர்ந்தவரும் தமது தவமஹிமையால் பூஜிக்கப்பட்டவரும் ப்ரஹ்மதேவனை நிகர்த்தவருமாகிய மேருஸாவர்ணியென்பவர் வாஸஞ் செய்யப்பெற்ற ஸாவர்ணிமேருவென்னும் பர்வதத்திலுள்ள ஸமஸ்த துர்க்க ப்ரதேசங்களிலும் ஸரஸ்ஸுக்களிலும் நதிகளிலும் ராவணனையும் ஸீதாதேவியையும் நன்கு தேடிப்பார்க்கவேண்டும். ஸூர்யன் போல் ப்ரகாசித்துக்கொண்டிருக்கும் மஹர்ஷியாகிய அம்மேருஸாவர்ணிக்குத் தலைசாய்த்து நமஸ்காரஞ் செய்து அவரைப் பார்த்து ஸீதாதேவியின் வ்ருத்தாந்தத்தைக் கேட்கவேண்டும். ஸூர்யன் ராத்ரி கடந்து விடியற்காலமாகையில் உதித்து உதய பர்வதம் முதற்கொண்டு இப்பொழுது சொன்ன அஸ்தமய பர்வதம் வரையிலுள்ள ப்ரதேசத்தை மாத்ரமே இருட்டைப் போக்கி ப்ரகாசிக்கச் செய்துகொண்டு அஸ்தகிரியைச் சேருவான். வானர ஸ்ரேஷ்டர்களே! இவ்வளவுதூரம் வரைக்குமே வானரர்களுக்குப் போக ஸாத்யப்படும். இதற்குமேல் ஸூர்ய ப்ரகாசமில்லாமையால் இருள் மூடப்பெற்று நகரம் க்ராமம் முதலிய ஏற்பாடில்லாமையால் என்னிருக்கிறதோ எமக்குத் தெரியாது. நீங்கள் அஸ்தமய பர்வதம் வரையில் சென்று ஸீதாதேவியுடையவும் ராவணனுடையவும் இருப்பிடத்தைத் தேடித் தெரிந்துகொண்டு ஒருமாதம் நிரம்புவதற்கு முன்னமே வந்து சேரவேண்டும். ஒரு மாதத்திற்கு மேல் இருக்கலாகாது. அங்ஙனம் மாதத்திற்குள் வாராமல் தாமதஞ் செய்வோனாயின் அவனுக்கு என்னால் மரணதண்டனை நேரும். உங்களோடுகூடச் சூரனும் என் மாமனுமாகிய ஸுஷேணன் வருவான். நீங்கள் இவன் விரும்பின கார்யங்களைச் செய்துகொண்டு, இவன் சொன்னதை அப்படியே யென்று செவியுற்று அங்ஙனமே நடக்க

வேண்டும். எனக்கு மாமனும் பூஜிக்கத் தகுந்தவனுமாகிய ஸுஷேணன் மஹா புஜன், மிகுந்த பலமுடையவன். நீங்களும் பராக்ரமசாலிகள். நீங்கள் இருவகையரும் சேர்ந்து ஸமஸ்த கார்யங்களையும் இங்ஙனம் செய்ய வேண்டுமென்று நிச்சயித்து வ்யவஸ்தை ஏற்படுத்திக் கொள்ள வல்லவர். நீங்கள் இந்த ஸுஷேணனைத் தலைவனாக ஏற்படுத்திக்கொண்டு இவனது ஆஜ்ஞைக்கு உட்பட்டு மேற்குத் திசையில் ஸீதாதேவியையும் ராவணனையும் தேடிப்பார்ப்பீர்களாக. அபார தேஜஸ்ஸுடைய ராமனது பார்யையை ஸீதாதேவியைக் கண்டே வருவீர்களாயின், நமக்கு ராமன் செய்த உபகாரத்திற்கு ப்ரத்யுபகாரஞ் செய்தவரராவோமாகையால் க்ருதார்த்தர்களாவோம். நான் சொன்னதேயன்றி இன்னம் இந்தக்கார்யத்தை ஸாதிக்கும் வழி உளதாயின், அதையுங்கூட நீங்கள் தேச காலங்களையும் கார்யா கார்யங்களையும் ஆலோசித்துச் செய்யவேண்டும்' என்றனன். அனந்தரம் ஸுஷேணன் முதலான வானரர்கள் அனைவரும் யுக்திகள் பொருந்தின ஸுக்ரீவனது ஆஜ்ஞையைக் கைப்பற்றி ஸுக்ரீவனிடம் செலவு பெற்றுக் கொண்டு வருணன் பரிபாலனஞ் செய்து வரும் மேற்குத் திசைக்குப் போயினர். நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

**ஸுக்ரீவன் வடதிசைக்குச் சதவலி முதலிய வானரர்களை அனுப்புதல்.**

தர்மங்களை உணர்ந்தவனும் ஸமஸ்த வானர ஸ்ரேஷ்டனுமாகிய ஸுக்ரீவன், அங்ஙனம் தன் மாமனாகிய ஸுஷேணனைமேற்குத்திக்குக்குப்போகும்படி அனுப்பி, அனந்தரம் வீரனும் வானர ஸ்ரேஷ்டனுமாகிய சதவலி

யைப் பார்த்து ப்ரத்யுபகாரத்தின் பொருட்டாகையால் தனக்கு ஹிதமாயிருப்பதும், அன்பிற்கிடமான ஸீதா தேவியின் சேர்த்திக்கு ஹேதுவாகையால் ராமனுக்கு ஹிதமாயிருப்பதுமாகிய வசனத்துடன் 'நீ உன்னைப் போல் பராக்ரமமுடையவராகிய லக்ஷம் வானரர்களை அழைத்துக்கொண்டு யமபுத்ரர்களாகிய இம்மந்த்ரிகளு டன்கூடி ப்ரயாணஞ் செய்வாயாக. நீங்கள், அகன்று ஹிமவத் பர்வதத்தினால் அலங்கரிக்கப்பட்ட வடதிசைக் குப் போய், அங்கு நிந்தைக்கிடமாகாத ராமனது பத் னியாகிய ஸீதாதேவியைத் தேடவேண்டும். வானரர் களே! நீங்கள் கார்யத்தை யறிந்தவரனைவரிலும் மேலா யிருப்பவர்; ஆகையால் நீங்கள் போகுங் கார்யம் நிறை வேறி ஸீதாதேவியைத் தேடிக்கொண்டுவந்து கொடுத் து ராமனுக்கு ஸந்தோஷத்தை விளைவித்தால், நாம் கடனினின்று விடுபட்டு க்ருதார்த்தராவோம். மஹா னுபாவனாகிய ராமன் முதலில் நமக்கு உபகாரஞ் செய்த னன். அதற்கு நாம் ப்ரத்யுபகாரஞ் செய்தால் நம் பிழை ப்பு ஸபலமாகும். முன்பு உபகாரஞ் செய்யாதவனாயினும் தன் கார்யத்தை நிறைவேற்ற விரும்புவானாயின் அவ னது கார்யத்தை நிறைவேற்றுமவனுக்கு ஜன்மம் ஸபல மாமென்னில்—இனிப் பூர்வம் உபகாரஞ்செய்தவனே தன் கார்யத்தை நிறைவேற்றிக்கொடுக்க விரும்ும்பொ ழுது அதை நிறைவேற்றுவதால் ஜன்மம் ஸபலமாமென் று சொல்லவேண்டுமோ? நீங்கள் எமக்கு ப்ரியத்தையும் ஹிதத்தையும் விரும்புமவராகையால், இங்ஙனம் ப்ரத்யு பகாரஞ் செய்யவேண்டு மென்னும் புத்தியைக் கைப் பற்றி ஸீதாதேவி அகப்படுமாறு கையிலாகுமளவும் ப்ர யத்னஞ் செய்யவேண்டும். சத்ருபட்டணங்களை வெல்ல வல்லவனாகிய இந்தப் புருஷோத்தமன் ராமன் ஸமஸ்த பூதங்களுக்கும் பூஜிக்கத்தகுந்தவன்; நம்மிடத்தில்

மிகுந்த ப்ரீதியுடையவன். ஆகையால் இவன்கார்யத்தை முக்யமாகச் செய்யவேண்டும். நீங்கள் வடதிசையில் ம்லேச்சதேசம் புலிந்ததேசம் சூரஸேனதேசம் ப்ரஸ்தல தேசம் இந்த்ரப்ரஸ்தம் முதலிய பரததேசம் தக்ஷிண குருதேசம் மத்ரதேசம் காம்போஜதேசம் யவனதேசம் சகதேசம் ஆரட்டதேசம் பாஹ்லிகதேசம் ரிஷிகதேசம் பௌரவதேசம் டங்கணதேசம் சீனதேசம் பரமசீன தேசம் விஹாரதேசம் தாரததேசம் ஹிமவத்பர்வதம் ஆகிய இவற்றில் முழுவதும்தேடி, அனந்தரம் துர்க்கம ஆரண்யத்திலும் நதிகள் பர்வதங்கள் முதலிய மற்று முள்ள இடங்களிலும் புத்திபராக்ரமத்துடன் தேடிப்பா ர்க்கவேண்டும். லவள்ளலத்தி வனங்களிலும் பத்மகவனங் களிலும் தேவதாருவனங்களிலும் திரிந்து ஸீதாதேவி யையும் ராவணனையும் நன்றாகத்தேடவேண்டும். அனந் தரம் தேவதைகளும் கந்தர்வர்களும் உலாவப்பெற்ற ஸோமாஶ்ரமத்திற்குப்போய் அங்கிருந்து பெரிய தாழ் வரைகளால் விளங்கும் காலபர்வதம்போய்ச் சேரவேண் டும். அந்தக் காலபர்வதத்தில் அகன்ற கல்வெடிப்புக ளிலும் குஹைகளிலும் திரிந்து ஆங்காங்கு மஹா பாக்ய வதியான ஸீதாதேவியைத் தேடவேண்டும். நீங்கள், பொன்விளையும் பூமியோடுகூடின பர்வதஶ்ரேஷ்டமா கிய அந்தக் காலபர்வதத்தைக்கடந்து, அனந்தரம் ஸுு தர்சன பர்வதத்திற்குப் போவீர்களாக. வானரர்களே! ஸுுதர்சனபர்வதத்தைக் கடந்த பின்பு பக்ஷிகளுக்கு வாஸஸ்தானமாகிய தேவஸகமென்னும் பர்வதம் உளது. அதில் நானாவித பக்ஷிகள் நிறைந்திருக்கும். பலவகை வ்ருக்ஷங்களும் விளங்கப்பெற்று அப்பர்வதம் மிகவும் ரம ணீயமாயிருக்கும். அந்தப் பர்வதத்திலுள்ள வனஸமூ ஹங்களிலும் மலையருவிகளிலும் குஹைகளிலும் திரிந்து அந்தந்த ஸ்தலங்களில் ஸீதாதேவியையும் ராவணனை

யும் தேடவேண்டும். அந்தப் பர்வதத்தையுங் கடந்த பின்புநாற்புறத்திலும் நூறுயோஜனை விஸ்தாரமுடைய சூன்யப்ரதேசம் ஒன்றுளது. அங்குப் பர்வதங்களாவது நதிகளாவது வ்ருக்ஷங்களாவது புலப்படா. ஆகையால் அங்கு எந்த ஜந்துவும் உண்டாகாது. மஹாபயங்கரமாகி மயிர்க்கூச்சலை விளைக்கும்படியான அந்தச் சூன்யாரண்யத்தை நீங்கள் தடைசெய்யாமல் த்வரையுடன் கடந்து வெளுத்து விளங்கும் கைலாஸபர்வதத்தைக்கண்டு ஸந்தோஷம் அடைவீர்கள். அந்தப் பர்வதத்தில் வெளுத்த மேகம்போல் விளக்கமுற்றுப் பொன்வேலைகள் செய்யப்பெற்று அழகான குபேரனது திவ்ய பவனம் உளது. அது விஸ்வகர்மாவால் நிர்மிக்கப்பட்டது. அதில் தாமரைகளும் கருநெய்தல்களும் ஏராளமாயிருக்கப்பெற்ற (மானஸமென்னும்) ஓர் தாமரையோடை உளது. அதில் ஹம்ஸங்களும் நீர்க்காகங்களும் நிறைந்திருக்கும். அப்ஸரஸ்த்ரீகள் குவியல் குவியலாக அங்கு விளையாடிக்கொண்டிருப்பார்கள். அக்கைலாயத்தில் விஸ்ரவஸ்ஸின் குமாரனும் செல்வப்பெருக்குடையவனும் யக்ஷராஜனுமாகிய குபேரன், ஸமஸ்தபூதங்களும் தன்னைப் பக்தியுடன் நமஸ்கரிக்கப்பெற்று யக்ஷர்களோடு விளையாடலுற்றிருப்பான். அந்தக் கைலாஸத்தில் சந்த்ரவர்ணமுடைய தாழ்வரைகளிலும் குஹைகளிலும் திரிந்து அந்தந்த இடங்களில் ஸீதாதேவியையும் ராவணனையும் தேடிப்பார்க்கவேண்டும். அனந்தரம் நீங்கள் க்ரௌஞ்சபர்வதஞ் சேர்ந்து அதில் குபேரனால் செய்யப்பட்டதும் ஒருவராலும் புகக்கூடாததுமாகிய ரந்த்ரத்தில் எள்ளளவும் பராக்கின்றி ஜாக்ரதையுடன் புகுவீர்களாக. ஏனென்னில்:—அதில் புகுவது மிகவும் கஷ்டம், அந்தப் பிலத்தில் ஸூர்யன்போல் மிகுந்த ஒளியுடன் விளக்கமுற்றவர்களும் ஸமஸ்த தேவதைகளாலும் நன்கு பூஜிக்கப்

பட்ட மஹானுபாவர்களும் தேவரூபர்களுமாகிய மஹர்ஷிகள் வாஸஞ்செய்வார்கள். ஆகையால் அங்குப்போவது கஷ்டம். அந்த க்ரௌஞ்சபர்வதத்தில் மற்ற குஹைகளிலும் தாழ்வரைகளிலும் சிகரங்களிலும் வெடிப்புகளிலும் நடுப்ரதேசங்களிலும் திரிந்து அவ்வவ்விடங்களில் ஸீதாதேவியைத் தேடவேண்டும். க்ரௌஞ்சபர்வதத்தின் ப்ரதான சிகரத்திலும் வ்ருக்ஷங்களில்லாத காமபர்வதத்திலும் பக்ஷிகளுக் கிருப்பிடமான மானஸபர்வதத்திலும் ஆங்காங்குத் தேடவேண்டும். அந்த மானஸபர்வதத்திற்கு ஸாமான்ய ப்ராணிகள் மாத்ரமேயன்றித் தேவதைகளும் தானவர்களும் கூடப் புகவல்லரல்லர். அதன் தாழ்வரைகளிலும் நடுப்ரதேசங்களிலும் மேல்பூமிகளிலும் நீங்களெல்லோரும் நன்கு தேடிப்பார்க்கவேண்டும். க்ரௌஞ்சபர்வதத்தைக் கடந்துபோகையில் மைநாகபர்வதம் இருக்கின்றது. அங்கு மயனென்னும் தானவன் தனக்கு க்ருஹம் நிர்மித்துக் கொண்டிருக்கின்றனன். அந்தப் பர்வதத்தின் தாழ்வரைகளிலும் நடுப்ரதேசங்களிலும் குஹைகளிலும் மேலும் கிம்புருஷ மடந்தையர்களின் வாஸஸ்தானங்களிலும் திரிந்து அந்தந்த இடங்களில் ஸீதாதேவியை நன்றாகத் தேடவேண்டும். அந்த இடத்தைத் தாண்டிப்போகையில் ஸித்தர்கள் உலாவப்பெற்ற ஓர் ஆஶ்ரமம் இருக்கின்றது. அங்கு [1]அணிமாத்யஷ்டைஶ்வர்ய முடையவர்களும் தவப்பெருக் குடையவருமாகிய வைகானஸர்களும் வாலகில்யர்களும் வஸித்திருக்கின்றனர். தவமஹிமையால் அணிமாத்யஷ்

1 அணிமை முதலிய அஷ்டைஶ்வர்யங்களாவன—'அணிமா மஹிமாசைவ கரிமா லகிமா ததா । ப்ராப்தி: ப்ராகாம்ய மீஶத்வம் வஶித்வம் சாஷ்ட ஸித்தய:' என்றுணர்க.

டைஶ்வர்ய ஸித்திகளைப்பெற்றுப் பாபமற்றவரான அம் மஹானுபாவர்களுக்கு நீங்கள் அவஶ்யம் நமஸ்காரஞ் செய்யவேண்டும். நமஸ்காரஞ்செய்து வணக்கத்துடன் ஸீதாதேவியின் வ்ருத்தாந்தத்தை வினவவேண்டும். அந்த ஆஶ்ரமத்தில் பொன் தாமரைகள் நிறைந்து பாலஸூர்யன்போல் விளங்குவதும் அழகான ஹம்ஸங் கள் திரியப்பெற்றதுமாகிய வைகானஸ மென்னும் ஓர் தடாகம் உளது. குபேரனது பட்டத்து வாஹனமாகிய ஸார்வபௌமமென்னும் திக்கஜம் தன் பேடைகளுடன் கூடி எப்பொழுதும் அங்கு விளையாடிக் கொண்டிருக் கும். அந்த வைகானஸ ஸரஸ்ஸுக் கவ்வருகில் ஆகா யத்தில் சந்த்ரஸூர்யர்களின் [1] ப்ரசாரமாவது நக்ஷத் ரங்களுடையவும் மேகங்களுடையவும் ஸஞ்சாரமாவது எள்ளளவும் கிடையாது. அது நிஶ்ஶப்தமாகிச் சூன்ய மாயிருக்கும். சந்த்ரஸூர்யர்களின் ப்ரசாரம் அங்கு இல்லாமற்போயினும் தேவதைகளைப்போன்றவர்களும் இயற்கையாகவே விளைந்த ஜ்ஞானமுடையவர்களுமா கிய தபஸ்ஸித்தர்கள் இளைப்புற்றிருப்பார்களாகையால் அவரது தேஹகாந்திகளால் ஸூர்யகிரணங்களாற் போலவே அவ்விடம் வெளிச்சம் உண்டாகப்பெற்றிருக் கும். அந்த ப்ரதேசத்தைக் கடந்தபின்பு சைலோதை யென்னும் நதி இருக்கின்றது. அந்நதியின் இருகரை களிலும் கீசகங்களென்னும் (காற்றுவீசும்பொழுது சப் திக்குந் தன்மையுள்ள) மூங்கில்கள் இருக்கின்றன. அவ்விரண்டு கரைகளிலுமுள்ள மூங்கில்கள் மிகவும் உயர்ந்து ஒன்றோடொன்று கனமாகப் பின்னிக்கொண் டிருக்கையால் ஸித்தர்கள் அவைகளின்மேல் அக்கரைக் குப்போவதும் வருவதுமாயிருப்பார்கள். அனந்தரம் புண்யவான்களுக்கு வாஸஸ்தானமாகிய உத்தரகுரு தேசம்இருக்கின்றது. அந்தத்தேசம் புண்யஞ்செய்தவர்

1 திரிதல்.

அதன் பலன்களை அனுபவிப்பதற்காகவே ஏற்பட்ட தாகையால், அங்குப் பொன்தாமரைகளோடுகூடி நீல வைடூர்ய வர்ணமுடைய தாமரைக்கொடிகளால் அலங் கரிக்கப்பட்டு ஜலம் ஸம்ருத்தமா யிருக்கப்பெற்ற நதிகள் ஆயிரமாயிரமாயிருக்கின்றன. அவ்வுத்தரகுரு தேசத் தில் குளங்கள் செந்தாமரை வனங்களும் பொன்தாமரை வனங்களும் பாலஸூர்ய வர்ணம்பொருந்திய தாமரை வனங்களும் நிரம்பி விளக்கமுற்றிருக்கும். அந்தத் தேசம் முழுவதிலும் நீலமணிகள்போன்ற இதழ்களும் பொன்வர்ணமுடைய தாதுக்களும் பொருந்தி அற்புத மாயிருக்கின்ற கருநெய்தல் குளங்கள் மிகுந்திருக்கும். மேலும் அந்தத்தேசத்தில் நதிகளில் திரட்சியான முத் துக்களும் பெரு விலையுள்ள மணிகளும் பொன்களும் பெரு மணற் குன்றுகள்போலிருக்கும். ஸமஸ்த ரத்ன மயமான சிறந்த பர்வதங்களும் பொன் வர்ணங்களாகி அக்னிபோல் நிகுநிகென்று விளங்கும் பர்வதஸ்ரேஷ்டங் களும் அந்நதிகளின் இடையில் ஆங்காங்கு அமிழ்ந்து ப்ரகாசித்துக்கொண்டிருக்கும். அங்கு வ்ருக்ஷங்கள் எப்பொழுதும் புஷ்பங்களைப் பூத்துப் பழங்களை விளைத் துப் பக்ஷிகள் நிறைந்து நல்ல வாஸனையும் இனிய ருசி யும் பொருந்தி ஸுகஸ்பர்சமுடையவையாகி விரும்பின வற்றை யெல்லாங் கொடுத்துக்கொண்டிருக்கும். மே லும் சில உத்தம வ்ருக்ஷங்கள் முத்துக்களும் வைடூர்யங் களும் இழைக்கப் பெற்றிருக்கையால் வியப்பை விளை விப்பவைகளும் எல்லாருதுக்களிலும் தரிக்கத்தக்கவை களுமாகிய ஆபரணங்களை ஸ்த்ரீகளுக் குரியதாகவும் புருஷர்களுக் குரியதாகவும் கொடுக்கின்றன. வேறு சில வ்ருக்ஷங்கள் மிகுந்த விலையுடையவைகளும் சித்ரங் களான படுக்கைகள் அமைக்கப் பெற்றவைகளுமாகிய பலவகைப் பொற்கட்டில்களைக் கொடுக்கின்றன. அந்த

உத்தரகுருதேசத்தில் இதர வ்ருக்ஷங்களும் சில மனத்திற்கினிய பூமாலைகளையும் மிகவும் சிறந்த பானத்ரவ்யங்களையும் நானாவித பக்ஷ்யங்களையும் குணவதிகளும் ரூபவதிகளும் யௌவனம் அமைந்தவர்களுமாகிய அழகான மடந்தையர்களையுங் கொடுக்கின்றன. அங்கு கந்தர்வர்களும் கின்னரர்களும் கிம்புருஷர்களும் ஸித்தர்களும் நாகர்களும் வித்யாதரர்களும் ஸூர்யனைப்போல் விளக்க முற்றவராகிக் காதலிகளுடன் விளையாடிக் கொண்டிருப்பார்கள். அங்கு அனைவரும் புண்யகர்மசிலர்கள்; எல்லோரும் விளையாடுந்தன்மையர்; எல்லோரும் காமமும் அர்த்தமும் ஸம்ருத்தமாயிருக்கப்பெற்றுத் தந்தமது காதலிகளுடன் வாஸஞ் செய்வார்கள். அங்கு கீதவாத்ய கோஷங்களும் மிகுந்த சிரிப்பு சப்தங்களும் ஸமஸ்த பூதங்களின் செவிக்கும் மனத்திற்கும் இனிப்பாகப் புலப்பட்டுக்கொண்டிருக்கும். மேலும் அந்தத் தேசத்தில் ஸந்தோஷ மற்றவனாவது காதலிகளைப் பிரிந்தவனாவது ஒருவனும் அகப்படமாட்டான். அங்கு மனோஹரங்களான ஸுகம் முதலிய குணங்கள் நாள்தோறும் வளர்ந்து வருகின்றன. அந்த உத்தரகுருதேசத்தைக் கடந்து போகையில், வடக்கு லவண ஸமுத்ரம் இருக்கின்றது. அந்த ஸமுத்ரத்தில் மத்ய ப்ரதேசத்தில் ஸ்வர்ணமயமான ஸோமகிரியென்னும் ஓர் மஹாபர்வதம் இருக்கின்றது. விஷ்ணுலோகத்திலும் ப்ரஹ்மலோகத்திலும் இந்த்ர லோகத்திலும் வஸிக்கும் தேவதைகள் அந்த ஸோமகிரியைப் பார்க்கவல்லரேயன்றி மற்றவர்க்கு அதைப் பார்ப்பதே அஸாத்யம். அந்தத் தேசத்தில் ஸூர்யனது நடையாட்டம் இல்லாமற் போயினும், ஸூர்ய காந்தியின் நடையாட்டமுடைய தேசம் ப்ரகாசிக்கின்ற ஸூர்யனால் வெளிச்சமுற்றிருப்பதுபோல், அம்மஹா பர்வதத்தின் ப்ரகாசத்தினால்

இது வெளிச்சமுடையதாயிருக்கும். அந்த ஸோமகிரியில் விஸ்வாத்மாவாகிய விஷ்ணுபகவானும் ஏகாதச ருத்ர ஸ்வரூபியாகிய சிவனும் ஸர்வதேவதைகளுக்கும் அதீஸ்வரனுகிய ப்ரஹ்மாவும் ஒவ்வொருவரும் ப்ரஹ்மர்ஷிகள் பலரும் தம்மைச் சூழ்ந்திருக்கப்பெற்று அங்கு வாஸஞ் செய்வார்கள். அந்த உத்தரகுருதேசத்திற்கு வடக்காக நீங்கள் எள்ளளவும் போகவேண்டாம். தைத்யர்முதலிய விசேஷ சக்தியுடையவர்க்கும் அதற்கு மேல் போகமுடியாது. அந்த ஸோமகிரி தேவதைகளுக்கும் புக அரிதாயிருக்கும். ஆகையால் நீங்கள் அந்தப் பர்வதத்தைப் பார்த்து, உடனே அவ்விடமிருந்து சீக்ரமாகத் திரும்பி வரவேண்டும். வானரோத்தமர்களே! இவ்வளவு தூரம் வரையிலுமே வானரர்களுக்குப்போக முடியும். அதற்குமேலுள்ள தேசம் ஸூர்யஸஞ்சாரமில்லாமையால் அந்தகாரம் மூடப்பெற்று நகரம் க்ராமம் முதலிய ஏற்பாடுகளின்றி யிருப்பதாகையால் எப்படியிருக்குமோ எமக்குத் தெரியாது. நான் இப்பொழுது விவரித்துச் சொன்ன ப்ரதேசங்கள் முழுவதிலும் நன்கு தேடிப்பார்ப்பீர்களாக. மேலும் அந்தத்திசையில் நான் சொல்லாத ப்ரதேசங்கள் எவையாயினும் உளவாயின் அவற்றிலுங்கூடத் தேடவேண்டுமென்று மதிகொள்வீர்களாக. வானரர்களே! நீங்கள் வேகத்தில் வாயுவையும், தேஜஸ்ஸில் அக்னியையும் நிகர்த்தவராகையால் நீங்கள் நன்ருகத் தேடி ஸீதாதேவியைப் பார்த்துக் கார்யத்தை ஸாதித்துக்கொண்டு வருவீர்களாயின் ராமனுக்கு ப்ரியஞ் செய்ததாகும் எனக்கும் அதைக்காட்டிலும் மஹா ஸந்தோஷத்தை விளைத்தவராவீர். வானரர்களே! அங்ஙனம் கார்யஸித்தியைச் செய்தபின்பு நீங்களும் உங்கள் பந்துக்களும் என்னுல் மனோஹரமான ஸமஸ்த ஸூகாதிகளாலும் பூஜிக்கப்

பட்டவராகிக் சத்ருக்களொருவருமின்றிக் காதலிகளு டன்கூடி ப்ராணிகள் பலரையும் போஷித்துக்கொண்டு ஸுகமாகப் பூமி முழுமையும் திரிந்து விளையாடிக் கொண்டிருப்பீர்கள்' என்றனன். நாற்பத்து மூன்று வது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமன் ஹனுமானுக்கு அடையாளமாக அங்குலீயகங் கொடுத்தல்.

ஸுக்ரீவன் விசேஷித்து ஹனுமானிடத்தில் தன் கார்யத்திற்கு வேண்டிய ஸமாசாரத்தைச் சொல்லி னன். ஏனென்னில்:—கபிஸ்ரேஷ்டனுகிய அந்த ஹனு மான் கார்யத்தைத் தப்பாமல் ஸாதிப்பவனென்று ஸுக் ரீவன் நிச்சயித்திருந்தனன். ஸமஸ்த வானரர்களுக்கும் அதிநாதனுகிய ஸுக்ரீவன் மிகுந்தஸந்தோஷம் அடை ந்து பராக்ரமம் பொருந்திய வாயுகுமாரனுகிய ஹனுமா னைப் பார்த்து 'வானரர் தலைவனே! தன்னைப்போன்ற சத்ருக்கள் நிறைந்திருக்கும் பூமியிலாவது, மேகாதி கள் ஸஞ்சரிக்கும்படியான பிடிப்பில்லாத அந்தரிக்ஷ மென்னும் ஆகாயத்திலாவது, சுழல்காற்று வீசும்படி யான அம்பரமென்னும் ஆகாயத்திலாவது, ப்ரபலர்க ளான தேவதைகள் வஸிக்கும் ஸ்வர்க்கத்திலாவது, திர் யக் ஜாதிகள் ஸஞ்சரிக்கமுடியாத ஜலத்திலாவது நீ தடையின்றி ஸஞ்சரிக்கவல்லவன். அஸுரலோகமும் கந்தர்வலோகமும் தேவலோகமும் ஸமுத்ரங்களும் பர் வதங்களும் அமைந்த ஸமஸ்த லோகங்களும் உனக்குத் தெரிந்தவைகளே. மஹாகபீ! வீரோத்தமனே! எதி ரில்லாத கமனத்திலும் (திரிவதிலும்) வேகத்திலும் தேஜஸ்ஸிலும் லாகவத்திலும் நீ மஹா தேஜஸ்வியா கிய உன் தந்தை வாயு தேவனுக்கொப்பானவன்.

தேஜஸ்ஸில் உன்னைக்காட்டிலும் மேலான ப்ராணி ஒன்றும் பூமியில் உண்டாகவே உண்டாகாது. உன்னை நிகர்த்திருப்பதும் ஒன்றுமே இல்லை. ஆகையால் ஸீதா தேவியைப் பெறும்படி நீயே தகுந்த ப்ரயத்னஞ்செய்து கார்யத்தை நிறைவேற்றவேண்டும். ஹனுமானே! நீ நீதியில் பண்டிதன். பலமும் புத்தியும் பராக்ரமமும் தேசகாலங்களை அனுஸரித்திருப்பதும் நீதியும் ஆகிய இவையெல்லாம் உன்னிடத்திலிருப்பதுபோல் மற்றெவனிடத்திலும் இராது' என்றனன். ராமன், ஸுக்ரீவன் ஹனுமானைப் பார்த்துச் சொல்லும் வார்த்தைகளைக் கேட்டு, அவன் கார்யபாரத்தையெல்லாம் ஹனுமான் மேல் வைத்திருப்பதை அறிந்தும், தானும் தனக்குத் தெரிந்தவரையிலும் ஹனுமான் கார்யஸாதகனென்று தெரிந்துகொண்டும், தனக்குள் 'வானரேஸ்வரன் ஸுக்ரீவன், ஹனுமான் தப்பாமல் கார்யத்தை ஸாதிப்பானென்று எல்லாவிதத்திலும் நிச்சயித்துக்கொண்டிருக்கின்றனன். ஹனுமானும் செய்ய நிச்சயித்த கார்யத்தைச் செய்து முடிக்குந் தன்மையன். இந்த ஹனுமான் முன்பு பல பெரிய கார்யங்களை ஸாதித்ததனால் இவன் சக்தி அனைவர்க்கும் தெரிந்திருக்கின்றது. ஆனது பற்றியே இவனை அதிபதியாகிய ஸுக்ரீவன் மிகவும் கைப்பற்றிக் கௌரவித்து வருகின்றனன். இப்படிப்பட்டவன் ப்ரயாணமாய்ப் போகையில் கார்யம் கைகூடுவது எள்ளளவும் தவறுவது;மிகவும் நிச்சயம்' என்று ஆலோசித்தனன். மஹாதேஜஸ்வியாகிய ராமன், கார்யங்களை நிறைவேற்றுவதால் மிகவும் புகழ் பெற்றிருக்கிற அந்த ஹனுமானைப் பார்த்துத் தன் இந்த்ரியங்களும் மனதும் களிப்புறப் பெற்றுத் தன்னை ப்ரயோஜனம் கைகூடப் பெற்றவனாக நினைத்துக்கொண்டனன். அனந்தரம் அந்தப் பரந்தபன் மனக்களிப்புற்று ராஜகுமாரத்தியாகிய

ஸீதாதேவிக்கு அடையாளமாகத் தன் பேருடன்கூடி மிகவும் அழகாயிருக்கின்ற மோதிரத்தை ஹனுமானிடங்கொடுத்து, 'கபிஶ்ரேஷ்டனே! இந்த அடையாளத்தைப் பார்த்து ஸீதை உன்னைக் குறித்து ஸம்சயமாவது பயமாவது உண்டாகப்பெறாமல் நீ என்னிடமிருந்து வந்தவனென்று தெரிந்துகொள்வாள். வீரனே! உனது உத்ஸாஹமும் பலமும் பராக்ரமமும் ஸுக்ரீவன் உன்னுடன் சொன்னவாய் ஸமாசாரமும், கார்யஸித்தி தப்பாமல் நேருமென்று எனக்குச் சொல்பவைபோலிருக்கின்றன' என்றனன். வானரஶ்ரேஷ்டனாகிய அந்த ஹனுமான் அந்த அங்குலீயகத்தை வாங்கிச் சிரஸில் வைத்துக்கொண்டு கைகூப்பி ராமனது பாதாரவிந்தங்களில் ப்ரணாமஞ்செய்து உடனே புறப்பட்டனன். வீரனாகிய அந்த வாயுகுமாரன், பெரிய வானர ஸைன்யம் பின்றொடர்ந்து வரப்பெற்று அந்த ஸைன்யம் முழுவதையும் இழுத்துக்கொண்டு மேகங்கள் இல்லாத ஆகாயத்தில் நிர்மலமான மண்டலத்துடன் நக்ஷத்ர ஸமூஹங்களோடு விளங்கும் சந்த்ரன்போல் ப்ரகாசித்தனன். மீளவும் ராமன் ஹனுமானைப் பார்த்து 'ஹனுமானே! நீ மஹாபலமுடையவன்; ஸிம்ஹம்போல் பராக்ரமம் மிகுந்திருக்கப்பெற்றவன்; ஆகையால் உன் பலத்தை ஆஶ்ரயித்திருக்கின்றனன். அபாரமான உன் பராக்ரமங்களை யெல்லாங்காட்டி ஸீதை அகப்படும்படி ப்ரயத்னஞ் செய்யவேண்டும்' என்றனன். நாற்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அனுப்பப்பட்ட வானர ஸைன்யங்களின் ஸங்நாஹம்.

வானர நாதனாகிய ஸுக்ரீவன் அந்த வானரர்களை அழைத்து ராமகார்யம் ஸித்திப்பதற்காகப் பக்ஷபாதமில்லாமல் மீளவும் அவர்களைப் பார்த்து 'நான் எவ

ரெவர்க்கு எந்தெந்தத் திக்கில் எப்படியெப்படி தேடச் சொன்னேனே அவரவர் அந்தந்தத் திசைகளில் அப்ப டியப்படியே தேடவேண்டும்' என்றனன். அந்த வான ரஸ்ரேஷ்டர்கள் தமது அதிபதியின் உக்ரமான ஆஜ் ஞையைக் கேட்டு, அனந்தரம் எல்லோரும் விட்டில்கள் போல் கணக்கின்றிப் பூமியெல்லாம் நிறைத்து ப்ரயாண மாய்ப் புறப்பட்டனர். ராமனும், வானரர்கள் ஸீதை யைப் பார்த்து வருவதற்குக் கெடுவாக ஏற்படுத்தின அம்மாதம் எப்பொழுது கடக்குமோவென்று எதிர் பார்த்துக்கொண்டு லக்ஷ்மணனுடன் அந்த ப்ரஸ்ரவண பர்வதத்திலேயே வஸித்திருந்தனன். அப்பொழுது·வீர னுகிய சதபலி ஹிமவத்பர்வதத்தினல் சூழப்பட்டு ரமணீ யமாயிருக்கும் வடதிசையைக் குறித்துப் போகத் தொடங்கினன். வானரயூதபதியாகிய விநதன் கிழக்குத் திக்குக்குப்போக முயன்றனன். வானரயூதநாதனும் வாயுபுத்ரனுமாகிய ஹனுமான், தாரன், அங்கதன் முத லிய வானரவீரர்களோடு அகஸ்த்ய மஹர்ஷி ஸஞ்சரிக் கும்படியான தென்திசைக்குப்போக ஸங்காஹங் கொண் டனன். வானரஸ்ரேஷ்டனுகிய ஸுஷேணன் மஹா பயங் கரமும் வருணனுல் பாதுகாக்கப்பட்டதுமாகிய மேற்குத் திக்குக்குப் போக விருப்பமுற்றனன். முன்னமே ஸுக் ரீவன் ராஜ்ய லாபத்தினல் மனக்களிப்புற்றவன்; இப் பொழுது முக்யர்களான வானரஸேனுபதிகளை ஸமஸ்த திசைகளுக்கும் க்ரமப்படி அனுப்பி ராமகார்யத்தையும் நிறைவேற்றினுகையால் முன்பைக்காட்டிலும் மேலா னஸுகத்தை அடைந்து ஆநந்தித்தனன். அந்தவானர யூதநாதர்களனைவரும் ராஜாவாகிய ஸுக்ரீவனுல் ஆஜ் ஞாபிக்கப்பட்டவராகி 'ராவணனைக் கொன்று ஸீதா தேவியைக் கொண்டுவருவோம்' என்று சொல்லிக்கொ ண்டு தந்தமது திசைகளுக்கு த்வரைப்பட்டுப் போயினர்.

மஹா பலிஷ்டர்களான அவ்வானரர்கள் சப்தஞ் செய்து கொண்டும், மேலும் ஸந்தோஷத்தின் மிகுதியால் உரக்கக் கூச்சலிட்டுக்கொண்டும் பயங்கரமாக மொழிந்து ஸிம்ஹநாதங்களைச் செய்து விரைவாக ஓடிச்சென்று விகார சப்தங்களைச் செய்துகொண்டும் ப்ரயாணமாய்ப் போயினர். 'ராவணன் யுத்தத்திற்கு வருவானாயின், நானொருவனே அவனைக் கொன்றுவிடுவேன்' என்று ஒருவன் மொழிந்தனன். ஒருவன் 'நான், ராவணனைக் கொன்று அங்கிருந்து ஶ்ரமத்தினால் கிடுகிடுவென்று நடுங்குகின்ற ஸீதாதேவியை இதோ இப்பொழுதே மிக்க வேகத்துடன் கொண்டுவருகிறேன். நீங்கள் இங்கேயே நிற்பீர்களாக' என்றனன். 'ஸீதாதேவி பாதாளத்திலிருப்பினும் நானொருவனே போய்க்கொண்டுவருகிறேன்' என்று மற்றொருவன் மொழிந்தனன். 'நான் மரங்களை முறித்துப் போகடுகிறேன். நான் பர்வதங்களை விழத்தள்ளுகிறேன். நான் பூமியைப் பிளந்துவிடுவேன். நான் ஸமுத்ரங்களைக் கலக்கி விடுகிறேன்' என்று ஒவ்வொருவனும் பயங்கரமாக மொழிந்தனர். 'நான் ஒரு யோஜனை தூரம் கிளம்பித் தாண்டுவேன். இதற்கு ஸந்தேஹமில்லை' என்று ஒருவன் மொழிந்தனன். 'நான் நூறு யோஜனை கிளம்புவேன்' என்றனன், மற்றொருவன். 'நான் நூறுயோஜனைகளுக்குமேலும் தாண்டுவேன்' என்று மற்றொருவன் மொழிந்தனன். 'பூமியிலும் ஸமுத்ரத்திலும் பர்வதங்களிலும் வனங்களிலும் பாதாளமத்யத்திலும் நான் தடையின்றி ஸஞ்சரிப்பேன்' என்றொருவன் மொழிந்தனன். இவ்வண்ணம் அப்பொழுது அவ்விடத்தில் பலகர்விதர்களாகிய வானரர்கள் வானரேந்த்ரனாகிய ஸுக்ரீவனுக் கெதிரில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வசனங்களைக் கூறினர். நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுக்ரீவன் ராமனுக்கு ஸமஸ்த பூமண்டலமும் தனக்குத் தெரிந்த விதத்தைக் கூறுதல்.

அந்த வானரமுக்யர்கள் போனபின்பு, ராமன் ஸுக்ரீவனைப் பார்த்து 'நீ ஸமஸ்த பூமண்டலத்தையும் எப்படி அறிந்தனை?" என்று வினவினன். பிறகு ஸுக்ரீவன் ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து ராமனைப் பார்த்துப் 'புருஷதிலகனே! ஸமஸ்த வ்ருத்தாந்தத்தையும் ஸவிஸ்தரமாகச் சொல்லுகிறேன் கேட்பாயாக. மஹிஷத்தினுருவமுடைய துந்துபியென்னும் அஸுரனும் அவன் பிள்ளை மாயாவி யென்பவனும் வாலியின்மேல் எதிர்த்து வரும்பொழுது, அவன், அவ்விருவரையும் மலயபர்வதத்தின் குஹைக்குத் துரத்தினன். வாலி அவர்களைக் கொல்லும் பொருட்டு அம்மலயபர்வதத்தின் குஹைக்குள்கூட ப்ரவேசித்தனன். அப்பொழுது வாலி வணக்கத்துட னிருக்கிற என்னைக் குஹையின் வாசலில் காவல் வைத்தனன்; அனந்தரம் ஒரு ஸம்வத்ஸரம் கடந்தபின்னும் வாலி வெளிப்புறப்பட்டு வரவில்லை. அனந்தரம் அப்பொழுது ரக்த ப்ரவாஹத்தினால் அந்தப் பிலம் முழுமையும் நிரம்பிற்று. நான் அதைக்கண்டு ஆச்சர்யம் அடைந்து 'எனதண்ணனுக்கு என்னுயிற்றோ' என்னும் துக்கத்தினால் விஷந் தின்றவன்போல் பீடிக்கப்பட்டனன். அனந்தரம் எனதண்ணன் வாலி ஸ்பஷ்டமாக முடிந்திருப்பானென்று எனக்குப் புத்தி உண்டாயிற்று. மஹிஷாகாரனாகிய துந்துபி குஹையினின்று வெளிப்பட்டு வரமுடியாமல் அங்கேயே நாசம் அடையவேண்டுமென்று, நான் அந்தக் குஹையின் வாசலை மலைபோன்ற பெருங்கல்லையிட்டு மூடிவிட்டனன். பின்பு, நான் வாலி பிழைத்திருப்பானென்னும் விஷயத்தில் ஆசையற்றுக் கிஷ்கிந்தைக்கு வந்து தாரையையும் ருமையையும் பெற்று மிகவும் பெரிதாகிய வானர ராஜ்

யத்தையெல்லாம் கைப்பற்றிக் கொண்டனன். நான் கிஷ்கிந்தையில் நண்பர்கள் சூழப்பெற்று எந்தப் பயமுமின்றி ஸுகமாயிருந்தனன். அனந்தரம், தானவர் தலைவனாகிய மாயாவியைக்கொன்று வாலியும் வந்தனன். பிறகு நான் அண்ணனென்னும் கௌரவத்தினாலும் பயத்தினாலும் கட்டுப்பட்டு வாலிக்கு மீளவும் ராஜ்யத்தைக் கொடுத்தனன். அவ்வாலி துஷ்ட ஸ்வபாவனாகையால் கோபாவேசங்கொண்டு இந்த்ரியங்கள் கலங்கப்பெற்று என்னைக் கொல்லத் தொடங்குகையில், நானும் என் மந்த்ரிகளோடுகூட ஓடிப்போயினன். அவனும் கோபத்தினால் என்னைப் பின்றொடர்ந்து துரத்தினன். அனந்தரம் நான வாலிபயத்தினால் மந்த்ரிகளோடுகூடி நானாவித நதிகளையும் வனங்களையும் பட்டணங்களையும் பார்த்துக்கொண்டு ஓடினேன். அனந்தரம் அப்பொழுது பூமிமுழுமையும் குளப்படிபோல் நினைத்துக் கண்ணாடியைப்போலவும் கொள்ளிக்கட்டையின் சக்ரத்தைப் போலவும் ஸ்பஷ்டமாகக் கண்டனன். அப்பொழுது நான் வாலியால் பின்றொடர்ந்து துரத்தப்பட்டு ஓடிக்கொண்டு கிழக்குத்திக்குக்குச் சென்று நானாவித வ்ருக்ஷங்களையும் பர்வதங்களையும் ரமணீயங்களான நதிகளையும் பலவகைப்பட்ட ஸரஸ்ஸுக்களையும் கண்டனன். அங்குக் கைரிகதாதுக்களால் அழகாயிருக்கின்ற உதய பர்வதத்தையும் எப்பொழுதும் அப்ஸரஸ்த்ரீகளால் ஸேவிக்கப்பட்ட க்ஷீர ஸமுத்ரத்தையும் கண்டனன். ப்ரபூ கீழ்த்திசையினின்று திரும்பி வேகமாக ப்ரயாணமாய் வந்தனன்; நான் திரும்பிவருங்காலத்தில் வாலி என்னைப் பின்றொடர்ந்து துரத்தினன். அனந்தரம் நான் கிழக்குதிக்கினின்று மீளவும் திரும்பி விந்த்ய பர்வதத்தின் வ்ருக்ஷங்களால் சூழப்பட்டுச் சந்தனமரங்களால் அழகாயிருக்கின்ற தென்திசையைக் குறித்து

ஓடிப்போயினன். பிறகு நான் தென்திசையில் மற்றுஞ் சில வ்ருக்ஷங்களேயும் பர்வதங்களேயும் பார்த்துக் கொண்டு போகையில், வாலி விடாமல் துரத்துவதைக் கண்டு, பிறகு மேற்குத் திக்குக்குப் போயினன். நான் மேற்குதிக்கில் நானுவித தேசங்களேயும் பார்த்துப் பர்வ தஶ்ரேஷ்டமாகிய அஸ்தமய பர்வதத்தைக் கண்டு அந் தப்பர்வதத்தில் தங்கியிருப்பினும் வாலி விடாமல் என் னே மிகவும் துரத்திக்கொண்டு வருகையில் திரும்பி வடதிசையைக் குறித்து ஓடிப்போயினன். வடதிசையில் ஹிமவத்பர்வதத்தையும் மேருபர்வதத்தையும் வடக்கு ஸமுத்ரத்தையுங் கண்டனன். இப்படி எங்குப்போ யினும் வாலி விடாமல் துரத்திக்கொண்டு வருகை யால் எனக்கு ரக்ஷகனுவது இருப்பிடமாவது நேரா திருக்கையில், அப்பொழுது புத்தியிற் சிறந்த ஹனு மான் என்னேப் பார்த்து 'வானரேஶ்வரனே! முன்பு மதங்க மஹர்ஷி அந்த ஆஶ்ரம மண்டலத்தைக் குறித் து வானரேஶ்வரனுகிய வாலியைச் சபித்திருக்கிருரல் லவா? அது இப்பொழுது எனக்கு நினேவுக்கு வந்தது. அந்தச் சாபத்தினுல், வாலி அவ்வாஶ்ரமத்தில் ப்ரவே சிப்பானுயின், அவன் சிரஸ்ஸு நூறுசுக்கலாய் வெடித் துப்போகும். ஆகையால் நாம் மதங்காஶ்ரமத்தில் ஸுகமாகப் பயமின்றி வஸித்திருக்கக்கூடும்' என்றனன். ராஜகுமாரனே! அனந்தரம் நான் ருஶ்யமூகபர்வதம் வந்து சேர்ந்தனன். வாலி அப்பொழுது மதங்கமாமுனி யிடம் பயத்தினுல் இவ்விடம் வரவில்லே. ராஜனே! நான் இவ்வண்ணம் அப்பொழுது பூமண்டலத்தை யெல்லாம் ப்ரத்யக்ஷமாகக் கண்டனன். பிறகு இந்த ருஶ்யமூக பர் வதத்தின் குஹைக்கு வந்து சேர்ந்தேன்' என்றனன்.

நாற்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தென் திசைக்குப் போனவர் தவிர மற்றத் திசைகளுக்குப் போனவ ரெல்லோரும் திரும்பி வருதல்.

கபிராஜனுகிய ஸுக்ரீவன் ஸீதையைப்பார்த்து வரும்பொருட்டு ஆஜ்ஞாபித் தனுப்பின வானரயூத நாயகர்கள், அவன் சொன்னபடியே சீக்ரமாக அந்தந் தத் திசைகளுக்குப் போயினர். அவர்கள் ஸரஸ்ஸுக் களிலும் நதிகளிலும் புதர்களிலும் செடி செட்டில்லாத பொட்டை நிலங்களிலும் பட்டணங்களிலும் நதிகளால் புகக்கூடாத ப்ரதேசங்களிலும் பர்வதங்களிலும் ஸீதா தேவியைத் தேடினர். ஸுக்ரீவன் ஆஜ்ஞாபித்த வானர ஸேனுநாயகர்கள் அனைவரும், பர்வதங்கள் சிறிய வனங்கள் பெரிய அரண்யங்கள் முதலிய ப்ரதேசங்களெல்லாவற்றிலும் நன்ருகத் தேடினர். அவர்களெல்லோரும் ஸீதையைக் கண்டுபிடிக்கும் விஷயத்திலேயே மனவூக்கம் மிகப்பெற்று, ஆகாசத்தில் ஸஞ்சரிப்பவராகி வேறுவேருகப் பகலெல்லாம் தேடி ராத்ரியில் பூமியில் ஒருவரோடொருவர் சேர்ந்திருந்தனர். அந்த வானரர்கள் அந்தந்த இடங்களில் அம்மாதத்திலுள்ள எல்லாத் தினங்களிலும் பகல்முழுவதும் ஸீதையைத்தேடி, ராத்ரிகளில் ஸமஸ்த ருதுக்களிலும் பூத்துக் காய்த்துப் பழுத்திருக்கின்ற வ்ருக்ஷங்களைச் சேர்த்து அங்குப் படுக்கை யேற்படுத்திப் படுத்துக்கொண்டு வந்தனர். அந்த வ்ருக்ஷங்கள் அவர்களால் அனுபவிக்கப்பட்டு ஸாபல்யத்தை அடைந்தன. அனந்தரம் அந்த வானர ஸேனுதிபதிகள் ப்ரயாணமாய்ச் சென்ற நாள் முதற்கொண்டு மாதம் நிரம்பும்வரையில் தேடி ஸீதா தேவியைப் பார்க்கப் பெற்றிலோமென்று நிராசராகிக் கபிராஜனுகிய ஸுக்ரீவனிடம் வந்து தாம் போய்வந்த வ்ருத்தாந்தத்தை அறிவித்து ப்ரஸ்ரவண மென்னும்

மால்யவத் பர்வதத்திற்குப் போயினர். மஹா பலசாலியாகிய விநதன் தன்னுடன்வந்த வானரர்களுடனே ஸுக்ரீவன் சொன்ன ப்ரகாரம் கிழக்குத் திக்கெல்லாந்தேடி ஸீதையைக் காணாமல் வெறுமனே வந்தனன். அப்பொழுது வீரனாகிய வானரர் தலைவன் சதவலி வடதிசையெல்லாந் தேடி ஸீதையைக் காணாமலே ஸேனைகளுடன் வந்து சேர்ந்தனன். ஸுஷேணனும் வானரர்களோடு மேல்திசையெல்லாந் தேடி மாதம் நிரம்பியும் ஸீதையைக் காணாமலே ஸுக்ரீவனிடம் வந்து சேர்ந்தனன். அந்த வானரஸ்ரேஷ்டர்கள் அனைவரும் ப்ரஸ்ரவண பர்வதத்தின் நுனியில் ராமனுடன் உட்கார்ந்திருக்கிற ஸுக்ரீவனிடம் வந்து நமஸ்கரித்து 'ஸமஸ்த பர்வதங்களிலும் தேடினோம். சிறிய வனங்களிலும் பெரிய வனங்களிலும் எல்லாவற்றிலும் தேடிப்பார்த்தோம். நதிகளிலும் ஸமுத்ர தீரங்களிலும் ஸமஸ்த ராஜ்யங்களிலும் தேடினோம். நீ சொன்னகுஹைகளெல்லாவற்றிலும் தேடினோம். கொடிகள் படர்ந்து ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருக்கிற பெரும் புதர்களிலும் தேடிப்பார்த்தோம். புகக்கூடாத த்வீபங்களிலும் மிகவும் கஷ்டப்பட்டு ப்ரவேசிக்கக்கூடிய இடுக்கு ப்ரதேசங்களிலும் தேடி மிகவும் பருத்த சரீரங்களையுடைய ப்ராணிகளைக் கண்டு ராவணனோ அன்றோவென்று தேடிப்பார்த்துக் கொன்றுவிட்டனம். ஹனுமான் மிகுந்த பலமுடைய மஹாவம்சத்தில் பிறந்தவன்; மஹா தைர்யமுடையவன்; இவ்வளவேயன்றி ஸீதையை ராவணன் எந்தத் திசைக்குக் கொண்டுபோயிருப்பானோ, அந்தத் திசைக்கே போயிருக்கின்றனன். ஆகையால் வாயுகுமாரனாகிய அந்த ஹனுமான் ஸீதையைப் பார்த்துவரக்கூடும்' என்று மொழிந்தனர்.

நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஹனுமான் முதலானவர்கள் தென்திசைக்குப்போய் ஸீதையைத் தேடுதலும், அங்கு ஓர் அஸுரனைக் கொல்லுதலும்.

ஹனுமான், தாரன், அங்கதன் முதலான வானரர்களோடு தென்திசைக்குப்போய் ஸுக்ரீவன் ஆஜ்ஞாபித்த அவ்வவ்விடங்களில் தேடத் தொடங்கினன். அவன் அந்த வானரோத்தமர்களனைவரோடுங்கூடி வெகுதூரஞ்சென்று விந்த்ய பர்வதத்திலுள்ள குஹைகளிலும், வனங்களிலும் சிகரங்களிலும், நதிகளால் புகக்கூடாத இடங்களிலும் குளங்களிலும் பெரிய வ்ருக்ஷங்களிலும் நானாவிதமாக வரிசையமைந்திருக்கும் வ்ருக்ஷஸமூஹங்களிலும் விந்த்யத்தினருகில் பெரிய வ்ருக்ஷங்களமைந்த குளங்களிலும் ஸீதாதேவியைத் தேடினன். வீரர்களாகிய அவ்வானரர்களனைவரும் அங்ஙனம் தென்திசையில் எல்லா இடங்களிலும் எவ்வளவு தேடிப்பார்க்கிலும் ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையைக் காணவில்லை. எப்படிப்பட்டவர்க்கும் எதிரிடமுடியாத அவ்வானரர்கள் ஸீதாதேவியைத் தேடிக்கொண்டு பலவிதமான பழங்களையும் வேர்களையும் பக்ஷித்து ஆங்காங்குத் தங்கியிருந்து சென்றனர். அந்த விந்த்யப்ரதேசம் பல குஹைகளும் அரண்யங்களுமுடையது; மிகவும் பெரியது. ஆகையால் அங்குத் தேடுவது மிகவும் கஷ்டம். மேலும் அத்தேசம் ஜனஸஞ்சாரமற்று ஜலமென்பதே இல்லாமற் புகமுடியாததும் பயங்கரமுமாகி மயிர்க்கூச்சலை விளைத்துக்கொண்டிருக்கும். அவ்வானரர்களனைவரும் அப்பொழுது அத்தேசத்தைவிட்டு அங்ஙனமே ஜனங்களும் ஜலங்களுமில்லாத அரண்யங்களில் மிக்க வருத்தத்துடன் தேடி, அனந்தரம் எப்படிப்பட்டவர்க்கும் போகக்கூடாத மற்றொரு தேசத்தில், எதனாலும் பயப்படாதவராகையால், புகுந்தனர். அத்தேசத்தில் வ்ருக்ஷங்கள் காய்களின்றிப் புஷ்பங்களு

மில்லாமல் இலைகளுமற்றிருந்தன. அங்குள்ள நதிகள் ஜலமேயில்லாதிருந்தன. மேலும் அங்கு வேர் அகப் படுவது மிகவும் கஷ்டம். அங்கு மஹிஷங்களாவது ம்ருகங்களாவது யானைகளாவது பெரும்புலிகளாவது பக்ஷிகளாவது மற்றும் வனத்தில் திரியும் இதர ஜந்துக் களாவது புலப்படா. அன்றியும் அதில் நல்ல வ்ருக்ஷங் களும் ஓஷதிகளும் கொடிகளும் புதர்களும் தோற்று. மலர்ந்த தாமரையுடையவைகளும் பார்க்க இனியவை களும் நல்ல மணங் கமழப்பெற்றவைகளும் நிகுநிகென்ற இலை யமைந்தவைகளுமாகிய தாமரை யோடைகளும் அங்கு அகப்படா. ஆனது பற்றியே வண்டுகளை அங் குக் காணவும் முடியாது. கண்டு வென்னும் மஹானு பாவராகிய ஓர் தபோதனர் உளர். அவர் ஸத்யத்தை யே பேசுந் தன்மையர். அம்மஹர்ஷி மிகவும் கோபமு டையவர். அவர் மிகுந்த தபோநியம முடையவராகை யால், எப்படிப்பட்டவர்க்கும் அவரைக் கிட்டுவது ஸாத் யமன்று. அம்மஹர்ஷியின் புதல்வர் பதினறு வயதுடை யவர் ஒருவர் அவ்வனத்தில் மரணம் அடைந்தனர். அம்மஹர்ஷி தன் புதல்வன் மரணம் அடைந்ததைப் பற்றி அவ்வனத்தின்மேல் மஹா கோபமுற்றனர். தர்ம ஸ்வபாவராகிய அவர் அம் மஹாவனம் முழுமையும் எவர்க்கும் வாஸயோக்ய மாகாததும் புகக்கூடாததும் மான்களும் பக்ஷிகளுமில்லாததுமாகச் சபித்தனர். அவ் வானரவீரர்கள் அந்தச் சூன்யப்ரதேசத்திலுள்ள வன மத்யங்களிலும் பர்வதகுஹைகளிலும் நதிகள் உண்டா குமிடங்களிலும் மனவூக்கத்துடன் நன்றாகத் தேடி னர். ஸுக்ரீவனுக்கு ப்ரியஞ்செய்யுந் தன்மையராகிய அம்மஹாதைர்யசாலிகள் அங்கு எவ்வளவுதேடிப்பார் த்தும், ஸீதையையாவது அவளை எடுத்துக்கொண்டு போன ராவணனையாவது காணவில்லை. அவவானரர்

கள், கொடிகளும் புதர்களும் நிறைந்து பயங்கரமாகிய ஓர் ப்ரதேசத்தில் நுழைகையில், அங்குத் தேவதைகளையும் பொருள்செய்யாத கொடுஞ்செயலுடைய ஓர் அரக்கனைக் கண்டனர். வானரர்கள் பர்வதம்போல் பயங்கரமான உருவமுடைய அந்த ராக்ஷஸனைக்கண்டு எல்லோரும் துணியை இழுத்துக் கட்டிக்கொண்டு யுத்தத்திற்கு ஸித்தமாயிருந்தனர். பலிஷ்டனாகிய அவ்வஸுரனும் பர்வதம்போன்ற உருவத்துடன் புலப்படுகின்ற அந்த வானரர்களெல்லோரையும் கண்டு 'இதோ நீங்களெல்லோரும் செத்தீர்கள்' என்றனன். அனந்தரம் அந்த ராக்ஷஸன் மிகுந்த கோபாவேசத்துடன் கெட்டியாகக் கைவிரல்களை மடக்கின முஷ்டியை உயரத் தூக்கிக்கொண்டு வானரர்கள்மேல் எதிர்த்து வந்தனன். அனந்தரம் வாலிகுமாரனாகிய அங்கதன் அந்த ராக்ஷஸன்மேல் விழுந்து வருவதைக்கண்டு 'இவனே ராவணனென்று நினைத்துச் சீக்ரம் அவனை அறையால் அறைந்தனன். அவ்வஸுரன் வாலிகுமாரனாகிய அங்கதனால் அடிக்கப்பட்டுக் குருதியைக் கக்கிக்கொண்டு பர்வதம் விழுவதுபோல் தரையில் வீழ்ந்தனன். அந்த ராக்ஷஸன் மரணம் அடைந்த பின்பு ஜயசீலர்களான அவ்வானரர்கள், அவனே ராவணனென்றும் அந்தக் குஹையில் ஸீதை இருப்பாளென்றும் நினைத்து அந்தப் பர்வதகுஹைக ளெல்லாவற்றிலும் பலவாறு நன்றாகத் தேடிப்பார்த்தனர். அனந்தரம் அவர்கள் எல்லோரும் அவ்வரண்யம் முழுமையும் தேடி, அவ்வளவோடு நிற்காமல் மீளவும் அவற்றி னருகிலிருக்கும் மற்றொரு பயங்கரமான பர்வதகுஹைக்குச் சென்றனர். அவர்கள் அந்தக் குஹையிலும் தேடி அங்கும் ஸீதையைக்காணாமல்இளைப்புற்று மிகவும் வருத்தமுற்றுஏகாந்தத்தில் ஓர்மரத்தினடியில் எல்லோரும் கூட்டமாக உட்கார்ந்தனர். நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஹநுமான் மீளவும் வேறு இடங்களில் தேடிப்பார்த்தல்.

அனந்தரம் மஹா ப்ராஜ்ஞனுகிய அங்கதன், மிகவும் இளைப்புற்று வானரர்களெல்லோரையும் பார்த்து அவர்களை ஸமாதானப் படுத்திக்கொண்டு 'ஸாதாரணமான வனங்களிலும் பர்வதங்களிலும் நதிகளிலும் புகமுடியாத கார்வனங்களிலும் பிலங்களிலும் பர்வதகுஹைகளிலும் நன்ருகத் தேடிப்பார்த்தோம். அந்த ப்ரதேசங்களில் எங்கும் ஸீதையாவது தேவகன்னிகையைப்போன்ற அவளை எடுத்துக் கொண்டுபோன ராவணனுவது புலப்படவில்லை. நமக்குக்காலமோ மிகவும் கடந்துவிட்டது. ஸுக்ரீவனே கொடிய தண்டனை விதிக்குந் தன்மையன். ஆகையால் நீங்கள் உபேக்ஷை செய்யாமல் எல்லோருங்கூடி நன்ருக முழுவதும் தேடிப் பார்க்கவேண்டும். நீங்கள் சோம்பலுக் குட்படாமலும் மனவருத்தப்படாமலும் நித்ரையின்றி நமக்கு ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை அகப்படும்படி நன்கு தேடிப்பார்ப்பீர்களாக. மனவெறுப்பில்லாமையும் உத்ஸாஹமும் தைர்யமும் ஆகிய இவை கார்யஸித்தியைக் கொடுப்பவையென்று பெரியோர்கள் மொழிவார்கள். ஆகையால் நான் இங்ஙனம் மொழிந்தனன். மற்ருெருதடவை புகக்கூடாத இவ்வனத்தில் தேடிப்பார்ப்பீர்களாக. எல்லோரும் சோம்பலைவிட்டு மீளவும் இவ்வனத்தில் தேடிப்பார்ப்பீர்களாக. கார்யஞ்செய்துகொண்டிருந்தோமாயின் அவஸ்யம் அதற்குப்பலன் உண்டாகும். ஆகையால் வெறுப்புறுவது வேண்டாம். இனி எழுந்திருப்பீர்களாக. இங்ஙனம் நித்ரைசெய்வது நமக்கு என்ளளவும் யுக்தமன்று. ராஜாவாகிய ஸுக்ரீவன் மிகவும் கோபிஷ்டன்; மேலும் தீக்ஷ்ணமாகத் தண்டிக்குந்தன்மையன். ஆகையால் அவனது ஆஜ்ஞையை எப்பொழு

தும் பயத்துடன் நடத்தவேண்டும். ராமனும் மஹா ப்ர பாவனுகையால் அவனுக்கும் பயப்படவேண்டும். வான ரர்களே! உங்களுக்கு நன்மையை விரும்பியே நான் இவ் வளவு மொழிந்தனன். உங்களுக்கு இஷ்டமாயின் அவ் வண்ணம் நடத்துவீர்களாக. அல்லது நம்மெல்லோர்க் கும் ஹிதமாயிருப்பது மற்றொருகார்யம் உளதாயின் அதையாயினும் சொல்வீர்களாக' என்றனன். அங்க தன் சொன்ன வசனத்தைக்கேட்டுக் கந்தமாதனன் தா ஹத்தினலும் இளைப்பினலும் பீடிக்கப்பட்டிருக்கை யால் மொழிகள் தெளிவற்றிருக்குமாறு ஹீனஸ்வரத் துடன் 'அங்கதன் உங்களுக்குச்சொன்னது மிகவும் யுக் தமாயிருக்கின்றது. அங்ஙனம் செய்வதனல் உங்களுக்கு ஹிதமும் ஆனுகூல்யமும் உண்டாகும். ஆகையால் அவன் சொன்னபடி நடத்துவீர்களாக பர்வதங்களி லும் குஹைகளிலும் பிலங்களிலும் ஜனஸஞ்சாரமில் லாத வனங்களிலும் மலையருவிகளிலும் மீளவும்நன்ருகத் தேடிப்பார்ப்பீர்களாக. மஹானுபாவனுகிய ஸுக்ரீவன் ஆஜ்ஞாபித்த ப்ரகாரம் நீங்களெல்லோரும் சேர்ந்து வனங்களிலும் பர்வதங்களிலும் துர்க்க ப்ரதேசங்களி லும் ஸீதாதேவியைத் தேடிப்பார்ப்பீர்களாக, என்ற னன். அனந்தரம் மஹா பலசாலிகளாகிய அவ்வானரர் கள் எழுந்து மீளவும் தென்திசையில் விந்த்ய பர்வதத் தின் அரண்யங்களில் தேடத் தொடங்கினர். அவ்வான ரர்கள் ஸீதையைக்காண மன விருப்பமுற்றவராகி விந்த் யபர்வதத்தில் சிகரங்களோடுங் குஹைகளோடும்கூடிச் சரத்காலமேகம்போல் வெளுத்து விளங்குவதும் சோ பையமைந்ததும் வெள்ளிமயமா யிருப்பதுமாகிய ஓர் பாகத்தில் ஏறி அங்கு ரமணீயமாயிருக்கின்ற வாகுப் பயிர்களிலும் எழிலைப்பாலை வனங்களிலும் ஸீதாதேவி யைத் தேடினர்; அவர்கள் அந்தப் பர்வதம் முழுவதி

லும் ஸமஸ்த குஹைகளிலும் பார்த்துத் தேடியும் ஸீதை அகப்படாமையால் இழிந்தனர். அவ்வானரர்கள் அங்ஙனம் ஶ்ரமப்பட்டு ப்ராஜ்ஞைதப்பி அம்மலையினின்று கீழே இழிந்து கொஞ்சநேரம் தங்கியிருந்து அதன் பிறகு ஓர் செடியின் கீழ்ச் சேர்ந்தனர். அவ்வானரர்கள் கொஞ்சம் இளைப்பாறலுற்று மனவூக்கம் பெற்று மீளவும் தென்திசைமுழுவதிலும் ஸீதாதேவியைத் தேடத்தொடங்கினர். ஹநுமான் முதலான அவ்வானரோத்தமர்கள் மீளவும் தேடுவதற்குப் புறப்பட்டு விந்த்யபர்வதம் முதற்கொண்டு ஸமஸ்த ப்ரதேசங்களிலுந் திரிந்து தேடினர். நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

**ஹநுமான் முதலியவர் ருக்ஷபிலத்தில் ஸ்வயம்ப்ரபையைக் காணுதல்.**

ஹநுமான் தாரனோடும் அங்கதனோடும் கூடி விந்த்ய பர்வதத்திலுள்ள குஹைகளிலும் வனங்களிலும் ஸீதாதேவியைத் தேடினன். அம்மேலான பர்வதத்தில் ஸிம்ஹங்களோடும் பெரும்புலிகளோடும் கூடின விஷம ப்ரதேசங்களிலுள்ள பெருங்கற்களிலும் பெரிய மலையருவிகளினின்று பெருகிவரும் நதிகளிலும் தேடிப்பார்த்தனன். அனந்தரம் அவர்கள் அந்தப் பர்வதத்தின் நிருதிமூலைக்குப் போய்ச்சேர்ந்தனர். அவர்கள் அங்கிருக்கும் பொழுதே ஸுக்ரீவன் நியமித்த கெடுவாகிய மாதகாலம் முடிந்துவிட்டது. அந்த விந்த்ய ப்ரதேசம் மிகுந்த குஹைகளும் அரண்யங்களும் நிறைந்து மிகவும் பெரிதாயிருக்கையால் அங்குத் தேடுவது மிகவும் கஷ்டம். அதனால் அங்கிருக்கும் பொழுதே அவர்க்கு அம்மாதம் கடந்துபோயிற்று. அந்த நிருதி மூலையில் வாயுகுமாரனாகிய ஹநுமான் வானரர்களில் ஒவ்வொருவரையும் தன்னருகில் சேர்த்துக் கொண்டு

அந்தப் பர்வதத்தின் குஹைமுதலிய எல்லா இடங்களி லும் தேடிப்பார்த்தனன். கஜன் கவாக்ஷன் கவயன் சரபன் கந்தமாதனன் மைந்தன் த்விவிதன் ஸுஷே ணன் ஜாம்பவான் நலன் யுவராஜனுகிய அங்கதன் தா ரன் ஹனுமான் ஆகிய இவர்கள் பல பர்வதங்களோடு கூடின அந்தந்த ப்ரதேசங்களில் தேடி, அனந்தரம் தென்திசையில் வேறு இடங்களிலும் ஆங்காங்குத் தேடமுயன்று விஸ்தீர்ணமான ஓர்பிலத்தைக்கண்டனர். அவர்கள் பசியும் தாஹமும் மிகுந்திருக்கப் பெற்றுக் குடிக்க ஜலம் அகப்படாமல் திரிந்துகொண்டிருக்கை யில் ஓர் மஹா பிலத்தைக் கண்டனர். அது மயனென் னும் தானவனுல் காக்கப்பட்டிருப்பது. அதில் எப்படிப் பட்டவர்க்கும் ப்ரவேசிக்கமுடியாது. ருக்ஷபில மென் னும் பேருடையது. அது கொடிகளாலும் புதர்களா லும் மூடப்பட்டிருப்பது. அந்தப் பிலத்தினின்று க்ரௌ ஞ்சங்களும் ஹம்ஸங்களும் ஸாரஸங்களும் சக்ரவாகங் களும் ஜலத்தில் நனைந்து தாமரைத்தாதுக்களின் தூள் களால் சிவந்த இறகுகளுடன் மேல்கிளம்பின. அனந்த ரம் அவ்வானரதிலகர்கள், நல்ல வாஸனை கமழப்பெற்று எள்ளளவும் புகக்கூடாத அம்மஹாபிலத்தைக் கண்டு மனத்தில் மிகவும் ஆச்சர்யம் அடைந்தனர். மஹா தே ஜஸ்விகளும் மிகவும் பலிஷ்டர்களுமாகிய அவ்வான ரோத்தமர்கள் நானுவித ஜந்துக்கள் நிறைந்து, தைத் யராஜனுகியபலியின் வாஸஸ்தானமான பாதாளம்போல் பார்க்கவும் முடியாமல் மஹா பயங்கரமாயிருப்பதும் எவ்விதத்திலும் ப்ரவேசிக்கமுடியாததுமான அம் மஹாபிலத்தைக் கண்டு ‘இது பாதாளமோ? அல்லது ராக்ஷஸமாயையோ?’ என்று சங்கித்துக்கொண்டே அந்தப் பிலத்தில் நுழையப் போயினர். அனந்தரம் பர்வதசிகரம்போன்ற உருவமுடைய ஹனுமான் புகக்



1911. வானரர்கள் ஸ்வயம்ப்ரபையின் பிலத்தில்புகுதல்.

கூடாத வழிகளிலும் மிகுந்த அனுபவமுடையவனுகை யால் ஸமஸ்த வானரர்களையும் பார்த்து, 'தெற்குத்திக் கில் பர்வத ஸமூஹங்கள் நிறைந்திருக்கும் தேசங்களை யெல்லாம் நாமெல்லோரும் தேடிப்பார்த்தோம். ஆயி னும் ஸீதையைக் காணப் பெற்றிலோம். மேலும் குஹையினின்று ஹம்ஸங்களும் க்ரௌஞ்சங்களும் ஸார ஸங்களும் சக்ரவாகங்களும் ஜலத்தில் நனைந்து நாற் புறத்திலும் வெளிப்பட்டு வருகின்றன. மேலும் இந்தக் குஹையின் வாசலில் வ்ருக்ஷங்கள் பச்சென்றிருக்கின் றன. ஆகையால் அதில் நீர்நிறைந்த கிணருவது மடுவா வது இருக்கவேண்டும். இது நிஜம்' என்றனன். இங்ங னம் ஹனுமான் சொல்லுகையில், அவ்வானரர்களனை வரும் அந்தப் பிலத்தில் ப்ரவேசித்து, அங்கு சந்த்ர ஸூர்யர்களின் ப்ரகாசமில்லாமையால் பயங்கரமாகி மயிர்க்கூச்சலை விளைப்பதுமாகிய அந்தகாரம் நிறைந்தி ருக்கக்கண்டனர். அந்த வானரஸ்ரேஷ்டர்கள் அந்தப் பிலத்தினின்று வெளிவரும் ஸிம்ஹங்களையும் மற்றும் பலவிதமான அந்தந்த ம்ருகங்களையும் பக்ஷிகளையும் பார்த்துக்கொண்டே இருள்மூடியிருக்கும் அப்பிலத் தில் ப்ரவேசித்தனர். அதில் அவ்வானரர்களின் நேத் ரங்களாவது ப்ரபாவமாவது பராக்ரமமாவது தடைபட வில்லை. வாயுவின்கதிபோல், அவரது பார்வை அந்த காரத்திலும் சிறிதும் தடைபடாமற்சென்றது. அந்தக் கபிகுஞ்சரர்கள் அங்ஙனம் அந்தப் பிலத்தில் வேகமாக ப்ரவேசித்தபின்பு கொஞ்சதூரத்தில் வெளிச்சமுடைய தும் ரமணீயமுமாகிய ஓர் சிறந்த ப்ரதேசத்தைக் கண் டனர். அனந்தரம் அவர்கள் நானுவித வ்ருக்ஷங்க ளோடுகூடிப் புகக்கூடாதிருக்கிற அந்தப் பிலத்தில் இருட்டில் தப்பிப்போவோ மென்கிற பயத்தினல் ஒரு வரையொருவர் பிடித்துக் கொண்டு ஒரு யோஜனை

தூரம் போயினர். அவர்கள் தண்ணீர் தாஹமுற்று ஜலத்தைக்காண விரும்பி ப்ரஜ்ஞை தப்பித் தழதழத் திருப்பினும் சோம்பற்படாமல் அந்தப் பிலத்தில் சிறிது நேரம் விடாமற்போயினர். அவ்வீரர்கள் அங்ஙனம் பசிதாஹங்களால் இளைப்புற்று முகத்தில் வாட்டந்தோற்றப் பிழைப்பில் ஆசையைத்துறந்து போய்க்கொண்டிருக்கையில், அப்பொழுது கொஞ்சநேரங் கழிந்த பின்பு வெளிச்சத்தைக் கண்டனர். அனந்தரம் அவர்கள் அங்கு இருட்டின்றி வெளிச்சமுற்று ரமணீயமாயிருக்கிற ஓர் ப்ரதேசத்தில் சேர்ந்து,அங்கு எரிகிற அக்னிபோல் ப்ரகாசிக்கின்ற பொன்மயமான மராமரங்களையும் குடஜ வ்ருக்ஷங்களையும் மகிழமரங்களையும் தவவ்ருக்ஷங்களையும் செண்பகமரங்களையும் நாககேஸர வ்ருக்ஷங்களையும் பூத்திருக்கிற கர்ணிகார வ்ருக்ஷங்களையும் கண்டனர். மேலும் அவ்விடத்தில் அற்புதமான பொன் பூங்கொத்துக்களும் சிவந்த தளிர்களும் தலையிற் சூடும்படி தொடுத்த பூமாலைகளும் கொடிகளும் அமைந்து பொன்பூஷணங்களே பழங்களாகப்பெற்றுப் பாலஸூர்யன்போல் விளங்கும் வைடூர்யமணிமயமான திண்ணைகளுடன் கூடி[1] நிஜரூப காந்தியால் ப்ரகாசிக்கின்ற வெள்ளி வ்ருக்ஷங்களையுங் கண்டனர். மேலும், நீல வைடூர்யமணி வர்ணமுடையவைகளும் நானுவிதபக்ஷிகள் அமையப்பெற்றவைகளும் பாலஸூர்யன்போல் விளங்கும் பெரிய தாமரைமலர்களால் சூழப்பட்டு ப்ரகாசிக்கின்றவைகளும் பொன்மயமான பெரிய மத்ஸ்யங்களும் பெரிய ஆமைகளும் விளங்கப்பெற்றவைகளும் தெளிந்த ஜலம் நிறைந்தவைகளுமான தாமரைக்குளங்களையும் கண்டனர். வானரர்கள் அந்தப் பிலத்தில் பொன்சாளரங்கள் பொருந்தி முத்து ஸரங்களால் அலங்கரிக்கப்

1. தமது உருவத்தின் பிரகாசத்தினுல்.

பட்ட பொன் விமானங்களும் வெள்ளிவிமானங்களும் பொன்னுப்பரிகைகளும் வெள்ளி உப்பரிகைகளும் அமைந்து வைடூர்யமணிகளால் அலங்காரஞ் செய்யப்பெற்ற மேலான மாளிகைகளையும் நாற்புறத்திலுங் கண்டனர். நன்கு புஷ்பித்தும் நிரம்பப் பழுத்தும் பவழத்தின் வர்ணமுடையவைகளுமான வ்ருக்ஷங்களையும் பொன்மயமான வண்டுகளையும் பலவகைப் புஷ்பஸரங்களையும் ரத்னங்களிழைத்திருக்கும் பொன்மயமான படுக்கைகளையும் மிகவும் சிறந்த ஆஸனங்களையும் முழுவதும் கண்டனர். வானரர்கள் அவ்விடத்தில் குவியலாகக்கிடக்கிற பொன்பாத்ரங்களையும் குவியலாயிருக்கிற வெள்ளிப் பாத்ரங்களையும் அங்ஙனமே குவியலாயிருக்கின்ற வெண்கலப்பாத்ரங்களையும் குவியல்குவியலாகக் கிடக்கிற திவ்யங்களான அகரு சந்தனங்களையும் பரிசுத்தங்களும் ருசியுடையவைகளுமான காய்கிழங்குகளையும் சிறந்த பானத்ரவ்யங்களையும் ருசியுள்ள தேன்களையும் மிகவும் சிறந்த திவ்ய வஸ்த்ர ஸமூஹங்களையும் சித்ரகம் பள ஸமூஹங்களையும் நானுவித [1]அஜினராசிகளையும் அக்னி போல் பளபளவென்ற மேலான பொன் குவியல்களையும் ஆங்காங்கு வைக்கப்பட்டிருக்கக் கண்டனர். மஹா பலசாலிகளும் சூரர்களுமாகிய அவ்வானரர்கள் அங்ஙனம் அந்தப் பிலத்தில் ஆங்காங்குத் தேடிக்கொண்டு சென்று ஸமீபத்தில் ஒரு ஸ்த்ரீயைக் கண்டனர். அம்மடந்தை மரவுரியையும் க்ருஷ்ணஜினத்தையும் தரித்து ஆஹார நியதியுடையவளாகித் தேஜோவிசேஷத்தினல் ஜ்வலிப்பவள்போல் ப்ரகாசித்துக்கொண்டிருந்தனள். அங்ஙனமிருக்கின்ற தாபஸியைப் பார்த்துக் கபிகள் மிகவும் பயத்தையும் ஆச்சர்யத்தையும் அடைந்து

1 மான்தோல்களின் குவியல்களையும்.

எல்லோரும் அருகில் நின்றிருந்தனர். அப்பொழுது ஹனுமான் அவளைப் பார்த்து 'நீயார்? இந்தப்பிலம் எவருடையது?' என்று வினவினன். அனந்தரம் பர்வதம்போன்ற உருவமுடைய ஹனுமான் கைகளைக்குவித்து அந்தக் கிழவிக்கு நமஸ்காரஞ்செய்து அவளைப் பார்த்து 'நீயார்? இந்த க்ருஹமும் பிலமும் இந்த உத்தம த்ரவ்யங்களும் எவருடையவை' என்று வினவினன். ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸ்வயம்ப்ரபை வானரர்களுக்கு ருக்ஷபில வ்ருத்தாந்தத்தைக் கூறுதல்.

இங்ஙனம் ஹனுமான் மொழிந்து, மீளவும் க்ருஷ்ணஜின முடுத்தவளும் மஹானுபாவையும் பரமதார்மிகையுமாகிய அந்தத் தாபஸியைக்கண்டு 'நாங்கள் வழி நடந்த ஸ்ரமத்தினல் இளைப்புற்றுப் பசி தாஹங்களால் பீடிக்கப்பட்டவராகி இங்கு ஜலம் முதலியவை இருக்குமென்று நினைத்து முன்பின் பாராமல் எல்லோரும் இருள் மூடப்பெற்ற இந்தப் பிலத்திற்குள் வந்தனம். நாங்கள் முக்யமாகத் தாஹத்தினல் இளைப்புற்று இந்தப் பெரிய பூமி பிலத்தில் ப்ரவேசித்தனம். இங்கு மிகவும் அற்புதங்களாகத் தோற்றுகின்ற இந்தப் பலவிதமான திவ்ய பதார்த்தங்களைக் கண்டவுடனே 'இது அஸுரமாயையோ! என்னவோ' என்று பயந்து ஒன்றுந் தோற்றப்பெருமல் செய்வது தெரியாதிருக்கின்றனம். பாலஸூர்யன்போல் விளங்குகின்ற இந்தப் பொன் வ்ருக்ஷங்களும் பரிசுத்தங்களும் ருசியுடையவைகளுமாகிய இந்தப் பலமூலங்களும் பொன்விமானங்களும் பொற்சாளரங்கள் அமைந்து ரத்னங்களால் அலங்காரமுஞ் செய்யப்பெற்ற வெள்ளிக்ருஹங்களும் எவனுடையவை? நன்கு புஷ்பித்து நல்ல பழங்கள் பொருந்தி நன்மணங் கமழ்கின்றவைகளும் பரிசுத்தங்களுமாகிய இந்தப்

பொன் வ்ருக்ஷங்களும் நிர்மல ஜலங்களில் புலப்படு கின்ற இந்தப் பொன் தாமரைகளும் எவன் ப்ரபாவத் தினல் உண்டானவை? பொன் ஆமைகளும் பொன்மத் ஸ்யங்களும் திரிகின்றனவே! இவை எப்படி உண்டா யின? ஸொந்த ப்ரபாவத்தினலோ அல்லது பிறரு ருடைய தவமஹிமையாலோ இவை உண்டாயின? எங் களில் எவர்க்கும் இந்த விஷயம் தெரியாதாகையால் நீ எல்லாவற்றையும் தெரியச் சொல்லவேண்டும்' என்ற னன். ஹனுமான் இங்ஙனம் சொல்லுகையில் ஸர்வபூ தங்களுக்கும் ஹிதஞ் செய்பவளும் தர்மங்களை ஆசரிப்ப வளுமாகி விளங்கும் அந்தத் தாபஸி அவர்களைப்பார்த் து 'மஹா தேஜஸ்வியும் மிகுந்த மாயாவியும் தான வோத்தமனுமாகிய மயனென்பவனெருவன் இங்கே இருந்தனன். அவன் தன் விசித்ரசக்தியால் இந்தப் பொன்மயமான வனத்தையெல்லாம் நிர்மித்தனன். பொன்மயமாயிருப்பதும் திவ்யமுமாகிய இந்த உத்தம க்ருஹத்தை நிர்மித்த மயன், முன்பு த்ானவ முக்யர் களுக்கு விஸ்வகர்மாவா யிருந்தனன். அவன் மஹாரண் யத்தில் பலவாயிரமாண்டுகள் தவஞ் செய்து ப்ரஹ்ம தேவனிடத்தில் சுக்ரன் செய்த சில்பசாஸ்த்ரங்களெல் லாம் தன் ஸொத்தாகும்படி வரம் பெற்றனன். அனந்த ரம் மாயாபலமுடையவனகி ஸமஸ்த காமபோகங்களும் மனம் போனபடியெல்லாம் நிரம்பப்பெற்று விளங்கு கின்ற அந்தமயன் இந்த ஸ்வர்ணமய வனத்தை நிர் மித்து இம்மஹா வனத்தில் சிலகாலம் ஸுகமாக வஸித் திருந்தனன். தானவஸ்ரேஷ்டனகிய அந்த மயன் ஹே மையென்னும் அப்ஸரஸ்த்ரீயிடத்தில் பற்றுடையனு யிருப்பதை அறிந்து த்ரிலோகநாதனகிய தேவேந்த்ரன் பராக்ரமத்தைக்காட்டி வஜ்ராயுதத்தினல் அவனைக் கொன்றனன். மயன் இந்த ஸ்தலத்தை விட்டுப் போன

பின்பு இந்த உத்தம வனத்தையும் ரமணீயங்களும் ஶாஶ்வதங்களுமாகிய இதிலுள்ள போக்ய வஸ்துக்களை யும் வெள்ளிமயமான இந்த க்ருஹத்தையும் ஹேமைக் குக்கொடுத்தனன். வானரோத்தமனே! நான் மேருஸா வர்ணியின் குமாரத்தி. நான் ஸ்வயம் ப்ரபையென்னும் பேருடையவள். ஹேமையினுடைய இந்த க்ருஹம் முத லியவற்றை ரக்ஷித்துக்கொண்டு இங்கிருக்கின்றனன். ந்ருத்த கிதங்களில் மிகவும் ஸமர்த்தையாகிய ஹேமை எனக்கு ப்ரியமுடைய தோழி. மேலும் அவள்,பிறர்க்கு என்னைத் திரஸ்கரிக்கமுடியாதபடி எனக்கு வரங் கொடுத்திருக்கின்றனள். ஆகையால் நான் இங்கு இந்த க்ருஹத்தை ரக்ஷித்துக்கொண்டிருக்கின்றனன். நீங்கள் எந்தக் கார்யத்தை உத்தேசித்து எந்தக் காரணத்தி னல் கானகங்களில் தேடிப்பார்க்கிறீர்கள்? புகக்கூடாத இவ்வனத்தையுங் கூட எப்படி கண்டு பிடித்தீர்கள்? நீங்கள் இங்குபக்ஷிக்கத் தகுந்த பழங்களையும் வேர்களை யும் பக்ஷித்து ஜலங்களைப் பருகி உங்கள் வ்ருத்தாந்தத் தை யெல்லாம் எனக்குச் சொல்லவேண்டும்' என்றனள். ஐம்பத்தொன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஹனுமான் ஸ்வயம் ப்ரபைக்குத் தாம் வந்த கார்யத்தைத் தெரிவித்தல்

அனந்தரம் தர்மத்தை அனுஷ்டிக்குந் தன்மையு டைய அந்தத் தாபஸி ஸ்வயம்ப்ரபை மிகுந்த ஆதரத் துடன் பராக்ரமசாலிகளாகிய அந்த வானரோத்தமர் களனைவரையுங் கண்டு 'வானரர்களே! பழங்களைப் பக்ஷித்து உங்கள் ஶ்ரமம் தீர்ந்தபின்பு உங்கள் வ்ருத் தாந்தத்தை நான் கேட்கக்கூடுமேயாயின், சொல்வீர் களாக; கேட்க விரும்புகின்றேன்' என்றனள். அவள் சொன்ன வார்த்தையைக் கேட்டு வாயு குமாரனுகிய



1916. ஸ்வயம்ப்ரபை வானரர்களுக்குப் பல மூலாதிகளைக் கொடுத்தல்.

ஹநுமான் கபடத்தை விட்டு நடந்தபடியே தம் ஸங்கதியெல்லாஞ் சொல்லத் தொடங்கி 'ஸமஸ்தலோகங்களுக்கும் ப்ரபுவும் மஹேந்த்ரவருணர்களை நிகர்த்தவனும் ஸம்பத்தெல்லாம் அமைந்தவனுமாகிய தசரதகுமாரன் ராமன் தன் தம்பி லக்ஷ்மணனோடும் பார்யை ஸீதையோடும் தண்டகாரண்யத்திற்கு வந்தனன். அவன் பார்யையான ஸீதாதேவியை ஜனஸ்தானத்தில் ராவணன் பலவந்தமாக எடுத்துக் கொண்டு போயினன். அந்த ராமனுக்கு ஸ்னேஹிதனும் வீரனும் வானரஶ்ரேஷ்டர்களுக் கெல்லாம் ராஜனுமாகிய ஸுக்ரீவனென்னும் வானரன் ஒருவன் உளன்; நாங்களெல்லோரும், அகஸ்த்யர் ஸஞ்சரிப்பதும் யமனால் பரிபாலனஞ் செய்யப்பட்டதுமாகிய தென்திசைக்கு அவனால் தான் அனுப்பப்பட்டோம். ஸுக்ரீவன், பயங்கரமான உருவமுடைய அங்கதன் முதலிய இந்த வானரர்களனைவரையும் பார்த்து 'நீங்களெல்லோரும் சேர்ந்து விதேஹராஜன் புதல்வியாகிய ஸீதையையும் காமரூபியும் ராக்ஷஸனுமாகிய ராவணனையும் தேடிக் கண்டுபிடிப்பீர்களாக' என்று ஆஜ்ஞாபித்தனன். நாங்களெல்லோரும் தென் திசையெல்லாம் தேடி இளைப்புற்றுப் பசியின் பாதையால் ஓர் மரத்தின் கீழ்ச் சேர்ந்தனம். எல்லோரும் முகம் விலவிலக்கப்பெற்று ஆலோசனை செய்ய முயன்று சிந்தையென்னும் மஹா ஸமுத்ரத்தில் மூழ்கி அக்கரை சேர வழியின்றித் தீனர்களாயிருந்தனம். அனந்தரம் நாங்கள் நாற்புறத்திலும் கண் வைத்து உற்றுப் பார்க்கையில் ஓர் பிலம் புலப்பட்டது. அது கொடிகளாலும் வ்ருக்ஷங்களாலும் மறைக்கப்பட்டு இருள்மூடப் பெற்றிருந்தது. அந்தப் பிலத்தினின்று ஹம்ஸங்கள் க்ரௌஞ்சங்கள் ஸாரஸங்கள் முதலிய பக்ஷிகள் ஜலத்

தில் நனைந்து இறகுகளால் ஜலத்துளிகளை உதறிக் கொண்டு வெளிப்பட்டன. ‘நல்லது; இதில் நுழைவோம்’ என்று நானே இந்த வானரர்களுக்குச் சொல்லினன். வானரர்களெல்லோர்க்கும் கூட, நனைந்த பக்ஷிகளைப் பார்க்கையால் ஜலம் இருக்குமென்று அனுமானம் உண்டாயிற்று. மேலும் ஸ்வாமி கார்யத்திலுள்ள த்வரையால், ‘போய்ப் புகுவோம்’ என்று எல்லோர்க்கும் ஸம்மதி உண்டாயிற்று. அனந்தரம் நாங்கள் ஒருவரையொருவர் கெட்டியாகக் கட்டிக்கொண்டு பிலத்வாரத்தில் சென்று சீக்ரமாக இருள்மூடின அந்தப் பிலத்தில் ப்ரவேசித்தனம். இது எங்கள் கார்யம். இந்தக் கார்யத்தைப்பற்றியே இங்கு வந்தோம் பசியினால் வருந்துகின்ற நாங்களெல்லோரும் உன்னிடம் வந்து சேர்ந்தோம். நீ ஆதித்ய தர்மத்தை அவலம்பித்துக் கொடுத்த பழங்களையும் வேர்களையும் நாங்கள் பசிதீர எல்லோரும் பக்ஷித்தனம். பசியால் சாவதற்கிருந்த எங்களெல்லோரையும் நீ இப்பொழுது ரக்ஷித்தனையே! இதற்கு வானரர்கள் ப்ரத்யுபகாரமாக உனக்கு என் செய்யக்கூடும்? சொல்வாயாக’ என்றனன். வானரர்கள் ஹனுமான் மூலமாக இங்ஙனஞ் சொல்லுகையில் ஸர்வஜ்ஞையாகிய ஸ்வயம்ப்ரபை வானரயூதபதிகளனைவரையும் பார்த்து, ‘பலிஷ்டர்களான வானரர்களெல்லோரிடத்திலும் எனக்கு மிகுந்த ஸந்தோஷம் உண்டாயிற்று. நான் கேவலம் தர்மத்திலேயே முயன்று நடக்குந் தன்மையள். எனக்கு மற்றொன்றும் கார்யம் இல்லை. ஆகையால் ப்ரத்யுபகாரஞ் செய்வது வேண்டாம்’ என்றனள். ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸ்வயம்ப்ரபை வானரர்களைப் பிலத்தி
னின்று தன் மஹிமையால் வெளிப்
படுத்துதலும், வானரர்கள் கெடு
கடந்ததற்கும் ஸீதையைக் கா
ணாமைக்கும் வெறுப்புறுதலும்.

தாபஸியாகிய ஸ்வயம்ப்ரபை இங்ஙனம் சுபமாகவும் தர்மம் அமைந்திருக்குமாறும் மொழிந்த வசனத்தைக் கேட்டு ஹனுமான், நிந்தைக்கிடமாகாத கார்யங்களை ஆசரிக்குந் தன்மையுடைய அவளைப் பார்த்து, 'தர்மஞ் செய்யுந் தன்மையுடையவளே! நாங்களெல்லோரும் இப்பொழுது உன்னையே சரணம் அடைந்தனம். மஹானுபாவனாகிய ஸுக்ரீவன் எங்களுக்கு ஸங்கேதஞ் செய்த கெடுவாகிய காலமுங்கூட, நாங்கள் இம்மஹாபிலத்தில் திரிந்துகொண்டிருக்கும்பொழுதே கடந்தது. நீ மிகவும் தர்மஸ்வபாவை. ஆகையால் பயங்கரமான இந்தப் பிலத்தினின்று எங்களை எப்படியாயினும் வெளிப்படுத்தி ரக்ஷிக்கவேண்டும். ஸுக்ரீவன் ஆஜ்ஞை செய்த கெடு கடக்கப் பெற்றவராகையால், அவனது மரணதண்டனைக்குட்பட்டவராயிருப்பதுபற்றி ஆயுள் முடிந்தவராகி அந்தப் பயத்தினால் இளைத்திருக்கின்ற எங்களெல்லோரையும் நீ ரக்ஷிப்பது யுக்தமாயிருக்கின்றது. தர்மஞ் செய்யுந் தன்மையளே! ஸீதையைத் தேடும் பெரிய கார்யம் எங்களுக்குச் செய்யவேண்டியதாயிருக்கிறது. நாங்கள் இங்கு அகப்பட்டுக்கொண்டிருப்பதனால் அந்தக் கார்யத்தையுங்கூடச் செய்யாதவராயினோம்' என்றனன். ஹனுமான் இங்ஙனஞ் சொல்லுகையில் அந்தத் தாபஸி அவ்வானரர்களைப் பார்த்து இந்தப் பிலத்தில் புகுந்தவன் ப்ராணன்களோடு இதினின்று வெளிப்பட்டுப்போவது ஸாத்யமன்றென்று நினைக்கிறேன். ஆயினும், நான் பல நியமங்களை ஆசரித்து ஸம்பாதித்த தவமஹிமையால் வானரர்களெல்லோரையும் இந்தப்

பிலத்தினின்று வெளிப்படுத்துகிறேன். வானரஸ்ரேஷ்டர்களே! நீங்களெல்லோரும் கண்களை மூடிக்கொள்வீர்களாக. கண்களை மூடிக்கொள்ளாதபக்ஷத்தில் இந்தப்பிலத்தினின்று வெளிப்படுவது எள்ளளவும் ஸாத்யமன்று' என்றனள். அனந்தரம் வானரர்களெல்லோரும் பிலத்தினின்று தாண்டும்படி நேர்ந்ததற்கு மிகவும் ஸந்தோஷம் அடைந்து கண்ணிமைகளை மூடிக்கொள்வது மாத்ரமேயன்றிச் சீக்ரமாக மெதுவான விரல்களையுடைய கைகளாலும் கண்களை மூடிக்கொண்டனர். அப்பொழுது மஹா பராக்ரமசாலிகளாகிய அவ்வானரர்கள் அங்ஙனம் கைகளால் கண்களை மூடிக்கொள்கையில், ஸ்வயம்ப்ரபை அவர்களெல்லோரையும் ஒருநொடிப் பொழுதிலேயே அந்தப் பிலத்தினின்று வெளியிற் கொண்டுவந்து சேர்த்தனள். அனந்தரம் தர்மசாரிணியாகிய அந்தத் தாபஸி அந்த வானரர்களெல்லோரையும் அந்த ஸங்கட ப்ரதேசத்தினின்று வெளிப்படுத்தி அவர்களை ஆஶ்வாஸப்படுத்தி 'நாநாவிதமான வ்ருக்ஷங்களும் கொடிகளும் நிறைந்திருப்பதும் அழகியதுமாகிய இது விந்த்யபர்வதம். இது ப்ரஸ்ரவண பர்வதம். இது ஸகரர்களால்தோண்டப்பட்ட மஹா ஸமுத்ரம். வானரதிலகர்களே! உங்களெல்லோர்க்கும் சுபம் உண்டாகுமாக. என் க்ருஹத்திற்குப் போய் வருகிறேன்' என்றனள். இங்ஙனம் மொழிந்து ஸ்வயம்ப்ரபை அழகியதான அந்தப் பிலத்திற்குள் ப்ரவேசித்தனள். அனந்தரம் அவ்வானரர்கள் நாற்புறத்திலும் கர்ஜித்துக்கொண்டு பயங்கரமான அலைகள் நிறைந்ததும் பயங்கரமாயிருப்பதும் அக்கரைதெரியாததும் வருணனுக்கு ஸ்தானமுமாகி விளங்கும் மஹா ஸமுத்ரத்தைக் கண்டனர். மயன் தன் விசித்ரசக்தியால் எப்படிப்பட்டவர்க்கும்புகக்கூடாதபடி நிர்மித்த அந்தப் பிலத்தில் வானரர்

கள் திரிந்துகொண் டிருக்கும்பொழுதே, ராஜனுகிய ஸுக்ரீவன் ஏற்படுத்தின கெடுவாகிய மாதம் முழுவதும் கடந்துபோயிற்று. அனந்தரம் அம்மஹா பராக்ரமசாலிகள் அப்பொழுது விந்த்ய பர்வதத்தில் வ்ருக்ஷங்கள் நன்கு புஷ்பித்திருக்கப் பெற்ற தென்மேற்கு மூலையாகிய ஓர் தாழ்வரையில் உட்கார்ந்து சிந்திக்கத் தொடங்கினர். அனந்தரம் அவ்வானரர்கள் வஸந்தருதுவில் பலிக்கத் தகுந்த மாமுதலிய வ்ருக்ஷங்கள் நன்கு புஷ்பித்துப் புஷ்பபாரத்தினுல் விளங்கும் நுனிகளுடன் கூடிப் பலவாயிரங் கிளைகள் நிரம்பப்பெற்று விளங்குவதைக்கண்டு, காலம் மிகவும் கடந்து சென்றதற்கு ஸுக்ரீவனுல் பயம் நேருமென்று மிகவும் சங்கித்தனர். அவர்கள் வஸந்தருது ஸமீபித்த தென்றும் அப்பொழுது சிசிருது நடக்கிறதென்றும் ஒருவரோடொருவர் விசாரித்துத் தெரிந்துகொண்டு, ஸுக்ரீவன் சொல்லியனுப்பின ப்ரகாரம் ஸீதையைக் காணுமையாலும் அவன் ஏற்படுத்தின கெடுவாகிய மாதம கடக்கையாலும் இப்படி தமது ப்ரயோஜனங்களெல்லாம் பாழாகையில் பயந்து தரையில் வீழ்ந்தனர். அனந்தரம் ஸிம்ஹம்போலும் வ்ருஷபம்போலும் பெருத்த தோள்களையுடையவனும் பருத்து நீண்ட புஜங்களுடையவனுமாகிய யுவராஜன் அங்கதன் மிகவும் ப்ராஜ்ஞனுகையால், அவ்வானரர்களில் வயது சென்றவர்களும் சிஷ்டர்களுமாகிய வானரர்களை மதுரவசனத்தால் அழைத்து அவ்வவர்களைத் தகுந்தபடி கௌரவித்து 'வானரர்களே! கபிராஜனுகிய ஸுக்ரீவனது ஆஜ்ஞையின்படி நாமெல்லோரும் ப்ரயாணமாய் வந்தனம். நாம் பிலத்திலிருக்கும்பொழுதே அவன் ஏற்படுத்தின கெடுவாகிய மாதம் முழுவதும் கடந்துவிட்டது. உங்களுக்கு இது தெரியவில்லையா என்ன? நாம் அற்பிசி மாதம் முதற்கொண்டு

காலங் கணக்கிட்டு அந்தந்தக் கார்யங்களுக்கு நியமிக் கப்பட்டிருக்கின்றனம். ஸுக்ரீவனது ஆஜ்ஞையால் ப்ரயாணமாய் வந்தனம். ஏற்படுத்தினகாலமும் கடந்து போயிற்று. இனிச் செய்யவேண்டிய கார்யம் எது? விசாரிப்பீர்களாக. நீங்கள் ஸுக்ரீவனது நம்பிக்கைக் குப் பாத்ரமாயிருப்பவர்; நீதி மார்க்கத்தை நன்றாக அறிந்தவர்; ஸ்வாமியாகிய ஸுக்ரீவனது ஹிதத்திலே யே ஆஸக்தியுடையவர்; எல்லாக்கார்யங்களிலும் ஸமர் த்தர்; உங்களில் எவனுக்காவது கார்யத்தை ஸாதிப்ப தில் ஜகத்தில் நிகரானவன் ஒருவனும் இல்லை. உங் கள் பௌருஷம் ஸமஸ்த திக்குகளிலும் ஸுப்ரஸித்த மாயிருப்பது. ஸுக்ரீவனது ஆஜ்ஞையைப்பற்றி நீங் கள் என்னை முன்னிட்டுக்கொண்டு புறப்பட்டு வந்தீர் கள். நாம் வந்த கார்யம் நிறைவேறாமல் கெடுவையுங் கடத்திவிட்டோம். ஆகையால் இனிச் சாகவேண்டிய வர்களே. இதற்கு ஸந்தேஹம் இல்லை. வானரர் தலை வனாகிய ஸுக்ரீவனது கார்யத்தைச் செய்யாமல் எவன் ஸுகம் பெறுவான்? ஸுக்ரீவன் தானே ஏற்படுத்தின கெடு கடந்துபோகையில், வானரர்களெல்லோர்க்கும் ப்ராயோபவேசமே யுக்தம். ஸுக்ரீவன் இயற்கையாக வே மிகவும் தீக்ஷ்ணமா யிருப்பவன். அவன் ப்ரபுவா யிருக்கின்றனன். ஆகையால் கெடுவைத்தவறின அபரா தத்தோடு நாம் அவனிடம் போவோமாயின், தப்பாமல் எல்லோரையும் தண்டிப்பனேயன்றி ஒருவனையாயினும் எள்ளளவும் மன்னிக்கமாட்டான். நாம் கெடுவைக்கடந் துபோவது மாத்ரமேயன்றி ஸீதையின் ஸமாசாரத் தை அறியாமல் போகையால் நம்மைக் கொல்லும் பாபத்திற்கே முயற்சிகொள்வானன்றி மன்னிக்கமாட் டான். அதனால் நாம் பிள்ளைகளையும் பார்யைகளையும் தனங்களையும் க்ருஹங்களையும் கைவிட்டு இவ்விடத்தி

லேயே இப்பொழுது ப்ராயோப வேசத்தினுல் மரணம் அடைவது யுக்தம். நாமிங்கிருந்துபோனவுடனே மஹாராஜா ஸுக்ரீவன் கொல்லாமல் விடமாட்டான். இது நிஜம். அங்கு ஸுக்ரீவனுல் எவ்விதத்திலும் நிகரில்லாதபடி கோரமாக வதிக்கப்படுவதைக் காட்டிலும், இங்கேயே ப்ராயோபவேசத்தினுல் மரணம் அடைவது நல்லது. 'உன்னை யுவராஜனுகச் செய்த ஸுக்ரீவன் பிடித்துக் கொல்வானு' என்கிறீர்களோ? எனக்கு யௌவராஜ்யத்தில் ஸுக்ரீவன் பட்டங்கட்டவில்லை. எவனுக்கும் எள்ளளவும் மனம் நோகும்படியான கார்யங்களைச் செய்யாத மஹாராஜன் ராமன் எனக்குப் பட்டாபிஷேகம் செய்தனன். ஸுக்ரீவன் முன்னமே என்மேல் பகையுடையவனுகையால் என்மேல் தப்பைக் கண்டவுடனே என்னைக் கொல்லவேண்டுமென்று கெட்டியாக நிச்சயமுற்றவனுகித் தீக்ஷ்ண தண்டனை விதித்து என்னைக் கொல்வான். நான் கிஷ்கிந்தையில் ஸுக்ரீவனுல் என் ப்ராணன்களை முடித்துக்கொள்கையில், என் ஸ்னேஹிதர்களெல்லோரும் அந்த வ்யஸனத்தைப் பார்த்து வருந்தும்படி செய்தால் எனக்கு ப்ரயோஜனம் யாது? இங்கேயே புண்யமான ஸமுத்ரக்கரையில் ப்ராயோபவேசஞ்செய்து ப்ராணன்களை விட்டுவிடுகிறேன்' என்றனன். யுவராஜனுகிய குமாரன் அங்கதன் மொழிந்த அந்த வார்த்தையைக்கேட்டு அந்த வானரோத்தமர்களனைவரும் மன இரக்கமுண்டாகும்படி 'ஸுக்ரீவன் இயற்கையாகவே க்ரூரன். ராமனே ப்ராணநாயகியின் மேல் மிகுந்த ஆஸக்தியுடையவனுகையால் நாம் ஸீதையைக்காணுமலே திரும்பித் தன்னிடம் வரக்கண்டு, அவன் ராமனுக்கு ப்ரியமாக, அவன் விரும்பினபடி நம்மைத் தப்பாமல் கொன்றுவிடுவான். இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. இவ்வளவேயன்றி அபராதஞ் செய்த

வர்க்குத் தம் ப்ரபுவினிடம் போவதே யுக்தமன்று. ஸீதையைத் தேடி அவளது வ்ருத்தாந்தத்தைத் தெரிந்துகொள்வோமாயின், வீரனாகிய ஸுக்ரீவனிடம் போவோம். இல்லையாயின் இங்கேயே ப்ராணன்களைவிட்டு யமன் வீட்டிற்குப் போவோம்' என்றனர். அங்ஙனம் பயத்தினால் வருந்தியிருக்கின்ற வானரர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்டுத் தாரன் 'துக்கித்தது போதும். உங்களுக்கு இஷ்டம் உளதாயின், எல்லோரும் இந்தப் பிலத்தில் புகுந்து வஸித்திருப்போம். இது மாயையால் நிர்மிக்கப்பட்டதல்லவா? ஆகையால் இதற்குள் புகுவது எவர்க்கும் ஸாத்யமன்று. மேலும், இதில் வ்ருக்ஷங்களும் ஜலங்களும் போஜ்ய த்ரவ்யங்களும் பானத்ரவ்யங்களும் ஸம்ருத்தமாயிருக்கின்றன. ஆகையால் இங்கு நாம் ஸுகமாயிருக்கக் கூடும். இங்கு நமக்குத் தேவேந்த்ரனாலாவது ராமனாலாவது ஸுக்ரீவனாலாவது எள்ளளவும் பயம் உண்டாகாது' என்றனன். அங்கதனுக்கு அனுகூலமாகத் தாரனுங்கூடச் சொன்னதைக் கேட்டு, வானரர்களெல்லோரும் ஸந்தோஷ முற்றவராகி 'எங்ஙனம் செய்தால் நமக்கு ஹிம்ஸை உண்டாகாதோ, அங்ஙனம் சீக்ரமாக ஏற்பாடு செய்வீர்களாக' என்று மொழிந்தனர். ஐம்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

**ஹனுமான் அங்கதனுடைய மதத்தைக் கண்டித்து ஸுக்ரீவனிடம் போகலாமென்றுரைத்தல்.**

அனந்தரம் சந்த்ரன்போல் காந்தி விளங்கப்பெற்ற தாரன் அங்ஙனம் சொல்வதுகேட்டு ஹனுமான் 'இனி ஸுக்ரீவனது வானரராஜ்யத்தை யெல்லாம் அங்கதன் தப்பாமல் பறிப்பான்' என்று நினைத்தனன். ஹனுமான்

வாலிகுமாரனாகிய அங்கதனை[1] க்ரஹணம் தாரணம் முதலிய எட்டுக் குணங்கள் பொருந்திய புத்தியுடையவனென்றும் [2]நான்குவகைப்பட்ட பலமுடையவனென்றும் [3] தேசகாலஜ்ஞதை முதலிய பதினான்கு குணங்களால் ப்ரகாசிப்பவனென்றும் நினைத்தனன். சந்த்ரன் சுக்லபக்ஷம் முதலாகக் காந்தியின் மிகுதி மேன்மேலும் வளரப்பெறுவதுபோல் க்ரமமாக இடைவீடின்றித் தேஜஸ்ஸும் பலமும் பராக்ரமமும் வளரப்பெற்றுப் புத்தியில் ப்ருஹஸ்பதியைப்போன்று பராக்ரமத்தில் தனது தந்தையை நிகர்த்து, ஒருக்கால் ஹிதமுபதேசிக்கும் சுக்ரனது வசனத்தைக் கேட்கின்ற தேவேந்த்ரன்போல்

1 இங்கு 'க்ரஹணம் தாரணம் சைவ ஸ்மரணம் ப்ரதிபாதநம்| ஊஹோऽபோஹோऽர்த விஜ்ஞாநம் தத்வஜ்ஞாநம் ச தீகுணா:' என்னும் ப்ரமாணத்தைக் காண்க. விஷயத்தை அறிதல், அதை நெஞ்சில் நிறுத்தல், அதை மறவாதிருத்தல்; அதைப் பிறரறியக் கூறுதல், அதற்கு வேண்டிய அர்த்தங்களைக் கூட்டிக்கொள்ளல், அதற்கு விருத்தமான அம்சத்தைக் கழித்தல், அதன் ஸ்வரூபஸ்வபாவங்களை உணர்தல், அதை உள்ளபடி அறிதல் ஆகிய இவை புத்திகுணங்களாம்.

2 பாஹுபலம் மனோபலம் உபாயபலம் பந்து பலம் என்னும் நான்கு வகைப்பட்ட பலமுடையவன்.

3 பதினான்கு குணங்களாவன.—'தேசகாலஜ்ஞதா தார்ட்யம் ஸர்வக்லேசஸஹிஷ்ணுதா| ஸர்வவிஜ்ஞாநிதா தாக்ஷ்யமூர்ஜஸ் ஸம்வ்ருதமந்த்ரதா| அவிஸம்வாதிதா சௌர்யம் சக்திஜ்ஞத்வம் க்ருதஜ்ஞதா| சரணாகதவாத்ஸல்ய மமர்ஷத்வமசாபலம்' என்று சொல்லப்பட்டவை. தேசகாலங்களை அறிதலும், வலிவும், ஸமஸ்த கஷ்டங்களையும் பொறுத்திருத்தலும், எல்லாம் உணர்தலும், வல்லமையும், ப்ரயத்னமும், ஆலோசனையை வெளிப்படுத்தாமலும், அபத்தங் கூறாமையும், சூரத்வமும், பிறருடைய வல்லமையறிதலும், பிறர்செய்த நன்றியை மறவாமையும், சரணம் அடைந்தவரிடத்தில் ப்ரீதியும். கோபமும், சாபலமில்லாமையும் ஆகிய இவையே.

தாரனது வசனத்தைச் செவியுற்றுப் பர்த்தாவாகிய ஸுக்ரீவனது கார்யத்தில் பரிஶ்ரமப்பட்டிருக்கும் ஸர்வ சாஸ்த்ரஜ்ஞனுகிய அங்கதன் ஸுக்ரீவனேடு வேறுபடாமல் அவனுக்கு அனுகூலனுகும்படி ஹனுமான் நீதிகளைச் சொல்லத் தொடங்கினன். ஹனுமான் ஸாம தானபேத தண்டோபாயங்களில் மூன்ருவதாகிய பேதோபாயத்தைக் கொண்டு, பேச்சில் வல்லமை விளங்க, அந்த வானரர்களெல்லோரையும், அங்கதனது அபிப்ராயத்தின்படி அந்தப் பிலத்தில் புகுந்திருந்து காலத்தைக் கழிக்கும் விஷயத்தினின்று வேறுபட்டு வரும்படிக்குச் செய்தனன். வானரர்களெல்லோரும் மனம் வேறுபட்டிருக்கப்பெற்றபின்பு அந்த ஹனுமான் கோபஸ்வரூபமாகிய தண்டோபாயத்தை அவலம்பித்து அதற்குத் தகுந்த பயங்கரமான பல வாக்யங்களைச்சொல்லி அங்கதனுக்கும் பயத்தை விளைவித்தனன். 'அங்கதா! நீ யுத்தத்தில் உன் தந்தையைக்காட்டிலும் மிகவும் வல்லவனல்லவா? உன் தந்தையைப்போல் கபிராஜ்ய பாரத்தையெல்லாம் திடமாக வஹிக்க வல்லவன். குரங்குகளில் தலைவனே! இது தவிர, வானரர்கள் எப்பொழுதும் சஞ்சலமான மனமுடையவர். இவர்கள் பார்யைகளையும் பிள்ளைகளையும் விட்டு உனது ஆஜ்ஞைக்கு உட்பட்டு எள்ளளவும் பொறுத்திருக்கமாட்டார்கள். உன்னெதிரில் சொல்லுகிறேன். இந்த ஜாம்பவானும் நலனும் மஹா கபியாகிய ஸுஹோத்ரனும் உன்னை அனுஸரித்துவர மாட்டார்கள். அப்படியே நானும் உன்னை அனுஸரித்து வரமாட்டேன். இந்த எங்களெல்லோரையும் ஸாம தான பேதங்களாலாவது தண்டோபாயத்தினுலாவது ஸுக்ரீவனிடமிருந்து உன் வசம் இழுத்துக்கொள்ள உன்னுல் ஸாத்யமன்று. பலம் மிகுந்திருக்கப் பெற்றவன். அற்பபலனேடு விரோதித்துக்கொள்ளலாமென்று நீதியுணர்ந்தவர் சொல்வார்களேயன்றித், துர்ய

பலன் பலவந்தனோடு விரோதம் வைத்துக்கொள்வது அவர்க்கு ஸம்மதமன்று. பலஹீனன் ஆத்மரக்ஷணஞ் செய்துகொள்ள வேண்டியவனாகையால் அவனுக்குப் பலவந்தனோடு விரோதம் வைத்துக்கொள்வது எள்ளளவும் யுக்தமன்று. ஸ்வபலம் இல்லாமற் போயினும் உனக்கு ரக்ஷகமாக எந்தக் குஹையை நினைக்கின்றாயோ, தாரன் 'இந்தப் பிலம்' என்று சொல்லச் செவிப்பட்ட இந்த ருக்ஷபிலத்தைப் பிளப்பது லக்ஷ்மண பாணங்களுக்கு அற்பகார்யமே. (நீ ரக்ஷகமாக நினைக்கும் பிலத்தை லக்ஷ்மண பாணங்கள் அனுயாஸமாகப் பிளந்துவிடும்.) முன்பு இந்த்ரன் மயனைக்குறித்து இந்தப் பிலத்தின்மேல் வஜ்ராயுதத்தை ப்ரயோகித்துச் சிறிதே செய்தனன். த்வாரம் மாத்ரமே உண்டாகச் செய்தானன்றி மற்றொன்றுமில்லை. லக்ஷ்மணனோ இலைத் தொன்னையைக் கிழிப்பதுபோல் இந்தப் பிலத்தைக் கூரானபாணங்களால் பேதித்துவிடுவான். அப்படி நிகரில்லாத சக்தியமைந்து வஜ்ராயுதத்திற்கும் இடிக்கும் நிகரான பாணங்கள் பலவும் லக்ஷ்மணனிடம் இருக்கின்றன. அவை மலைகளையாயினும் பேதிக்கவல்லவை. அவைகளுக்கு இந்தப்பிலம் எவ்வளவு? பரந்தபனே! நீ ஸுக்ரீவனோடு விரோதித்து இந்தப் பிலத்திலிருக்க முயன்றவுடனே இவ்வானரர்களெல்லோரும் நிச்சயித்துக்கொண்டு உன்னை விட்டுப்போவார்கள். இவர்கள் உன்னோடிருக்க ஆரம்பித்தவுடனே பார்யைகளையும் பிள்ளைகளையும் நினைத்துக்கொண்டு எப்பொழுதும் மனவருத்த முற்றவராகித் தகுந்த ஆஹாரங்கிடையாமையால் பசியுற்று மெத்தென்ற படுக்கையில் படுத்துக் கொள்பவராகையால் இங்குக் கடினமான பூமியின் மேல் படிக்கமுடியாமல் பல விதத்தில் வருந்தி உன்னைப் பின்னேவிட்டுப் போய்விடுவார்கள். அங்ஙனம் உன்னை

இவ்வானரர்கள் விட்டுப்போனபின்பு, நீ உன் மித்ரர்களையும் உன் ஹிதத்தை விரும்பும் பந்துக்களையும் பிரிந்து மிகவும் திகிலடைந்து காற்றில் பறக்கும் புல்லைக் காட்டிலும் குறைந்தவனுவாய். பயங்கரங்களும் பகைவரை உருமாய்க்க வல்லவைகளும் மஹா வேகம் அமைந்தவைகளும் அணுக முடியாதவைகளுமாகிய லக்ஷ்மணனது பாணங்கள், ராஜன் சொன்ன கார்யத்தைச் செய்யாதிருக்கிற உன்னைத் தப்பாமல் கொன்று விடும். நீ எங்களுடன் வந்து வணக்கமுடையவனுகி எப்பொழுதும்போலவே இருப்பாயாயின், அப்பொழுது மாத்ரமே ஸுக்ரீவன் தனக்குப் பின்பு க்ரமமாக உனக்கு வானரராஜ்யத்தில் பட்டங்கட்டுவான். உன் சிற்றப்பனுகிய ஸுக்ரீவன் தர்மஸ்வபாவன்; பிறர்க்கு ஸந்தோஷஞ் செய்யுந் தன்மையன்; வ்ரதங்களில் திடமாயிருப்பவன்; பாபமற்றவன்; செய்த ப்ரதிஜ்ஞையைத் தவற மாட்டான்; உன்னை ஒருக்காலும் எள்ளளவும் வதிக்க மனங்கொள்ளமாட்டான். அங்கதா! இவ்வளவேயன்றி, ஸுக்ரீவன் உன் தாய்க்கு மிகவும் ப்ரியமாயிருப்பவன்; ஆகையால் அவளது ப்ரியத்தையே விரும்பிக்கொண்டிருப்பான். அவன் ப்ராணன்களும் அவளதீனங்களே! நீ அவளது குமாரன். ஆகையால் தனக்கும் குமாரனேயன்றி வேறில்லை. (அவனுக்கு வேறு ஸந்தானமும் இல்லை.) ஆகையால் அவனிடம் நீ போகக்கூடும்' என்றனன். ஐம்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

### அங்கதாதி வானரர்கள் ப்ராயோபவேசஞ் செய்தல்.

ஹனுமான், வணக்கமுடையதும் தர்மம் பொருந்தியதும் ராஜபக்தி யமைந்ததுமாகிய வாக்யத்தை மொழி

யக்கேட்டு, அங்கதன் 'ஸ்திரபுத்தியும் ஆத்மசுத்தியும் [1] அந்தக்கரண சுத்தியும் [2] தயாளுத்வமும் [3] நிஷ்காபட்யமும் பராக்ரமமும் காம்பீர்யமும் ஸுக்ரீவனிடத்தில் சிறிதும் ஸம்பவிக்கமாட்டா. தன்னுடன் பிறந்தவனும் தனக்குப் பெரியோனுமாயிருப்பவன் பிழைத்திருக்கும் பொழுதே அவனுடைய ப்ரியபார்யையும் பட்டமஹிஷியும் தர்மத்தின்படி தனக்குத் தாயுமா யிருப்பவளை, உலகத்தவர் ஜுகுப்ஸைபடும்படி கைப்பற்றினனே. மேலும், மஹானுபாவனுகிய தனது அண்ணன் யுத்தத்திற்காகப் பிலத்தில் புகுந்திருக்கும்பொழுது 'நீ இந்தப் பிலத்தின் வாசலில் இருந்து பகைவன் தப்புவித்துக் கொண்டு இதினின்று வெளிப்படுவானுயின், எதிர்த்து தடுப்பாயாக' என்று தனக்கு நியமித்துப் பிலத்தில் புகுந்தபின்பு பெரும்பாறையால் அந்தப் பிலத்தின் துவாரத்தை மூடிவிட்டானே! இப்படி நிந்தைக்கிடமா யிருப்பவனும் த்ரோஹியுமாகிய ஸுக்ரீவனுக்கு எப்படி தர்மம் தெரியும்? தான் கையைப் பிடித்துக்கொண்டு ஸத்யஞ் செய்த ராமனை, வாலியைக்கொன்று தனக்கு உபகாரஞ் செய்த பெரும் புகழோனையுங்கூட ஸுக்ரீவன் மறந்தானே! இப்படிப்பட்டவன் எவன் செய்த உபகாரத்தை நினைப்பான்? 'ஸேனைகளை வரவழைத்து ராமனிடம் நன்றியைக்காண்பிக்க வில்லையா' என்கிறீர்களோ? அவன் லக்ஷ்மணனுக்குப் பயந்து அதனுல் ஸீதையைத்தேட நம்மை நியமித்தானே யன்றிப் பயங்கரமான அதர்மத்திற்குப் பயந்தன்றே! அப்படிப்பட்டவனிடத்தில் தர்மம் ஏது? இப்படிப்பட்ட பாபிஷ்டனும் [4] க்ருதக்னனுமாகிப் பூர்வம் தனக்குச்செய்த உபகாரத்தை நினைப்பது மின்றிச் சஞ்சலசித்தனுமாகிய ஸுக்ரீவனிடத்தில், அவன்

1 மனதின்சுத்தி. 2 தயையுடன் இருத்தல்.
3 கபடமில்லாமலிருத்தல். 4 நன்றியில்லாதவன்.

குலத்தில்பிறந்தவனும் பிழைக்கவேண்டுமென்னும் நினைவுடையவனும் பூஜ்யனுமாகிய எவனுக்கு நம்பிக்கை உண்டாகும்? ஸுக்ரீவன், குணமுடையவனுயினும் குணமில்லாதவனுயினும் தன் புதல்வனை ராஜ்யத்தில் ஏற்படுத்துவானேயன்றிப் பகைவனது புதல்வனுகிய நான் எள்ளளவும் பிழைத்திருக்கப்போகுன். நான் முதலிலேயே என் தாய் விளைவித்த ஹிம்ஸையால் அபராதஞ் செய்தவனுயினன். அதிலும், அவனுடன் விரோதித்துக்கொண்டு ருக்ஷபிலத்தில் இருக்கவேண்டுமென்று நான் செய்த ஆலோசனையும் வெளியாய்விட்டது. மேலும் ப்ரபு மந்த்ராதிசக்திகளு மில்லாதவன். இப்படிப்பட்ட நான் அநாதன்போல் பலமற்றவனுகிக் கிஷ்கிந்தையுள் புகுவேனுயின் எப்படி ஜீவித்திருக்கப் போகிறேன்? ஸுக்ரீவன் மறைவாக வஞ்சனஞ் செய்பவனும் க்ரூரனும் [1]காதுகனுமாகையால் ராஜ்யத்தைப்பற்றி என்னை ரஹஸ்யமாகத் தண்டிக்கத் தொடங்கிக் கயிற்றிற் கட்டியாவது உறிபோடுவித்தாவது கொன்றுவிடுவான். உறியில் அகப்பட்டு மரணம் அடைவதைக் காட்டிலும் ப்ராயோபவேசத்தினுல் மரணம் அடைவதே எனக்கு மேலாகத் தோற்றுகின்றது. ஆகையால் எனக்கு அனுமதி கொடுத்து நீங்களெல்லோரும் க்ருஹத்திற்குப் போவீர்களாக. நான் உங்களுக்கு ப்ரதிஜ்ஞை செய்கிறேன் கேளுங்கள். நான் கிஷ்கிந்தாபுரிக்கு வரமாட்டேன். இங்கேயே ப்ராயோபவேசத்தினுல் ப்ராணன்களை விடுகிறேன். நான் கிஷ்கிந்தைக்கு வந்து மரணமடைவதைக் காட்டிலும் இங்கு மரணம் அடைவதே நலம். பலிஷ்டர்களான ராமலக்ஷ்மணர்களைப் பார்த்து எனக்குப் பதிலாக நமஸ்காரஞ்செய்து க்ஷேமம் விசாரிக்கவேண்டும். வானரேந்த்ரனும் எனது சிற்றப்பனு

1 ஹிம்ஸிப்பவன்.

மாகிய ஸுக்ரீவனைப் பார்த்தும் நீங்கள் எனக்குப் பதிலாக நமஸ்கரித்து க்ஷேமத்தையே விசாரிப்பீர்களாக. சிற்றன்னையாகிய ருமையைப் பார்த்து ஆரோக்யமும் க்ஷேமமும் விசாரிக்கவேண்டும். என் தாயான தாரையைத்தகுந்த வார்த்தைகளால் ஸமாதானப்படுத்த வேண்டும். என் தாய் தாரையை நினைத்துக்கொண்டால் மிகவும் மன இரக்கம் உண்டாகின்றது. இயற்கையாகவே அவள் புதல்வனிடத்தில் மிகுந்த ப்ரீதியும் ஆதரமும் உடையவள். இனி நான் இங்கு முடிவதைக் கேட்பாளாயின் உடனே ப்ராணன்களை விடுவாள். இது ஸ்பஷ்டம்' என்றனன். அங்கதன் இவ்வளவு மொழிந்து அந்த வ்ருத்த வானரர்களுக்கு நமஸ்காரஞ்செய்து மன வருத்தத்துடன் ரோதனஞ் செய்துகொண்டு பூமியின் மேல் தர்ப்பங்களைப் பரப்பிக்கொண்டு படுத்தனன். அங்கதன் அங்ஙனம் படுப்பதுகண்டு மற்ற வானரோத்தமர்கள் அனைவரும் வருந்திக் கண்களினின்று வெந்நீர்பெருகப் பெற்று ரோதனஞ் செய்தனர். அவர்கள் ஸுக்ரீவனை நிந்தித்துக்கொண்டும் வாலியைப் புகழ்ந்துகொண்டும் அங்கதனைச் சூழ்ந்துகொண்டு எல்லோரும் ப்ராயோபவேசஞ் செய்ய நிச்சயித்தனர். அந்த வானரஶ்ரேஷ்டர்கள் வாலி புத்ரனாகிய அங்கதனுடைய மதத்தை அறிந்து இங்ஙனம் மரணம் அடைவதே நலமென்று நினைத்துத் தாமும் ப்ராயோபவேசஞ் செய்து ப்ராணன்களை விடவிரும்பி அங்கு ஜலம் எடுத்து ஆசமனஞ் செய்து ஸமுத்ரத்தின் வடகரையில் தெற்கு நுனியாகத் தர்ப்பங்களைப் பரப்பிக் கிழக்குமுகமாகப் படுத்துக் கொண்டனர். ராமன் வனத்திற்கு வருவதையும், தசரதன் மரணம் அடைவதையும், ஜனஸ்தானத்தில் கரதூஷணாதிகளின் வதத்தையும், ஸீதாபஹரணத்தையும், ஜடாயுவதத்தையும், யுத்தத்தில் ராமனால் வாலி அடி

பட்டதையும், ஸுக்ரீவன் கெடுவைக் கடந்து வெறு மனேயிருப்பதற்கு ராமன் கோபித்துக் கொண்டதையும், அனந்தரம் ஸீதையைத்தேட ஸுக்ரீவன் வானரர்களை அனுப்பினதையும், தமக்கு ப்ராயோபவேசமென்னும் பயம் ப்ராப்தமானதையும் ஆகிய இவைமுதலாக நடந்தவற்றை யெல்லாம் அவ்வானரர்கள் சொல்லிக் கொண்டிருந்தனர். அங்ஙனம் பெரிய பர்வதசிகரம் போன்ற அம்மேலான வானரர்கள் சப்தம் உண்டாகும்படி சொல்லிக்கொண்டு படுத்துக்கொள்கையில், மேற்கிளம்பின மேககர்ஜனைபோன்ற அவர் செய்கிற அந்த த்வனியால் அம்மஹாபர்வதத்தின் குஹைகள் முழுவதிலும் பெரிய ப்ரதித்வனி உண்டாயிற்று. ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸம்பாதி வருதலும், ஸம்பாதியைப்பார்த்து வானரர்கள் துக்கஸம்பாஷணஞ் செய்தலும்.

அவ்வானரர்கள் அந்தப் பர்வதத்தில் ப்ராயோபவேசத்திற்காகப் படுத்திருந்த இடத்திற்குக் கழுகுராஜனாகிய ஸம்பாதி வரத்தொடங்கினன். ஜடாயுவுக்கு அண்ணனும் பல பௌருஷங்களால் புகழ்பெற்றவனும் ஸ்ரீமானும் சிரஞ்சீவியுமாகிய ஸம்பாதியென்னும் கழுகுராஜன் விந்த்யபர்வதத்தின் குஹையினின்று புறப்பட்டு அங்கு ப்ராயோபவேசஞ்செய்த வானரர்களைப் பார்த்து ஸந்தோஷமுற்றவனாகி 'உலகத்தில் தெய்வம் மனுஷ்யனுக்குத் தப்பாமல் யோகக்ஷேமங்களை நடத்திக்கொண்டிருக்கும். வெகுகாலங்கழித்து இப்பொழுது, அது இந்தத் தின்பண்டத்தை எனக்கு ஏற்படுத்திற்று. ஆனதுபற்றியே, நானாக இதை உத்தேசித்துப் போகாதிருப்பினும், இதுவே என்னிடம் வந்து சேர்ந்தது. உத்தமர்களான இந்த வானரர்களை ஒன்றொன்றாகப்



1933. ஸம்பாதியைக்கண்டு வானரர்கள் பயப்படுதல்.

பிடித்துக் கொன்று கொன்று பக்ஷிக்கிறேன்' என்று அவ்வானரர்களைப் பார்த்து மொழிந்தது. அங்ஙனம் ஸம்பாதி ஆஹாரத்தின் பொருட்டுப் பேராசையுடன் மொழிந்த வார்த்தையைக்கேட்டு அங்கதன் மிகவும் திகில் அடைந்து ஹனுமானைப் பார்த்து வானரர்களாகிய நம்மெல்லோரையும் பாழ்செய்யும்பொருட்டு ஸீதையென்னும் வ்யாஜத்தினால் ஸூர்ய புத்ரனாகிய ஸாக்ஷாத் யமனே இவ்விடம் வந்தனன்பார். ராமனது கார்யத்தைச் செய்து முடித்திலோம். ராஜாவாகிய ஸுக்ரீவனது ஆஜ்ஞையையும் நிறைவேற்றவில்லை. இதற்குள் இவ்வானரர்களனைவர்க்கும் இங்ஙனம் வருமென்று முன்பு நினையாத இந்த விபத்து திடீலென்று ஸம்பவித்ததே! கழுகு ராஜனாகிய ஜடாயு ஸீதைக்கு ப்ரியஞ்செய்ய விரும்பி ஜனஸ்தானத்திற் செய்த கார்யத்தை யெல்லாம் நீங்கள் கேட்டிருக்கிறீர்களல்லவா! அந்த ஜடாயுவைப்போலவே ஸமஸ்த ப்ராணிகளும் திர்யக்ஜந்துக்களுங்கூட நம்மைப்போல் ராமனுக்கு ப்ரியஞ் செய்வதற்காக ப்ராணன்களையுந் துறக்கின்றன. ப்ராணிகளெல்லாம் ஸ்னேஹத்திற்கும் கருணைக்கும் உட்பட்டு ஒவ்வொன்றும் ராமனுக்குத் தனித்தனியே உபகாரஞ்செய்கின்றன. தர்மஜ்ஞனாகிய அந்த ஜடாயு ராமனுக்கு உபகாரஞ் செய்வதற்காக ஸந்தோஷத்துடன் தேஹத்தை விட்டானாகையால் அவன் ராமனுக்கு ப்ரியஞ்செய்தவனாயினன். நாமும் ராமகார்ய நிமித்தமாகத் திரிந்து திரிந்து மிகவும் இளைப்புற்றுப் பிழைப்பில் ஆசையைத் துறந்து, புகக்கூடாத இந்த ப்ரதேசங்களில் வந்திருக்கின்றனம். இவ்வளவிலும் ஸீதையைப் பார்த்தவரல்லோம். ராமகார்யத்தின் பொருட்டு கழுகுராவணனோடு யுத்தஞ்செய்து மரணம் அடைந்த க்ருத்ரராஜனாகிய ஜடாயுமாத்ரம் ஸுக்ரீவபயத்தில் நம்மைப்போல் அகப்

படாமல் அதினின்று தப்புவித்துக் கொண்டு பரமகதி யைப்பெற்று ஸுகம் அடைந்தனன். ஜடாயு மரணம் அடைந்ததனுலும் தசரன் காலஞ்சென்றதனுலும் ராவணன் ஸீதாதேவியை எடுத்துக் கொண்டுபோனதனுலும் வானரர்களுக்கு இப்பொழுது ப்ராணஸந்தேஹம் உண்டாயிற்று. ராமலக்ஷ்மணர்கள் ஸீதையோடு வனவாஸஞ் செய்தலும், ராமபாணத்தால் வாலி அங்ஙனம் ஹதனுனதும், ராமன் கோபத்தினுல் ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷஸர்களெல்லோரையும் அங்ஙனம் வதித்து முடித்தலும் ஆகிய இவ்விகாரங்களெல்லாம் தசரதன் கைகேயிக்கு வரங்கொடுத்ததனுல் வந்தன' என்றனன். மஹாமதியாகிய அந்தக் கழுகுராஜன், அங்கதன் சொன்ன துக்ககரமான வார்த்தைகளைக்கேட்டு வானரர்களெல்லோரும் பூமியில் வீழ்ந்திருப்பதையும் பார்த்து மனது மிகவும் கலங்கப்பெற்றுத் தீனனுகி இங்ஙனஞ் சொல்லத்தொடங்கினன். ஐம்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸம்பாதிக்கும் வானரர்களுக்கும் ஸம்பாஷணம்.

அனந்தரம் கூரானமுகமுடைய அந்த ஸம்பாதி அப்பொழுது அங்கதன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டுப் பேரொலியுடன் 'எனக்கு ப்ராணன்களைக்காட்டிலும் ப்ரியனுகிய என் தம்பி ஜடாயு ஹதனுனனென்று என்மனம் நடுங்கும்படி பேரொலியுடன் எவனே சொல்லுகின்றனன். அவன் யாவன்? ஜனஸ்தானத்தில் ஜடாயுவுக்கும் ராவணனுக்கும் யுத்தம் எப்படி நேர்ந்தது? வெகுகாலங்கடந்த பின்பு இப்பொழுது என் தம்பியின் பேரைக் கேட்கப்பெற்றேன். நீங்கள் என்னைப் புகக்கூடாத இந்தப் பர்வத சிகரத்தினின்று நீங்களிருக்குமிடத்திற்கு இறக்கவேண்டுகிறேன். குணஜ்ஞனும் பல பராக்ரம கார்யங்களால் புகழ்பெற்றவனுமாகிய என்

தம்பியின் பேரை மிகவும் நெடுநாள் கழிந்தபின்பு உங்கள் மூலமாய்க் கேட்க நேர்ந்ததற்கு மிகவும் ஸந்தோஷித்தனன். வானரோத்தமர்களே! ஆகையால் ஜனஸ்தானத்தில் வாஸஞ் செய்திருந்த என் தம்பி ஜடாயு எங்ஙனம் வதிக்கப்பட்டானோ அதன் விவரத்தைக்கேட்க விரும்புகின்றேன். பெரியோர்களுக்கு ப்ரியஞ்செய்பவனாகிய ராமன் எவனுக்கு ப்ரீதிக்கிடமான பெரிய குமாரனோ, அப்படிப்பட்ட தசரதன் என் தம்பிக்கு எப்படி ஸ்னேஹிதனாயினன்? சத்ருக்களை அழிக்கவல்லவர்களே! ஸூர்யகிரணங்களால் எனது இறகுகள் கொளுத்தப்பட்டனவாகையால் எனக்கு உங்களருகே வரச்சக்தியில்லை. இம்மலைமேலிருந்து நீங்களிருக்கு மிடத்திற்கு இறங்கவிரும்புகின்றேன்' என்றனன். ஸம்பாதி மொழிந்த வார்த்தை சோகத்தினால் ஹீனஸ்வரமாயிருந்தது. அப்படியிருப்பினும் அவ்வானரர்கள், அவன் தம்மை ஹிம்ஸிப்பானென்று சங்கித்தவராகையால் அதைக்கேட்டும் எள்ளளவும் நம்பவில்லை. ப்ராயோபவேசஞ் செய்திருக்கின்ற அவ்வானரர்கள் நம்பிக்கையுண்டாகப் பெருமையன்றிக்கே அதற்கு விபரீதமாக அந்தக் கழுகுராஜனைப் பார்த்து 'இது நம்மெல்லோரையும் பக்ஷித்துவிடும்' என்று பயங்கரமான அபிப்ராயங் கொண்டனர். மேலும், அவ்வானரவீரர்கள் 'நாம் மரணத்தை விரும்பியே ப்ராயோபவேசஞ் செய்தனம். இது இப்பொழுது நம்மைப் பக்ஷித்துவிடுமாயின், நாம் சீக்ரமாக இஷ்டஸித்தியைப்பெற்று ப்ரயோஜனங் கைகூடப்பெறுவோம்' என்று இங்ஙனம் எல்லோரும் நினைத்தனர். அப்பொழுது அங்கதன் பர்வத சிகரத்தினின்று ஸம்பாதியை இறக்கி அவனைப் பார்த்து 'பக்ஷி! மஹா பராக்ரமசாலியும் தார்மிகனுமாகிய எம்பாட்டன் ருக்ஷரஜஸ்ஸென்னும் வானரன் இருந்தனன். அவனுக்கு நாறுகோடி

புருஷர்களின் பலமுடைய வாலியென்றும் ஸுக்ரீவ னென்றும் இரண்டு பிள்ளைகள் உண்டாயினர். என் தந்தையாகிய வானரராஜன் வாலி பராக்ரம கார்யங்க ளால் உலகத்தில் ப்ரஸித்திபெற்றிருந்தனன். இக்ஷ்வா குவம்சத்து ராஜாக்களுடையதாகிய ஸமஸ்த பூமண்ட லத்திற்கும் ப்ரபுவும் மஹாரதனும் செல்வப்பெருக்கு டையவனுமாகிய தசரதகுமாரன் ராமன் தந்தையினுஜ் ஞையைத் தலையால் வஹித்துத் தர்மமார்க்கத்தில் நிலை நின்று தம்பி லக்ஷ்மணனும் பார்யையாகிய ஸீதையும் தொடர்ந்துவரப் பெற்றுத் தண்டகாரண்யத்திற்கு வந் தனன். அவன் ஜனஸ்தானத்திலிருக்கும்பொழுது அவ ன் பார்யையாகிய ஸீதையை ராவணன் பலாத்காரஞ் செய்து அபஹரித்துக்கொண்டு போயினன். ராவணன் ஸீதையை ஆகாயவழியாகக்கொண்டு போகுந் தரு ணத்தில் ராமனது தந்தைக்கு நண்பனும் கழுகுராஜனு மாகிய ஜடாயுமாத்ரம் கண்டனன். பிறகு ஜடாயு யுத் தத்தில் ராவணனை ரதமற்றவனுகச் செய்து மைதிலி யை எடுத்துக்கொண்டு போகவொட்டாமல் நிறுத்திக் கடைசியில் இளைப்புற்றுக் கிழவனுகையால் ராவணனுல் அடிக்கப்பட்டனன். அனந்தரம் அவன் ராமனுல் ஸம்ஸ் காரம் பெற்று உத்தமகதியை அடைந்தனன். பின்பு ராமன் மஹானுபாவனும் என் சிற்றப்பனுமாகிய ஸுக் ரீவனுடன் ஸ்னேஹஞ்செய்துகொண்டு என் தந்தையா கிய வாலியை வதித்தனன். ஸுக்ரீவன், தானும் தன் மந்த்ரிகளுமாக என் தந்தை வாலியிடம் வைரம் வைத் துக் கொண்டிருந்தானுகையால், ராமன் வாலியைவதித் து ஸுக்ரீவனுக்கு வானரராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ் செய்வித்தனன். அந்த வானர நாதன் அந்த ராமனுல் வானரராஜ்யத்தில் பட்டாபிஷேகம் பெற்று ஸமஸ்த வானரோத்தமர்களுக்கும் ராஜனு யிருக்கின்றனன்.

அவனது ஆஜ்ஞையின்படிக்கே நாங்கள் வந்திருக்கின்றனம். நாங்கள் ராமனுக்காகவே அவனாஜ்ஞையின்படி அவ்வவ்விடங்களில் எவ்வளவு தேடிப் பார்க்கினும் ராத்ரியில் ஸூர்யகாந்தி அகப்படாததுபோல் ஸீதாதேவி அகப்படவேயில்லை. அங்ஙனம் நாங்கள் மிகுந்த ஜாக்ரதையுடன் தண்டகாரண்யம் முழுமையும் தேடித்திரிந்து, தெரியாமையால் தர்மசாரிணியாகிய ஸ்வயம்ப்ரபையின் திறந்த வாயலையுடைய பிலத்துள் ப்ரவேசித்தனம். மயன் தன் விசித்ர சக்திபலத்தைக் கொண்டு நிர்மித்த அந்தப் பிலத்துள் நாங்கள் திரிந்துகொண்டிருக்கையில், அங்கேயே எங்களுக்கு ராஜனாகிய ஸுக்ரீவன் ஏற்பாடு செய்த கெடுவாகிய மாதம் கடந்துபோயிற்று. நாங்களெல்லோரும் மஹாராஜா ஸுக்ரீவனது ஆஜ்ஞையின்படி செய்யவேண்டியவர். இப்பொழுது அவன் விதித்த வ்யவஸ்தையை அதிக்ரமித்தவராகையால் அவனிடம் போகமுடியாமல் பயப்பட்டு ப்ராயோபவேசஞ் செய்தனம். அப்படிப்பட்ட மஹாவீரனாகிய ராமனும் லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் எங்கள்மீது கோபமுற்றிருக்கும்பொழுது நாங்கள் அவ்விடம் போனோமாயின், ஒருவனாயினும் எள்ளளவும் பிழைக்கவல்லவனல்லன்' என்றனன். ஐம்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ ஸம்பாதி ஸீதையிருக்குமிடத்தை வானரர்களுக்குக் கூறுதல். }

அந்த ஸம்பாதி, இங்ஙனம் ப்ராணன்களைவிட முயன்றிருக்கிற வானரர்களின் துக்க வசனத்தைக் கேட்டுத்தானும் துக்கித்தவனாகிக் கண்ணீர் பெருக்கிக் கொண்டு அவர்களை நோக்கிப் பேரொலியுடன் 'வானரர்களே! நீங்கள் யுத்தத்தில் பலவந்தனாகிய ராவணனால்

அடிக்கப்பட்டதாகச் சொன்ன ஜடாயு என் தம்பி. ராவணன் என் தம்பியை வதித்தானென்று கேட்டபொழுதும் நான் கிழவனாகி இறகுகளை இழந்திருக்கையால் அதையுங்கூடப் பொறுத்துக்கொண்டிருக்க வேண்டியதாயிருக்கின்றது. ராவணனைக்கொன்று என் தம்பியின் பகையைத் தீர்த்துக்கொள்ள எனக்கு இப்பொழுது சக்தி இல்லாமற்போயிற்றே! என் செய்வேன்? முன்பு வ்ருத்ராஸுரவதம் நடந்தபொழுது நாங்கள் அண்ணன் தம்பிகளிருவரும் ஒருவர்க்கொருவர் வேகாதிசயத்தைப் பரீக்ஷிக்க விரும்பி ஆயிரங் கிரணங்களோடு ஜ்வலிக்கின்ற ஸூர்யனது ஸமீபத்திற்குப் போயினம். நாங்கள் மண்டல கதியாகச் சுழித்துத் திரிந்துகொண்டு ஆகாயமார்க்கத்தில் வெகுதூரம் கடந்து போயினம். அனந்தரம் ஸூர்யன் ஆகாய மத்யத்திற்கு வருகையில் ஜடாயு ஸூர்யனுடைய வெப்பத்தை பொறுக்கமுடியாமல் வருத்தமுற்றனன். என்தம்பி அங்ஙனம் ஸூர்யகிரணங்களால் பீடிக்கப்படுவது கண்டு நான் ப்ராத்ரு ஸ்னேஹத்தினால் மிகவும் தழதழப்புற்று என் இறகுகளால் ஸூர்யகிரணங்கள் அவன்மேல் படாதபடி மறைத்தனன். வானரோத்தமர்களே! நான் இறகுகள் தீயப்பெற்று இந்த விந்த்ய பர்வதத்தில் வீழ்ந்தனன். நான் இங்கேயே வாஸஞ்செய்துகொண்டு இறகுகளில்லாமையால் மற்றெவ்விடத்திற்கும் போகவரமுடியாமையால் என் தம்பியின் ஸமாசாரம் ஒன்றுமே எனக்குத் தெரியவில்லை' என்றனன். ஜடாயுவின் தமையன் ஸம்பாதி அங்ஙனஞ் சொல்லுகையில், அப்பொழுது யுவராஜனும் மஹா ப்ராஜ்ஞனுமாகிய அங்கதன் அவனைப் பார்த்து 'நீ சொன்னதெல்லாம் கேட்டேன். நீ எங்கள் ஜடாயுவுக்குத் தமையனாயின், உனக்குத் தெரியுமானால் அந்த ராவணனிருக்குமிடத்தைச் சொல்லு

வாயாக. ராக்ஷஸராஜனுகிய அந்த ராவணன் தான் செய்யுங் கார்யத்தினுல் விளையும் அனர்த்தத்தைத் தெரிந்துகொள்ளவில்லை. அப்படிப்பட்ட மூர்க்கன் இருக்குமிடம் ஸமீபமோ, தூரமோ, உனக்குத் தெரிந்திருக்குமாயின், எமக்குச் சொல்வாயாக' என்றனன். அனந்தரம் மஹா தேஜஸ்வியும் ஜடாயுவின் தமையனுமாகிய ஸம்பாதி வானரர்கள் ஸந்தோஷப்படும்படி தனக்குத் தகுந்த வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கி 'வானரர்களே! நான் கழுகு, அதிலும் இறகுகள் எரியப்பெற்றவன்; கிழத்தன்மையால் வீர்யம் குறையப்பெற்றவன். நான் என் செய்யமுடியும்? ஆயினும் ராமனுக்கு வார்த்தை மாத்ரத்தினுலாவது என்னுலான மேலான ஸஹாயத்தைச் செய்கிறேன். வருணனுக்குக் கீழுள்ள அதல விதலாதி லோகங்களையும் த்ரிவிக்ரமனுகிய விஷ்ணுதேவன் அளந்த ஊர்த்வ லோகங்களையும் தேவாஸுரர்களது யுத்தங்களையும் அம்ருத மதனத்தையும் பார்த்திருக்கின்றனன். இது ராமனது கார்யமாகையால் நான் உங்களெல்லோர்க்கும் முன்னதாகச் செய்யவேண்டியவனுயிருக்கின்றனன். ஆனுல் கிழத்தன்மையால் என் தேஜஸ்ஸு குறைந்துவிட்டது. என் ப்ராணன்களும் தேஹஸந்திபந்தங்களும் கட்டுத் தளர்ந்திருக்கின்றன. அழகு மிகுந்திருக்கப்பெற்றவளும் ஸமஸ்த ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவளுமாகிய ஓர் யௌவனப் பருவமுடைய மடந்தையை, துராத்மாவாகிய ராவணன் எடுத்துக்கொண்டுபோகக் கண்டனன். அந்த யுவதி 'ராமா ராமா!' என்றும், 'லக்ஷ்மணு லக்ஷ்மணு' என்றும் முறை யிட்டுக்கொண்டும் ஆபரணங்களை வாங்கி எறிந்துகொண்டும் ராவணனிடமிருந்து விடுவித்துக்கொள்ள அவயவங்களை உதறிக்கொண்டும் இருக்கக் கண்டனன். பர்வதத்தின் நுனிமேல் ஸூர்யகாந்தி வ்யாபிப்பதுபோ

லும், மேகத்தின் மேல் மின்னல் விளங்குவதுபோலும் கறுத்த ராக்ஷஸன்மேல் அப்பெண்மணியின் மேலான பட்டு வஸ்த்ரம் ப்ரகாசித்தது. ராமனது பேரைச் சொல்லுகையால் அப்பெண்மணியே ஸீதையென்று நினைக்கிறேன். இனி ராவணனிருக்கும் இடத்தைச் சொல்லுகிறேன். கேட்பீர்களாக. ராவணனென்னும் அந்த ராக்ஷஸன் நேரே விஶ்ரவஸ்ஸின் புதல்வன்; குபேரனுடைய தம்பி. அவன் லங்கையென்னும் நகரத்தில் வாஸஞ் செய்கின்றனன். இங்கிருந்து நூறுயோஜனை தூரத்தில் ஸமுத்ரத்தில் ஓர் த்வீபம் இருக்கின்றது. அதில் அழகியதான லங்கையென்னும் பட்டணம்உளது. அதை ரமணீயமாக விஶ்வகர்மா நிர்மித்தனன். அதற்குப் பொன் திண்ணைகளுடைய விசித்ரங்களான பொன் வாசற்படிகள் விளங்கும். ஸூர்யன்போல் தகதக வென்று ப்ரகாசிக்கின்ற பெரிய மதிள் அதைச்சுற்றிக் கொண்டிருக்கும். அந்த லங்காபுரத்தில் ராவணனது அந்தப்புரத்தில் ஸீதாதேவி அகப்பட்டு முன்பு உடுத்தின பட்டு வஸ்த்ரத்துடன் ராக்ஷஸஸ்த்ரீகள் நன்கு காத்துக்கொண்டிருக்கையால் மிகவும் துக்கித்திருக்கின்றனள். ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதையை நீங்களெல்லோரும் பார்ப்பீர்கள். லங்கை ஸமுத்ரத்தால் சுற்றிலும் சூழப்பட்டு [1] ஸுரக்ஷிதமாயிருக்கின்றது. ஆகையால் நீங்கள் நிரம்பவும் நூறுயோஜனை தூரமுடைய அந்த ஸமுத்ரத்தைத் தாண்டி அதன் தென் கரையைச் சேர்ந்து லங்கையில் புகுவீர்களாயின் அங்கு ராவணனைக் காண்பீர்கள். வானரர்களே! நீங்கள் விரைவாக அந்த லங்கைக்கே போவீர்களாக. நீங்கள் அவ்விடம் ஸுகமாக ஸீதையைப்பார்த்துத் திரும்பிவருவீர்

1 ஸுரக்ஷிதமாயிருக்கின்றது - நன்றாகக் காக்கப்பட்டிருக்கின்றது.

களென்று நான் திவ்யஜ்ஞானத்தினுல் கண்டுகொள்கின்றனன். குலிங்கமென்னும் சில பக்ஷிகளும் அவைகளைப்போல் தான்யங்களால் ஜீவிக்கும் இதரபக்ஷிகளும் பூமிக்கு ஸமீபமான ஆகாயத்தில் முதல்மார்க்கத்தில் ஸஞ்சரிக்கும். காக்கைகளும் செடிகளின் பழங்களைத்தின்று ஜீவிக்கும் பறவைகளும் அதற்குமேல் இரண்டாவது மார்க்கத்தில் ஸஞ்சரிக்கும். கீர்க்காகங்களும் க்ரௌஞ்சப் பறவைகளும் அழுகுரல் பக்ஷிகளும் அதற்குமேல் மூன்ருவது மார்க்கத்தில் ஸஞ்சரிக்கும். டேகைகள் அதற்குமேல் நான்காவது மார்க்கத்தில் ஸஞ்சரிக்கும். கழுகுகள் ஐந்தாவது மார்க்கத்தில் ஸஞ்சரிக்கும். பலமும் வீர்யமும் அமைந்து ரூபயௌவனங்கள் பொருந்தி விளங்கும் ஹம்ஸங்கள் அதற்குமேல் ஆருவதுமார்க்கத்தில் ஸஞ்சரிக்கும். விநதையின் புத்ரர்களாகிய அருணகருட வம்சங்களில் பிறந்தவை. அதற்கும் மேல் ஏழாவது மார்க்கத்தில் ஸஞ்சரிக்கும்; வானரோத்தமர்களே! நானும் என்குலத்தில் பிறந்தவர்களும் விநதாபுத்ரனுகிய அருணனுல் பிறந்தவராகையால் எங்களெல்லோர்க்கும் ஏழாவது மார்க்கம். நான் இங்கிருந்தே ராவணனையும் ஸீதையையும் நன்ருகப் பார்க்கின்றனன். எப்படியென்னில் எங்களுக்குக் கருடனுக்குப்போல் திவ்யத்ருஷ்டியும் அப்படியே மஹாபலமும் உண்டு. வானரர்களே! ஆகையால் ஆஹாரபலத்தினுலும் ஸ்வபாவஸித்தமான சக்தியாலும் எங்களுக்கு எப்பொழுதும் குறைவின்றி நூறுயோஜனை தூரம்வரையில் பார்வை உண்டு. தெய்வத்தினுல் கோழிகளுக்குப் பாதமூலத்திலேயே இரை ஸம்பாதிக்கும் வ்யாபாரம் விதிக்கப்பட்டிருப்பதுபோல் எமக்கு வெகு தூரதேசத்தில் ஆஹாரத்தைக் கண்டுபிடிக்கும்படி பார்வை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஸீதையை எடுத்துக்கொண்டுபோய் நிந்தைக்கிடமான

கார்யத்தைச் செய்த துராத்மாவாகிய ராவணனை ராம னால் கொல்லுவிப்பீர்களாயின், நான் என் தம்பி விஷ யத்தில் அந்த ராவணனிடத்திலுள்ள பகையைத் தீர்த் துக்கொள்ளவேண்டிய கார்யமும் செய்தாற் போலா கும். ஸமுத்ரத்தைத் தாண்டுவதற்கு உபாயம் ஏதே னும் காண்பீர்களாக. நீங்கள் ஸீதையைக் கண்டு இஷ் டகார்யம் ஸித்திக்கப்பெற்றுக் கிஷ்கிந்தையைச் சேரு வீர்கள். ஸ்வர்க்கத்தை அடைந்த மஹானுபாவனுகிய தம்பி ஜடாயுவுக்கு ஜலதர்ப்பணஞ் செய்கிறேன். அதற் காக நீங்கள் என்னை வருணனுக்கிருப்பிடமாகிய ஸமுத் ரத்தினருகில் கொண்டுபோக விரும்புகிறேன்' என்ற னன். பிறகு மஹா பராக்ரமசாலிகளாகிய அவ்வான ரர்கள் இறகுகள் எரிந்தபடியால் அசக்தனும் பக்ஷிரா ஜனுமாகிய ஸம்பாதியை ஸமுத்ரக்கரையில் சேர்த்து, அங்கு அவன் தம்பிக்கு ஜலதர்ப்பணஞ் செய்தபின்பு மீளவும் முன்பிருந்த இடத்திற்கே கொண்டுபோய்ச் சேர்த்து ஸீதையுடையவும் ராவணனுடையவும் ஸமா சாரத்தைத் தெரிந்துகொண்டு ஸந்தோஷமுற்றனர். ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஜாம்பவான் வினவுகையில் ஸம்பாதி தன் புத்ரனுகிய ஸுபார்ஸ்வன் மூலமாய் ராவணன் ஸீதையை எடுத்துக்கொண்டு போன வ்ருத்தாந்தம் தனக்குத் தெரியு மென்று கூறுதல்.

அனந்தரம் அவ்வானரோத்தமர்கள் கழுகுராஜனு கிய ஸம்பாதி அம்ருதம்போல் மதுரமாக மொழிந்த வார்த்தையைக் கேட்டு மேனியில் மயிர்க்கூச்சலுண்டா கும்படி மிகுந்த ஸந்தோஷம் அடைந்தனர். அனந்தரம் வானரர்களெல்லோரிலும் மேலாகிய ஜாம்பவான் ஸம ஸ்த வானரர்களும் தானுமாக உடனே பூமியினின்று

எழுந்து அந்த ஸம்பாதியைப் பார்த்து 'ஸீதை எங்கே இருக்கின்றனள்? அவளை எவன் எடுத்துக்கொண்டுபோயினன்? அப்படி போகையில் எவன் பார்த்தனன்? நீஇவ் விஷயத்தையெல்லாம் தெரியச்சொல்லவேண்டும். நீயே வானரர்களுக்குக் கதியாவாயாக. வஜ்ராயுதம்போல் இரைச்சலிட்டுக்கொண்டு மேல் விழும்படியான ராமபாணங்களுடையவும் லக்ஷ்மணன் தானே ப்ரயோகிக்கும் பாணங்களுடயவும் கொடுமையை எவன் மனத்தில் நினையாதிருக்கிறான்' என்று வினவினன். வானரர்கள் ஸீதா வ்ருத்தாந்தத்தைக் கேட்பதிலேயே மனவூக்கமுற்று மிகுந்த ப்ரீதியுடன் தன்னை வினவுவதைக் கண்டு ஸம்பாதி ஸந்துஷ்டனாகி மீளவும் அவர்களை ஆஸ்வாஸப்படுத்தமுயன்று 'ஸீதையை ராவணன் எடுத்துக் கொண்டுபோனதை நான் எப்படிகேட்டேனோ, எவன் எனக்குச் சொல்லினனோ; அவ்வழகிய கண்ணுடைய பெண்பிள்ளை இப்பொழுது எங்கிருக்கின்றனளோ, அதையெல்லாம் இப்பொழுது சொல்லுகிறேன் கேட்பீர்களாக. நான் வெகுயோஜனை விஸ்தாரமுடையதும் புகக் கூடாததுமாகிய இந்தப் பர்வதத்தில் வீழ்ந்து இங்கேயே வெகுகாலமாக பலபராக்ரமங் குறையப் பெற்றிருந்து இவ்வளவில் கிழவனாயினன். நான் இப்படிப்பட்ட அவஸ்தை அடைந்ததைக் கண்டு பக்ஷிகளிற் சிறந்தவனாகிய என் புதல்வன் ஸுபார்ஸ்வனென்பவன் எனக்குக் காலம் தவறாமல் ஆஹாரங் கொடுத்துப் போஷித்துவருவான். கந்தர்வர்களுக்குக் காமம் மிகவும் தீவ்ரமாயிருக்கும். ம்ருகங்களுக்குப் பயம் மிகவும் தீவ்ரமாயிருக்கும். எங்களுக்கோ பசி மிகவும் தீவ்ரமாயிருக்கும். என் புதல்வன் ஸுபார்ஸ்வன் ஒரு ஸமயத்தில், நான் மிகவும் பசியால் வருந்தி ஆஹாரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கையில், ஸூர்யன் அஸ்தமித்த பின்பு மாம்ஸங்

கொண்டுவராமல் வெறுங் கையுடனே என்னிடம் வந்த னன். நான் பசியும் தாஹமும் மிகுத்திருக்கப்பெற்று அதிலும் கிழவனுகையால் கோபித்தவனுகிப் பக்ஷி ஸ்ரேஷ்டனுகிய என் குமாரனை விரட்டினேன். அவன் எனக்கு எப்பொழுதும் ஸந்தோஷத்தை விளைவிப்பவனு கையால் ஆஹார மில்லாமையால் கோபித்திருக்கிற என்னை வெகுதூரம் மன்னிக்கும்படி வேண்டித் தான் வெறுமனே வந்ததற்கு ஹேதுவை நடந்தபடியே சொல் லத்தொடங்கி 'என்னப்பனே! நான் எப்பொழுதும் போ வதுபோலவே தகுந்த காலத்தில் மாம்ஸத்திற்காக ஆகாயத்தில் பறந்து சென்று மஹேந்த்ர பர்வதத்தின் த்வாரத்தை மறைத்துக்கொண்டிருந்தனன். ஸமுத்ரத் தில் பலவாகத்திரிகின்ற ஜந்துக்களைப் பிடிக்ும்பொ ருட்டு நானொருவன் தலைவணக்கி அவைகளின் வழியைக் குறுக்கே தடுத்துக்கொண்டிருந்தனன். அங்கு மலர்ந்த மைக்குவியல்போல் கறுத்த காந்தியுடைய எவனே வொருவன் ஸூர்யோதயம்போல் ப்ரகாசித்துக்கொண் டிருக்கின்ற ஒரு பெண்பிள்ளையை எடுத்துக்கொண்டு போகக்கண்டனன். நான் ஆஹாரத்தை விரும்பினவனு கையால் அவ்விருவரையும் பார்த்து அவர்களையே ஆஹா ரமாகப் பிடித்துக்கொள்ள நிச்சயித்தனன். இதற்குள் அந்தப் புருஷன் வணக்கத்துடன் நல் வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு என்னை வழிவிடுவாய்' என்று யாசித் தனன். நல்வார்த்தையுடன் வேண்டுவோர்களை எவரும் எவ்விடத்திலும் அடிக்கமாட்டார்களல்லவா? எவர் களுமன்று; நீசர்களும் அடிக்கமாட்டார்களல்லவா? இனி என்னைப்போன்றவன் அடிக்கமாட்டானென்று சொல்லவேண்டுமோ? அந்தப் புருஷன் தன் தேஜோவி சேஷத்தினுல் ஆகாயத்தைக் குறுகச் செய்பவன்போல்

மிக்க வேகத்துடன் போயினன். அனந்தரம் ஆகாயத்தில் திரிகின்ற பூதங்கள் என்னிடம் வந்து என்னைக் கௌரவித்தன. மஹர்ஷிகள் என்னைப் பார்த்து 'அப்பா? நீ தெய்வாதீனமாகத் தப்புவித்துக்கொண்டு பிழைத்தனை. எப்படியோ இவன் உன்னைவிட்டுத் தன் [1] ரக்ஷ்யவர்க்கத்துடன் போயினன். ஆகையால் உனக்கு நன்மை ஆயிற்று. ஸந்தேஹம் இல்லை' என்றனர். அனந்தரம் ஆகாயத்தில் திரிகின்ற ஸித்தர்கள் என்னுடன் இங்ஙனம் மொழிந்தனர். அந்தப் புருஷன் ராக்ஷஸர்களுக்கு ராஜாவாகிய ராவணனென்றும், ஆபரணங்கள் தரையில் வீழவும் பட்டுத்துணி நழுவவும் தலைமயிர்கள் அவிழ்ந்து கலையவும்பெற்றுச் சோகவேகத்தினால் வருந்தி ராமலக்ஷ்மணர்களின் பேரைச்சொல்லிக் கூவுகின்ற அந்த மடந்தை ஜனகராஜன் புதல்வியும் ராம பார்யையுமாவாளென்றும், அவன் அப்பெணிமணியை எடுத்துக் கொண்டு போகின்றானென்றும் எனக்குப் பின்பு தெரிய வந்தது. இவ்வளவுபொழுது போனவிதம் இது' என்று காலத்தை அறிந்தவர்களில் மேன்மையுற்றவனாகிய ஸுபார்ஸ்வன் மொழிந்தனன். 'அந்த ஸமாசாரத்தைக் கேட்டபின்பும் ராமன் நிமித்தமாகப் பராக்ரமத்தை நிறைவேற்ற எனக்குப் புத்தி உண்டாகவில்லை. நான் பக்ஷியாகையால் எனக்கு இறகுகளே பலம். அந்த இறகுகள் போனபிறகு எந்தக் கார்யத்தையாயினும் எப்படி செய்வேன்? இறகுகள் போயினும் புத்தி நற்குணங்கள் அமைந்திருக்கையால் அதனால் நான் எவ்வளவுஸஹாயஞ் செய்யக்கூடுமோ, அதைச் சொல்லுகிறேன். அதைக் கேட்டு உங்கள் பௌருஷமே அதற்கு ஆதாரமாகையால் உங்கள் பௌருஷபலத்தினால் அதை ஸாதித்துக் கொள்வீர்களாக. நான் வார்த்தையாலும் புத்தியாலும்

1 ரக்ஷிக்கவேண்டிய வஸ்துக்களின் கூட்டம்.

உங்களெல்லோர்க்கும் ஸஹாயஞ்செய்கின்றனன். ராமனது கார்யம் என் கார்யமேயன்றி வேறில்லை. இதற்கு ஸந்தேஹம் இல்லை. வானரஶ்ரேஷ்டனுகிய ஸுக்ரீவன் தேவதைகளுக்கும் எதிரிட முடியாதவர்களும் மிகுந்த புத்தியுடையவர்களும் பலிஷ்டர்களும் கம்பீர மனமுடையவர்களுமாகிய உங்களை அனுப்பினனல்லாவா? வீணனவர்களை அனுப்பினனல்லன். கூராகிக் கங்கபக்ஷிகளின் இறகுகள் கட்டப்பெற்ற ராமலக்ஷ்மணர்களின் பாணங்கள் மூன்றுலோகங்களையும் ரக்ஷிக்கவும் சிக்ஷிக்கவும்வல்லவை. ராவணன் மிகுந்த தேஜஸ்ஸும் சிறந்த பலமும் உடையவனுயிருப்பினும் இருப்பானுக. ஆயினும் நீங்கள் மிகவும் ஸமர்த்தர்களாகையால் உங்களுக்குச் செய்ய முடியாதது எதுவும் இல்லை. ஆகையால் ஆலஸ்யம் செய்யவேண்டியதில்லை. புத்தியிற் சிறந்த உங்களைப் போன்றவர் கார்யங்கள் வந்தபொழுது எள்ளளவும் தாமதஞ் செய்யார்களல்லவா?'' என்றனன். ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸம்பாதி தன் இறகுகள் தீய்ந்துபோனது முதலிய வ்ருத்தாந்தங்களைக் கூறுதல்.

அனந்தரம் ஸம்பாதி ஜடாயுவுக்கு ஜலதர்ப்பணஞ் செய்து ஸ்னனத்தை முடித்துக்கொண்டபின்பு வானரயூதபதிகள் அந்தப்பர்வதத்தில் அவனைச் சுற்றி உட்கார்ந்திருந்தனர். ஸமஸ்த வானரர்களும் தன்னைச் சூழ்ந்திருக்கப்பெற்றுத் தன் ஸமீபத்தில் உட்கார்ந்திருக்கின்ற அங்கதனைப் பார்த்து ஸம்பாதி நிசாகரமுனி சொன்னபடி தனக்கு வானரர்களைப் பார்க்க நேர்ந்ததற்கு நம்பிக்கையுடையவனுகி மிகுந்த ஸந்தோஷத்துடன் மீளவும் அவர்களை நோக்கி 'வானரர்களெல்லோரும் சப்தஞ்செய்

யாமல் மிக்க மனவூக்கத்துடன் நான் சொல்லும் வார்த்தையைக் கேட்கவேண்டும். நான் ஸீதாதேவியின் வ்ருத்தாந்தம் அறிந்தவிதத்தை உள்ளபடி சொல்லுகிறேன். நான் முன்பு ஸூர்யகிரணங்கள் அவயவங்களில் நிரம்பவும் படப்பெற்றுக் கொளுத்தப்பட்டவனுகி இந்த விந்த்யபர்வதத்தின் சிகரத்தில் அரண்யத்தில் வீழ்ந்தனன். பிறகு நான் ஆறு தினங்கள் கடந்த பின்பு கொஞ்சம் ப்ரஜ்ஞை உண்டாகப்பெற்று அப்பொழுதும் திடந்தப்பி மூர்ச்சை யடைந்தவன்போல் பரவசனுகித் திசைகளை யெல்லாம் கண்டேனன்றி, அது எந்த ப்ரதேசமோ, கொஞ்சமும் எனக்கு அடையாளம் தெரியவில்லை. அனந்தரம் ஸமுத்ர தீரத்திலுள்ள பர்வதங்களையும் ஸமஸ்த நதிகளையும் ஸரஸ்ஸுக்களையும் வனங்களையும் ஸமுத்ரதீரத்தையும் கண்டு, இது இன்ன ப்ரதேசமென்று அடையாளந் தெரிந்துகொண்டனன். இது தக்ஷிண ஸமுத்ரத்தில் பக்ஷிகணங்கள் ஸந்தோஷத்துடன் நிறைந்திருப்பதென்றும் குஹாமத்யங்களும் சிகரங்களும் அமைந்த விந்த்ய பர்வதத்தின் ஓர் பாகமென்றும் நிச்சயித்துத் தெரிந்துகொண்டனன். இந்தப்ரதேசத்தில் தேவதைகளாலும் நன்கு பூஜிக்கப்பட்டதும் பரிசுத்தமுமாகிய ஓர் ஆஶ்ரமம் இருந்தது. அதில் உக்ரதபஸ்வியாகிய நிசாகரரென்னும் ஓர் மஹர்ஷி இருந்தனர். தர்மஜ்ஞர்களே! அம்மஹர்ஷி மரணம் அடைந்த பின்பு நான் அவரைவிட்டு ஒருவனே இந்த ப்ரதேசத்தில் வாஸஞ்செய்ய ஆரம்பித்து இப்பொழுதைக்கு எண்பதினுயிரம் ஸம்வத்ஸரங்களாயின. அனந்தரம் நான் மிகவும் கஷ்டப்பட்டு மிகவும் இடுக்காயிருக்கின்ற விந்த்ய சிகரத்தினின்று மெதுவாக இழிந்து ரிஷிகளால் பறிக்கப்பட்டு மொக்கையாகிக் கூராயிருக்கின்ற தர்ப்பங்களையுடைய ஆஶ்ரம பூமிக்கு மிகவும் வருத்தத்துடன்

மீளவும் வந்து சேர்ந்தனன். நான் அங்ஙனம் மிகவும் வருந்தி அக்காலத்தில் அந்த நிசாகர மஹர்ஷியைக் காண விரும்பினன். ஏனெனனில்—முன்பு நானும் ஜடாயுவும் பலதடவை அவரைத் தர்சனஞ் செய்து ஸேவித்திருந்தனம். அம்மஹர்ஷியின் ஆஸ்ரமத்தில் புஷ்பங்களாவது பலங்களாவது இல்லாத வ்ருக்ஷமே கிடையாது. ஆகையால் அந்த ஆம்ரமம் ஸமீபித்தவுடனே நல்ல வாஸனையுடைய காற்றுகள் வீசின. அங்ஙனம் புண்யமாகிய இவ்வாம்ரமம் சேர்ந்து ஓர் செடியின் கீழ் பகவானாகிய நிசாகரரைப் பார்க்க விரும்பிக் காத்திருந்தனன். அனந்தரம் ஸ்நானஞ்செய்து [1] நிஜதேஜஸ்ஸுடன் விளக்கமுற்று வடதிசைமுகமாகிய ஒருவராலும் அவமதிக்கமுடியாத அம்மஹர்ஷி என்னைக் கிட்டிவரக் கண்டனன். ஸமஸ்த பூதங்களும் ப்ரஹ்மதேவனைச் சுற்றிச் சூழ்ந்து பணிவதுபோல் அம்மஹர்ஷியைக் கரடிகளும் சாமரம்ருகங்களும் புலிகளும் ஸிம்ஹங்களும் யானைகளும் ஸர்ப்பங்களும் சுற்றிப் பணிந்திருந்தன. பிறகு அம்மஹர்ஷி ஆம்ரமத்திற்குள் நுழைவது கண்டு, ராஜன் அந்தப்புரம் புகுந்தபின்பு மந்த்ரி முதலிய பலம் விடைபெற்றுப் போவதுபோல், அந்த ஜந்துக்களெல்லாம் தந்தமிடத்திற்குப் போயின. அம்மஹர்ஷி ப்ரீதியுடன் என்னைப் பார்த்து ஆம்ரமத்திற்குள் நுழைந்து மீளவும் கொஞ்சநேரங் கழித்து வெளிவந்து நான் வந்தகார்யத்தை விசாரித்தனர். 'ஸௌம்யனே! உன் தேஹத்திலுள்ள மயிர்கள் [2] விகலமாயிருக்கையால் உன் உருவமே தெரியாதிருக்கின்றது. மேலும் உன் இறகுகள் இரண்டும் அக்னியால் வெந்து உன் தோலெல்லாம் புண்ணுள்ளதாகப் புலப்படுகின்றது. நான், முன்பு வேகத்தில் வாயுவை நிகர்த்து ஸமஸ்த கழுகுகளுக்கும்

1 தனது தேஜஸ்ஸு.
2 இடைவெளியாகி அற்பமாயிருக்கையால்.

ராஜர்களும் காமரூபிகளும் அண்ணன் தம்பிகளுமாகிய இரண்டு கழுகுகளைப் பார்த்திருக்கின்றனன். ஸம்பாதீ! நீ அவற்றில் பெரியவனல்லையா? உன் தம்பி ஜடாயு, நீங்களிருவரும் மனுஷ்ய ரூபந் தரித்தவராகி என் பாதங்களில் நமஸ்காரஞ் செய்துகொண்டிருப்பீர்கள். உனக்கு வ்யாதி ஏதேனும் உண்டாயிற்று? இல்லையாயின் இறகுகள் எப்படி வீழ்ந்துபோயின? அல்லது எவரேனும் உன்னைத் தண்டித்தார்களா? எவர்? வினவுகின்றேன். எனக்கு யதார்த்தத்தை மொழிவாயாக' என்று வினவினர். அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸம்பாதி தன் இறகுகள் வெந்து போன வ்ருத்தாந்தத்தை நிசாகர மஹர்ஷிக்குச் சொல்லுதல்.

அனந்தரம், நான் முன்பின் பாராமல் முயன்று பயங்கரமாக எவர்க்குஞ் செய்யமுடியாமல் ஸூர்யனைப் பின்றொடர்ந்து போனதுமுதல் நடத்தின வ்ருத்தாந்தத்தை யெல்லாம் அம்முனிவர்க்குச் சொல்லினன். 'மஹானுபாவரே! இறகுகள் வெந்து என் தேஹமெல்லாம் புண்ணுயிருக்கையாலும் லஜ்ஜையால் இந்த்ரியங்களெல்லாங் கலங்கப் பெற்றிருக்கையாலும் மிகவும் இளைப்புற்றிருக்கையாலும் உமக்கு மறுமொழி கூற வல்லமை யற்றிருக்கின்றனன். வீரர்களாகிய நானும் ஜடாயுவும் ஒருவர்மேல் ஒருவர் போட்டியிட்டுக்கொண்டு கர்வத்தினல் உடம்பு தெரியாமல் ஒருவர்க்கொருவர் பராக்ரமத்தை அறிய விரும்பி ஆகாயத்தில் கிளம்பிப் போயினம். நாங்களிருவரும் கைலாஸ பர்வத சிகரத்தில் ரிஷிகளின் முன்னிலையில் 'ஸூர்யன் அஸ்தமயபர்வதம் போய்ச் சேரும்வரையில் அவனைப் பின்றொடர்ந்து நடக்கவேண்டு'மென்று பந்தயம் ஏற்படுத்திக்கொண்டு இருவரும் ஒரேகாலத்தில் ஆகாயத்தில் கிளம்

பினம். அனந்தரம் பூமியிலுள்ள நகரங்களெல்லாம் வேறு வேறாக எங்களுக்கு வண்டியின் சக்கரத்தளவு புலப்பட்டன. நாங்கள் வழியில் சிலவிடங்களில் வாத்யத் வனிகளையும் வேதகோஷங்களையும் செவியுற்றனம். மேலும் சிவந்த வஸ்த்ரங்களை உடுத்துக் கானஞ் செய்கின்ற பல பெண்மணிகளைக் கண்டனம். நாங்கள் சீக்ரமாக ஆகாயத்திற் கிளம்பி ஸூர்யமார்க்கத்திற்சென்று கீழ்க் கண்விட்டுப் பார்க்கையில் நாங்களிருந்த அரண்யம் அப்பொழுது பசும்புல் தரைபோல் மிகவும் ஸூக்ஷ்மமாகப் புலப்பட்டது. பூமியில் நிறைந்திருக்கின்ற பர்வதங்கள் சிறிய கற்கள்போல் தோற்றின. பூமியிலுள்ள நதிகள் நுண்ணிய கயிறுகள்போல காணப்பட்டன. அப்பொழுது ஹிமவந்தமும் விந்த்யமும் பர்வதங்களிற் சிறந்த மேருவும் மடுவில் இருக்கும் யானைகள்போல் பூமியில் ப்ரகாசித்தன. ஸூர்யமார்க்கத்தில் ஸஞ்சரிக்கும்பொழுது எங்களுக்குத் தீவ்ரமாகப் புழுக்கமும் இளைப்பும் உண்டாகையேயன்றிப் பயமும் மனமயக்கமும் கண்கள் இருள்மூடப்பெற்று ஒன்றும் தெரியாமல் பயங்கரமான மூர்ச்சையும் உண்டாகத் தொடங்கின. இது தென்திசையென்றும், இது ஆக்னேயமென்றும், இது மேல் திசையென்றும், இது கிழக்கென்றும், இது வடக்கென்றும், திசைகள் சிறிதும் தெரியவில்லை. அந்தந்த ஸந்நிவேசங்களோடு ஏற்பாட்டுடனிருந்த லோகமுழுவதும் அந்த ஏற்பாடெல்லாம் அழியப்பெற்று ப்ரளய காலாக்னியால் கொளுத்தப்பட்டு உருமாய்ந்திருப்பதுபோல் புலப்பட்டது. என்மனம் கலங்கித் தனக்காஸ்ரயமான கண்களினின்று விடுபட்டு மிகவும் அழிந்து நசித்தாற்போலிருந்தது. ஆகையால் என் பார்வையும் அழிந்துவிட்டது. மீளவும் வெகு ப்ரயத்னத்துடன் என் மனத்தைக் கண்களில் ஊன்றி மிக்க ப்ரயாஸத்துடன்

ஸூர்யனைக் கண்டனன். அப்பொழுது ஸூர்யன் எமக்குப் பூமியவ்வளவு ப்ரமாணமுடையவனாகப் புலப்பட்டனன். அனந்தரம் ஜடாயுவும் என்னோடு சொல்லாமலே மெய்ம்மறந்து பூமியின்மேல் விழத் தொடங்கினன். அங்ஙனம் அவன் விழுவதைக்கண்டு நானும் சீக்ரமாக ஆகாயத்தினின்று என்னைக் கீழ்விழவிட்டனன். ஜடாயுவை நான் என் இறகுகளால் மறைத்துக்கொண்டு வருவதுபற்றி அவன் கொளுத்தப்படவில்லை. நான் மாத்ரம் ஆகாயத்தினின்று விழும்பொழுது அனவதானத்தினால் கொளுத்தப்பட்டனன். ஜடாயு ஜனஸ்தானத்தில் விழுந்திருப்பானென்று சங்கிக்கின்றனன். நான்மாத்திரம் இறகுகள் வெந்து மூர்ச்சை அடைந்து இந்த விந்த்யபர்வதத்தில் வீழ்ந்தனன். என் இறகுகளையும் தம்பியையும் ராஜ்யத்தையும் பராக்ரமத்தையும் இழந்து இனி நான் ப்ராணன்களை வைத்திருக்கப்போறேன். ஸர்வவிதத்திலும் சாகவேண்டுமென்றே எனக்கு விருப்பமாயிருக்கிறதாகையால் இந்தப் பர்வத சிகரத்தினின்று வீழ்ந்து மரணம் அடைகிறேன்' என்று மொழிந்தனன். அறுபத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ நிசாகரமுனி ஸம்பாதிக்கு இறகுகள் முளைக்கும் ப்ரகாரத்தைக் கூறுதல். }

'நான் இங்ஙனம் அம்முனிதிலகரிடம் விண்ணப்பஞ்செய்து மிகவும் வருந்தி ரோதனஞ்செய்தனன். அனந்தரம் அம்மஹானுபாவர் சிறிதுநேரம் த்யானித்து என்னைப் பார்த்து 'உனக்கு இறகுகளும் சிற்றிறகுகளும் ப்ராணன்களும் நேத்ரங்களும் பலபராக்ரமங்களும் மீளவும் புதிதாக உண்டாகும். முன்பு நான், வருங்காலத்தில் ஓர் பெரியகார்யம் நடக்கப்போகிறதென்று

கேட்டிருக்கின்றனன். இதைத் தவமஹிமையால் தெரிந்துகொள்வது மாத்ரமேயன்றிப் பெரியோர் மூலமாகக் கேட்டும் தெரிந்துகொண்டிருக்கின்றனன். இக்ஷ்வாகு வம்சத்தில் தசரதனென்னும் ஓர் மன்னவன் உளன். அவனுக்கு மஹா தேஜஸ்வியாகிய ஓர் புதல்வன் ராமனென்பவன் பிறக்கப்போகின்றனன். தந்தை, வனவாஸஞ் செய்வாயென்று ஆஜ்ஞைசெய்கையில், ஸத்யபராக்ரமனுகிய அந்தராமன் தம்பியாகிய லக்ஷ்மணனும் தானுமாக அரண்யத்திற்கு வருவான். தேவதானவர்களாலும் வதிக்க முடியாத ராக்ஷஸர்தலைவனுகிய ராவணனென்பவன், ராமன் ஜனஸ்தானத்தி லிருக்கும்பொழுது அவனது பார்யையை அபஹரிக்கப்போகின்றனன். மஹாபாக்யவதியும் பெரும்புகழுடையவளுமாகிய அந்த ஸீதை, தனக்கு ராவணன் ஆசைப்படத்தகுந்த பக்ஷ்யங்களையும் போஜ்யங்களையும் போகத்ரவ்யங்களையும் எவ்வளவோ கொடுத்து ஆசைப்படுத்தப் பார்க்கிலும் மஹா பதிவ்ரதையாகையால் பர்த்தாவைப் பிரிந்து துக்கத்தில் மூழ்கியிருப்பதுபற்றி அவை யெல்லாவற்றையும் எள்ளளவும் அனுபவிக்கமாட்டாள். இந்த்ரன், அவள் பசியா திருப்பதறிந்து தான் அவளுக்கு உத்தமமான திவ்யான்னங் கொடுப்பான். ஸீதை அம்ருதத்தை நிகர்த்துத் தேவதைகளுக்கும் பெறமுடியாத அந்தத் திவ்யான்னத்தைப்பெற்று இந்த்ரன் கொடுத்ததென்று தெரிந்து, அதில் முன்பாகத்தை எடுத்து 'என் பர்த்தாவும் ப்ரபுவுமாகிய ராமனும் என் மைத்துனன் லக்ஷ்மணனும் ஜீவித்திருப்பார்களாயினும் அல்லது அவர்கள் மரணம் அடைந்து[1] தேவத்வம் பெற்றிருப்பார்களாயினும் அவ்விருவர்க்கும் இந்த அன்னம் சேருமாக' என்று மொழிந்து பூமியின்மேல் வைப்பாள். ஸம்பாதீ!

---

1 தேவனுயிருக்கை.

ராமனுல் அனுப்பப்பட்ட வானரர்கள் அவளைத் தேடும் பொருட்டு வரப்போகின்றனர். நீ அந்த வானரர்களுக்கு ராமனது பட்டமஹிஷியாகிய ஸீதாதேவியின் வ்ருத்தாந்தத்தைச் சொல்லவேண்டும். நீ எல்லாவிதத்திலும் இங்கிருப்பதே நலம். இப்படி இறகுகளில்லாதவன் எங்குப் போகவல்லவனுவாய்? நீ இங்கேயே தேசகாலங்களை எதிர் பார்த்துக்கொண்டு வஸித்திருப்பாயாக. உனக்கு இறகுகள் மீளவும் உண்டாகும்; உனக்கு இப்பொழுதே இறகுகள் உண்டாகும்படிக்குச் செய்ய நான் முயற்சிகொள்ளேன். ஏனென்னில் நீ இங்கேயே இருப்பாயாயின், உலகங்கட்கெல்லாம் ஹிதத்தைச் செய்வாய். ராஜபுத்ரர்களாகிய அந்த ராமலக்ஷ்மணர்களின் கார்யம் உனக்குமாத்ரமேயன்றி ஸமஸ்த ப்ராஹ்மணர்களுக்கும் தேவதைகளுக்கும் முனிவர்களுக்கும் தேவேந்த்ரனுக்கும் அவஶ்யம் செய்யத்தக்கது. எனக்கும் அண்ணன் தம்பிகளாகிய ராம லக்ஷ்மணர்களைப் பார்க்க விருப்பம் இருக்கின்றதேயாயினும், இனி வெகு காலம் வரையில் ப்ராணன்களை வைத்துக்கொண்டிருப்பது எனக்கிஷ்டமாயில்லை. ஆகையால் அதற்குள்ளேயே சரீரத்தை விடுவேன்' என்று ஸமஸ்த தத்வார்த்தங்களையும் அறிந்த அம்மஹர்ஷி இங்ஙனம் கூறினர். அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ ஸம்பாதிக்கு இறகுகள் முளைத்தலும், வானரர்களுக்கு ஸம்பாதி செய்யவேண்டிய கார்யத்தைக் கூறுதலும். }

அம்மஹர்ஷி வாக்யங்களை உணர்ந்தவர்கள் அனைவரிலும் தலைவராகையால் இங்ஙனம் இது முதலானவைகளும் இன்னும் மற்றவைகளுமாகிய பற்பல உரைகளைச் சொல்லி என்னைப் புகழ்ந்து எனக்கு அனுமதி கொடுத்துத் தான் ஆஶ்ரமத்தில் புகுந்தனர். அனந்தரம் நான்

மெல்ல மெல்ல அந்தப் பர்வத குஹையினின்று நகர்ந்து விந்த்யபர்வதத்தின்மேல் ஏறி உங்கள்வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனன். அம்மஹர்ஷியின் வசனத்தை மனத்திலேயே வைத்துத் தேசகாலங்களை எதிர்பார்த்துக்கொண்டு இப்பொழுதைக்கு நிரம்ப நூறுஸம்வத்ஸரங்களைக் கடத்தினன். அந்த நூறு ஸம்வத்ஸரங்களைக் கடத்தினபின்பு நிசாகரமுனி மஹாப்ரஸ்தானஞ்சென்று ஸ்வர்க்கம் அடைந்தனர். அதன் பிறகு எனக்குள் பலவாறாக ஊஹங்களைச் செய்துகொண்டு ஸந்தேஹமுற்றுப் பரிதாபத்தினால் வருந்தி யிருந்தனன். மரணம் அடையவேண்டுமென்னும் புத்தி உண்டாகும் போதெல்லாம் மஹர்ஷி மொழிந்த வார்த்தைகளை நினைத்து அதைவிட்டு ஸமாதானப்படுத்திக் கொண்டிருப்பேன். 'உனக்கு மறுபடியும் இறகுகளும் பலமும் வரப்போகின்றன' என்று நான் என் ப்ராணன்களை விடாமல் காத்திருக்கும்படி எனக்கு அம்முனிவர் விளைவித்த ஆசை, நன்கு ஜ்வலிக்கின்ற அக்னிஜ்வாலை இருட்டைப் போக்குவதுபோல், என் துக்கத்தைப் போக்கிக்கொண்டிருக்கும். நான் துராத்மாவாகிய ராவணனுடைய பராக்ரமத்தை அறிந்தும் என்புதல்வனைப் பார்த்து 'நீ ராவணனைக் கொன்று ஸீதையைக் காக்காமல் ஏன் வந்தனை?' என்று விரட்டினன். அந்த ஸீதாவிலாபத்தைக் கேட்டும் ராமலக்ஷ்மணர்க ளிருவரும் ஸீதையைப் பிரிந்திருக்கிறார்க ளென்றறிந்தும் என் புதல்வன் தசரதரிடம் ஸ்னேஹம் வைத்து ஸீதையை விடுவித்து எனக்கு ப்ரியஞ்செய்யாமற் போயினன் என்று கூறினன். அப்பொழுது ஸம்பாதி அங்ஙனம் வானரர்களைப் பார்த்துச் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே ஸமஸ்த வானரர்களின் கண் முன்னமே அவனுக்கு இறகுகள் முளைத்தன. அனந்தரம் ஸம்பாதி தன் சரீரத்தில் சிவந்த



1955. ஸம்பாதி மீளவும் இறகுகள் முளைக்கப்பெற்று மேற்கிளம்புதல்.

இறகுகள் அமைந்த சிறைகள் முளைப்பதைக்கண்டு நிக ரில்லாத ஆநந்தம் அடைந்து வானரர்களைப் பார்த்து மஹானுபாவராகிய நிசாகரமுனிவரது ப்ரபாவத்தினுல் ஸூர்யகிரணங்கள் பட்டுத் தீய்ந்த என் சிறைகள் இப் பொழுது மறுபடியும் முளைத்தன. நான் யௌவனத்தி லிருக்கும்பொழுது எனக்கு எப்படிப்பட்ட பலமும் பௌ ருஷமும் பராக்ரமும் இருந்தனவோ, அவையெல்லாம் இப்பொழுது எனக்கு உண்டாயிருக்கின்றன. நீங்கள் எல்லாவிதத்திலும் ப்ரயத்னஞ் செய்வீர்களாக. தப்பா மல் ஸீதாதேவியைக் காண்பீர்கள். இதற்கு த்ருஷ் டாந்தம் மற்றொன்றும் வேண்டாம். இதோ எனக்குச் சிறைகள் முளைத்தனவன்றூ. இதுவே உங்களுக்கும் கார்யம் கைகூடுமென்னும் நம்பிக்கையை விளைவிக்கின் றது' என்றனன். பக்ஷிஸ்ரேஷ்டனுகிய, அந்த ஸம் பாதி இங்ஙனம் ஸமஸ்த வானரர்களோடும் மொழிந்து ஆகாச ஸஞ்சாரத்தில் தன் புதிய சிறகுகளுக்குள்ள பலத்தை அறிய விரும்பி ஆகாயத்திற் கிளம்பினன். வானர ஸ்ரேஷ்டர்கள், ஸம்பாதி 'நீங்கள் ஸீதையைக் காண்பீர்க்ள்' என்று மொழிந்ததைக் கேட்டு, அதற்கு நிதர்ஸனமாக அவனுக்கு மீளவும் சிறைகள் முளைத்த தையுங் கண்டு மிகுந்த ஸந்தோஷத்தினுல் தெளிந்த மனமுடையராகிப் பராக்ரமத்தை உபயோகப்படுத்தி ஸீதாதேவியைக் காண்கையாகிற நன்மையைப் பெறு தற்கு ப்ரயத்னிப்பவராயினர். அனந்தரம் வாயுவை நிகர்த்த மஹா வேகத்தையுடைய அவ்வானரோத்த மர்கள் பௌருஷத்தைக் கைப்பற்றி ஸீதாதேவியைத் தேடமுயன்று அபிஜித்தென்னும் முஹூர்த்தம் வரு வதை எதிர்பார்த்துக்கொண்டிருந்து அம் முஹூர்த் தத்தில் தென்திசை முகமாகப் போயினர். அறு பத்து மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

வானரர்கள் ஸமுத்ரத்தினருகில் சேருதல்.

ஸிம்ஹத்தை நிகர்த்த பராக்ரமமுடைய அவ்வானரவீரர்கள் ஸம்பாதியின் வசனத்தினுல் ஸீதையிருக்குமிடந்தெரிந்து ஸந்தோஷத்தினுல் இப்படியும் அப்படியும் கிளம்பிக் குதித்தல்களைச் செய்துகொண்டு மீளவும் எல்லாரும் ஒன்றுகூடி ஸிம்ஹநாதஞ் செய்தனர். வானரர்கள் ஸம்பாதி சொன்னதைக் கேட்டு மிகவும்ஸந்தோஷம் அடைந்து ஸீதாதேவியைக்காண மனவிருப்பங்கொண்டு ராவணனது வாஸஸ்தானமாகிய லங்காத்விபத்திற்குப் போகநினைத்து அதற்கு வழியாகிய ஸமுத்ரத்தைக்குறித்துப் போயினர். பயங்கர பராக்ரமர்களாகிய அவ்வானரவீரர்கள் அந்த இடத்திற் சேர்ந்து ஸமஸ்த லோகங்களிலுமுள்ள எல்லாவஸ்துக்களும் நிறைந்திருக்கையால் பெரிதாகிய ஸமஸ்தலோகத்தையும் நிகர்த்தமற்ருெரு லோகமோ என்னும்படி விளங்கும்ஸமுத்ரதீரத்தைக் கண்டனர். மஹா பலசாலிகளாகிய அவ்வானரவீரர்கள் தக்ஷிணஸமுத்ரத்தின் வடகரையைச் சேர்ந்து அங்கு இறங்கினர். அங்கு மிகவும் பெரிய சரீரமுடையவைகளும் வாயைத் திறந்துகொண்டு விகாரமாயிருப்பவைகளுமாகிய நானவித பெருப்பருத்த ஜந்துக்கள் ஜலத்தில் க்ரீடித்துக் கொண்டிருந்தன. அலைகளும் அங்கு முழுவதும் நிறைந்து பயங்கரமாயிருந்தன. அலைகள் வீசுதலாலும் ஜந்துக்கள் திரிதலாலும் அந்த ஸமுத்ரம் ஓரிடத்தில் விளையாடுவதுபோலவும், அவையில்லாத மற்ருேரிடத்தில் நித்ரைசெய்வது போலவும் புலப்பட்டது. மேலும் அது சிலவிடங்களில் பர்வதங்கள்போன்ற ஜலராசிகளால் சூழப்பட்டிருந்தது. பாதாள லோகத்திலிருக்கும் மேலான தானவர்களும் ஆங்காங்கு நிறைந்திருந்தனர்; இங்ஙனம் காண்போர்

களுக்கு மயிர்க்கூச்சலை விளைக்கின்ற அம்மஹா ஸமுத்ரத்தைக் கண்டு அவ்வானரவீரர்கள் திகில் அடைந்து வருத்தமுற்றனர். ஆகாயம்போல் அதிவிசாலமாகி அக்கரை காணப்பெறு திருக்கின்ற ஸமுத்ரத்தைப்பார்த்து, எல்லோரும் ஒரே இடத்தில் திகிலுற்று 'இனி என் செய்யவேண்டும்' என்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டனர். வானரர் தலைவனாகிய அங்கதன் வானரஸேனையெல்லாம் ஸமுத்ரத்தைப் பார்த்தவுடனே பயப்பட்டுச் சிந்தையி லாழ்ந்திருப்பதுகண்டு, பயந்திருக்கிற அந்த வானரர்களெல்லோரையும் தைர்யம் உண்டாகும்படி ஆஶ்வாஸப்படுத்தினன். அவன் ஸமயத்திற்குத் தகுந்த மதியும் மஹா பலமும் உடையவனுகையால் மிகவும் வருத்தமுற்றிருக்கின்ற அவ்வானரவீரர்களை நோக்கி 'மனத்தில் எள்ளளவும் வருத்தப்படவேண்டாம். வருத்தப்படுவதே பெருந்தோஷம். அதைக்காட்டிலும் பெரிய தோஷம் மற்றொன்றும் இல்லை. கோபித்திருக்கும் ஸர்ப்பம் பாலனைக் கொல்வதுபோல், துக்கம் புருஷனைக்கொன்றுவிடும். பராக்ரமத்தை உபயோகப்படுத்தவேண்டிய ஸமயத்தில் வருத்தம் உண்டாகுமாயின், அது புருஷனைக் கீழேதள்ளிவிடும். அங்ஙனம் தேஜஸ்ஸு குன்றப் பெற்றவனுக்கு எந்தப் புருஷார்த்தமும் ஸித்திக்காது' என்றனன். அங்கதன் அன்றிரவு கடந்தபின்பு வானரர்களில் பெரியோர்களுடன்கூடி ஸமுத்ரத்தைத் தாண்டும் விஷயத்தைக் குறித்து மீளவும் ஆலோசனை செய்தனன். தேவேந்த்ரனைச் சூழ்ந்திருக்கும் தேவஸேனைபோல் அங்கதனைச் சூழ்ந்திருக்கின்ற அவ்வானரஸேனை ப்ரகாசித்தது. வாலிகுமாரன் அங்கதனும் ஹனுமானும் தவிர மற்றை எவன் அந்தவானரஸேனையை நிறுத்தவல்லவன்? அனந்தரம் பகைவரை அடக்குந் திறமையுடையவனும் செல்வப்பெருக்கனுமாகிய அங்கதன் அவ்வானர வ்ருத்தர்களாலும் அம்மஹா

ஸேனையாலும் அனுமதிக்கப்பட்டு மிகவும் பொருளடங்கிய உரைகளைக் கூறத்தொடங்கி, இந்த ஸைன்யங்களுக்குள் மஹாதேஜஸ்வியாகிய எவன் ஸமுத்ரத்தைத் தாண்டுவான்? எவன் அங்ஙனம் தாண்டி லங்கையில் ஸீதாதேவியைக் கண்டு பகைவரை அடக்குந் திறமையுடைய ஸுக்ரீவனை ஸத்யஸந்தனாகச் செய்வான்? வானரர்களே! எவ்வீரன் நூறு யோஜனைதூரமுடைய ஸமுத்ரத்தைத் தாண்டிக் கார்யத்தை நிறைவேற்றிக்கொண்டு வந்து இந்த வானரர்கூட்டத் தலைவர்களனைவர்க்கும் ஸுக்ரீவனால் நேரிட்டிருக்கிற மஹா பயத்தைப் போக்க வல்லவன்? எவனுடைய ப்ரபாவத்தினால் நாம் கார்யஸித்தியை அடைந்து இங்கிருந்து ஸுகமாகக் கிஷ்கிந்தைக்குப்போய் நம் பார்யைகளையும் புதல்வர்களையும் க்ருஹங்களையும் காண்போம்? எவனுடைய அனுக்ரஹத்தினால் நாம் மிகவும் ஸந்தோஷம் அடைந்து மஹா பலிஷ்டர்களாகிய ராமலக்ஷ்மணர்களின் ஸந்நிதானத்திற்கும்மஹா பலனாகிய ஸுக்ரீவனது ஸந்நிதிக்கும் போவோம்? உங்களில் எவனாயினும் நூறு யோஜனைதூரமுள்ள ஸமுத்ரத்தைத்தாண்ட வல்லவனாயின், அவன் இப்பொழுதே எமக்குச் சீக்ரமாகப் புண்யமான அபயதக்ஷிணையைக் கொடுப்பானாக' என்றனன். அங்கதன் சொன்ன வார்த்தையைக்கேட்டு எவனும் ஏதும் கூறவில்லை. அப்பொழுது அவ்வானரஸேனை முழுமையும் அசையாமல் சித்ரத்தில் எழுதப்பட்டதுபோலிருந்தது. வானரோத்தமனாகிய அங்கதன் மீளவும் அவ்வானரர்களைப் பார்த்து 'நீங்களெல்லோரும் பலிஷ்டர்களில் மேலாயிருப்பவர்; கௌரவமுடைய பெரியகுலத்தில் பிறந்தவர்; பூஜிக்கப்பட்டவர். வானரோத்தமர்களே! உங்களில் எவனும் எப்பொழுதும் எவ்விடத்திலும் நடையில் தடையுடையவ



1959. அங்கதாதிகள் ஸமுத்ரம் தாண்டுவதில் தமக்குள்ள சக்தியை ஜாம்பவானுக்கு அறிவித்தல்.

னல்லனே! எவரெவர்க்கு எவ்வெவ்வளவு தாண்டச்சக்தி உளதோ அதைச்சொல்லுங்கள்' என்றனன். அறுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

{ வானரர்கள் ஸமுத்ரந் தாண்டுவதில் தமக்குள்ள சக்தியின் அளவைக் கூறுதல். }

அனந்தரம் அங்கதன் சொன்ன வார்த்தையைக் கேட்டுக் கஜன், கவாக்ஷன், கவயன், சரபன், கந்தமாதனன், மைந்தன், த்விவிதன், ஸுஷேணன், ஜாம்பவான் ஆகிய இவர்களெல்லோரும் அங்கதனைப் பார்த்து ஸமுத்ரந்தாண்டுவதில் தந்தமக்குள்ள பலோத்ஸாஹங்களை க்ரமமாக இங்ஙனம் மொழிந்தனர். அப்பொழுது கஜன் 'நான் பத்துயோஜனைதூரந் தாண்டுவேன்' என்றனன். கவாக்ஷன் 'நான் இருபதுயோஜனை தூரம் தாண்டவல்லேன்' என்றனன். அனந்தரம் கவயன் அவ்வானரர்களைப் பார்த்து 'வானரர்களே! நான் முப்பது யோஜனை தாண்டுவேன்' என்றனன். அனந்தரம் வானரதிலகனுகிய சரபன் கபிகளை நோக்கி 'வானரர்களே! நான் நாற்பதுயோஜனை த்தாண்டுவேன்' என்றனன். பிறகு மஹா தேஜஸ்வியாகிய கந்தமாதனன் 'நான் ஐம்பதுயோஜனைகள் தாண்ட ஸந்தேஹமில்லை' என்றனன். அப்பொழுது மைந்தன் வானரர்களை நோக்கி 'நான் அறுபது யோஜனைகள் தாண்டுவேன்' என்றனன். பிறகு மஹா பராக்ரமனுகிய த்விவிதன் 'நான் எழுபது யோஜனைகள் தாண்டுவேன்' என்றனன். வானரோத்தமனுகிய ஸுஷேணன் அவ்வானர வீரர்களைப் பார்த்து 'வானரஶ்ரேஷ்டர்களே! நான் எண்பது யோஜனை தூரம் தாண்டுவேன்' என்றனன். அவர்கள் அப்பொழுது அங்ஙனஞ் சொல்லிக்கொண்டிருக்கையில் ஸமஸ்த வானரர்களுக்குள் எல்லோரிலும் வ்ருத்தனுகிய ஜாம்ப

வான் அவர்களெல்லோரிடத்திலும் அனுமதிபெற்றுப் ‘பூர்வம் எனக்கும் தாண்டுவதில் மேன்மை உண்டாயிருந்தது. ஆனால் அப்படியிருந்த நான் இப்பொழுது வயது நிரம்பப்பெற்றுக் கிழவனாயினன். இப்பொழுது என்னவெனில், கிழவனாயினும் கபிராஜனாகிய ஸுக்ரீவனும் ராமனும் நிறைவேற்ற நிச்சயித்த இந்தக் கார்யத்தை எள்ளளவும் உபேக்ஷித்திருப்பது யுக்தமன்று. இப்பொழுது வயதுசென்று காலம்பேதித்திருக்கும்பொழுது எவ்வளவுதூரம் தாண்டவல்லனோ அதைச் சொல்லுகிறேன் கேட்பீர்களாக. இப்பொழுது தொண்ணூறுயோஜனைகள் தாண்டுவேன். இதில் ஸந்தேஹம் இல்லை’ என்றனன். அனந்தரம் மீளவும் ஜாம்பவான் அவ்வானரர்களைப் பார்த்து ‘எனக்கு முன்பு நல்லவயது காலத்தில் எனக்கு நடையிலுண்டான ஸாமர்த்யம் இவ்வளவுமாத்ரமே அன்று. முன்பு பலிசக்ரவர்த்தியின் யாகத்தில் ஸனாதன விஷ்ணுதேவன் த்ரிவிக்ரமாவதாரஞ் செய்து மூன்றடிகளை அளந்துகொண்டிருக்கையில், அதற்குள் மூன்றுலோகங்களையும் வ்யாபித்த அந்த விஷ்ணுவின் உருவத்தை (அதாவது-ப்ரஹ்மாண்டத்தை) நான் ப்ரதக்ஷிணமாகச் சுற்றிவந்தனன். எனக்கு யௌவன காலத்தில் பிறர் எவர்க்கும் இல்லாத நிகரற்ற நடைவலிவு உண்டாயிருந்தது. அப்படிப்பட்ட நான் இப்பொழுது கிழவனாயினன். இப்படிப்பட்ட நிலையில் எனக்குத் தாண்டுவதில் இவ்வளவே (அதாவது தொண்ணூறு யோஜனை தாண்டுமவ்வளவே) சக்தி இருக்குமென்று ஊஹிக்கின்றனன். ஆனால் லங்கைக்கு நூறு யோஜனை தாண்டவேண்டியிருக்கையால் இவ்வளவாலும் ப்ரயோஜனம் நிறைவேறாது’ என்றனன். அனந்தரம் யுவராஜனாகிய அங்கதன் மஹாப்ராஜ்ஞனாகிய ஜாம்பவானிடம் அனுமதிபெற்று இனி

மேல் சொல்லவேண்டிய தன் சக்தியின் அளவை மிக வும் பொருளடக்கமுடைய வாக்கியத்தினுல் சொல்லத் தொடங்கி 'நான் இந்த நூறுயோஜனைகளுந் தாண்டிப் போக வல்லவனே. ஆனுல் மீளவும் திரும்பிவரச் சக்தி இருக்குமோ இராதோ நிச்சயமாகச் சொல்லவல்லனல் லேன்' என்றனன். வானரோத்தமனும் பேசவல்லவனு மாகிய ஜாம்பவான் அங்கதனைப் பார்த்து 'வானரர்களி லும் [1]பல்லூகர்களிலும் மேலாயிருப்பவனே! தாண்டுவ தில் உன்சக்தி இப்படிப்பட்டதென்று தெரிந்தேயிருக் கின்றது. நீ நூறுயோஜனைகள் மாத்ரமே அன்று. ஆயி ரம் யோஜனைகளாயினும் தாண்டிப்போய்த் திரும்பிவர வல்லவனேயாவாய். ஆயினும் இங்ஙனம் [2]ப்ருதயர்கள் ஸ்வாமியை அனுப்பும்படியான ந்யாயம் எங்கும் சொல் லப்படவில்லையே! ஆகையால் ஸ்வாமியாகிய உன்னை அனுப்புவது வேலைக்காரர்களாகிய எங்களுக்குத் தகுந் ததன்று. என்னப்பனே! வானரதிலகனே! ப்ரபுவா யிருப்பவன் வேலைக்காரர்களை அனுப்பவேண்டியவனே யன்றி, எப்படி பார்க்கினும் அவன் வேலைக்காரனுயிருக் கத் தகுந்தவனன்றல்லவா? நீ எங்களுக்கு ஸ்வாமி. நீ இந்த எங்களெல்லோரையும் வேலைக்கு அனுப்பவேண்டு மேயன்றி, உன்னை நாங்கள் வேலைக்கு அனுப்புவது யுக் தமன்று. சத்ருக்களை அழிப்பவனே! நீ எங்களுக்கு ப்ரபுவாயிருப்பவனுகையால் உன்னை நாங்களெல்லோ ரும் பாதுகாத்து வரவேண்டும். ஸேனையிலுள்ளவர் அனைவர்க்கும் ப்ரபு ஜாக்ரதையுடன் ரக்ஷித்துக்கொள் ளவேண்டிய வஸ்து. இது நானுகச்சொல்லுவதன்று. இதுவே உலகத்தில் வழங்கிவரும் நீதி. ஆகையால் உன்னை நாங்கள் எமது குழைச்சரக்கைப்போல் எப் பொழுதும் மனவூக்கத்துடன்பாதுகாத்துவரவேண்டும்.

1 கரடிகளும். 2 வேலைக்காரர்கள்

அரிந்தமா! இவ்வளவேயன்றி, இந்தக் கார்யத்திற்கெல்லாம், வ்ருக்ஷத்திற்கு வேர்போல், நீ மூலமாயிருக்கின்றனே. கார்யத்திற்கெல்லாம் மூலமாயிருக்கும் வஸ்துவை முக்யமாக ரக்ஷிக்கவேண்டும். இதுவே கார்யமுணர்ந்தவர்களுக்குத் தகுந்தநீதி. ஏனென்னில் வ்ருக்ஷத்தின் வேர் நன்றாயிருக்கிலன்றோ பூ காய் முதலியன உண்டாகுங் குணங்கள் நிறைவேறும். ஸத்யபராக்ரமா! பரந்தபா! அங்ஙனம் இங்கு இந்தக்கார்யம் ஸாதிக்கும் விஷயத்தில் நீயே புத்தியும் பராக்ரமமும் அமைந்து எங்களெல்லோர்க்கும் முக்ய காரணமாயிருந்து ஸித்திக்கு மூலமாயிருக்கின்றனே. நீ லங்கைக்குப் போனபக்ஷத்தில் எங்களுக்கு ஸித்தி எங்கிருந்து உண்டாகும்? வானரோத்தமனே! இவ்வளவேயன்றி, எங்களெல்லோர்க்கும் நீ ராஜனாயிருக்கின்றனே. மேலும் ராஜகுமாரன். உன்னைப் பற்றியே யன்றோ தாங்கள் கார்யத்தை நிறைவேற்ற வல்லவராவோம். நீ இல்லையாயின், எங்களுக்கு என்ன ஸாமர்த்யம் உண்டாகும்?" என்றனன். மஹாப்ராஜ்ஞனாகிய ஜாம்பவான் அங்ஙனம் சொல்லுகையில் வாலிகுமாரன் அங்கதன் அவனைப் பார்த்து 'ஸமுத்ரத்தைத் தாண்ட நானும் போகாமல் மற்றொரு வானரோத்தமனும் போகாதிருப்பின், இனி நாமெல்லோரும் மீளவும் ப்ராயோபவேசஞ் செய்யவேண்டியதே யல்லவா. புத்தியிற்சிறந்த வானரநாதனாகிய ஸுக்ரீவனது ஆஜ்ஞையைநிறைவேற்றாமல் கெடுவையுந் தப்பி அந்தக் கிஷ்கிந்தைக்குப்போயினும், நமக்கு ப்ராணன்களென்னவோ தக்குவது தோற்றவில்லை. ராஜாவாகிய ஸுக்ரீவனுக்கு அனுக்ரஹம் வரினும் மிதமற்றதே. கோபம வரினும் மிதமற்றதே. அவன் ஏற்படுத்தின கெடுவையுங்கடந்துஸீதையையும் காணாமல் அங்குப் போவோமாயின், நம்மெல்லோர்க்கும் நாசம் தப்பாது. ஆனதுபற்றி, நீ எல்லாம்

தெரிந்தவன், இந்தக் கார்யம் நினைத்தபடியன்றி மற்றொருவிதமாக முடிந்துக் கெடாதபடி நீயே உபாயமேதேனும் நன்றாக ஆலோசிக்கவேண்டும்' என்றனன். வீரனும் வானரர் தலைவனுமாகிய அந்த ஜாம்பவான் அப்பொழுது அங்கதன் தனக்குச்சொன்ன மறுமொழியைக் கேட்டு மீளவும் அவனைப்பார்த்து 'வீரனே! நீ முயன்ற இந்தக் கார்யத்திற்குச் சிறிதும் குறை நேராது. இந்தக் கார்யத்தை முடிக்கவல்ல மஹாவீரனை இதோ அனுப்புகின்றேன்' என்றனன். அனந்தரம் வானரர்களனைவரிலும் தலைவனாகிய ஜாம்பவான் அங்குள்ள வானரர்களெல்லோரையும் உபேக்ஷித்து பலபராக்ரமங்களில் ப்ரஸித்தனும் ஆகாயத்திற் கிளம்பித் திரிபவர்களெல்லோரிலும் சிறந்தவனும் ஏகாந்த ப்ரதேசத்தில் ஸுகமாக உட்கார்ந்திருப்பவனும் வானர மஹாவீரனுமாகிய ஹனுமானைப் பார்த்து அவனையே ஸமுத்ரந்தாண்டுவதில் உத்ஸாஹப்படுத்தத் தொடங்கினன். அறுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஜாம்பவான் ஹனுமானை ஸமுத்ரந் தாண்ட உத்ஸாஹப் படுத்துதல்.

அனந்தரம் ஜாம்பவான் அனேகலக்ஷங் கணக்குள்ள வானர ஸைன்யமெல்லாம் துக்கத்திலாழ்ந்திருப்பது கண்டு அந்த ஹனுமானைப் பார்த்து 'வானரலோக வீரனே; ஸர்வ ஶாஸ்த்ரங்களும் உணர்ந்தவனே! ஹனுமானே! நீ ஏகாந்தஸ்தலத்தில் வெறுமனே உட்கார்ந்திருக்கிறாயன்றி ஒன்றுஞ் சொல்லாதிருக்கின்றனை யேன்? ஹனுமானே! நீ தேஜஸ்ஸிலும் பலத்திலும் வானர ராஜனாகிய ஸுக்ரீவனுக்கும் ராமலக்ஷ்மணர்களுக்கும் நிகராயிருப்பவனல்லவா! கஶ்யபப்ரஜாபதிக்கு விநதை

யிடம் பிறந்த மஹா புலிஷ்டனும் பக்ஷிகளனைத்திலும் சிறந்தவனுமாகிய கருத்மானென்னும் பேருடையவன் ஒருவன் உளன். மிகுந்த வேகமும் கீர்த்தியுமுடைய அம்மஹாபலன் கருடன் ஸமுத்ரத்தில் ஸர்ப்பங்களைப் பிடித்துக்கொண்டு போகும்பொழுது நான் பலதடவை பார்த்திருக்கின்றனன். அந்தக் கருத்மானுடைய சிறைகளுக்கு எவ்வளவு பலம் உளதோ, உன் பாஹுக்களுக்கும் அவ்வளவு பலம் உளது. உன் பராக்ரமமும் வேகமும் அவனது பராக்ரம வேகங்களைக்காட்டிலும் எள்ளளவும் குறைந்தவையல்ல. வானரபுங்கவனே! உனக்குள்ள பலமும்புத்தியும் தேஜஸ்ஸும் தைர்யமும் மற்றை எந்த ப்ராணியிடத்திலும் காணேன். அப்படிப்பட்ட உன்னை நீ அறியமாட்டாயா யென்ன? என்னப்பனே! அப்ஸரஸ்த்ரீக ளெல்லோரிலும் தலைமையுள்ள புஞ்ஜிகஸ்தலை யென்னும் ஓர் அப்ஸரமடந்தை உளள். அவள் மூன்று லோகங்களிலும் ப்ரஸித்திபெற்றவள். ரூபத்தில் அவளுக்கு நிகராயிருப்பவள் மற்றெவளும் இருக்கமாட்டாள். அவள் சாபத்தினால் பூமியில் மஹானுபாவனாகிய குஞ்சரனென்னும் வானரோத்தமனுக்குப்பெண்ணாகி வானர யோனியில் பிறந்து காமரூபமுடையவளாகி அஞ்சனையென்னும் பேர்பெற்றுக் கேஸரியை மணம் புரிந்தனள். அவள் வானரஸ்த்ரீயா யிருப்பினும் ஸர்வாங்க ஸுந்தரியா யிருந்தனள். அவள் மனம்போன படியெல்லாம் வடிவந்தரிக்க வல்லவளாகையால் ஒருஸமயத்தில் மனுஷ்ய ஸ்த்ரீரூபந்தரித்து யௌவனத்தினால் விளக்கமுற்றுப் பலவிதமான பூமாலைகளையும் ஆபரணங்களையும் அணிந்து மேலான பட்டுவஸ்த்ரந் தரித்து வர்ஷாகால மேகம்போல் கறுத்த வர்ணம்பொருந்திய ஓர் பர்வதசிகரத்தில் உலாவிக்கொண்டிருந்தனள். அங்ஙனம் பர்வத சிகரத்தில் அகன்ற கண்களுடன் அவ்வஞ்

சனை விளையாடிக்கொண்டிருக்கையில், வாயுதேவன் சிவந்த தலைப்புடைய அவளது மேலான பச்சைப்பட்டுவஸ்த்ரத்தை வீசிக்கொண்டுவந்து சிறிதுவிலகச் செய்தனன். அங்ஙனம் வஸ்த்ரம் விலகிப்போகையில் உருண்டு ஒன்றோடொன்று மிகவும் பொருந்தின அவளது துடைகளையும் பருத்து ஒன்றோடொன்று உறைந்திருக்கின்ற கொங்கைகளையும் அழகான முகத்தையும் வாயுதேவன் கண்டனன். அவ்வஞ்சனைக்குள்ள அகன்றுருண்ட இடையின் பின்பாகங்களையும் நுண்ணிய இடையையும் மிகவும் அழகான மேனியையும் ஸுந்தரங்களான ஸமஸ்த அவயவங்களையும் பார்த்தவுடனே வாயுதேவன் மன்மத விகாரத்தினால் மோஹமுற்றனன். அவன் ஒரு தோஷமுமில்லாத அந்த ஸுந்தரியிடத்தில் மிகவும் மனஞ்செல்லவும் அவயவங்களெல்லாம் மன்மதாவேசத்தினால் பரவசமாகவும் பெற்றுத் தனது நீண்ட புஜதண்டங்களால் அம்மடந்தையைக் கட்டியணைத்தனன். அந்த அஞ்சனை பதிவ்ரதையாகையால் வாயுதேவன் அங்ஙனம் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டவுடனே தழதழப்புற்று 'எவன் ஒருவனுக்கே பார்யையாயிருக்கும் என் பதிவ்ரதாதர்மத்தை அழிக்க முயன்றான்?" என்றனள். அஞ்சனை சொன்ன வார்த்தையைக் கேட்டு, வாயுதேவன் 'அழகிய இடையின் பின்புறமுடையவளே! ஸுந்தரீ! நான் பாதிவ்ரத்யத்தினால் புகழ்பெற்ற உன்னை ஆலிங்கனஞ் செய்து மனத்தினால் உன்னோடு கலந்தேனன்றி வேறில்லை. ஆகையால் உன் பாதிவ்ரத்யம் கெடும்படி உன்னை ஹிம்ஸிக்கவில்லை. ஆதலால் பயப்படவேண்டியதில்லை. பாதிவ்ரத்யம் கெடாதிருப்பதுமாத்ரமேயன்றி உனக்கு மஹா வீர்யசாலியும் மிகுந்த மதியுடையவனுமாகிய ஓர் புதல்வன் பிறப்பான். மேலும் அவன் மஹாதீரனும் மஹா தேஜஸ்வியும் மஹா பல

பராக்ரமனுமாயிருப்பா னுகையால் தாண்டுவதிலும் ஆகாயத்தில் கிளம்பிப்போவதிலும் எனக்கு நிகராயிருப்பான்' என்றனன். மஹா கபீ! மஹாபாஹோ! இங்ஙனம் வாயுதேவன் மொழிகையில், உன் தாய் அஞ்சனை ஸந்தோஷம் அடைந்து அந்தப் பர்வதகுஹையில் வானரதிலகனுகிய உன்னை ப்ரஸவித்தனள். அனந்தரம் நீ பிறந்தவுடனே அறியாதபாலனுயினும் அம்மஹாரண்யத்தில் ஸூர்யன் உதயமாகக் கண்டு அது ஓர் பழமென்று நினைத்து அதைத் தின்ன விரும்பிக் கிளம்பி ஆகாயத்திற்குப் போயினை. கபிஶ்ரேஷ்டனே! அனந்தரம் நீ பல ஆயிரம் யோஜனைதூரம் ஆகாயத்திற் சென்று ஸூர்யனது உஷ்ணதேஜஸ்ஸினுல் தபித்துத் தூரத்தப்பட்டும் நீ வருத்தமுறு திருந்தனை. வானரஶ்ரேஷ்டனே! நீ அங்ஙனம் மிக்கவேகத்துடன் ஆகாயத்தில் அவ்வளவு தூரம் வரையில் வருவதைக் கண்டு புத்தியிற் சிறந்த தேவேந்த்ரன் உன்னுல் உலகத்திற்கு ஏது கெடுதி நேருமோவென்று சங்கித்துக் கோபத்துடன் உன்மேல் வஜ்ராயுதத்தை ப்ரயோகித்தனன். அந்த வேகத்தினுல் நீ பர்வதசிகரத்தில் வீழ்கையில் உன் இடது கபோலத்துமேல்பாகம் முறிந்துபோயிற்று. அதைப் பற்றியே உனக்கு ஹனுமானென்னும்பேர் ப்ரஸித்தமாயிற்று. வாயுதேவன் ஸமஸ்தத்தையும்முறிக்கவல்லவன். மேலும் வாசனையைத்தரித்து லோகங்களுக்கு ஸுகத்தை விளைவிப்பவன். அவன் இப்படிப்பட்ட சக்தியுடையவனுகையால், உன்னை இந்த்ரன் அங்ஙனம் அடித்து விழத்தள்ளினதைக் கண்டு மிகவும் கோபமுற்று மூன்றுலோகங்களிலும் சிறிதும் காற்று வீசாதிருந்தனன். அங்ஙனம் மூன்றுலோகங்களும் கலக்கமுற்றிருக்கையில், லோகப்ரபுக்களாகிய தேவதைகள் தத்தளிப்புற்றுக் கோபித்திருக்கின்ற வாயு

தேவனை ஸமாதானப் படுத்தினர். ஸத்ய பராக்ரமனே! என்னப்பனே! வாயுதேவன் மனந்தெளியப்பெற்ற பின்பு ப்ரஹ்மதேவன் யுத்தத்தில் ஆயுதங்களில் வதம் உண்டாகாதிருக்குமாறு உனக்கு வரங்கொடுத்தனன். ப்ரபூ! தேவேந்த்ரன் வஜ்ராயுதத்தினுல் அடிக்கப்பட்டும் நீ வருந்தாதிருப்பதுகண்டு மனத்தில் ஸந்தோஷம் மிகப் பெற்று உனக்கு உன் மனம் வந்தபோது மரணம் உண்டாகும்படி உத்தமவரத்தைக் கொடுத்தனன். அங்ஙனம் பயங்கர பராக்ரமனுகிய நீ கேஸரியின் க்ஷேத்ரத்தில் (பார்யையிடத்தில்) பிறந்தவன்; வாயுதேவனுக்கு ஔரஸபுத்ரன் தேஜஸ்ஸில் அந்த வாயுதேவனை நிகர்த்தவன்; என்னப்பனே! நீ வாயுகுமாரன்; கிளம்பிப்போவதில் அந்த வாயுவுக்கு ஸமமாயிருப்பவன்; ஸாமர்த்யமும் பராக்ரமும் மிகுந்திருக்கப்பெற்றவன். இரண்டாவது கருடனே என்னத்தகுந்தவன்; இப்பொழுது எங்களுக்கு ப்ராணன்கள் நிலைப்பது கஷ்டமாயிருக்கையால் நீ எங்களெல்லோரையும் இப்பொழுது காப்பாற்றவேண்டும். அப்பனே! விஷ்ணுதேவன் த்ரிவிக்ரமாவதாரஞ் செய்தபொழுது. நான் பர்வதங்களும் அரண்யங்களும் நிறைந்த இப்பூமண்டலத்தையெல்லாம் இருபத்தோரு தடவை ப்ரதக்ஷிணஞ் செய்தனன். இவ்வளவேயன்றி முன்பு அம்ருதங்கடைந்தெடுத்த ஸமயத்தில், ஸமுத்ரத்தில் போகட்டுக் கடையும்பொருட்டுத் தேவதைகளின் ஆஜ்ஞையின்படி நானுவித மூலிகைகளை நாற்புறத்தினின்று ஸம்பாதித்துக் கொண்டு வந்தனன். அந்த ஓஷதிகளை இட்டுக்கடைந்ததுபற்றியே ஸமுத்ரத்தினின்று அம்ருதம் பிறந்தது. அப்பொழுது எமக்குப் பலம் அதிகமாயிருந்தது. அப்படியிருந்த நான் இப்பொழுது கிழவனுனேனுகையால் என் பராக்ரமம் குறைந்துபோய்விட்டது. இக்காலத்தில் எங்களெல்லோரிலும் நீயே எல்லா

ஸாமர்த்யங்களுடையவன். ஆகையால் பராக்ரமத்தைக் கைப்பற்றி வளர்ந்து நிற்பாயாக. நீ தாண்டுமவர்களெல்லோரிலும் மேலாயிருப்பவனல்லவா? வானரஸிம்ஹனே! இந்த வானரஸைன்யமெல்லாம் உன் வீர்யத்தைக் கண்ணுரக்காண விரும்புகின்றது. எழுந்திருப்பாயாக. ஸமுத்ரத்தைத் தாண்டுவாயாக. ஹனுமந்தனே! வானரர்களெல்லோரும் வருத்தமுற்றிருக்கின்றனர்களே! நீ இப்படி வெறுமனே இருக்கலாகுமா? முன்பு விஷ்ணுதேவன் பலி சக்ரவர்த்தி கொடுத்த மூன்றடிகளை ஆக்ரமித்தாற்போல் நீ மஹாவேகத்தை ஏற்றுக்கொண்டு ஸமுத்ரத்தைத் தாண்டுவாயாக' என்றனன். அப்பொழுது ஜாம்பவந்தன் போதனைசெய்து இங்ஙனம் தூண்டுகையில் ப்ரஸித்த வேகமுடையவனாகிய ஹனுமான் தன் பராக்ரமங்களையெல்லாம் அறிந்து அவ்வானரவீர ஸைன்யமெல்லாம் ஸந்தோஷிக்கும்படி அற்புதமாக மேனியை வளர்த்திக்கொண்டனன். அறுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஹனுமான் வானரர்களை உத்ஸாஹப்படுத்தி ஸமுத்ரத்தைத் தாண்டும் பொருட்டு மஹேந்த்ர பர்வதத்தின்மேல் ஏறுதல்.

அனந்தரம் நூறுயோஜனைதூரமுடைய ஸமுத்ரத்தைத் தாண்டமுயன்று மேனியைப் பெருக்கச்செய்து அவ்வளவுக் கவ்வளவு பராக்ரமம் மிகுந்து வரப்பெற்று விளங்கும் வானரோத்தமனாகிய ஹனுமானைப் பார்த்து அவ்வானரர்கள் உடனே துக்கத்தைவிட்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்து ஸிம்ஹநாதஞ் செய்துகொண்டு மஹாபலனாகிய அந்த ஹனுமானை ஸ்தோத்ரஞ் செய்தனர். நாராயணன் த்ரிவிக்ரமாவதாரத்தில் மூன்றடிகளால் மூன்றுலோகங்களை அளக்க உத்ஸாஹப்படும்பொழுது ப்ரஜைகள் கண்டாற்போல், அவ்வானரர்கள் எல்

லோரும் ஸமுத்ரத்தைத்தாண்ட உத்ஸாஹத்துடன் சரீரத்தை வளர்த்திக்கொண்டிருக்கிற அந்த ஹனு மானை ஸந்தோஷமும் ஆச்சர்யமும் மேலெழப்பெற்றுக் கண்டனர். மஹா பலனாகிய ஹனுமான் தன்னை அங்ஙனம் வானரர்கள் ஸ்தோத்ரஞ் செய்துகொண்டிருக் கையில் ஸந்தோஷப்பெருக்கினால் பலம் வளரப்பெற்று வாலை உதறிப் பூமியில் தட்டி வ்ருத்தி அடைந்தனன். அங்ஙனம் வ்ருத்தர்களாகிய வானரஸ்ரேஷ்டர்கள் ஸ் தோத்ரம் பண்ணிக்கொண்டிருக்கையில், அவ்வளவுக் கவ்வளவு தேஜஸ்ஸூ வளரப்பெற்று விளங்குகின்ற அந்த ஹனுமானது உருவம் நிகரற்றிருந்தது. பர்வத குஹையில் ஸிம்ஹம் வளர்ந்து மேனியை நெறித்துக் கொண்டு வருமாறு அப்பொழுது வாயுகுமாரனாகிய ஹனுமான் வளர்ந்தனன். அங்ஙனம் வளர்ந்துவரு கின்ற புத்திமானாகிய ஹனுமானது முகம் ஜ்வலிக்கின்ற மடக்குபோலவும் புகையில்லாத அக்னிபோலவும் தக தகவென்று ஜ்வலித்துக்கொண்டிருந்தது. அனந்தரம் ஹனுமான் வானர மத்யத்தினின்று எழுந்து மேனியில் ஸந்தோஷத்தினால் மயிர்க்கூச்சலுண்டாகப் பெற்றுப் பெரியோர்களான வானரர்களுக் கெல்லாம் நமஸ்காரஞ் செய்து அவர்களை நோக்கி 'அக்னிக்கு ஸ்னேஹிதனா கிய வாயுதேவன் திரியுந்தன்மையுடையவன், மஹா பல முடையவன், அளவிறந்த சக்தியுடையவன், ஆகாயத் திலேயே ஸஞ்சரிக்குந் திறமை யமைந்தவன், அவன் பர் வதசிகரங்களையும் பிளந்திருக்கின்றனன். நான் அப் படிப்பட்ட சீக்ர ஸஞ்சார சக்தியும் மஹாவேகமும் மஹாபலமுமுடைய வாயுவுக்குப் பிறந்தவன். ஆகை யால் தாண்டுவதில் எனக்கு நிகரானவன் மற்றெவனும் இல்லை. நான் நடுவில் சிறிதும் இளைப்பாறிக் காலதா

மதஞ் செய்யாமல் மிகவும் சீக்ரமாக, மிகுந்த விஸ்தார முடையதும் ஆகாயத்தை அளாவியிருப்பதுமாகிய மேருபர்வதத்திற்கு ஆயிரந்தடவை ப்ரதக்ஷிணஞ் செய்வேன். நான் எனது பாஹுக்களால் விரைவில் ஸமுத்ரத்தைக் கலக்கி இறைத்துப் பர்வதங்களோடும் நதிகளோடும் மடுக்களோடுங்கூடின இப்பூமண்டலத்தையெல்லாம் அந்த ஸமுத்ரஜலத்தில் மூழ்கச்செய்ய வல்லவன். என் துடைகளுடையவும் கணைக்கால்களுடையவும் வேகத்தினுல் ஸமுத்ரத்தை மேற்கிளம்பும்படிசெய்து அதிலுள்ள பருப்பருத்த முதலேகளை ஆகாயத்தில் கிளம்பச்செய்வேன். பக்ஷிகள் திரியும் ஸ்தானமாகையால் தனக்குரியதாகிய ஆகாயத்தில் கருடன் ஆஹாரத்தின் பொருட்டு ஸர்ப்பங்களைப் பிடிக்க மஹா வேகத்துடன் திரியும்பொழுது, நான் அவனை ஒரேமுயற்சியாக ஆயிரம் தடவைகள் சுற்றிவருவேன். நான், ஸூர்யன் உதயபர்வதத்தினின்று புறப்படும்பொழுது அவனுடன்கூடவே புறப்பட்டு அவனுக்கு முன்னமே அஸ்தமயபர்வதஞ் சேர்ந்து மீளவும் அவன் ஆகாயமத்யத்தில் ஜ்வலிக்கும் பொழுதே அவனுக்கெதிரில் வருவேன். வானரஸ்ரேஷ்டர்களே! அவ்வளவும் ஸூர்யனை எதிர்கொண்டபின்பு நான் பூமியில் இறங்கி இளைப்பாருமலே முதலில் தொடங்கின அம் மஹாவேகத்துடனே மீளவும் ஓர்தடவை ஸூர்யனை எதிரிடவல்லேன். இவ்வளவுமாத்ரமே அன்று. ஆகாயத்தில் திரியும் க்ரஹ நக்ஷத்ராதிகளெல்லாவற்றையும் வேகத்துடன் கடந்து நடக்கவல்லேன். வானரர்களே! நான் ஆகாயத்திற் கிளம்பும்பொழுது ஸமுத்ரத்தைச் சோஷிக்கச் செய்வேன்; பூமியைப் பிளப்பேன்; பர்வதங்களைச் சூர்ணஞ் செய்வேன். நான் தாண்டும்பொழுது என் துடைவேகத்தி

னல் ஸமுத்ரம் முழுமையும் என்னைப் பின்றொடர்ந்து வரும். இப்பொழுது நான் ஸமுத்ரத்தைத் தாண்டும் பொருட்டு ஆகாயத்தில் கிளம்பினவுடனே என் வேகத்தினல் கொடிகளினின்றும் மரங்களினின்றும் பலவகைப்பட்ட புஷ்பங்களெல்லாம் என் பின்னே அடித்துக் கொண்டு வரப்போகின்றன. அங்ஙனம் புஷ்பங்கள் நிறைந்திருக்கையால் ஆகாயத்தில் நான் போகும்வழி நக்ஷத்ரங்கள் நிறைந்த ஸ்வாதி நக்ஷத்ரமார்க்கம்போல் (சாயாபதம்போல்) விளங்கும். வானரர்களே! நான் ஆகாயத்தில் கிளம்பும் பொழுதாவது ஆகாயத்தில் போகும்பொழுதாவது ஸமுத்ரத்தின் தென்கரையில் இழியும்பொழுதாவது ஸமஸ்த பூதங்களும் என்னை வேடிக்கையுடன் பார்க்கப்போகின்றன. வானரர்களே! நான் மஹா மேகம்போன்ற மேனியுடன் ஆகாயத்தை விழுங்குவான்போல் ஆகாயத்தை யெல்லாம் மறைத்துக்கொண்டு போகும்பொழுது என்னை நீங்களுங் கூடப் பார்ப்பீர்கள். நான் முயற்சியுடன் ஸமுத்ரத்தைத் தாண்டும்பொழுது மேகங்களை யெல்லாம் சிதறச்செய்வேன்; பர்வதங்களை நடுங்கச் செய்வேன்; ஸமுத்ரங்களைக் கலக்கிவிடுவேன். எனக்குள்ள சக்தி கருடனுக்கும் வாயுவுக்கும் மாத்ரம் நேருமேயன்றி மற்றெவனுக்கும் ஸம்பவிக்காது. மஹாவேகனுகிய கருடனும் வாயுவும் தவிர ஆகாயத்தில் கிளம்பிச் செல்கின்ற என்னைப் பின்றொடர்ந்துவரும் ப்ராணி மற்றொன்றும் எங்கும் புலப்படவில்லை. ஓர் இமைப்பொழுதில் திடீலென்று மேகத்தினின்று மின்னல் கிளம்புவது போல் பிடிப்பில்லாத ஆகாயத்தில் கிளம்புவேன். நான் ஸமுத்ரத்தைத் தாண்டிக்கொண்டிருக்கையில், என் உருவம் முன்பு த்ரிவிக்ரமாவதாரத்தில் பலிகொடுத்த

மூன்றடி பூமியை அளக்கின்ற மஹாவிஷ்ணுவின் உரு வம்போல் பயங்கரமாகவும் மிக்க ஆஸ்சர்யமாகவும் இருக்கும். வானரர்களே! இதெல்லாம் என் புத்திக்குத் தோற்றுகின்றது. என் மனதும் வலக்கைதுடிப்பது முதலான சேஷ்டைகளும் அங்ஙனமே தெரிவிக்கின்றன. நான் தப்பாமல் ஸீதையைக்காண்பேன். நீங்கள் ஸந்தோஷத்துடன் இருப்பீர்களாக. நான் வேகத்தில் வாயுவை நிகர்த்தவன்; கருடனுக்கொப்பானவன்; பதினாயிரம் யோஜனைகள் தாண்டுவேனென்று எனக்குத் தோற்றுகின்றது. நான் வஜ்ராயுதத்தைக் கையிலேந்தின இந்த்ரனையாயினும் ஸ்வயம்புவாகிய ப்ரஹ்மதேவனையாயினும் பராக்ரமத்தினால் ஜயித்து அவர்கள் கையினின்று அம்ருதத்தை மிக்க வேகத்துடன் கொண்டு வருவேன். ஆயிரம்படச் சொல்லியென்? லங்கையையாயினும் பிடுங்கிக்கொண்டு வருவேனென்று என் அபிப்ராயம்' என்றனன். அங்ஙனம் மிதம் விஞ்சின தேஜஸ்ஸுடன் ப்ரகாசிக்கின்ற அவ்வானர ஸிம்ஹன் கர்ஜித்துக்கொண்டிருக்கையில் வானரர்களனைவரும் மிகவும் ஸந்தோஷம் அடைந்து ஆஸ்சர்யத்துடன் பார்த்துக்கொண்டிருந்தனர். அந்த ஹனுமான் அங்ஙனம் ஸமஸ்த வானர பந்துக்களுக்கும் சோகம் தொலையும்படி மொழிந்த அந்த வாக்யங்களைக்கேட்டு ஜாம்பவான் மிகவும் ஸந்தோஷித்து அவ்வானரோத்தமனை நோக்கி 'வீரா! கேஸரிபுத்ரனே! வாயுகுமாரா! ஹனுமானே! என்னப்பனே! நீ இப்பொழுது உன் பந்துக்களாகிய ஸமஸ்த வானரர்களுடையவும் மஹா துக்கத்தையெல்லாம் போக்கடித்தனை. வானரஸ்ரேஷ்டர்களெல்லோரும் சேர்ந்து உன் மங்களத்தை விரும்பி, நீ போகுங்கார்யம் ஸித்திக்கும்பொருட்டு மனவூக்கத்துடன் மங்கலாசாஸ

னஞ் செய்துகொண்டிருப்பார்கள். மஹர்ஷிகளின் ஸம்மதத்தினாலும் பெரியோர்களது அனுக்ரஹத்தினாலும் இம்மஹாஸமுத்ரத்தை நீ தாண்டுவாயாக. நீ திரும்பி வரும்வரையில் நாங்களெல்லோரும் ஒருகாலால் நின்றுகொண்டிருப்போம். இவ்வானரர்களனைவருடையவும் ப்ராணன்கள் உன்கையில் இருக்கின்றன' என்றனன். அனந்தரம் வானரஸிம்ஹனாகிய ஹனுமான் அவ்வானரர்களைப்பார்த்து 'நான் ஸமுத்ரத்தைத் தாண்டும்பொழுது என்வேகத்தை இந்தப்பூமி ஸஹிக்கமுடியாது. இந்த மஹேந்த்ரபர்வதம் உயர்ந்த கல் ப்ரதேசங்கள் மிகுந்திருக்கப்பெற்றது. இதன் சிகரங்கள் நிலையாயிருப்பவைகளும் (அசையாதிருப்பவைகளும்) மிகப் பெரியவைகளுமாயிருக்கின்றன. ஆகையால் இவையே என் வேகத்தைப் பொறுக்கவல்லவை. நானாவித வ்ருக்ஷங்கள் நிறைந்து கைரிகதாதுக்களின் பெருக்குகளால் விளக்கமுற்றிருக்கின்ற இம்மஹேந்த்ர பர்வதசிகரங்களில் நான் என் வேகத்தைத் தொடங்குகிறேன்.வானரஶ்ரேஷ்டர்களே! இங்கிருந்து நூறுயோஜனைதூரம் தாண்டப்போகையில் என்பாதங்களின் அபிகாதத்தை (உதைத்தலை) இந்தப் பர்வதசிகரங்கள் தரிக்கவல்லவை' என்றனன். அனந்தரம் பகைவரை அடக்குந் திறமையுடைய வாயுகுமாரனும் வாயுவை நிகர்த்தவனுமாகிய அந்த ஹனுமான் பர்வதஶ்ரேஷ்டமாகிய அந்த மஹேந்த்ர பர்வதத்தின் மேல் ஏறினன். அந்தப் பர்வதம் பலவகை வ்ருக்ஷங்களுடையதும் பசும்புல் தரைகளில் திரியும் பல ம்ருகங்களோடு கூடியதும் செடிகளும் புஷ்பங்களும் நிரம்ப நிறைந்ததும் என்றும் வ்ருக்ஷங்கள் புஷ்பங்களும் பழங்களும் ஓயாதிருக்கப்பெற்றதும் ஸிம்ஹங்களும் பெரும்புலிகளும் திரியவும் மத்தகஜங்கள் ஸஞ்சரிக்கவும் பக்ஷி

கள் பழங்களின் ரஸத்தைப்புசித்து மதித்துக் குவியல் குவியலாகக் கலகலவென்று கூவவும் ஆங்காங்குப் பெருகிவருகின்ற மலையருவிகளின் ஜலங்கள் நாற்புறமும் நிறைந்திருக்கவும்பெற்று மிகவும் பெரிய சிகரங்களால் விளக்கமுற்றதுமாயிருந்தது. மஹாபலனும் பராக்ரமத்தினால் தேவேந்த்ரனைப் போன்றவனுமாகிய அவ்வானரோத்தமன் ஹனுமான் அந்த மஹாபர்வதத்தின்மேல் விளையாடினன். அங்ஙனம் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது அம்மஹா பர்வதம் மஹானுபாவனாகிய ஹனுமானது பாதங்களின் அபிகாதத்தினால் நெருக்குண்டு, ஸிம்ஹத்தினால் அடிக்கப்பட்ட பெரிய மத்தகஜம்போல் ப்ரகாசித்தது. அப்பர்வதம் அந்தக் கபீந்த்ரனுடைய அடிவைப்புகளால் தன் சிகரங்கள் சிதறப்பெற்று ஜலப்ரவாஹங்களைப் பெருக்கியது. ஹனுமானது பாதங்களின் உறைத்தல்களால் அம்மஹா பர்வதத்தில் அப்பொழுது ம்ருகங்களும் யானைகளும் பயந்தோடிப் போயின. பருப்பருத்த வ்ருக்ஷங்களும் நடுக்கமுற்றன. மத்யபானஞ் செய்வதில் மிக்க அபிநிவேசமுடைய (மனவிருப்பமுடைய) நாக தம்பதிகளும் கந்தர்வமிதுனங்களும் வித்யாதரக்கூட்டங்களும் அந்தப் பர்வதத்தின் பெருப்பெரிய தாழ்வரைகளைவிட்டுப் பயந்தோடிப்போய்க்கொண்டிருந்தன. பக்ஷிகள் மேல் கிளம்பிப்போயின. பெரிய ஸர்ப்பங்கள் பாழிகளில் மறைந்தன. சிகரங்களிலுள்ள பெருங்கற்கள் இப்படியும் அப்படியும் அசைந்தன. அப்பொழுது ஸர்ப்பங்கள் பாழிகளினின்று பாதி வெளிவந்து படங்களை விரித்துப் பெருமூச் செறிந்துகொண்டிருக்கையில், அந்தப் பர்வதம் பல டக்கயங்கள் கட்டப் பெற்றதுபோல் ப்ரகாசித்தது. அந்தப் பர்வதத்திலுள்ள மஹர்ஷிகள் பயந்து ஓடிப்போகையில், அவர்

களைப்பிரிந்த அப்பர்வதம் மஹாரண்யத்தில் ஸஹாயமாயிருப்பவர் கைவிட்டுப்போகையில் ஒண்டியாய்ப் பயந்து வருந்துகின்ற வழிப்போக்கன்போலிருந்தது. வேகமுடையவனும் சத்ரு வீரர்களை முடிக்குந் திறமையுடையவனும் கம்பீரமனமுடையவனும் மிகவும் புகழ்பெற்ற மஹானுபாவனும் வானரர்களில் சிறந்த வீரனுமாகிய அந்த ஹனுமான் வேகத்தைக்காட்ட முயன்று மனத்தில் ஸமுத்ரத்தைத்தாண்ட நிச்சயித்து அப்பொழுதே மனத்தினால் இலங்காபுரியைச் சேர்ந்தவனாயினன். அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

கிஷ்கிந்தாகாண்டமும் முற்றுப்பெற்றது.

ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணேநம꞉.



